எறுழம் = வலிமை, தண்டாயுதம், தூண், மரவகை
எறுழி = காட்டுப்பன்றி
எறுழ் = வலி, தண்டாயுதம், தூண், மரவகை
எறுழ்வலி = வீரம், மிகுந்த வலி
எற்படுதல் = சூரியன் உதித்தல்
எற்பாடு = பிற்பொழுது, காலை, பகலுக்குப் பிறகு பத்து நாழிகை நேரம்
எற்பு = எலும்பு, என்பு,
எற்றம் = மனத்துணிவு
எற்றித்தல் = இரங்குதல்
எற்று = எத்தன்மைத்து, எது
எற்றுண்ணல் = எறியப்படல்
எற்றுதல் = அடித்தல், எறிதல், வெட்டுதல், உதைத்தல், துணித்தல், கொல்லல், உடைத்தல், குத்துதல், நீக்குதல், இரங்குதல், மோதுதல், எடுத்தல், நினைத்தல், கெடுதல்
எற்றுநூல் = மரம் அறுக்க நேர்மை காட்டும் நூல் அடையாளம்
எற்றுந்திரை = கடல், வீசுந்திரை
எற்றோ = எத்தன்மைத்தோ

எனல் = என்றல்
எனவ = என்னுடையவை
எனா = என்று, ஓர் எண்ணிடைச் சொல்,
எனை = எவ்வளவு, என்ன
எனைத்தானும் = சிறிதாயினும்
எனைத்து = எத்தன்மைத்து, எவ்வளவு
எனைத்துணை = எவ்வளவு,
எனைத்தும் = முழுதும், சிறிதும், எல்லாம், எவ்வளவாயினும்
எனைப்பல் = பல, எத்துணையும்
எனையது = எவ்வளவு
எனைவன் = யாவன்
எனைவோரும் = எல்லோரும்
என் = என்ன, என்றும், யாதொன்றும், யாது
என்கை = என்று சொல்லுகை
என்ப = என்று சொல்லப்படுவன, என்று சொல்வர்
என்பாபரணன் = எலும்பை ஆபரணமாக அணிந்த சிவன்
என்பாக்கு = என்று சொல்வோம் என்று
என்பிலி = புழு

**என்பு** = எலும்பு, உடம்பு, என்புக்கூடு என்று கூறு தல்

**என்மர்** = என்று சொல்வர், என்று சொல்பவர்

**என்மனூர்** = என்று சொல்லு வர்

**என்றவன்** = சூரியன்

**என்றிசினோர்** = என்று சொன்னோர்

**என்று** = சூரியன், எந்நாள்

**என்றூழ்** = கோடைக்காலம், சூரியன், வெயில்

**என்னணம்** = எவ்வண்ணம்

**என்னர்** = எத்தகையினர், சிறிதும்

**என்னல்** = என்று சொல்லு தல்

**என்னன்** = எவ்வியல்பினன்

**என்னுங்கு** = என்னிடத்து

**என்னுதி** = எப்படி வாழ்கின் றாய், என் செயக் கடவாய்

**என்னும்** = சிறிதும், யாவும்,

**என்னே** = ஓர் அதிசய இரக் கச்சொல்

**என்னை** = என் தந்தை, யாது என் தலைவன்

**என்னோ** = என்னே

**எஃகம்** = ஆயுதம், கூர்மை, வேல், வாள், சூலம், நுதி, சக்கரம், ஈட்டி

**எஃகல்** = எஃகுதல், அவிழ் தல், எதிர்தாக்கல், நீளல், மேலே வாங்கல், எட்டுதல்

**எஃகு** = உருக்கு, ஆயுதப் பொது, கூர்மை, அறிவு, நுட்பம், வேல், கத்தி, மனஒடுக்கம்

**எஃகுதல்** = எட்டுதல், நெகிழ் தல், வளைவு, உதைத்து ஏறுதல், நிமிர்தல், எழும் புதல், ஆராய்தல், பஞ்சு பறித்தல், அவிழ்தல், ஏறுதல், பஞ்சு கொட்டு தல்

**எஃது** = துஎ

**எஃறுதல்** = அறுக்கப்படு தல், பண்ணப்படுதல்

ஏ = உயர்ச்சி, அம்பு, பெருமை

ஏககுண்டலன் = பலராமன்

ஏகதந்தன் = விநாயகன்

ஏகதேசம் = அரிது, ஒருகால், சிறுபான்மை, குறைவு, நிந்தை

ஏகநாதன் = கடவுள்

ஏகபாவம் = ஒரேஎண்ணம், ஒரே தன்மை

ஏகம் = ஒன்று, தனிமை, முழுதும், வீடு, மிகுதி

ஏகம்பர் = ஏகாம்பரநாதர்

ஏகல் = ஓங்கிய கற்கள், போகல்

ஏகவசனம் = ஒருமை

ஏகவேணி = மூதேவி

ஏகன் = கடவுள், ஒருவன்

ஏகாட்சி = ஒற்றைக் கண்ணன், காக்கை, சுக்கிரன்

ஏகாக்கிரதை = ஒன்றிலே சிந்தை வைத்தல்

ஏகாக்கிரம் = ஒரே நோக்கம்

ஏகாங்கி = சந்நியாசி, தனியன்

ஏகாசம் = உத்தரீயம், மேலாடை

ஏகாட்சரி = பிரணவம், ஓர் எழுத்தால் ஆனமந்திரம்

ஏகாண்டம் = வெளி, முழுக்கூறு

ஏகாதசம் = பதினொன்று

ஏகாதிபத்தியம் = தனி யரசாட்சி

ஏகாந்தசேவை = தனிச் சேவை

ஏகாந்தம் = தனியிடம், தனிமை, இரகசியம், தகுதி, நிச்சயம்

ஏகீபாவம் = ஒருமைப் பாவனை, கூடி இருத்தல்

ஏகாவலி = ஒற்றைவடம்

ஏகி = கைம்பெண், தனியன்

ஏகை = இரேகை, உமை

ஏக்கம் = ஆசை, துக்கம் அச்சம்

ஏக்கழுத்தம் = இறுமாப்பு, தலையெடுப்பு, வீற்றிருத்தல்

ஏக்கறவு = இச்சை

ஏக்கறுதல் = ஆசையால் தாழ்ந்திருத்தல், இச்சித்தல், விரும்பி நிற்றல், இளைத்து வருந்தல்

ஏக்கை = இகழ்ச்சி,

ஏங்குதல் = ஒலித்தல், கவலை படல், திகைத்தல், அழுதல், அஞ்சுதல், இளைத்தல்

ஏசல் = பழிமொழி, இகழ்தல்

ஏசறவு = துக்கம், அன்பு, நாணம், விருப்பம், தோத்திரம்

ஏசறுதல் = வருத்தமுறுதல், ஆசைப்படுதல், பழித்தல்

ஏசு = குற்றம், இகழ்ச்சி

ஏட = தோழன் முன்னிலை

ஏடகம் = ஆட்டுக்கடா, பட்டு, பூ, இதழ், தெங்கு, துகில்

ஏடணை = விருப்பம்

ஏடல் = கருத்து

ஏடன் = தோழன், செவிடன்

ஏடா = ஆண்பால் முன்னிலை, தோழன் முன்னிலை

ஏடி = தோழி முன்னிலை

ஏடு = பூ, பூ இதழ், பாலாடை மென்மை, புத்தகம், பனையோலை, உடல், மேன்மை, குற்றம்

ஏடை = ஆசை

ஏட்டை = ஆசை, தளர்வு, துன்பம், வறுமை, இளைப்பு

ஏணம் = மான், நிலைபேறு,

ஏணி = அடுக்கு, பாசறை, நாடு, எண், உலகம், மான் கன்று, எல்லை

ஏண் = நிலை, பெருமை, வலிமை, திண்மை, எல்லை உயர்ச்சி

ஏதம் = குற்றம், துன்பம், கேடு, நோய்

ஏதன் = கடவுள், மூலகாரணன்

ஏதி = ஆயுதம், வாள், துண்டம்

ஏதிலார் = பகைவர், தரித்திரர், அயலார், பரத்தையர்

ஏதின்மை = பகைமை, முன்னறியாமை

ஏது = காரணம்

ஏத்தல் = துதித்தல், புகழ்தல்

ஏத்து = ஆழமின்மை, தேக்கம், புகழ்தல்

ஏத்துதல் = துதித்தல், வணங்கல், புகழ்தல், வாழ்த்துதல், உயர்த்துக் கூறுதல்

ஏநம் = பாவம், குற்றம்

ஏந்தல் = அரசன், தேக்கம், ஆழமின்மை, பெருமை, உயர்ச்சி, ஏந்துதல், தாங்குதல், பெருமையில் சிறந்தவன்

ஏந்திலை = வேல்

ஏந்திழை = பெண், அழகிய ஆபரணம்

ஏந்துதல் = சிறத்தல், மிகுதல், சுமத்தல்

ஏந்தெழில் = மிக்க அழகு

ஏப்பாடு = அம்பு விழும் எல்லை

ஏப்புழை = மதிலின் அம்புத் துவாரம்

ஏமகூடம் = பொன்மலை

ஏமந்தம் = பனி [காலம்

ஏமந்தருது = முன் பனிக்

ஏமம் = மகிழ்ச்சி, களிப்பு, பயித்தியம், ஐயம், பொன், சேமம், காவல், உறுதி, இரா, பள்ளியறை, மயக்கம், விபூதி, இடுதிரை

ஏமருதல் = கலங்குதல், திகைத்தல், காக்கப் படுதல், மிகுகளிப்புறல்

ஏமன் = எமன்

ஏமாத்தல் = இன்புறுதல், அரணுதல், ஆசைப்படுதல், கலக்கமுறுதல், களித்தல், செருக்குதல், மயங்குதல், நிச்சயித்தல்

ஏமாப்பு = சேமம், செருக்கு, கருத்து, மயக்கம், களிப்பு

ஏமார்தல் = மனம் கலங்குதல், அரணுதல்

ஏமார்த்தல் = காப்புச் செய்தல், பலப்படுத்துதல்



ஏமுறுதல் = சேமம் அடைதல், இறுமாப்புறல், தன்மை திரிதல், களிப்புறல், மயங்குதல், வருந்துதல், பொருத்த முறுதல்

ஏம் = செருக்கு, இன்பம், மயக்கம்

ஏம்பல் = வருத்தம், களிப்பு, அவா, ஆரவாரம்

ஏயம் = தள்ளத்தக்கது

ஏய்தல் = ஒப்பாதல், பொருந்தல், எதிர்ப்படுதல், அடைதல், தகுதல்

ஏய்த்தல் = ஒத்தல், வஞ்சித்தல், தழுவல், பொருந்தச் சொல்லுதல்

ஏரம்பன் = விநாயகன்

ஏரல் = கிளிஞ்சில்

ஏராண்மை = உழவு

ஏராளர் = உழுநர்

ஏர் = அழகு, எழுச்சி, நன்மை, ஒப்பு, கலப்பை, உழவு மாடு, உழவு, பொருந்திய

ஏர்பு = எழுச்சி, எழுந்து

ஏல = மிக, முன்னமே, ஏடி

ஏலம் = மயிர்ச்சாந்து, ஏலக்காய்ச் செடி

ஏலல் = இயலல், ஒத்தல், பொருந்தல், அங்கீகரித்தல்

ஏலா = தோழி முன்னிலை, தோழன் முன்னிலை

ஏலாதன = தகாதன
ஏலாதார் = பகைவர்,
ஏலாமை = இணங்காமை, பொருந்தாமை, இயலாமை
ஏலுதல் = பொருந்துதல்
ஏல் = பொருத்தம், உணர்ச்சி, மன எழுச்சி
ஏல்வை = காலம், குளம், நாள்
ஏவதும் = எல்லாமும், ஒவ்வொன்றும்
ஏவம் = இகழ்ச்சி, குற்றம் இவ்விதம்
ஏவல் = வறுமை, கட்டளை, பணிவிடை, வேலையாள்
ஏவு = அம்பு
ஏழகம் = ஆடு,
ஏழில் = இசை, ஒருமலை
ஏழை = அறிவிலி, உமாதேவி, பெண், தரித்திரன்
ஏழைமை = வறுமை, ஏழு, அறியாமை
ஏழ்பரியோன் = சூரியன்
ஏளிதம் = இகழ்ச்சி,
ஏறங்கோள் = முல்லைப்பறை
ஏறு = எருது, உயர்ச்சி, இடியேறு, ஏறுதல், மிகுதி, விலங்குகளில் ஆண்பால், ஆண்சிங்கம், உயரம்
ஏறுதழுவல் = வீரமுள்ள இடபத்தை விரட்டிவிட அதனை வீரன் அடக்கிக் கட்டிக் கொணர்தல்
ஏறுழவர் = படைவீரர்
ஏற்க = இணங்க, பிச்சை வாங்க
ஏற்பது = இரப்பது
ஏற்பு = இரப்பு, தகுதி, பொருத்தம்.
ஏற்புழி = ஏற்குமிடத்து
ஏற்போர் = இரப்போர்
ஏற்றணை = சிம்மாசனம்
ஏற்றம் = புகழ், மேன்மை துணிவு, அதிகம், நினைவு
ஏற்றல் = இரத்தல், எரித்தல்
ஏற்றூர் = பகைவர்
ஏற்று = மரத்திலுல் செய்த மேடை
ஏற்றுப்பனை = ஆண்பனை
ஏற்றூண் = இரந்துண்ணும் உணவு
ஏற்றை = ஆண்கரடி, ஆண் சிங்கம்
ஏனம் = பன்றி, பாத்திரம், பாவம், ஓலைக்கலம்
ஏனல் = தினைப்புனம், கதிர், தினை
ஏனுதி = படைத்தலைவன், மந்திரி, அம்பட்டன், ஒரு பட்டம்
ஏனை = ஒழிந்த, எத்தன்மைத்து
ஏன்றது = இயன்றது
ஏன்று கொள்ளுதல் = ஏற்றல்

ஐ = மேன்மை, நுண்மை, கணவன், அழகு, வியப்பு, அரசன், தலைவன், தந்தை, கோழை, ஆசான், கடவுள், ஐயம், ஐந்து

ஐகிகம் = இம்மை

ஐங்கணைக்கிழவன் = மன்மதன்

ஐங்கரன் = விநாயகன்

ஐசுவரியம் = ஆண்மை, அதிகாரம், செல்வம்

ஐதிகம் = பழங்காலமுதல் வந்துகொண்டிருக்கும் கேள்வி, உலகுரை

ஐது = அழகு, மெல்லிது, விரைவு, அற்பம்

ஐந்திரம் = இந்திரன்செய்த வடமொழி இலக்கணம்

ஐந்திரி = ஒருமரம், இந்திரன், மகன், பார்வதி, கிழக்கு, கேட்டை, இந்திராணி,

ஐந்திலக்கணம் = எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி, ஆகிய ஐந்து இலக்கணம்

ஐந்தை = சிறுகடுகு

ஐம்பால் = கூந்தல், (ஐந்து வகையாக முடிக்கப் படுதலால் வந்தபெயர்)

ஐம்முகன் = சிவன்

ஐயங்கவீனம் = வெண்ணெய்

ஐயம் = சந்தேகம், குற்றம், பிச்சை, மயக்கவுணர்ச்சி, சிறுபொழுது

ஐயர் = முனிவர், பெருமையிற் சிறந்தவர், தேவர், பார்ப்பார்

ஐயவி = கடுகு, துலாமரம், கடுக்காய்

ஐயன் = அரசன், கடவுள், குரு, அருகன், தந்தை, மூத்தோன், உயர்ந்தோன்

ஐயாஸனம் = சிங்கம்

ஐயானனன் = ஐந்துமுகமுடைய சிவன்

ஐயுறவு = சந்தேகம்

ஐயை = காளி, தலைவி, தாய், பார்வதி, துர்க்கை, பெண்

ஐராணி = இந்திராணி

ஐராவணம் = சிவன்யானை, பட்டத்துயானை, அமிர்தம், ஒருமரம்

ஐராவதி = ஒருநதி, மின்னல், யமன் மனைவி

ஐரேயம் = கள்

ஐவணம் = மருதோன்றி

ஐவனம் = மலைநெல்

ஐவிரலி = கொவ்வை, ஐவேலி, ஒருசிவஸ்தலம்

ஒகரம் = மயில்

ஒக்கலை = இடுப்பின்பக்கம், இடுப்பு

ஒக்கல் = இடுப்பு, சுற்றம், ஒத்தல்

ஒக்குதல் = கொப்புளித்தல், பிற்பட விடுதல், ஒத்தல்

ஒசிதல் = துவளல், முறிதல், வருந்தல், அடங்குதல், சாய்தல் [பரிகாசம்

ஒச்சியம் = நிந்தை, கூச்சம்,

ஒடி = கவண், வலை, காட்டுப் புதர்

ஒடிசில் = கவண்

ஒடித்தல் = ஒளிசெய்தல், முறித்தல்

ஒடு = முதுபுண்

ஒடுக்கம் = வழிபாடு, சுருக்கம், முடிவு, அடக்கம், மறைவிடம்

ஒட்டம் = உடன்பாடு, சபதம், பந்தயப்பொருள், ஒருதேசம்

ஒட்டலன் = பகைவன்

ஒட்டு = மரப்பட்டை, படை வகுப்பு, சபதம், நட்பு, பந்தயம், ஒளிப்பிடம், இணைப்பு, சார்பு, ஆணை, ஒப்பு, ஓரம்,

ஒட்டுநர் = நண்பர்

ஒட்டோலக்கம் = பெருங் கூட்டம், ஆடம்பரம்

ஒட்பம் = அழகு, நன்மை, அறிவு, மேன்மை, ஒளி

ஒண்டன் = நரி,

ஒண்ணல் = கூடுதல்

ஒண்ணாதது = ஒவ்வாதது

ஒண்ணுதல் = ஒளிபடு நெற்றியுடைய பெண், இயலுதல்

ஒண்மை = அழகு, அறிவு, ஒளி, நன்மை, மேன்மை, விளக்கம், மிகுதி, ஒழுங்கு, அறநெறி

ஒதுக்கம் = நடை, மறைவிடம், மகளிர்பூப்பு, பின்னிடுகை

ஒத்தறுத்தல் = தாளம் போடல்

ஒத்திகை = உதவி, ஒப்பு, சரிபார்க்கை

ஒத்துதல் = விலகுதல், ஒற்றுதல், தாக்குதல், தாளம்போடுதல்

ஒப்பம் = கையெழுத்து ஒற்றுமை, அலங்காரம், கட்டளை, மெருகு

ஒப்பரவு = ஒழுங்கு, சமதானம்

ஒப்பனை = அலங்காரம், உவமை, பாவனை

ஒப்பு = அழகு, உவமை, சம்மதம், கவனம்,

ஒப்புரவு = உலகநடை, ஒற்றுமை, சமம், வேளாண்மை

ஒயில் = சாயல், கொடுத்தல், உல்லாசநிலை, தப்புதல்

ஒய்தல் = செலுத்துதல், இழுத்தல், போக்குதல்

ஒராங்கு = ஒருபடியாக

ஒரால் = நீங்குதல்,

ஒரீஇ = நீக்கி

ஒரு = ஆடு, ஒப்பற்ற, ஒன்று

ஒருகுடி = தாயத்தார்

ஒருக்கம் = மனஒடுக்கம், ஒருதன்மை

ஒருக்கல் = அழித்தல், ஒருப்படுத்தல்

ஒருக்குதல் = அடக்குதல், அழித்தல், ஒன்றுசேர்த்தல்

ஒருங்கு = முழுமை, அடக்கம், முழுதும்

ஒருங்குதல் = அழிதல், ஒருவழிப்படல், ஒதுங்குதல்,

ஒருசந்தி = விரதம், ஒருநேர போசனம்

ஒருசார் = ஒருபக்கம்

ஒருசிறை = ஒருபக்கம், ஒருபகுதி, வேறிடம்

ஒருதலை = ஒருபக்கம், உறுதி, துணிவு

ஒருத்தல் = யானை, கரடி, பன்றி, விலங்குகளில் ஆண், எருமைக்கடா

ஒருபடி = ஒருவகை, ஒருவாறு

ஒருபுடை = ஒருபக்கம்

ஒருப்படுதல் = முயலுதல், ஒன்றுகூடுதல், தோன்றுதல், சம்மதித்தல், நட்புக்கொள்ளல்

ஒருப்பாடு = முயற்சி, சம்மதம், மனத்திண்மை, ஒன்றிநிற்கை

ஒருமா = இருபதில் ஒருபங்கு

ஒருமுகம் = நேர்வழி, ஒற்றுமை

ஒருமை = ஒருபிறப்பு, ஒருதன்மை, மெய்ம்மை, ஒற்றுமை, பிளவுபடாதமனம்

ஒருமைமகளிர் = கற்புடைய மகளிர்

ஒருமொழி = ஆணை

ஒருவந்தம் = உறுதி, தனியிடம், நிலைபேறு, நிச்சயம்

ஒருவல் = விட்டுநீங்குதல்

ஒருவன் = ஒப்பற்றவன்

ஒருவு = ஆடு, நீங்குதல்

ஒருவுதல் = நீங்குதல்

ஒரோவழி = சிறுபான்மை,

ஒலி = காற்று, இடி, ஓசை, சொல்
ஒலிதல் = தழைத்தல்
ஒலித்தல் = தழைத்தல், ஆடையின் அழுக்கு நீக்கல், விளக்குதல்
ஒலியல் = சிலை, தீ, தெரு, தோல், தழைக்கை, தளிர் பூமாலை, ஒலித்தல், நதி, மயிற்பீலிக்குஞ்சம், மேலாடை
ஒலுங்கு = கொசு,
ஒல் = முடிவிடம்
ஒல்குதல் = குழைதல், துவளல், நுடங்குதல் நாணுதல், வறுமைப்படுதல், மனம் அடங்குதல், சுருங்குதல், தளருதல், ஒதுங்குதல், கெடுதல், குறைதல், வளைதல்
ஒல்லல் = இயலல், பொருந்தல்
ஒல்லாங்கு = பொருந்துமாறு
ஒல்லாமை = இகழ்ச்சி, வெறுப்பு, பொருந்தாமை
ஒல்லார் = பகைவர்
ஒல்லுதல் = அடைதல், இணங்குதல், பொறுத்தல், இயலுதல், நிந்தித்தல், தகுதல், நிறைவேற்றுதல், பொருந்துதல், விரைதல், ஒலித்தல்
ஒல்லை = சீக்கிரம், பழமை, சிறுமை
ஒவ்வுதல் = இசைதல், பொருந்துதல்,
ஒழிதல் = தங்குதல்,
ஒழிபு = மிச்சம் [எஞ்சுதல்
ஒழுக = மெதுவாக
ஒழுகல் = உயர்ச்சி, நடை, ஒழுகுதல், இளகுதல், முறையாக நடத்தல், வளர்தல், போதல், நீளம்
ஒழுகு = உயரம், ஒழுங்கு, நீளம்
ஒழுகுமாடம் = உடல்
ஒழுகை = வண்டி
ஒழுக்கம் = உயர்ச்சி, மரியாதை, வழி மேன்மை, நெறி, சீலம், நன்னடக்கை, செல்லுகை
ஒழுக்கல் = எழுச்சி
ஒழுக்கு = ஒழுக்கம். வரிசை
ஒழுங்கை = இடுக்குவழி
ஒளி = அறிவு, கடவுள், சிவசக்தி, தீ, சந்திரன், சூரியன், பார்வை, தலைமை, பிரகாசம், புகழ், நன்மதிப்பு, காந்தி, விளக்கு, நட்சத்திரம், கடவுலன், தோற்றம், அழகு
ஒளிக்கடல் = பற்கள்
ஒளிவட்டம் = கண்ணாடி, சந்திரன்
ஒளுகை = வண்டி
ஒள் = அழகு, உண்மை, ஒளி, மேன்மை, நல்ல அறிவு

ஒள்ளியர் = அறிவுடையோர், குற்றமற்றவர்

ஒறுத்தல் = தண்டித்தல், வருத்துதல், வெறுத்தல், கடிதல், இகழ்தல், அழித்தல், நீக்கல், குறைத்தல்

ஒறுப்பு = தண்டனை, கடிந்து பேசுதல், வெறுப்பு

ஒறுவாய் = ஒடிந்தவாய்

ஒறுவு = வருத்தம்

ஒற்கம் = அடக்கம், வறுமை, தளர்வு, குறைவு, நரகம்

ஒற்றி = உரிமை அடமானம்

ஒற்றித்தல் = ஒற்றையாய் இருத்தல், ஒற்றுமையாய் இருத்தல்

ஒற்று = உளவு பார்ப்பவன், மெய்யெழுத்து, ஒற்றடம்

ஒற்றுதல் = ஆராய்தல். தாங்குதல், தள்ளுதல், தீண்டுதல், அடுத்தல், அடித்தல், தழுவுதல், வீழ்த்துதல், விலகுதல், தத்துதல், உளவறிதல், மறைதல், உயத்துணர்தல், மோதுதல், காற்று வீசுதல், துடைத்தல்

ஒற்றை = ஒருவாத்தியம், தனிமை, ஒப்பின்மை

ஒன்பதின்மர் = ஒன்பதுபேர்

ஒன்பான் = ஒன்பது

ஒன்றலர் = பகைவர்

ஒன்றல் = பொருந்துதல்

ஒன்றுமை = பகைமை

ஒன்றார் = பகைவர்

ஒன்று = முத்தி, செல்வம், வாய்மை, தனிமை, அறம், எண், மதிப்புக்குரிய பொருள்

ஒன்றுதல் = பொருந்துதல், கூடுதல், நிலை பெறுதல், கலத்தல், இடைவிடா திருத்தல்

ஒன்றுநர் = நண்பர்

ஒன்னலர் = பகைவர்

ஒன்னா = பொருந்தாத

ஒன்னதார் = பகைவர்

ஒன்னார் = பகைவர்

ஒஃகுதல் = குறைதல், ஒதுங்குதல், பின்வாங்குதல்

ஓ = நீக்கம், சென்றுதங்குதல், மதகு நீர் தாங்கும் பலகை, மகிழ்ச்சிக்குறிப்பு

ஓகம் = பெருங்கூட்டம்

ஓகை = மகிழ்ச்சி

ஓக்கம் = உயர்ச்சி, பெருக்கம், பெருமை

ஓக்கல் = தருதல், ஓங்கச்செய்தல்

ஓக்கிய = எறிந்த, உயர்த்திய, தகுந்த, ஓங்குவித்த

ஓக்குதல் = உயர்த்துதல், தருதல், எறிதல், ஆக்குதல்

ஓங்கல் = உயர்வு, எழுச்சி, மலை, யானை, மூங்கில், மேடு தலைவன், வலிவுடையோன், ஓங்குதல், மரம், மரக்கலம்

ஓங்காரம் = பிரணவம், ஓம்

ஓசம் = பிரபை, வலி, சாமர்த்தியம், கீர்த்தி

ஓசரம் = நிமித்தம், பதில்

ஓசனித்தல் = பறவை சிறகடித்தல், போதற்கு முயலுதல்

ஓசனை = நான்கு காததூரம், (ஒரு காதம் 40 கல்தொலைவு)

ஓசன் = பிடாரிகோவில் பூசாரி, உவாத்தி

ஓசுநர் = எண்ணெய் வாணிகர், வலியோர், மாலுமி

ஓசை = புகழ், ஒலி, வாழை, இயம்

ஓச்சர் = கணக்காயர், பாடம் கற்பிப்பவர், பூசாரிகள்

ஓச்சுதல் = எறிதல், ஓட்டல், செலுத்தல், உயர்த்துதல், ஓங்குதல்

ஓடதி = பூண்டு

ஓடதிபதி = சந்திரன்

ஓஷதீசன் = சந்திரன்

ஓடியம் = பரிகாசம், சபைக்குத் தகாத பேச்சு

ஓடு = கோட்டைகளின் உறை, மண்பாண்டம், ஓடு

ஓடுதல் = பிளத்தல், வளர்தல், வெடித்தல், கெடுதல், குலைதல், நீளல்

ஓடை = மலைவழி, நெற்றிப்பட்டம், குளம், அகழி நீர் ஓடை

ஓட்டம் = உதடு, தோல்வி,

ஓட்டு = புறங்காட்டி ஓடுதல், ஓடுதல்

ஓட்டுதல் = கலத்தல்

ஓட்டெடுத்தல் = விரைந்து ஓடுதல்

ஓணம் = நதி, திருவோணம்

ஓதம் = கடல், அண்டவாதம், வெள்ளம், கடல்அலை, ஈரம்

ஓதவனம் = கடல்

ஓதனம் = உணவு, சோறு

ஓதன்மை = பாடல், ஓதல் தன்மை

ஓதி = ஓணான், கல்வி, மலை, கற்றோன், ஞானம், செறிவு, பெண் மயிர், அறிவு, கூந்தல், அன்னம்

ஓதிமம் = அன்னம், மலை, கவரிமா, புளியமரம்

ஓது = பூனை

ஓதுவான் = மாணாக்கன், திருமுறைபாடுபவன், ஆசிரியன்

ஓதை = ஓசை, மதிலுள் மேடை, காற்று, மதில்

ஓத்து = வேதம், நூல் உட்பாகம், விதி, நூல்

ஓந்தி = ஓணான்

ஓப்புதல் = ஓட்டுதல், நீக்குதல்

ஓமம் = யாகம்

ஓமல் = ஊர்ப்பேச்சு

ஓமான் = ஓணான்

ஓமியம் = ஓமம்

ஓமை = பாலை நிலமரம், மாமரம்

ஓம் = பிரணவம், ஆம்

ஓம்படை = பாதுகாப்பு, பரிகாரம்

ஓம்பல் = பாதுகாத்தல், வளர்த்தல், தவிர்தல், நீக்குதல், விடுதல், உபசரித்தல், வராமல் காத்தல்

ஓய்தல் = ஒழிதல், தளர்தல், முடிதல், சோர்தல், தேய்தல், நீங்குதல், செலுத்தல்

ஓரகத்தி = கணவனின் சகோதரன் மனைவி

ஓரம் = பட்சபாதம், பக்கம்

ஓரல் = ஆராய்தல்

ஓராங்கு = ஒருசேர, இடைவிடாமல், ஒன்று போல

ஓராட்டு = தாலாட்டு

ஓராயம் = சேர்க்கை, சாய்வு, இணைப்பு

ஓரி = நரி, மயிர், ஆண்மயிர், நிறம், விலங்கின் படுக்கை, ஒரு வள்ளல், தேன் முதிர் நிறம்

ஓரிசு = தீர்மானம், சமாதானம்

ஓரை = இரண்டரை நாழிகை, முகூர்த்தம், இராசி, சித்திரான்னம், மகளிர் கூட்டம், மகளிர் விளையாட்டு, நேரம், விளையாடிடம்

ஓர்குண்டலன் = பலராமன்

ஓர்ச்சி = ஞானம், ஆராய்ச்சி, உணர்ச்சி

ஓர்தல் = ஆராய்தல், தெளிதல், அறிதல், நினைத்தல்

ஓர்த்தல் = நினைத்தல், தெரிந்தெடுத்தல், கேட்டல்
ஓர்ப்படி = ஓர் அகத்தி
ஓர்ப்பு = மனோதிடம், பொறுமை, ஆராய்ந்து தெளிதல் கருமம் முடிக்கும் துணிவு
ஓர்மை = துணிவு, ஒற்றுமை,
ஓர்வு = அறிதல், ஆராய்வு
ஓலக்கம் = திருச்சமூகம், சபாமண்டபம்,
ஓலம் = ஒலி, பாம்பு, அடைக்கலம், கடல்
ஓலாட்டு = தாலாட்டு,
ஓலிடல் = ஓலமிடுதல், முழங்குதல், அலறுதல்
ஓலை = ஒருகாதணி, பனையோலை, ஓலை, சீட்டு, ஓலைக்குடை, கடிதம்
ஓலைக்கணக்கர் = பள்ளியில் படிப்பவர்
ஓலைநாயகன் = சோழருடைய தலைமைக்காரிய நிர்வாகி
ஓலைப்பாசுரம் = ஓலைச்செய்தி
ஓலைப்புறம் = கட்டளை
ஓலைவாங்குதல் = இறத்தல்
ஓல் = ஓலம், தாலாட்டு, ஒலி
ஓவம் = சித்திரம், ஓவியம்
ஓவர் = ஓவியர், கம்மாளர், பாடற்கிழமக்கள்
ஓவாமை = ஒழியாமை
ஓவியகாயம் = புலி
ஓவியம் = சித்திரம், அழகு
ஓவியர் = சிற்பநூலோர்
ஓவுதல் = நீங்குதல், ஒழிதல், முடிதல், இடைவிடுதல், ஓய்தல்
ஓளி = வரிசை, யானைப்பந்தி, ஒழுங்கு

## ஔ

ஔ = பூமி, அனந்தம்
ஔகம் = இடைப்பாட்டு
ஔசித்தியம் = தகுதி
ஔசீரம் = ஆசனம், கவரிமா மயிர், படுக்கை
ஔடதம் = மருந்து
ஔதசியம் = பால்
ஔதாரியம் = தாராளமாகக் கொடுக்கும்மனப்பான்மை
ஔபத்தியம் = புணர்ச்சி
ஔபாசனம் = காலை மாலைகளில் இல்லறத்தார் வீட்டில் வளர்க்கும் அக்கினி
ஔரசன் = தான் பெற்ற பிள்ளை
ஔரப்பிரகம் = ஆட்டுமந்தை
ஔவியம் = பொறாமை, தீவினை
ஔவை = தாய் ஔவை தவப்பெண்
ஔனம் = மிளகுரசம்

க = ஒன்றென்னும் எண்ணைக்குறிக்கும் குறி, ஆன்மா, உடல், காற்று, அக்கினி, பிரமன்

ககபதி = கருடன், இராசாளி

ககம் = அம்பு, பறவை, வாயு

ககனம் = ஆகாயம், காடு, வாயுமண்டலம், சேனை

ககுத்து = எருத்தின் திமில்

ககுபம் = திசை, மருதமரம்

ககேசன் = கருடன், சூரியன்

ககோள சாத்திரம் — வான சாத்திரம்

ககோளம் = வான வட்டம்

கக்கம் = அக்குள்

கங்கணம் = காப்பு, கைவளை

கங்கபத்திரம் = அம்பு, பருந்தின் இறகு

கங்கம் = சீப்பு, கழுகு, தீப்பொறி, பருந்து, யாகத்தம்பம்

கங்காதீரம் = கங்கைக்கரை

கங்காத்துவாரம் = அரித்துவாரம்

கங்காளமாலி = சிவன்

கங்காளம் = எலும்புக்கூடு, பெருங்கலம்

கங்காளி = காளி, பார்வதி

கங்கு = கருந்தினை, கரை, அணை, வயல் வரம்பு, வரிசை, தீப்பொறி, பருந்து, எல்லை

கங்குகரை = எல்லை, எண்ணிக்கை

கங்குல் = இரவு, இருள், இடையாமம்

கங்கைகுலத்தார் = வேளாளர்

கஜகர்ணம் = காதை, அசைக்கும் வித்தை, பெருமுயற்சி

கசடர் = கீழ்மக்கள்

கசடு = குற்றம், சந்தேகம், மாசு, தழும்பு

கசம் = ஆழ்ந்த குளம், மயிர், மிகுதி, தலைமயிர், யானை, குழி

கசனை = ஈரம்

கசாக்கிரம் = மயிர் நுனி

கசானனன் = யானைமுக விநாயகன்

கசிதம் = பதித்தல், துடிப்பு

கசிதல் = வருந்துதல், நெகிழ்தல்

கசிவு = அன்பு, இரக்கம், ஈரம், வருத்தம், வேர்வை

கசு = கால்பலம்

கசுமலம் = அழுக்கு, கெட்டது

கசேந்திரன் = அரசயானை, ஐராவதம்

கசை = சவுக்கு, பசை, கவசம்

கச்சகம் = குரங்கு

கச்சட்டம் = கௌபீனம்

கச்சபம் = ஆமை, நவநிதியுள் ஒன்று

கச்சபி = கலைமகள் வீணை

கச்சம் = பக்கம், மரம், ஆமை, மரக்கால், ஒப்பந்தம், இலட்சம், ஊற்று, யானை கழுத்திடு கயிறு, முன் தானை, கச்சு, ஓர் அளவு

கச்சவடம் = சிறு வியாபாரம்

கச்சளம் = இருள், கண் மை

கச்சா = தாழ்மை, ஒருநிறை

கச்சால் = மீன் பிடிக்கும் கூடு

கச்சான் = மேற்குக் காற்று

கச்சி = காஞ்சிபுரம்

கச்சு = நூற் கயிறு, மேலாடை, அரைப்பட்டிகை

கச்சூரம் = கழற்காய், பேரீந்து

கச்சை = கயிறு, யானைக் கழுத்திடு கயிறு, கவசம், கௌபீனம், தழும்பு, முழுப்புடவை

கச்சோதம் = மின்மினி

கஞலல் = பொலிதல், எழும்புதல், செய்தல், நெருங்குதல், மிகுதல்

கஞறம் = கள்

கஞற்றுதல் = நிரப்புதல்

கஞ்சம் = தாமரை, வஞ்சனை வெண்கலம், தாளம், நீர்

கஞ்சனம் = கண்ணாடி, கரிக்குருவி, வலியான்

கஞ்சல் = குப்பை, கூளம்

கஞ்சனை = கண்ணாடி, சிறுபானை, தூப கலசம்

கஞ்சன் = பிரமமன், கம்சன், முடவன், குள்ளன், உலோபி

கஞ்சி = காஞ்சிபுரம், கஞ்சி

கஞ்சிகை = இரத்தினப்பல்லக்கு, குதிரை பூட்டிய தேர், திரைச்சீலை, ஆடை

கஞ்சுகம் = சட்டை, சீலை

கஞ்சுகன் = காவற்காரன், வைரவன்

கஞ்சுகி = சட்டை, பாம்பு, காவல் காரன்

கடகநாதன் = சேனைதிபதி

கடகம் = கேடகம், மதில், இம்புரி, இராஜதானி, காப்பு, வட்டம், யானைக்கூட்டம், சேனை, வாகு வலயம்

கடகன் = காரியத்தை நடத்துபவன், வல்லவன்

கடகு = கேடகம்

கடத்தல் = வெல்லுதல் மேற்படுதல், தாண்டுதல் மீறுதல், அழித்தல் வஞ்சியாது எதிர்த்தல் நீங்குதல்

கடப்பாடு = ஈகை, முறைமை, மிகுதல், கடமை, ஈகை, ஒப்புரவு

கடப்பாரை = இரும்புக்கருவி

கடமா = காட்டுப்பசு, யானை

கடமான் = காட்டுப்பசு

கடமுனி = அகத்தியன்

கடமை = கப்பம், கடன், பெண் ஆடு, முறைமை, காட்டுப் பசு, ஒரு வகை யான மான்

கடம் = அரியவழி, உடல், முறைமை, பாலை நில வழி, கயிறு, கடன், காடு, சுடலை, கோபம், மலைச் சாரல், கடமை, பாவம், யானை மதம், குடம், பாண்டம், யானைக் கதுப்பு

கடம்பவனம் = மதுரை

கடம்பன் = முருகன்

கடம்பாடவி = மதுரை

கடம்பு = திங்கு, கடம்பம்

கடலகம் = ஊர்க்குருவி

கடல்வண்ணன் = திருமால்

கடவது = செய்ய வேண்டுவது

கடவநாள் = செல்லும் நாள்

கடவு = வழி, எருமைக்கடா

கடவுநதி = கங்கை

கடவுதல் = செலுத்துதல், வினவல்

கடவுள் = நன்மை, மேன்மை, குரு, முனிவன், தெய்வம்

கடவை = ஏணி, வழி, குற்றம், வாயில்

கடறு = காடு, சுரம், பாலை நிலம், மலைச்சாரல்

கடற்குட்டம் = கடல்சூழ்ந்த இடம்

கடனிறுத்தல் = கடன் தீர்த்தல், கடமை செய்தல்

கடன் — கடமை, இரவல், பொருள், குடி செலுத்தும் பொருள், முறைமை, இயல்பு, வைதிகக்கிரியை, விருந்தோம்பல், மானம்

கடன்மரம் = கப்பல்

கடன்மை = தன்மை

கடா = கேள்வி, தடை, யானை மதம் [கொப்பரை

கடாகம் = உலக உருண்டை

கடாகாசம் = குடத்தில் தோன்றும் ஆகாசம்

கடாசலம் = யானை

கடாட்சம் = கடைக்கண் பார்வை, கிருபை

கடாம் = யானைமதம்,

கடாரம் = கொப்பரை, பர்மா தேசம், ஓர் ஊர்

கடாவுதல் = கேட்டல், குட்டுதல், விடுதல், தூண்டுதல், அறைதல், செலுத்துதல்

கடி = வாசனை, கூர்மை, காவல், பூசை, அதிசயம், அச்சம், இருப்பு, காலம், ஐயம், திருமணம், ஓசை, விரைவு, நீக்கம், பிசாசு, கரிப்பு, புதுமை, மிகுதி, கடிஞை ஒளி, குறுந்தடி, சிறப்பு, விளக்கம், குறுந்தடி

கடிகை = தாழ், துண்டு, நாழிகை, முகூர்த்தம் விதிப்பவன், மங்கல பாடகர், தோள் வளை, கழுத்துப்பட்டை, குத்துக்கோல்,

கடிசூத்திரம் = அரைஞாண்

கடிஞை = யாசிப்பவர் மட்கலம்

கடிதடம் = பெண்குறி

கடிதம் = பிசின், அடுக்கல், கடிதம்

கடிதல் = கோபித்தல், தண்டித்தல், ஓட்டுதல், அடக்குதல், விரைதல், அழித்தல், கொல்லுதல், நீக்கல்

கடிந்தோர் = முனிவர்,

கடிப்பகை = கடுகு, வேம்பு,

கடிப்பம் = ஆபரணப் பெட்டி, காதணி

கடிமரம் = காவல் மரம், பகைவர் அணுகாவண்ணம் வளர்த்துக்காக்கப் படும் காவல்மரம்

கடிப்பு = குறுந்தடி, ஆமை, காதணி

கடிவை = யானை

கடிறு = யானை

கடு = விஷம், பாம்பு, முள், கடுக்காய், வெறுப்பு

கடுக்குதல் = பூசுதல், ஒத்தல், சுளித்தல், உளைதல்

கடுக்கை = கொன்றை

கடுங்கண் = கொடுமை, அஞ்சாமை

கடுத்தலை = வாள்

கடுத்தல் = உவமையாதல், நோவெடுத்தல், கோபித்தல், உறைத்தல், ஒத்தல், சந்தேகம் கொள்ளல், குறித்தல், விரைதல், மிகுதல்

கடுப்பு = கொதிப்பு, ஒப்பு, கோபம், விரைவு, அகங்காரம்

கடுமா = புலி, சிங்கம், யானை

கடும்பு = சுற்றம், சும்மாடு

கடுவல் = கடுங்காற்று, வன்னிலம்

கடுவளி = பெருங்காற்று

கடுவன் = குரங்கு, நாய் பூனை இவற்றின் ஆண், படைநோய்

கடுவாய் = புலி, ஒருநதி

கடை = கீழ், இடம், பின், காம்பு, எல்லை, முடிவு, வாயில், இழிவு

கடைகள் = இழிந்தோர்

கடைகோல் = தீக்கடை கோல்

கடைக்கருவி = உடுக்கை

கடைக்காப்பு = பதிகத்தின் ஈற்றுப்பாடல்

கடைக்கால் = ஊழிக்காற்று, அஸ்திவாரம்

கடைசியர் = மருதநிலப் பெண்கள்

கடைஞர் = மருதநிலமக்கள், இழிந்தவர்

கடைதிறப்பு = கதவுதிறத்தல்

கடைத்தலை = முதல்வாயில்

கடைபோதல் = முடிதல், நிறைவேறல்

கடைப்பிடி = சித்தாந்தம், உறுதி, அபிமானம்

கடைமணி = ஆராய்ச்சி மணி, பூண்

கடைமீன் = இரேவதி நட்சத்திரம்

கடைமுகம் = தலைவாயில்

கடையம் = இந்திராணி கூத்து

கடையாயார் = இழிந்தோர்

கடையுவா = அமாவாசை

கட்கம் = வாள், அக்குள், ஒரு மிருகம்

கட்சி = பறவைக்கூடு, காடு, பக்கம், புகலிடம், மனிதர் படுக்கை, பிரிவு, போர்க்களம், சேக்கை

கட்செவி = பாம்பு

கட்டங்கம் = மழுவாயுதம், தண்டு

கட்டம் = துறைமுகம், சிரமம், நீராடும் துறை

கட்டல் = தோண்டல், கட்டுதல், திருடல், களைஎடுத்தல்

கட்டழகு = பேரழகு

கட்டளை = உவமை, முறை, விதி, உத்தரவு, உரைகல், தராசு, கோயில் தருமம், செங்கல் அச்சு

கட்டளைக்கல் = உரைகல்,

கட்டாடி = வண்ணான், குறிசொல்வோன்

கட்டாணி = சமர்த்தன், உலோபி

கட்டாரி = சூலம், சிறுவாள்

கட்டி = சர்க்கரை, கற்கண்டு, பொன், பிளவை, திரளை, பரு

கட்டியக்காரன் = புகழ்வோன்

கட்டியங்கூறல் = புகழ்ச்சிக் கூறல்

கட்டியம் = புகழ்ந்து பேசல்

கட்டில் = சிங்காதனம், படுக்கை
கட்டு = பொய், மூட்டை, வரம்பு, காவல், வகுப்பு, தளை, ஆணை
கட்டுதல் = பிணித்தல், கற்பித்துச்சொல்லுதல், செலுத்துதல், தடுத்தல், போலுதல், வெல்லுதல், அபசகுனமாதல், முடித்தல்
கட்டுரை = உறுதிச்சொல், பொய், பொருளுள்ள சொல், புனைந்துரை, பழமொழி
கட்டுவாங்கம் = மழு, [மொழி யோகியர் தண்டு
கட்டுவை = கட்டில்
கட்டுறவி = கட்டெறும்பு
கட்டூண் = களவு செய்து உண்ணல்
கட்டூர் = பாசறை
கட்பு = களைபிடுங்கல்
கட்புலம் = பார்வை
கட்போர் = திருடு செய்பவர்
கணகன் = ஜோதிடன்
கணக்கன் = கணக்குப்பார்ப்பவன், புதன்
கணக்காயர் = உபாத்தியாயர், அறிஞர்
கணக்கு = எண், எழுத்து கருத்து, அளவு, சூழ்ச்சி தொகை, தன்மை, கணக்குக்குறிப்பு, கணக்கு நூல்
கணநாதன் = சிவன்
கணபங்கம் = க்ஷணந்தோறும் தோன்றி அழிதல்
கணப்பு = தீச்சட்டி
கணம் = காலநுட்பம், திரட்சி, வட்டம், சிறுமை, விண்மீன், கூட்டம், பிசாசம், அற்பம், சிவகணம்,
கணவம் = அரசமரம்
கணவிரம் = அலரி
கணனம் = எண்ணுதல்
கணி = சோதிடன், வேங்கை மரம், மருத நிலம்
கணிகை = தாசி, முல்லை
கணிசம் = அளவு, மதிப்பு
கணிச்சி = மழு, அங்குசம், கோடரி, கத்தி
கணிதம் = சோதிடம், அளவு எண்ணூல்
கணியான் = கூத்தாடி
கணு = மூங்கில், மூட்டு
கணுவை = ஒரு வாத்தியம்
கணேசன் = சிவன், விநாயகன்
கணை = அம்பு, அலகு, காம்பு, வளைதடி, திரட்சி, பூரநாள்
கணையம் = யானைக்கம்பம், ஒருவாத்தியம், குறுக்கு மரம், அம்பு, வளைதடி, கோட்டை, தண்டாயுதம்

கணையாழி = முத்திரை மோதிரம்

கண் = இடம், தாட்சண்யம் துவாரம், மூங்கில், விழி, கணு, அறிவு, அழகு, அல்லி,

கண்கூடு = பிரத்தியட்சம்

கண்டகம் = காடு, முள்ளி, வயிரம், முள், வாள், கொடுமை

கண்டகர் = அசுரர், கீழ் மக்கள்

கண்டகி = தாழை, ஒருநதி, இலந்தை, பொல்லாதவள்

கண்டபேரண்டம் — இருதலைப்பறவை, பெருவலி

கண்டம் — சர்க்கரை, கழுத்து, குரல், மணி, துண்டம், பல்வண்ணத் திரை, இடையூறு

கண்டல் = தாழை, நீர் முள்ளி

கண்டன் = வீரன், சோழன்

கண்டாமணி = வீரக்கழல், பெருமணி

கண்டி = உருத்திராக்கம், எருமைக்கடா, சிறுகிரை,

கண்டிகை = உருத்திராக்கம், தோளணி, கழுத்தணி

கண்டிரவம் = சிங்கம்

கண்டு = கற்கண்டு, கட்டி

கண்டுமுட்டு = கண்டதலான தீட்டு

கண்டுமுதல் = மொத்த வரவு

கண்டூதி = தினவு

கண்டூயம் = தினவு,

கண்டை = யானை மணி, வீரக்கழல், சரிகை

கண்ணராவி = துக்கநிலை

கண்ணல் = கருதல், குறித்தல்

கண்ணழித்தல் = பதப்பொருள் கூறல்

கண்ணழிவு = பதவுரை கூறல், தாமதம், குறைவு

கண்ணறை = குருடு, அகலம், வன்னெஞ்சு, சிறு அறை

கண்ணுளர் = சித்திரக்காரர், அன்பர்

கண்ணி = வலை, கயிறு, பூமாலை, ஒருபாட்டு, போர்ப்பூ

கண்ணிலி = எறும்பு

கண்ணிறை = தூக்கம்

கண்ணுகம் = குதிரை

கண்ணுதல் = சிவன், நெற்றிக் கண், கருதுதல்

கண்ணுளார் = நடிகர், பாணர், சித்திரக்காரர்

கண்ணுள் = கூத்து [காரர்

கண்ணுள்வினைஞர் = சித்திரக்

கண்ணோணி = மூங்கில் ஏணி

கண்ணோறு = திருஷ்டி

கண்ணோடை யாட்டியார் = கள்விற்கும் மாதர்

கண்ணோடுதல் = விரும்புதல், இரங்குதல், பார்வை யிடுதல்

கண்ணோட்டம் = தாட்சண்யம்

கண்படல் = தூக்கங் கொள்ளுதல்

கண்படை = தூக்கம், படுக்கை

கண்பாடு = தூக்கம்

கண்பு = சண்பங் கோரை

கண்மணி = உருத்திராக்கம், கண்ணுள் கருமணி

கண்மாறல் = புறங் கூறல், இடம் மாறுதல்

கண்மை = தாட்சண்யம், காட்சி

கண்வளர்தல் = தூங்குதல்

கதம் = கோபம், வேகம், அடைந்தது, வலி ஓட்டம்

கதம்பம் = கூட்டம், கடப்ப மரம், வாசனைத் தூள்

கதலல் = அசைதல் [மேகம்

கதலி = வாழை, காற்றாடி துணிக்கொடி

கதலிகை = துணிக்கொடி

கதலிவனம் = திருக்கழுக் குன்றம்

கதலுதல் = அசைதல்

கதவம் = காவல்

கதவு = காவல்

கதழ் = வேகம்

கதழ்தல் = விரைதல், மிகு தல், ஓடுதல்

கதழ்வு = விரைவு, மிகுதி, உக்கிரம், ஒப்பு, கலக்கம்

கதனம் = கலக்கம், பேச்சு, வேகம், கடுமை

கதாமஞ்சரி = கதைக் கொத்து

கதி = நடை, நிலை, பதவி, பிறப்பு, புகல் இடம், மோட்சம், உபாயம், வழி, அறிவு, விரைவு சத்தி, படலம்

கதித்தல் = எழுச்சி, போதல், சொல்லல், பருத்தல், கோபித்தல், மிகுதல், அறிதல்

கதிபி = தலைமைக்குடியானவன்

கதிமை = பருமை

கதிரகம் = கீழ்த்திசை

கதிரம் = அம்பு

கதிரை = கதிர்காமம்

கதிர் = சூரிய சந்திரர், ஒளி, இரும்புமுள், கிரணம், வெயில், ஆர்

கதிர்ப்பு = ஒளி
கது = மலைப் பிளவு
கதுப்பு = கன்னம், பெண் மயிர், மயிர்
கதுவுதல் = பற்றுதல், அழிதல்
கதை = தடி, பொய்வார்த்தை, சொல்
கதைத்தல் = சொல்லுதல்
கத்தணம் = சட்டை
கத்தபம் = கழுதை
கத்திகை = மாலைவகை
கத்தியம் = வசனம், நல்லாடை
கத்தியோதம் = மின்மினிப் பூச்சி
கத்திரியர் = அரசர், க்ஷத்திரியர்
கத்தை = கழுதை, கற்றை
கத்யோதம் = மின்மினிப் பூச்சி
கநகாசலம் = பொன்மலை, மேருமலை
கநிட்டன் = தம்பி
கநிட்டிகை = சிறுவிரல்
கநித்திரம் = மண்வெட்டி
கந்தகம் = முருங்கை மரம், வெள்ளைப்பூண்டு
கந்தசாரம் = சந்தனம், பனிநீர்
கந்தமூலம் = கிழங்கு

கந்தம் = வாசனை, சந்தனம், தூண், கிழங்கு, கழுத்தடி இந்திரியம், கருணைக் கிழங்கு, அணுக்கூட்டம்
கந்தரம் = கழுத்து, கடற்பாசி, மேகம், மலைக்குகை
கந்தருவம் = குதிரை, இசை, இசைப்பாட்டு, ஒருவகை மணம்
கந்தர்ப்பன் = மன்மதன்
கந்தவகன் = காற்று
கந்தவாகனன் = காற்று
கந்தழி = பரம்பொருள்
கந்தனம் சட்டை
கந்தாயம் = விளைவுகாலம், பங்கு, லாபம்
கந்தாரம் = தேன், இசைப் பாட்டு
கந்தாவகன் = காற்று
கந்தி = பாக்கு, வாசனைப் பொருள், துவரை, மரகதம், ஆரியாங்கனை
கந்து = பசு முதலியன தினவு போகத்தேய்த்துக் கொள்ள அமைத்ததறி, தூண், கட்டுத்தறி, பற்றுக்கோடு, பதர், குதிரையின் முழுப்பாய்ச்சல்
கந்துகம் = குதிரை, பந்து
கந்துகவரி = பந்துப்பாட்டு
கந்துள் = கரி
கந்தை = கருணைக்கிழங்கு,

கபடநாடகசூத்திரன் = திருமால்
கபந்தம் = உடல்குறை
கபர்த்தம் = சிவன் சடை
கபர்த்தி = சிவன்
கபாடம் = கதவு, காவல், பொதி
கபாலி = வயிரவன், சிவன்
கபி = குரங்கு
கபிஞ்சலம் = காடை
கபித்தம் = விளாமரம்
கபிலம் = கரிக்குருவி, கருமைகலந்த பொன்னிறம்
கபிலை = தெய்வப்பசு, ஏற்றம்
கபோதம் = புறு
கபோலம் = கன்னம்
கப்படம் = ஆடை, அரை
கப்பணம் = கைவேல், காப்புக்கயிறு, இரும்புமுள்
கப்பரை = பிச்சைப் பாத்திரம்
கப்பற்பாட்டு = ஏலப்பாட்டு
கப்பித்தல் = கிளைவிடல், பெருத்தல்
கப்பு = தோள், பிளவு, கவர்ச்சி, சிறுகிளை
கப்புவிடுதல் = கிளைவிடுதல்
கம = நிறைவு
கமகன் = நூற்பொருள் விரிக்க வல்லவன்
கமஞ்சூல் = மேகம்
கமடம் = ஆமை
கமண்டலம் = சுரைக்குடுக்கை, நீர்ப்பாத்திரம்
கமநம் = நடை, சேர்தல்
கமம் = நிறைவு, விளைநிலம்
கமர் = நிலப்பிளவு, விலக்கு
கமலம் = தாமரை, நீர், செம்பு, ஒரு பேரெண்
கமலயோனி = பிரமன்
கமலாலயம் = திருவாரூர்
கமலை = இலக்குமி, திருவாரூர்
கமறுதல் = அழுதல், மிக ஒலித்தல், மிகவேகுதல்
கமனகுளிகை = நினைத்த இடத்திற்குக் கொண்டு போய்விடும் மருந்து
கமனம் = போதல்
கமித்தல் = பொறுத்தல், தாங்குதல், போதல்
கமுகு = பாக்குமரம்
கமுக்கட்டு = அக்குள்
கமுக்கம் = அடக்கம்
கமை = பொறுமை, பூமி, மலை
கமைப்பு = பொறுமை
கம் = ஆகாயம், செயல் விரைவு, வெண்மை, தலை, நீர், மேகம், உயிர், ஆடு, மோட்சம், தொழில்
கம்பமா = யானை

கம்பம் = அசைவு, நடுக்கம், தூண், விளக்குத்தண்டு
கம்பலம் = மேல் கட்டி, கம்பளி
கம்பலை = ஓசை, துன்பம், அச்சம், நடுக்கம், வயல்
கம்பல் = ஆடை
கம்பளர் = மருத நிலமக்கள்
கம்பனம் = அசைவு, நடுக்கம்
கம்பாநதி = காஞ்சியில் உள்ள நதி
கம்பிதம் = அசைவு, நடுக்கம்
கம்பித்தல் = அசைதல், நடுங்குதல், அசைத்தல், முழங்குதல்
கம்பீரம் = தாமரை, அழகு, செருக்கு, ஆழ்ந்த அறிவு
கம்பு = செந்தினை, சிறுகழி, ஒருதான்யம், சங்கு
கம்புகட்டி = நீர் பாய்ச்சுவோன்
கம்புக்கிரீவம் = சங்குபோல மூன்று ரேகையுள்ள கழுத்து
கம்புள் = சங்கு, சம்பங்கோழி
கம்பை = கம்பாநதி
கம்மகாரர் = கப்பலோட்டிகள்
கம்மம் = தொழில், சிற்பம்
கம்மிய நூல் = சிற்ப நூல்
கய = மெல்லிய, பெரிய
கயக்கம் = குறைவு, கலக்கம் இடையீடு [குதல்
கயக்குதல் = கசத்தல், கலக்
கயத்தி = கொடியவள், கீழ்மகள்
கயந்தலை = யானைக்கன்று, மனத்துன்பம், மெல்லிய தலை
கயமுகன் = விநாயகன், ஓர் அரசன்
கயமுனி = யானைக்கன்று
கயமை = கீழ்மை, கொடுமை
கயம் = நீர், நீர் நிங்காமடு, ஆழம், அகழி, குளம், குறைவு, கீழ்மை, மேன்மை, கேடு, பெருமை, கருமை, யானை, தேய்வு, அழிவு, நீர்நிலை
கயவர் = கீழ்மக்கள்
கயவாய் = கரிக்குருவி, எருமை, பெரியவாய்
கயவு = பெருமை, களவு
கயிரவம் = செவ்வாம்பல், வெள்ளாம்பல்
கயிலை = கயிலாயமலை
கயில் = பிடர்
கயிறு மாறுதல் = குதிரை விற்பவர் கயிற்றைப் பிடித்து வாங்குவோர் கையில் அளித்தல்
கயிற்கடை = கொக்குவாய்
கயினி = விதவை, அஸ்த நாள்

கரகம் = ஆலங்கட்டி, கமண்டலம், கெண்டி, குடம், நீர்த்துளி

கரகரப்பு = தினவு

கரம் = நகம், யானைக் கரணம்

கரசரணாதி = கைகால் முதலியன

கரசல் = புன்செய் நிலம்

கரடகம் = கபடம்

கரடகன் = வஞ்சகன்

கரடம் = காக்கை, யானை மதம் பாய் சுவடு, யானை மதம்

கரடிக்கூடம் = அரங்கம்

கரடு = மணிக்கட்டு, முருடு, வளர்ச்சியற்றது, மரக்கணு

கரணம் = கணிதம், இந்திரியம், அந்தக்கரணம், உடம்பு, செய்கை, மணம், கூத்துவகை, கருவி, மணச்சடங்கு, கைத்தொழில்

கரணர் = கணக்கர்

கரணை = கரண்டி, துண்டு

கரண்டகம் = பூக்குடலை, சுண்ணாம்புச் செப்பு

கரண்டம் = நீர்க்காக்கை, கமண்டலம்

கரண்டை = முனிவர் வாழ் இடம், குண்டிகை, கமண்டலம்

கரதலாமலகம் = உள்ளங்கை நெல்லிக்கனி

கரத்தல் = மறைத்தல், கவர்தல்

கரந்தை = பகைவர் கொண்ட பசுக்களை மீட்போர் அணியும் மாலை

கரபத்திரம் = கைவாள்

கரபம் = யானை

கரபல்லவம் = கைவிரல்

கரபாத்திரம் = கையே பாத்திரமாகக் கொண்டு பிச்சை ஏற்று உண்டு வாழ்தல்

கரப்பு = மறைப்பு, களவு, வஞ்சகம், மீன் பிடிக்கும் கூடை, மத்து

கரம் = கழுதை, கிரணம், குடிமக்கள் செலுத்தும் வரி, கை, விஷம், செயல், யானைத்துதிக்கை

கரவடம் = களவு, வஞ்சகம்

கரவாளம் = கைவாள்

கரவீரம் = அலரி, மயானம் வாள்

கரவு = ஒளித்தல், பொய் களவு, வஞ்சகம், முதலை, உலோபம்

கரளம் = விஷம்

கரா = முதலை

கராசலம் = யானை

கராம் = முதலை

கராளம் = தீமை, திக்குணம்

கரி = சாட்சி, பெட்டைக் கழுதை, யானை, விஷம், அடுப்புக்கரி, கருமை

கரிசல் = கருமை

கரிசனம் = யானைக்கொம்பு, அன்பு

கரிசனை = அன்பு

கரிசு = குற்றம், பாபம்

கரிணி = பெண்யானை, மலை, மலைக்குகை

கரித்தல் = உறைத்தல், கார்த்தல், வெறுத்தல்,

கரிப்பு = அச்சம், நிந்தித்தல்

கரிமா = கனமாதல் சித்தி

கரிமுக அம்பி = யானை முக ஓடம்

கரிமுகன் = விநாயகன்

கரியர் = கீழ்மக்கள், நடுச் சொல்வோர்

கரியவன் = கண்ணன், சனி, இந்திரன்

கரில் = குற்றம், கொடுமை, கார்ப்பு

கரீரம் = அகத்தி, குடம், யானைப்பல்லடி

கரு = பிறவி, முட்டை, நடு, கருநிறம், அணு

கருகூலம் = பொக்கிஷம்

ருக்கம் = கார்மேகம்

ருக்கல் = இருள், மந்தாரம், காய்ந்தபயிர்

கருக்காய் = பிஞ்சு

கருக்கிடை = ஆலோசனை

கருக்கு = பொறித்தசித்திரம் கூர்மை, நேர்மை

கருக்குழி = திட்டுதல், கருப் பாசயம்

கருங்களமர் = பறையர்

கருங்காடு = சுடுகாடு

கருங்கை = வன்தொழில், கொலைத் தொழில், வலிய கை

கருங்கொல் = இரும்பு

கருஞ்சனம் = முருங்கை

கருடபஞ்சமி = ஆவணி மாத சுக்கிலபட்ச பஞ்சமி திதி

கருணம் = எலிமிச்ச மரம்

கருணாகடாட்சம் = கிருபைப் பார்வை

கருணாகரம் = அருட்கடல்

கருணி = மலை, குகை

கருணிகன் = கணக்கன்

கருதலர் = பகைவர்

கருதுதல் = விரும்பல், எண்ணல், மதித்தல்

கருத்தபம் = கழுதை

கருநெய்தல் = கருங்குவளை மலர்

கருநெறி = தீ

கருந்தனம் = பொன், செல்வம்

கருந்தாது = இரும்பு

கருப்பக்கிரகம் = மூலஸ்தானம்

கருப்பட்டி = பனைவெல்லம்

கருப்பம் = உள், சினை

கருப்பாசயம் = கரு இருக்கும் இடம்

கருப்புக்கட்டி = வெல்லம்

கருப்புவில் = மன்மதன் வில்

கருப்பை = எலி, கருவாகிய பை

கருப்பொருள் = குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் பாலை யாகிய நிலங்களில் உற்பத்தியாகும் பொருள்கள், காரணப் பொருள்

கருமம் = வெப்பம், செய்கை, கிரியை

கருமா = பன்றி, யானை

கருமான் = பன்றி, கொல்லன்

கருமுகில் = கருமேகம்

கருமேந்திரியம் = தொழில்களைச் செய்யும் இந்திரியங்கள்

கருமை = பெருமை, கொடுமை, கறுப்பு, வலிமை, பசுமை

கரும்பிள்ளை = காக்கை

கரும்பு = புனர்பூச நாள், கரும்பு

கரும்புல் = பனை

கரும்புள் = வண்டு

கரும்புறம் = பனை

கரும்பொன் = இரும்பு

கருவடம் = மலையும் ஆறும் சூழ்ந்த ஊர்

கருவரி = இருள்

கருவாலி = ஒரு குருவி

கருவி = மேகம், கூட்டம், கவசம், ஆயுதம், தொகுதி, உபகரணம், யாழ், கைத்தாளம், கேடகம், சித்திரம்

கருவிகரணங்கள் = இந்திரியங்களும் மனமும்

கருவிளம் = வில்வம்

கருவினை = பாவம்

கருவுயிர்த்தல் = ஈனுதல்

கருவூர் = வஞ்சிமாநகர்,

கருவூலம் = பொக்கிஷம்

கருவை = கரிவலம்வந்த நல்லூர், வரகு வைக்கோல்

கருளன் = கருடன்

கருள் = இருள், குற்றம், கறுப்பு, நல்லாடை, சீற்றம்

கருனை = பொரிக்கறி [யானை

கரேணு = யானை, பெண்

கரைதல் = அழுதல், அழைத்தல், ஒலித்தல், இளைத்தல், சொல்லுதல், வருத்துதல்

கரையார் = வலைஞர், படவர்

கரோடி = முடிமாலை

கரோருகம் = நகம்
கர்க்கடகம் = நண்டு
கர்ச்சூரம் = பேர் ஈச்சம்
கர்ணபரம்பரை = கேள்வி வழியாக வந்தசெய்தி
கர்ணம் = காது, கணக்கன்
கர்ணவேதம் = காதுகுத்தல்
கர்ணிகை = தாமரைக் கொட்டை
கர்த்தபம் = கழுதை
கர்த்தவ்வியம் = செய்யத் தக்கது
கர்ப்பக்கிருகம் = மூலஸ்தானம், கருவீடு
கர்ப்பூரம் = பொன், சூடம்
கர்வம் = ஒரு பேரெண், கர்வம்
கலகம் = போர், மாறுபாடு, பேர் ஒலி
கலங்கரைவிளக்கம் = கடலில் வரும் கப்பல்கட்குக் கரை அறிவிக்க அமைத்த தீபஸ்தம்பம்
கலசமுனி = அகத்தியன், கலோற்பவன்
கலதி = மூதேவி, கேடு, தீக்குணமுடையோன்
கலப்பை = யாழ்,உழுபடை, வாத்தியப்பை
கலமர் = பாணர்

கலம் = கப்பல், நகை, யாழ், பாத்திரம், ஆயுதம்
கலர் = கீழ்மக்கள்
கலவம் = தோகை
கலவர் = பரதவர், படை வீரர்
கலவி = புணர்ச்சி
கலவை = சேறு, சுண்ணச் சாந்து
கலனை = கலப்பை, சேணம்
கலன் = கீழ் மகன், கொடியன், கலம்
கலா = நூல்
கலாநிதி = சந்திரன்
கலாபம் = அரைப்பட்டிகை, மயில் தோகை
கலாம் = ஊடல், கொடுமை, போர், கோபம், கலகம், மாறுபாடு
கலாய்த்தல் = கோபித்தல்
கலி = ஓசை, வறுமை. சனி, கலியுகம், கலிப்பா, மகிழ்ச்சி, எழுச்சி, வலி, போர், துன்பம், செருக்கு, விழா, கலகம், முழக்கம்
கலிகை = பூவரும்பு
கலிங்கம் = ஊர்க்குருவி, குதிரை, சீலை, போர்வை, வானம்பாடி

கலித்தல் = எழுச்சி, ஒலித்தல், உண்டாதல், தழைத்தல், மிகுதல், மகிழ்தல், செருக்குதல்

கலிபிலி = ஆரவாரம், கலகம்

கலிப்பு = ஓசை, உயரம், மிகுதி, பொலிவு

கலியன் = திருமங்கை யாழ்வார், சனி

கலியாணி = பார்வதி

கலியாப்தம் = கலிவருஷம்

கலிழ்தல் = அழுதல், ஒழுகுதல்

கலினம் = கடிவாளம்

கலினை = மிளகு

கலியம் = கடிவாளம்

கலுடம் = பாவம், கலங்கல் நீர்

கலுவடம் = பூவரும்பு

கலுழன் = கருடன்

கலுழி = அழுகை, வெள்ளம், வண்டல், கலக்கம், காட்டாறு, கலங்கல் நீர்

கலுழ் = கலக்கம், அழுகை

கலுழ்ச்சி = துக்கம், அழுகை

கலுழ்தல் = அழுதல், உருகுதல், பொருந்துதல், கலங்குதல், ஒழுகுதல்

கலை = ஆண்மான், ஆண் குரங்கு, சிலை, மகரமீன், மேகலை, சாமர்த்தியம், சந்திரன், அம்சம், கால நுட்பம், கல்வி, நூல், சரீரம், சாத்திரம்

கலைஞர் = புலவர்

கலைமகள் = சரஸ்வதி, கலைமான்

கலையானத்தி = துர்க்கை

கலைவாகன் = வாயு

கலைவாணி = கலைமகள்

கல் = மலை, கல்வி, பாறை, இரத்தினம், தோண்டு, முத்து,

கல்மஷம் = குற்றம்

கல்யாணம் = பொன், நற்குணம், சுபம், மணம்

கல்லகம் = மலை

கல்லடார் = விலங்கைப் பிடிக்கும் கருவி

கல்லணை = குதிரைத்தவிசு

கல்லல் = குழப்பம்

கல்லளை = மலைக்குகை

கல்லறை = மலைக்குகை, பிணக்குழி

கல்லாடை = காவி வஸ்திரம்

கல்லாரம் = செங்கழுநீர்மலர்

கல்லி = ஆமை, ஊர்க்குருவி

கல்லுதல் = தோண்டுதல், துருவுதல், அரித்தல்

கல்லை = தொன்னை, குமிழ், பொய், பிணக்கு

கல்லோலம் = நீர் அலை

கல்வளை = மலைக்குகை

கல்விக்களஞ்சியம் = கல்விக்கு இருப்பிடமாயுள்ளவன்

கல்வெட்டு = சிலாசாஸனம்

கவடி = பலகறை

கவடு = மரக்கொம்பு, பகுப்பு, யானை கழுத்திடு கயிறு

கவணை = கவண், மாட்டுக்குத் தீனி வைக்குமிடம்

கவண் = கல்எறி, கயிறு

கவந்தம் = நீர், பேய், உடற்குறை

கவந்தி = கோவணம், கந்தைகளாலான மெத்தைப் போர்வை

கவயமா = காட்டுபசு

கவயம் = காட்டுப்பசு, கவசம்

கவரி = எருமை, சாமரை, கவரிமா, தேர்

கவர் = இரண்டாகப்பிரிகை, வஞ்சகம், விருப்பு

கவர்தல் = விரும்புதல், முயங்கல், நுகர்தல், அகப்படுதல், அழைத்தல்

கவர்த்தல் = பிரிவு படுதல்

கவர்பு = வேறுபடுகை

கவர்வழி = பலவாகச் செல்லும் வழி

கவர்விடுதல் = கிளைவிடுதல்

கவலை = செந்தினை, மனத்துயர், மரக்கொம்பு, தோல்கடை, துன்பம், கபிலை, நாற்சந்தி, அக்கறை

கவல் = வருத்தம்

கவல்பு = கவலை

கவலல் = விரும்புதல்

கவவு = உள்ளிடு, முயக்கம், விருப்பம்

கவழம் = கவளம்

கவழிகை = திரைச்சீலை

கவளி = } நூற்கட்டு
கவளிகை = } வெற்றிலைக்கட்டு

கவளிகரித்தல் = விழுங்கல்

கவறாடல் = சூதாடல்

கவறு = சூதாடு கருவி, சூது

கவற்சி = வருத்தம்

கவனம் = வேகம், கருத்து, போர், காடு, வெப்பம், கலக்கம்

கவான் = துடை, குகை, கள்வன், மலைப்பக்கம், சாரல்

கவி = குரங்கு, வால்மீகி, பாட்டு, புலவன், குரு, ஞானி

கவிகை = குடை, ஈகை, வளைவு

கவிதை = பாட்டு

கவித்தம் = விளாமரம், கை முட்டி

கவிப்பர் = வணிகருள் ஒரு ஜாதியினர்

கவிப்பு = குடை, மணம் பற்றுகை

கவிர் = முள் முருக்கு

கவின் = அழகு

கவீரம் = அலரி

கவுசணம் = கோவணம்

கவுசனை = உறை

கவுந்துவம் = வஞ்சகம்

கவுந்தியர் = முனிவர்

கவுமாரம் = இளமை

கவுளி = பல்லி, தென்னை

கவுள் = யானைக் கதுப்பு பக்கம், கன்னம்

கவுனி = கோட்டை வாயில்

கவேரகன்னி = காவேரி

கவை = காடு, வேலி, இரட்டை, மரக்கப்பு, காரியம், ஆயில்ய நாள், பிளவு

கவைதல் = மூடுதல், மொய்த்தல்

கவைத்தல் = உளதாதல், அணைத்தல்

கவைத்தாள் = நண்டு, பிளவு பட்ட கால்

கவைமுள் = வேலமுள்

கவ்வை = பழிச்சொல், துன்பம்

கழகம் = கல்வி பயில் இடம், சூது, சூதாடும் இடம், படை, மல் பயில் இடம், ஓலக்கம்;

கழங்கு = கழற்சிக் காய் ஆட்டம், கழற்சிக்காய், வெறியாடல்

கழஞ்சு = பன்னிரண்டு பண எடைகொண்ட அளவு

கழப்பு = சோம்பல்

கழல் = கால்செருப்பு, வீரத் தண்டை கழங்கு, சிலம்பு

கழறுதல் = இடித்துக் கூறுதல், சொல்லுதல்

கழற்று = உறுதி மொழி

கழற்றுரை = கடிந்துமொழிதல்

கழாயர் = கழைக்கூத்தாடிகள்

கழாய் = கழுகு, மூங்கில்

கழால் = களைதல், கழுவுதல்

கழி = கடல், கயிறு, உப்பளம் மாமிசம், கோல், மிகுதி

கழிக்கரை = கடற்கரை

கழிதல் = ஒழிதல், வருந்துதல், செல்லுதல், வெளிப்படுதல்
கழிமுகம் = அருவி
கழியர் = பரதவர்
கழு = கழுகு, கழுமரம்
கழுக்கடை = கழுமுள், சூலம்
கழுக்காணி = உலக்கை, அறிவற்றவன்
கழுது = பேய்; வண்டு, பரண்
கழுநீர் = ஆம்பல், குவளை, செங்கழுநீர் மலர்
கழுந்து = உலக்கை முனை, முரட்டுத்தனம்
கழுமம் = குற்றம்
கழுமலம் = சீர்காழிப்பதி
கழுமல் = மயக்கம், நிறைவு; மிகுதி
கழுமுதல் = நிறைதல், மயங்குதல், திரளுதல், கலத்தல்
கழுமுள் = ஈட்டி, சூலம், மாதுளை
கழுவாய் = பிராயச்சித்தம்
கழை = மூங்கில், கரும்பு, ஓடக்கோல், புனர்ப்பூச நாள்
களகண்டம் = அன்னம், குயில்
களகம் = நெற்கதிர், அன்னம், பெருச்சாளி, சுண்ணச்சாந்து
களங்கம் = அடையாளம், அழுக்கு, கறுப்பு, குற்றம், களிம்பு
களங்கன் = சந்திரன்
களஞ்சியம் = பண்டகசாலை
களதம் = பெருச்சாளி
களத்திரம் = மனைவி
களபம் = யானை, கலவைச் சாந்து, யானைக் கன்று
களமர் = மருத நில மக்கள், உழவர், வீரர்
களம் = சபை, நெற்களம், கருமை, மேகம், இடம், போர்க் களம் வஞ்சகம், கழுத்து, விடம், இன்னோசை, கறுப்பு, யாகசாலை, கண்டம்
களம்வேட்டல் = களவேள்வி செய்தல்
களரி = அரங்கம், காடு, போர்க்களம், களர் நிலம், சபை
களர் = உப்பு நிலம், கறுப்பு, சேற்று நிலம், கூட்டம்
களவன் = நண்டு, திருடன்
களவேள்வி = போர்களத்தில் பேய்க்கு உணவு அளித்தல்
களாசம் = பிரம்பு

களி = மகிழ்வு, இன்பம், கள், செருக்கு, தேன், மதம், மயக்கம், வண்டல், கஞ்சி, குழம்பு

களிகூர்தல் = மனம் களித்தல், களிப்பு மிகுதல், களிமண்

களிகை = மொட்டு, கழுத்தணி, களிதூங்குதல் மகிழ்ச்சி மிகுதல்

களித்தல் = கள் உண்ணல், மகிழ்தல்

களிப்பு = மயக்கம், இன்பம், செருக்கு, மண்பசை

களிம்பு = அழுக்கு, குற்றம்

களியாட்டு – கட்குடி, மயக்க ஆட்டம்

களிறு = ஆண்யானை, அஸ்த நாள், ஆண் பன்றி

களேபரம் – உடல், என்பு, பிணம்

களை = அழகு, காந்தி, குற்றம், அயர்வு

களைகட்டல் = களைபிடுங்கல்

களைகண் = ஆதரவு, புகலிடம்

களைகொட்டு = களை எடுக்கும் கருவி

களைஞர் = களைபறிப்பவர்

கள் = வண்டு, களவு, தேன்

கள்வன் = நண்டு, யானை, கரியவன்

கள்ளில் = கள், கள்கடை

கறங்கு = காற்றாடி, சுழற்றி, ஒலி, பம்பரம்

கறங்குதல் = ஒலித்தல், சுழலுதல்

கறவை = பால்தரும் பசு

கறளை = குள்ளன், வளர்ச்சியின்மை

கறி = மிளகு, இறைச்சி, மரக்கறி

கறு = கோபம், அகங்காரம்

கறுத்தல் = கோபித்தல், முற்றுதல்

கறுப்பு = கோபம், கருநிறம், குற்றம், கறை

கறும்புதல் = துன்புறுத்துதல்

கறுழ் = கடிவாளம்

கறை = உரல், இரத்தம், கடமை, களங்கம். கறுப்பு, இருள், குடியிறை, குற்றம், விஷம், நிறம்

கறைக்கண்டன் = சிவன்

கறையடி = யானை

கற்கசம் = உலோபம், வன்னெஞ்சம்

கற்காணம் = கல்செக்கு

கற்கி = குதிரை, கற்கி அவதாரம், கோயில்

கற்சிறை = மதகு, கல்வரம்பு

கற்பகம் = தென்னைமரம், கற்பக விருட்சம், பனைமரம்

கற்படை = கோட்டைத் திருட்டுவழி
கற்பம் — ஊழிக்காலம், தேவலோகம், திருநீறு, பிரமன் ஆயுள், மந்திர சாத்திரம், 432 கோடி, மூப்பு நீக்கும் மருந்து, கற்பகம், வேதாங்கம்
கற்பனை = கட்டளை, நியாயம், வருணனை, கல்வி, போதனை,
கற்பு = கல்வி, அறிவு, முல்லைக்கொடி, கதி, மகளிர் கற்பு, ஆணை, தியானம்
கற்புழை = மலைக்குகை
கற்று = கன்றையுடைய பசு
கற்றுளை — காவி வஸ்திரம்
கனகசபை = சிதம்பரம், பொன்னம்பலம்
கனகதண்டிகை = பொன் பல்லக்கு
கனகதம் = ஒட்டகம்
கனகம் = பொன்
கனகன் = இரண்யன்
கனகாசலம் = பொன் மலை மகாமேரு,
கனகி = ஊமத்தை
கனம் = கூட்டம், செறிவு, பொன், மேகம், நன்மதிப்பு, பெருமை, பருமை
கனருசி = மின்னல்
கனலி = சூரியன், பன்றி, நெருப்பு
கனலுதல் = எரிதல், காய்தல்
கனல் = கோபம், தீ
கனல்வு = கோபம்
கனவட்டம் = குதிரை, பாண்டியன் குதிரை
கனவு = கனா, தூக்கம், மயக்கம்
கனற்சி = கொதிப்பு
கனி = சுரங்கம், பழம், சாரம்
கனிட்டன் = சிறுவிரல், பின்னோன்
கனிட்டிகை = சிறுவிரல்
கனிதல் — உருகுதல், பெருங்கோபம் கொள்ளல், இரங்கல், இனித்தல்
கனிப்பு = இனிப்பு
கனிய = முற்ற
கனை = ஒலி, நெருக்கம், திரட்சி, மிகுதி
கன்மஷம் = அழுக்கு, பாவம்
கன்று — அற்பம், இளமரம் குட்டி, கைவளை
கன்றுதல் = இரங்குதல், கோபித்தல், நைதல், வாடுதல், நெருங்குதல், முதிர்தல்
கன்னகடூரம் = காதுக்கு அருவருப்பாய் இருத்தல்
கன்னபரம்பரை — காதால் கேட்டுவரும் வழக்கம்
கன்னப்பூ = காதணி

கன்னமதம் — காதால் வடியும் மதம்
கன்னம் = களவு, காது, பெருமை
கன்னல் = கரும்பு, கரகம், நாழிகை, சர்க்கரை, குருவி
கன்னடர் = சேரர்
கன்னி = குமரி, உமை, பெண், அழிவின்மை, இளமை, புதுமை,
கன்னிகாரம் = கோங்குமரம்
கன்னிகை = பெண், தாமரைக் கொட்டை. யானைக்கை நுனி
கன்னிநாடு = பாண்டிய நாடு
கன்னிபுரம் = மதுரை
கன்னிப்போர் = முதற்போர்
கன்னுவர் = கன்னர்
கா = சோலை, பூந்தோட்டம், நிறை, காத்தல், காவடி, கலைமகள் தோட் சுமை, துலாம், காவடித்தண்டு பூப்பெட்டி
காகதாலீயம் = காக்கை, ஏறப் பனம் பழம் விழுதல் என்னும் ஒருவகை நியாயம்
காகதுண்டம் = அகில்
காகநதி = காவேரி
காகந்தி = காவிரிப்பூம்பட்டினம்
காகம் = அரிட்டநாள், குறி
காகளம் = எக்காளம்
காகாரி = ஆந்தை
காகுத்தன் = இராமன்
காகுளி = பேய், மெத்தை, இசை
காகோதரம் = பாம்பு
காகோளி = அசோகமரம்
காங்கு = பெரும் பானை
காங்கேயம் = ஒரு வகைப் பொன்
காசம் = நாணல், பளிங்கு மணி, இருமல், பொன்
காசறை = மயிற்சாந்து, கத்தூரி மான்
காசர = சொந்தம், நாணல் அசல்விலை, எருமை
காசினி = பூமி
காசு = குற்றம், நாணயம், பொன், இரத்தினம், ஒட்டியாணம்
காசை = நாணல், காயாமரம்
காஞ்சனம் = பொன், சண்பகம், புன்கு
காஞ்சனி = மஞ்சள்
காஞ்சி = ஏழுகோவையணி, ஆற்றுப்பூவரசு, ஒருமரம், காஞ்சிபுரம், நிலையாமை
காஞ்சுகம் = சட்டை
காஞ்சுகி = சட்டை, சட்டையிட்ட மெய்காப்பாளன்
காடவன் = பல்லவர்களின் பட்டப் பெயர்

காடி = புளித்த நீர், கஞ்சி, கள், நெய், மூளை, ஊறுகாய், கழுத்து, பள்ளம், வண்டி

காடிகம் = சிலை

காடு = பாலை, மிகுதி, நெருக்கம், சுடுகாடு, வனம்

காடுகிழாள் = துர்க்கை

காடுபடுதிரவியம் = அரக்கு, கருந்தினை, தேன், புனுகு, மயிற்பீலி முதலியன

காட்சி = அற்புதம், தன்மை, பிரத்தியட்சம், தோற்றம், நூல், அழகு, காணல், அறிவு

காட்டம் = விறகு, வெண்கலம்

காட்டு = உதாரணம், காட்டுதல், செத்தை

காட்டை = எல்லை, திசை

காட்பு = வயிரம்

காணம் = கொள், செக்கு, பொற்காசு, திரவியம், நிலம்

காணார் = பகைவர்

காணி = உரிமை, ஒருநில அளவு, குழி

காணியாட்சி = உரிமைநிலம்

காணுதல் = வணங்குதல், பார்த்தல்

காண் = அழகு, காட்சி ஆராய்ச்சி,

காண்கை = அறிவு

காண்டம் = திரைச்சீலை, ஆயுதம், காடு, ஆபரணச் செப்பு, கமண்டலம், நீர், அம்பு, நூற்பெரும்பகுதி, கோல், குதிரை

காண்டலளவை = பிரத்தியட்ச பிரமாணம்

காண்டவன் = இந்திரன்

காண்டல் = ஆராய்தல், மதித்தல், புறங்காணல், பெறுதல், ஒத்திருத்தல், பொருந்தல், பலித்தல், போதியதாதல்

காண்டிகை = கருத்து, பதப்பொருள், உதாரணம் ஆகிய மூன்றுடன் வரும் உரைவளம்

காண்டு = கோபம்

காண்டீபம் = அர்ச்சுனன் வில்

காண்தக = அழகுபொருந்த

காண்பு = காட்சி

காதகம் = கொலை

காதம் = கொலை

காதம்பம் = கானங்கோழி, அன்னம்

காதம்பரி = கள், பெண்மைனா

காதரம் = அச்சம், மறதி, அவலம், சஞ்சலம்

காதலன் = மகன், தோழன், அன்பன், கணவன்

காதல் = கொல்லல், மகன், தாக்குதல், அன்பு, ஆசை, பக்தி,

காதி = விசுவாமித்திரன் தந்தை, வினை

காதுகன் = கொலையாளி

காதுகை = கொல்லுகை

காதை = பாட்டு, சரித்திரம், கதை கொண்ட பகுதி, கொலை

காத்தல் = விலக்கல், அரசாளுதல், பாதுகாத்தல்

காத்தியாயனி = பார்வதி, துர்க்கை

காத்திரம் = உடல், உறுப்பு, கனம், கோபம், யானையின் முன்கால், கிரி

காத்திரவேயம் = பாம்பு

காந்தம் = அழகு, விருப்பம்

காந்தர்வமணம் = தலைவனும் தலைவியும் தாமே கூடிக் காதலித்து மணத்தல்

காந்தல் = சினம், கருகல்

காந்தல் = கார்த்திகைமலர்

காந்தன் = புருஷன், தலைவன், ஒரு சோழன்

காந்தாரம் = ஓர் இசை, ஒரு பண், காடு

காந்தாரி = இராகம், சகுனி, துரியன் தாய்

காந்தி = ஒளி, அழகு

காந்துதல் = ஒளிர்தல், முதிர்தல்

காந்தை = பெண், மனைவி

காபந்து = பாதுகாவல்

காபாலம் = சிவனார் கூத்து

காபிலஸ்நானம் = தலைமுதல் பாதம்வரை ஈரத் துணியால் துடைத்தல்

காப்பியம் = உறுதிப் பொருளைக்கூறும் கதைதழுவிய தொடர் நிலைச் செய்யுள்.

காப்பியன் = சுக்கிரன்

காப்பு = கதவு, விபூதி, அரச முத்திரை, ஊர், மதில், அரசன் அனுபவிக்கும் பொருள், தெய்வ வணக்கப் பாடல், அபிடேகம், சிறை, காவல், பாதரட்சை இரட்சிப்பு, காத்தல், திசைப் பாலகர்

காப்புமறம் = காவல் வீரர்

காப்பொன் = நூறுபலம் பொன்

காமக்கிழத்தி = வேசி

காமக்கோட்டம் = காமாட்சி கோவில்

காமபாலன் = பலதேவன்

காமபீடம் = காஞ்சிபுரம்

காமம் = ஆசை, சிற்றின்பம், கிராமம்

காமரம் = வண்டு, ஓர் இசைப் பாட்டு, அஸ்த நாள், அடுப்பு, அகில் ஒருபண், ஆல்

காமரூபி = பச்சோந்தி

காமர் = அழகு, ஆசை, காமுகர்

காமன் = மன்மதன்

காமவல்லி = கற்பகத்தில் படர் கொடி

காமாட்டி = மூடன், மண் வெட்டுவோன்

காமித்தல் = விரும்பல்

காமவாயில் = இயற்கை அன்பு

காமாரி = சிவன்

காமியம் = ஒன்றை வேண்டிச்செய்யும் பூசை, கன்மமலம்

காமினி = பெரிந்து, ஆகாய கமன மந்திரம்

காமுகன் = திருமால், நாகரிகன்,

காம்பீரியம் = ஆழ்முடைமை, மேன்மை, ஆழம்

காம்பு = மூங்கில், பூந்தாள், பட்டு

காயகற்பம் = உடலை வன்மையாக்கும் மருந்து

காயசித்தி = உடலை நீண்ட நாள் இருக்கச் செய்யும் சித்தி

காயத்திரி = பிரமன் மனைவி, ஒரு மந்திரம்

காயம் = உடம்பு, ஆகாயம், பெருங்காயம், வெங்காயம், இயற்கை, மூலதனம், மிளகு, வயிரம், இலக்கு, நிலைபேறு

காயல் = உப்பளம், கழி, காய்தல், காயற்பட்டினம்

காயாபுரி = சரீரம்

காயாம்பூமேனியன் - விஷ்ணு

காய் = பாக்கு, காய்

காய்தல் = வெறுத்தல், சுடுதல், கெடுத்தல், வருந்தல், பெருங்கோபம், ஆறுதல், உலர்தல், அழித்தல், எரித்தல், விலக்குதல், வெகுளுதல்

காய்மகாரம் = பொறாமை

காரகம் = சிறைச்சாலை

காரகன் = செய்பவன்

காரணி = உமை

காரணிகன் = பரிசோதகன், மத்தியஸ்தன், நடுவன்

காரண்டம் = நீர்க்காக்கை

காரம் = விபூதி, கோபம், அழிவு

காரா = எருமை, சிறைச்சாலை

காராகாரம் = சிறைச்சாலை

காராகிருகம் = சிறைச்சாலை

காராடு = வெள்ளாடு

காராண்மை = பயிரிடும் குடியுரிமை

காராம்பி = இறைகூடை
காராளர் = வேளாளர்
காரானை = யானை, மேகம்
காரான் = எருமை
காரி = ஐயனார், வயிரவன், கரிக்குருவி, கரிய எருது, கருநிறப் பொருள், ஒரு நாயனார், காக்கை, ஒரு நதி, சனி, விஷம், இந்திரன், வயிரவன், ஒரு வள்ளல், வாசுதேவன்,
காரிகை = பெண், அழகு, யாப்பிலக்கண நூல்
காரியப்படல் = தொழிற் படல்
காரிடம் = உலர்ந்த சாணி
காரு = வண்ணான்
காருகத்தம் = இல்லற நிலை
காருகம் = இல்லறம், நெய் யுந் தொழில்
காருகன் = வண்ணான், நெய் வோன், ஓவியன்
காருணி = வானம்பாடி
காருவாகன் = வண்ணான்
காரூகம் = கருங்குரங்கு
காரேறு = இடி, எருமைக் கடா
காரை = ஆடை, ஒருவகை மீன்
கார் = எலி, இருள், செவ்வி, பசுமை, கார்காலம், கருங் குரங்கு, மேகம், கருமை, கார்நெல், மழை, வெள் ளாடு, குளிர்ச்சி, அறிவு, மயக்கம்
கார்கோள் = கடல்
கார்த்தபம் = கழுதை
கார்த்தல் — அரும்புதல், உறைத்தல்
கார்பார் = காரிய விசாரிப்பு
கார்ப்பு = காரம், கொடுமை, உவர்ப்பு
கார்முகம் = வில், மூங்கில்
கார்வண்ணன் = விஷ்ணு
காலகண்டன் = சிவன்
காலகாலன் = சிவன்
காலகூடம் = விஷம்
காலக்கிரமம் = நாளடைவு
காலசந்தி = வைகறை
காலசூத்திரம் = ஒரு நரகம்
காலசேயம் = மோர்
காலதர் = பலகணி, சன்னல்
காலத்திரயம் = முக்காலம்
காலநேமி = காலசக்கரம்
காலபடர் = எமதூதர்
காலபாசம் = எமன்கயிறு
காலல் = ஒலி முதலியன விசல்
காலன் = சனி, இயமன், இயமன் மந்திரி

காலாடல் = முபலல், செல்வம் மிக்கிருத்தல்
காலாந்தகன் = சிவன்
காலாந்தரம் = வேறுபட்ட காலம்
காலாயுதம் = கோழி
காலாரி = சிவன்
காலாவதி = காலவரையறை
காலாழ் = சேறு
காலாறு = வண்டு
காலி = பசுக்கூட்டம், பசு
காலிலி = அருணன், காற்று, பாம்பு, முடவன்
காலுதல் = வீசுதல், பொழிதல், சிந்துதல், கக்குதல், உமிழ்தல்
காலேயகம் = முத்து, கலவைச் சாந்து
காலேயம் = பசுக்கூட்டம் புல் உண்ணும் சிவன்கள்
காலை = பகல், சூரியன், முறை, சமயம்
கால் = கால், காற்று, அளவு, முயற்சி, கிரணம், இடம், காலம், காலன், கால் பங்கு, தூண், வண்டி, பிறப்பிடம் உருளை, தேர்ச் சக்கரம், துறை, நடை, பொழுது, மகன், வலிமை, இயமன், முளை, காம்பு, முளை, வாய்க்கால், வம்சம், கைப்பிடி
கால்கோள் = தொடக்கம்
கால்சீத்தல் = அகற்றல், தூய்மை செய்தல்
கால்செய்வட்டம் = விசிறி
கால்நடை = ஆடு மாடுகள்
கால்மாடு = கால்பக்கம்
கால்யாத்தல் = நெருங்குதல், பாத்தல், தேக்குதல், மறைத்தல்
கால்வழி = சந்ததி
காவணம் = பந்தல், மண்டபம், சோலை
காவதம் = பத்துக்கல் தூரம்
காவந்து = காவல், எசமான்
காவலன் = அரசன், காவல் காரன்
காவல் = மதில், சிறைச்சாலை, பரண், கவசம், காத்தல், வேலி
காவல்கடவுள் = திருமால்
காவல்பெண்டிர் = செவிலித் தாய்
காவன் = சிலந்தி
காவாலி = வீண் பேச்சுக் காரன்
காவி = செங்கழுநீர் மலர், காவிக்கல், செம்மண்
காவிதிப்பட்டம் = வேளாளர் கட்கு அரசனால் கொடுக் கப்படும் பட்டம்

காவிதியர் = பட்டம் பெற்றவர், கணக்கர், மந்திரிகள்

காவியம் = உறுதிப்பொருளைக் கூறும் கதை தழுவிய தொடர்நிலைச் செய்யுள்

காவிரிப்புதல்வர் = வேளாளர்

காவுதல் = இச்சித்தல்

காவுவோர் = பல்லக்குச் சுமப்போர்

காழகம் = ஆடை, கருமை, கடாரம், கைக்கவசம்

காழம் = ஒருவகையுடை

காழி = சீர்காழி, உறுதி

காழியர் = வண்ணார், பிட்டு வாணிகர்

காழூன்றுகடிகை = கூடாரம், குத்துக்கோல்

காழோர் = குத்துக்கோற்காரர், யானைப்பாகர்

காழ் = மணிக்கோவை, கட்டுத்தறி, சரம், பூமாலை, பரல்கல், குத்துக்கோல், ஒளி, புடலை, பளிங்கு, முத்துவடம், இரும்புக்கம்பி, மிகுதி, குற்றம், மரவயிரம் விதை, தூண், உறுதி, கருமை, ஓடத்தண்டு இரத்தினம், முத்து, தடி, காம்பு

காழ்த்தல் = முற்றுதல், அளவு கடத்தல்

காழ்மை = அகில்

காழ்ப்பு = உரைப்பு, வயிரம், தழும்பு

காளகண்டம் = மயில், குயில்

காளகண்டன் = சிவன்

காளகம் = கருமை, எக்காளம்

காளகூடம் = விஷம், ஒரு நகரம்

காளபதம் = மாடப் புறு

காளமுகில் = கல் மழை பொழியும் மேகம்

காளமேகம் = கருமேகம், ஒரு புலவன்

காளம் = கருமை, மேகம், கழு, ஊதுகொம்பு, சிறுசின்னம், விஷம், பாம்பு, சூலம்

காளவனம் — சுடுகாடு

காளவாய் = கழுதை, சுண்ணாம்பு, செங்கல் சுட்டெடுக்கும் இடம்

காளாஞ்சி = எச்சிற்படிகம்

காளி = பார்வதி, கரியவள்

காளிங்கமர்த்தனன் = விஷ்ணு

காளிதம் = களிம்பு

காளிந்தி = யமுனை நதி, வாகை, தேக்கு

காளிமம் = கறுப்பு, அஞ்ஞானம், களிம்பு

காளை = எருது, இளையோன், பாலைநிலத் தலைவன், வீரன்

காளையம் = போர் ஆரவாரம்

காறு = கொழு, கால அளவு

காறுபாறு = காரியவிசாரிப்பு

காறை = ஒரு கழுத்தணி

காற்கட்டு = கலியாணம்

காற்குளம் = பூச நாள்

காற்செறி = விலங்கு

காற்படை = கோழி, காலாட் படை

காற்பாசம் = பருத்தி

காற்புரவு = ஆற்றுப் பாய்ச்சல் நிலம்

காற்றுதல் = வெளிப்படுத்தல், அழித்தல்

காற்றுவாக்கு = காற்றடிக்கும் திசை

காற்றொழில் = முயற்சி

கானகநாடன்-குறிஞ்சி நிலத் தலைவன்

கானகம் = காடு, குறிஞ்சி நிலம்

கானத்தேறு = மஞ்சள்

கானநாடன் = முல்லை நிலத் தலைவன்

கானப்பேர் = காளையார் கோயில்

கானம் = காடு, கடற்கரைச் சோலை, மணம், முல்லை, தேர், நந்தவனம், பாலை, தொகுதி, இசை, மிகுதி

கானமா = காட்டுப்பன்றி

கானல் = உப்பளம், கடற்கரை, கடற்கரைச் சோலை, கானகை, வெப்பம், ஒளி, பேய்த்தேர், கிரணம், கழி, மலைப்புறச்சோலை கழி

கானல்வரி = கழிக் கரைப் பாடல்

கானவன் = வேடன், குறிஞ்சி நிலத்தான், குரங்கு

கானவிருக்கம் = பாதிரிமரம்

கானனம் = காடு

கானெறி = சாளரம்

கான் = காடு, பூடு, வாசனை, அடர்த்தி, பூ, வாய்க்கால்

கான்மரம் = ஆலமரம்

கான்மாறுதல் = கழிந்து போதல்

கான்முளை = பிள்ளை, அனுமான்

கான்யாறு = முல்லை நில ஆறு

கான்றல் = வெளிப்படுத்தல், சிந்துதல், கக்குதல்

கிக்கிரி = மீன்குத்திப்பறவை

கிங்கரர் = தூதர், ஏவலாளர்

கிங்கிணி = செடி, சதங்கை

கிசலம், கிசலயம் = தளிர்

கிச்சு = நெருப்பு

கிஞ்சனன் = தரித்திரன், அறிவிலான்

கிஞ்சுகம் = கிளி, சிவப்பு, முள் முருக்கு, முருக்கு

கிடக்கை = உலகம், உள்ளுறுபொருள் படுக்கை, கட்டில், பரப்பு இடம்

கிடக்கிடு = கிடக்கட்டும்

கிடங்கர் = அகழி, கடல்

கிடங்கு = அகழி, குழி, சிறைச்சாலை, பொக்கிஷ வீடு

கிடாரம் = கொப்பரை

கிடி = பன்றி

கிடுகு = ஒருபறை, கேடகம், சட்டப்பலகை முடைந்த ஓலைக் கீற்று, தேர்மரச் சுற்று, தட்டி

கிடை = உவமை, சடை, கிடக்கை, படுக்கை, பட்டி, ஆயுதம், பயிலிடம், உட்கிடை, வேதம் ஓதும் தானம், வேதக்கூட்டம்

கிட்டம் = அழுக்கு, வண்டல் மலம்

கிட்டலர் = பகைவர்

கிட்டி = தலையீற்றுப் பசு, கைத்தாளம், இடுக்குத் தடி, பன்றி, நாழிகை வட்டில்

கிட்டிணம் = கறுப்பு

கிட்டினர் = உறவினர்

கிணை = உடுக்கை, மருதப் பறை, போர்ப்பறை

கிண்டுதல் = ஆராய்தல், அகழ்ந்தெடுத்தல், கிளறு தல்

கின்னரம் = வீணை

கிந்நரம் — ஒருபட்சி, ஒரு யாழ்

கிம்புரி = தோள் அணி

கிம்புருடர் = குதிரை முகமும் மனித உடலும் உடைய சாதியார்

கிரகசாரம் = கிரக நடை

கிரகணம் = பிடித்தல், கிர கித்தல்

கிரணமாலி = சூரியன்

கிரணம் = ஒளி, கதிர்

கிரணன் = சூரியன்

கிரது = பலி, யாகம்

கிரந்தகர்த்தா = நூல் ஆசிரியன்

கிரந்தம் = நூல், வடமொழி

கிரமம் = ஒழுங்கு, முறைமை

கிரவுஞ்சம் = அன்றில், ஒரு தீவு, ஒரு மலை

கிராணம் = சிறு வட்டில், மூக்கு

கிராதன் = வேடன், கொடியவன், குறவன்

கிராமம் = நூறு குடியுள்ள ஊர், நீர்வாழ் பறவை

கிராமாந்தரம் = வேறுகிராமம்

கிராவணம் = கல்மலை

கிரி = பன்றி, மலை

கிரிசரம் = மலையானை

கிரிசன் = சிவன்

கிரிசை = பார்வதி

கிரிச்சம் = வருத்தம்

கிரிதுர்க்கம் = மலைக் கோட்டை

கிரியை = பூசை, தொழில், சடங்கு

கிரீசன் = சிவன்

கிரீடம் = முடி, வேலிப்பருத்தி

கிரீடி = அர்ச்சுனன்

கிரீடை = விளையாட்டு

கிரீதன் = விலைக்கு வாங்கிய பிள்ளை

கிரீவம் = கழுத்து, தலை

கிருகம் = வீடு, மனைவி

கிரகாச்சிரமம் = இல்வாழ்வு

கிருட்டி = பன்றி, பிரண்டை, தலையீற்றுப் பசு

கிருஷி = பயிர்செய்கை, பயிர்

கிருஷிகன் = வேளாளன், பயிர் செய்பவன்

கிருஷ்ணபக்கம் = தேய்பிறைப்பக்கம்

கிருஷ்ணம் = கறுப்பு, குயில் காகம், மான்

கிருஷ்ணன் = கண்ணன், அர்ச்சுனன்

கிருஷ்ணாஜினம் = மான் தோல்

கிருதம் = செய்கை, நெய், நீர், முதல் யுகம்

கிருதார்த்தன் = காரியசித்தி பெற்றவன், கருமம் முடித்தவன்

கிருதி = கீர்த்தனம், செய்கை

கிருது = யாகம்

கிருத்தி = தோல்

கிருத்திமம் = பொய், பூதம். செயற்கையானது

கிருத்தியம் = தொழில்

கிருத்திரிமம் = பொய், வஞ்சனை

கிருத்திவாசன் = சிவபெருமான்

கிருபணன் = உலோபி

கிருமி = புழு
கிரௌஞ்சம் = அன்றில் பறவை, ஒரு மலை
கிலம் = அற்பம்
கிலிபம் = பேடு
கிளுத்தம் = ஒருவகைமரம், முதல்சந்து, மணிக்கட்டு
கில்லம் = கழுத்து
கில்லாதார் = மாட்டாதவர்
கிழக்கு = இழிவு, கீழ் இடம்
கிழத்தி = மனைவி, உரியவள், தலைவி
கிழமை = வாரநாள், உரிமை குணம், சம்பந்தம், நட்பு, முதுமை
கிழவன் = தலைவன், உரியவன், பரணிநாள்
கிழார் = இறைகூடை, தோட்டம், வேளாளர் பட்டப் பெயர்
கிழான் = வேளாளன், உரியவன்
கிழி = எழுதுபடம், பொருள் முடிப்பு, கிழிந்த துணி
கிழிதம் = பணமுடிப்பு
கிழிப்பு = குகை, பிளப்பு
கிழியிடு = பொன் முடிப்பு, புதையல்
கிளக்கல் = சொல்லல்
கிளத்தல் = சொல்லல்
கிளத்தி = சரஸ்வதி
கிளப்பு = சொல், எழுப்பு
கிளர் = ஒளி, பூந்தாது
கிளர்ச்சி = இறுமாப்பு, கோபம், எழிச்சி, கலவரம்
கிளர்தல் = உயர்தல், கோபித்தல், விளங்குதல் பெருகுதல், சிறத்தல், மேல் எழும்புதல், ஒளி விடுதல்
கிளர்வு = பெருக்கம்
கிளவி = சொல், அகப் பொருள் துறை
கிளிச்சிறை = ஒருவகைப் பொன்
கிளை = மூங்கில், உறவு, பகுப்பு, தளிர், யாழ் நரம்பு பூங்கொத்து
கிளைஞர் = உறவினர்
கிளைத்தல் = கிண்டல், நிறை தல், பெருகுதல்
கிளைமை = உறவு
கிளையாமை = இளையாமை
கிளைவழி = வமிசம்
கிள்ளி = சோழன், சோழர் சிறப்புப் பெயர்
கிள்ளை = கிளி, குதிரை
கிறி = பொய், வஞ்சகம், வழி, மாயம், குழந்தை யணி
கிறுக்கு = எழுத்து
கிற்பன் = அடிமையன்

இற்பு = வேலைப்பாடு, வலிமை

இற்றல் = கட்டுப்படுத்தல் சம்மதித்தல்

கின்னம் = துக்கம், இழிமை, தொந்தரவு

கின்னரம் = வீணை, இசையறி பறவை

கின்னரி = வீணை

## கீ

கீகசம் = எலும்பு, எலும்பை ஒட்டிய சதை, புழுச்சாதி

கீசகம் = குரங்கு, மூங்கில்

கீசம் = குரங்கு, குருவி

கீசரி = சரக்கொன்றை

கீடம் = புழு

கீடமணி = மின்மினி

கீணம் = கீழ்மை, கேடு, சிதைவு

கீதம் = வண்டு, மூங்கில், இசை

கீதை = பாடல், பகவத்கீதை

கீரம் = கிளி, பால், நீர்

கீரன் = நக்கீரன்

கீர் = சொல், பாயசம்

கீர்த்தனை = புகழ்ச்சி, இசைப் பாட்டு

கீர்வாணம் = சமஸ்கிருத மொழி

கீலகம் = ஆணி, தந்திரம், பொருத்து

கீலம் = ஆப்பு, தூண், ஆணி, தண்டம், பிசின், தார், சுடர்க்கொழுந்து, ஆயுதம்

கீலாரி = இடையர் தலைவன்

கீலாலம் = நீர், அமுது, இரத்தம்

கீழண்டை = கிழக்குப்புறம்

கீழோர் = கீழ்மக்கள், உழவர்

கீள் = கிழக்கு, பள்ளம், ஈனம் கீழ்மக்கள், இழிவு, குற்றம்

கீழ்க்கணக்கு = அறம் பொருள் இன்பம் கூறும் சிறு பாட்டு நூல்

கீழ்ப்பால் = கீழ்ச்சாதி

கீள் = கௌபீன உடை

கீளுடை = கோவணம்

கீறு = எழுத்து, பிளப்பு

கீனம் = குறைவு, இழிவு

கீன்றல் = சிறுகை, கிழித்தல்

கு = சிறுமை, தடை, நிந்தை பாவம், பூமி, இகழ்ச்சி, நீக்குதல்

குகரம் = குகை, நில அறை

குகன் = முருகன், எலி, பாம்பு, குரு

குகு = அமாவாசை

குகை = உலோகங்களை உருக்கும் பாத்திரம், சிமிழ், குகை

குக்கல் = நாய்

குக்ஷி = வயிறு

குக்கில் = குங்கிலியம்

குக்குடம் = கோழி

குக்குலுவம் = குங்கிலியம்

குங்குலியம் = ஒரு வாசனைப் பொருள்

குசம் = முலை, தருப்பை, நீர், கடிவாளம், மரம்

குசலம் = சுகம், சாமர்த்தியம், நலம், தந்திரம் நற்குணம், கூர்மை

குசவாரம் = செவ்வாய்க் கிழமை

குசன் = செவ்வாய்

குசாக்கிரம் = தர்ப்பைநுனி, கூர்மை, அறிவு

குசுமம் = பூ

குசுமாகரம் = பூந்தோட்டம் வேனிற்காலம்

குசேசயம் = தாமரை

குசை = கடிவாளம், தருப்பை குதிரையின் பிடரி மயிர்

குச்சம் = பூங்கொத்து, குன்றிமணி, நூல் கொத்து, நாணல் கூர்ச்சரதேசம், புறந்தூற்றுமொழி

குச்சிதம் = இழிவு

குச்சில் = சிறு வீடு

குச்சு = மயிர் முடி, கொண்டையூசி, சிறு குடில்

குச்சுக்காரி = ஒழுக்கம் கெட்டவள்

குஞ்சம் = சிறுமை, பூங்கொத்து, குறளை, கோட்சொல்லல், நாழி, கூன்

குஞ்சரம் = யானை, கருங்குவளை

குஞ்சரவொழுகை = யானை வண்டி

குஞ்சராசனம் = அரசமரம்

குஞ்சரி = பெண்யானை, தெய்வயானை

குஞ்சி = ஆண்மயிர், மயிர், கொடி நடும்குழி, யானை, தலை, குன்றி, குடுமி, விருது
குஞ்சிகை = மயிர்முடி
குஞ்சிதம் = வளைவு
குட = வளைந்த
குடகம் = மேற்கு, ஒருமலை
குடகன் = சேரன்
குடக்கனி = பலாப்பழம்
குடக்கு = மேற்கு
குடக்கோ = சேரன்
குடங்கர் = குடம், குடிசை கும்பராசி
குடங்கல் = வளைவு
குடங்கை = உள்ளங்கை
குடசம் = மலை மல்லிகை
குடச்சூல் = ஒருவகைச் சிலம்பு
குடஞ்சுட்டவர் = இடையர்
குடஞ்சுட்டு = பசு, ஒரு குடம் பால் தரும் பசு
குடத்தி = கழுதைப் புலி, இடைச்சி
குடந்தம் = கை குவித்து உடம்பை வளைத்து நிற்றல், (இது ஒரு வகை வழிபாடு)
குடந்தை = கும்பகோணம்
குடமூக்கு – கும்பகோணம்
குடமுழா = ஒருவகை வாத்தியம்

குடம் = பசு, குடம், மருத நில ஊர், மாயன் ஆடிய கூத்து, சேரநாடு, வெல்லம், இரட்சி
குடம்பை = முட்டை, பறவைக் கூடு
குடலை = பூக்கூடை, கிணற்றுக் கூடை
குடவம் = பித்தளை
குடவர் = இடையர்
குடவுதல் = வளைதல்
குடா = வளைவு. மூலை
குடாது = மேற்கிலுள்ளது, மேற்கு
குடாரம் = தயிர் கடைதாழி, கோடரி
குடாரி = கோடரி, யானையை அடக்கும் அங்குசம்
குடாவடி = கரடி
குடான்னம் = சருக்கரைப் பொங்கல்
குடி = கோத்திரம், ஊர், குடிமக்கள், பருகுதல், குலம், புருவம், வீடு
குடிகை = பர்ணசாலை, கோயில், கமண்டலம், ஏலஅரிசி
குடிகோள் = சூழ்ச்சி செய்து குடிகெடுத்தல்
குடிக்காடு = ஊர்

குடிசெய்தல் = பிறந்த குடியை உயர்த்துதல், வசித்தல்

குடிஞ்கு = பறவை

குடிஞை = ஆறு, கூகை, பேராந்தை, பறவை, குடிசை

குடிமகன் = நாவிதன்

குடிமை = உயர் குடிமக்கள் தன்மை, குலனுடைமை, அடிமை

குடியிறை = குடிமக்கள் வரி

குடிலம் = ஆகாயம், குராமரம், சடை, மாயை, வஞ்சகம், வளைவு, பிரணவம்

குடிலை = பிரணவம், குடிசை,

குடில் = சிறு வீடு, ஆகாயம்

குடிவாரம் = பயிரிடுவோன் உரிமை

குடீரகம் = பர்ணசாலை, குடிசை

குடீரம் = குடில்

குடு = கள்

குடுமி = வெற்றி, உச்சி மயிர் முடி, ஒரு பாண்டியன்

குடும்பு = பூங்கொத்து, குலை

குடை = முருகன் ஆடிய கூத்து, அரசாட்சி, உடைவேல், குடை, நீர்குடிக்கும் ஓலைப்பட்டை

குடைச்சல் = வருத்தம், நோய்

குடைச்சூல் = சிலம்பு

குடைதல் = கடைதல், கவிதல், துளைத்தல், நீராடுதல், உட்புகுதல்

குடைவு = குகை, வளைவு

குடோரி = வெங்காரம், சிறுசை

குட்சி = வயிறு

குட்டம் = ஆழம், குளம், திரள், தொழுநோய், மடு, சிறுமை, குட்டி, ஒரு நாடு

குட்டன் = ஆட்டுக்குட்டி, மகன், குழந்தை

குட்டு = மானம், இரகசியம், குட்டுதல்

குட்டுவன் = சேரன்

குணகு = பிசாசு

குணகுதல் = வளைதல், சோர்தல்

குணக்கு = எதிரிடை, கிழக்கு, கோணல்

குணக்குதல் = பின் நிற்றல், வளைத்தல்

குணங்கு = பூதபைசாசம்

குணஷ்டை = தொந்தரவு

குணபம் = பிணம், பிசாசம்

குணபாசி = பிணம் தின்னும் பிசாசு

குணம் = நிறம், குடம், நூல், வில்நாண், கயிறு, பண்பு, தன்மை, மேன்மை

குணலை = நாணத்தால் உடல் வளைதல், ஒரு கூத்து

குணவாயில் = கீழ்த்திசை

குணாகுணம் = குணமும் குணம் இன்மையும்

குணாது = கிழக்கில் உள்ளது

குணாதீதன் = கடவுள், சிவன் முத்தன்

குணாலம் = வீராவேசத்தால் கொக்கரித்தல், ஒருபுள்

குணாலயன் = கடவுள்

குணி = வில், குணத்தை யுடையது

குணிதம் = மடங்கு

குணித்தல் = ஆலோசித்தல், மதித்தல், கருதுதல்

குணிப்பு = மதிப்பு, அளவு, ஆராய்ச்சி

குணில் = கவண், குறுந்தடி, பறையடிக்கும் தடி

குணுங்கர் = சண்டாளர், தோற் கருவியாளர்

குண்டம் = ஓம குண்டம், நீர் நிலை, குடுவை, குழி

குண்டர் = சமணர்

குண்டலம் = ஆகாயம், ஒரு காதணி, வட்டம்

குண்டலி = மூலாதாரம், நாபிஸ்தானம், பாம்பு, ஒரு நாடி

குண்டி = இருதயம், ஈரல், மூத்திரப்பை, மீன் சினை

குண்டிகை = கமண்டலம், குடம்

குண்டு = ஆண் குதிரை, சிறு நிலம், ஆண்கழுதை, ஆழம், தாழ் செயல்

குண்டுநீர் = கடல்

குண்டை = எருது, குறுமை

குதம் = மலம் வரும்வழி, ஓமம், தும்மல், தருப்பை,

குதம்புதல் = அலசுதல், கொதித்தல், கோபித்தல்

குதம்பை = ஒரு காதணி, ஓலைச்சுருள்

குதர் = பிரிவு

குதலை = மழலைமொழி, பொருள்விளங்கா மொழி, அறிவில்லான்

குதலைமை = விளங்காமை, தளர்ச்சி

குதனம் = அசட்டை

குதிர் = நெல்வைக்கும் கூடு

குதிரை = குதிரை, கயிறு முறுக்கும் கருவி, யாழுறுப்பு, ஊர்க்குருவி, ஒரு மலை

குதுகலம் = விருப்பம், வில்குதை, சந்தோஷம்

குதை = முனை, அம்பு, பசி, அம்பின் அடி

குத்தல் = தின்னல், தைத்தல்

குத்தி = அடக்கம், மண், மாறுபாடு, கலப்பைக்கூர்

குத்திரம் = மலை, குரூரம், வஞ்சகம்

குத்திரம் = வஞ்சகம், இழிவு, சணல்

குந்தகம் = குழப்பம், தடை

குந்தம் = ஈட்டி, குதிரை, குருந்தமரம், கைவேல், குத்துக்கோல்

குந்தளம் = கூந்தல், ஒருநாடு

குந்தன் = திருமால், தூயன்

குந்தாணி = பரு உரல், உலக்கை

குந்தாலி = கணிச்சி, கிணறு தோண்டும் கருவி

குந்தி = கள், பஞ்சபாண்டவர் தாய், சிட்டுக்குருவி

குந்திருக்கம் = குங்குலியம்

குபதம் = தீநடை, பாழ் வழி

குபிதன் = கோபி

குபேரன் = சந்திரன், குபேரன்

குப்பம் = கடற்கரையூர், ஊர், காடு, கூட்டம்

குப்பாயம் = சட்டை

குமண்டை = மகிழ்ச்சி, கூத்து, செருக்கிய செயல்

குப்புறுதல் = மை, கன்னி, ஓர் ஆறு, ஒரு தீர்த்தம்

குமரகோட்டம் = காஞ்சிபுர முருகன் கோவில்

குமரம் = கொம்பில்லா மிருகம்

குமரி = அழிவின்மை, கற்றாழை, காளி, கன்னி, மகள், உமை, ஒரு நதி

குமரிச்சேர்ப்பன் = பாண்டியன்

குமரியிருட்டு = விடிமுன் உள்ள இருள்

குமிலம் = பேரொலி

குமுதம் = தருப்பை அடுப்பு, படைவகை, பேரொலி, ஆம்பல் மலர்

குமைதல் = அழிதல், குழைதல், புழுங்கல்

கும்பகாரன் = குயவன்

கும்பசம்பவன் = அகத்தியன், துரோணன்

கும்பசன் = அகத்தியன்

கும்பமுனி = அகத்தியன்

கும்பம் = குடம், குவியல், நெற்றி, யானை மத்தகம், நூறுகோடி

கும்பளம் = பூசனி

கும்மன் = அகத்தியன்

கும்பி = சேறு, யானை வயறு

கும்மட்டம் = கோவில் ஸ்தூபி

கும்மலித்தல் = விளையாடுதல்

கும்மாயம் = குழம்பு, சுண்ணும்பு, ஒருவகைச் சிற்றுண்டி

குயம் = முலை, அரிவாள், இளமை, கத்தி, தர்ப்பை

குயவரி = புலி

குயவு = தேர்

குயா = கோங்கு

குயிலுதல் = அழுத்துதல், செய்தல், செல்லல்

குயில் = சொல், துளை, ஒரு பறவை

குயின் = மேகம்

குயுக்தி = பரிகாசம், துர்ப்புத்தி

குய் = தாளிப்பு, நறும்புகை சாம்பிராணி

குய்யம் = மறைவு, வஞ்சகம்

குரகதம் = குதிரை

குரங்கம் = மான், மிருகம்

குரங்குதல் = வளைதல், தொங்குதல், தாழ்தல் வணங்கல், குறைதல்

குரண்டம் = கொக்கு

குரம் = குளம்பு, பசு

குரம்பு = வரம்பு, செய்கரை, எல்லை

குரம்பை = உடல், வீடு, குடில், கூடு, முட்டை, நெற்கூடு, குடிசை

குரல் = இறகு, ஒலி, கழுத்து, யாழ் நரம்பு, பூங்கொத்து, தோகை, மொழி கூந்தல் பயிர்க்கதிர், உடல், கிண்கிணி மாலை

குரல்வளை = கழுத்து

குரவம் = நறுமணம், குரா, பேர் ஈந்து

குரவன் = பெரியோன், குரு, ஆசிரியன், கடவுள்

குரவு = நறுமணம், குராமரம், ஆசிரியத்தன்மை

குரவை = ஒலி, கடல், எழுவரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்தாடும் கூத்து, மகளிர் மகிழ்ச்சி, ஒலி

குரால் = பசு, கபில நிறப்பசு கோட்டான்

குரிசில் = தலைவன், பெருமையிற் சிறந்தவன்

குரீஇ = குருவி

குரு = மேன்மை, கனம் வியாழன், நிறம், வேர்க் குரு, ஒரு வியாதி, தந்தை, குரு, இரசம்

குருகு = உலைத் துருத்தி, உலைமூக்கு, நாரை, குருக் கத்தி, கோழி, கைவளை, சேவல், அன்னம், கொக்கு அன்றில், பறவை, வெண் மை, பானை, மூளை, மூல நாள்

குருகுலவாசம் = மாணுக்கர் ஆசிரியருடன் வசித்தல்

குருகை = திருநெல்வேலி, ஆழ்வார் திருநகரி

குருடன் = சுக்கிரன்

குருணி = ஒரு மரக்கால் அளவு

குருத்து = வெண்மை, மூளை, இளமை

குருநாதன் = சுவாமிநாதன்

குருந்து = குழந்தை, குருந்த மரம்

குருபன்னி = குருமனைவி

குருபூசை = இறந்தகுருவின் நினைவுக்காகச் செய்யப் படும் அன்னதானம்

குருமலை = சுவாமிமலை

குருமித்தல் = குழங்குதல்

குருமூர்த்தம் = தெய்வம் குரு வாக வருதல்

குருமை = பெருமை, நிறம்

குரும்பை = தெங்கின் இளங் காய், பனையின் இளங்காய், நுங்கு

குருலிங்கசங்கமம் = குரு, சிவம், அடியார்

குருவித்தலை = மதில்உறுப்பு

குருளை = குட்டி,

குரூஉ = கனம், குரு

குரூரம் = கொடுமை

குரை = ஒலி, குதிரை, பெரு மை, ஓசை

குரோசம் = கூப்பிடுதூரம்

குரோதம் = கோபம், விரோ தம்

குரோதன் = வீரபத்திரன்

குலப்பரத்தை = ஒருவற்கே உரிமை பூண்ட கணிகை

குலமீன் = அருந்ததி

குலமுதல் = மகன், குல தெய்வம், மூல புருஷன்

குலவுதல் = உலவுதல், பொருந்துதல், மகிழ்தல்

குலம் = குடி, கூட்டம், அழகு, மலை, கோயில், மூங்கில் மேன்மை, இனம் வீடு

குலா = மகிழ்ச்சி

குலாயம் = பறவைக் கூடு

குலாமர் = உலோபிகள், அடி மைகள்

குலாங்கனை = உயர் குடிப் பெண்

குலாலன் = குயவன்
குலாவுதல் = விலக்குதல் மகிழ்தல், நட்பாடல் பிணைதல்
குலிகம் = சிவப்பு
குலிங்கம் = ஊர்க்குருவி
குலிசம் = இடி, வச்சிராயுதம்
குலிசி = இந்திரன்
குலிரம் = நண்டு
குளிரம் = நண்டு
குலை = செய்கரை, வரம்பு, பூங்கொத்து, குலை, ஈரல், நடுக்கம், கொத்து, பாலம்
குலைதல் = கலைதல், அழிதல் அவித்தல், நடுங்கல், குழைதல், வருந்தல்
குல்லகம் = வறுமை
குவடு = திரட்சி, மலை, மலையுச்சி
குவலயம் = பூமி, குவளை, நெய்தல்
குவவு = பெருமை, திரட்சி
குவளை = கருங்குவளை, செங்குவளை, ஒரு பேரெண், கண்குழி
குவால் = கூட்டம், அதிகம் மேடு
குவி = சுவர்
குவிந்தன் = சேணியன்
குவை = குப்பை, கூட்டம், மேடு, திரட்சி, பொன் னுருக்கும் குகை
குழ = இளமை
குழகன் = முருகன், இளையோன், இணங்குபவன், அழகன்
குழகு = இளமை, குழந்தை, அழகு
குழங்கல் = ஒரு மாலை
குழமகன் = இளமைத் தலைவன் மரப்பாவை
குழல் = கூந்தல், புல்லாங்குழல், ஒருமின்
குழவி = குழந்தை, குட்டி, இளமை, யானைக்கன்று
குழவு = இளமை
குழறுபடை = தடுமாற்றம், தாறுமாறு
குழாஅல் = கூடுகை
குழாம் = கூட்டம், திரள் சபை
குழி = பள்ளம், பாத்தி, பன்னிரடிச் சதுரம், வயிறு, கிழங்கு, நீர்நிலை
குழிசி = பானை
குழிப்பு = சந்தக்கவி, தாழ்வு
குழூ = கூட்டம்
குழூமல் = முழங்கல், கூடுதல், கூட்டம்
குழூமுதல் = கூடுதல்
குழூம்பு = குழி, திரள்
குழூஉ = கூட்டம்

குழூஉக்குறி = ஒரு கூட்டத்தார்க்குள் ஒரு பொருளைக் குறிக்க வழங்கிக்கொள்ளும் சொல்

குழை = காது குண்டலம், சேறு, தளிர், துளை, குழாய், நெய்தற்பூ

குழைசாந்து = சுண்ணம்பு

குழைச்சு = முடிச்சி. எலும்பின் சந்து

குழைதல் = இளகுதல், கலங்குதல், வளைதல், வாடல், துவளுதல், வருந்துதல்

குழைவு = இரக்கம், வாடுதல் நெகிழ்தல்

குழைமுகப்புரிசை = அந்தப்புரம்

குளகம் = புற்று, மரக்கால், பல பாட்டுக்களுக்கு ஒரு வினை முடிபு வரப் பாடப்படும் பாடல்

குளகன் = வாலிபன்

குளகு = தழை

குளம் = நெற்றி, வெல்லம், குளம், மார்கழி

குளவி = காட்டு மல்லிகை, ஒரு வண்டு

குளிகை = மாத்திரை

குளிசம் = வளையம், சக்கரம், வரைந்த தகடு

குளித்தல் = தைத்தல், தோல்வியுறுதல், மறைதல், அழுந்துதல்

குளிபம் = உண்டை, மருந்து வேங்கைப்புலி

குளிர் = அரிவாள், கவண், கிளிகடி கருவி, நண்டு, குடமுழவு, நடுக்கம், குளிர்ச்சி

குளிர்தல் = இறத்தல், இனிமையாதல்

குளிறு = சபதம்

குளீரம் = நண்டு

குறுவன் = குறவன், நண்பன்

குறுமை = வறுமை, குறள்

குறங்கு = தொடை

குறடா = சவுக்கு

குறடு = செருப்பு, மரத்துண்டு, திண்ணை

குறம் = குறி, குறத்திப் பாட்டு

குறவஞ்சி = குறத்திப்பாட்டு, குறத்திப் பெண்

குறழ்தல் = குனிதல்

குறளி = ஒரு பிசாசு, கற்பழிந்தவள்

குறளை = கோள்சொல்லல், நிந்தனை, சுருக்கம், வறுமை

குறள் = குறுமை, சிறுமை, பூதம், திருக்குறள், குறள் வெண்பா

குறி = நன்னடத்தை, ஞானம், தரம், சபை, காரணம், இலக்கு, ஒழுக்கம், லட்சணம், நோக்கம், அடையாளம், மதக் கொள்கை, குறிகூறல், பெயர்

குறிக்கோள் = அறிவு, மன ஒருமை, ஞாபகத்தில் வைத்தல், ஒற்றுமை, கிரகித்தல், அறியும் திறம்

குறிச்சி = குறிஞ்சிநில ஊர்

குறிஞ்சி = மலையும்மலைசார்ந்த இடங்களும், மலை, ஒரு பண்

குறித்தல் = கருதல் ஆராய்தல், நியமித்தல், வரைதல், சுட்டுதல்

குறிப்பு = ஒற்றுமை, சைகை, கருத்து, விருப்பம், இலக்கு அடையாளம், சுருக்கம்

குறியிடு = பெயரிடுதல்

குறியெதிர்ப்பை = அளவு சுட்டிப் பெற்றுப் பின் பெற்றவாறே திருப்பிக் கொடுத்தல்

குறுகலர் = பகைவர்

குறுக்கை = புலி, உடைவாள்

குறுங்கண் = சன்னல்

குறுங்கிண்ணி = வெண்கலம்

குறுணி = எட்டுப்படி அளவை

குறுணை = சிறு நொய்

குறுதல் = மேலிருத்தல் பறித்தல், குத்தல், தறித்தல், நீங்குதல்

குறுநடை = தளர் நடை

குறுநர் = களை எடுப்போர்

குறுந்தாட்டு = குறுகிய தாளை யுடையது

குறுமுனி = அகத்தியர்

குறுமை = சிறுமை, அணிமை

குறும்பர் = வேடர், குறுநில மன்னர்

குறும்பிடி = உடைவாள்

குறும்பு = பகை, அரண், சிறுமை, பொல்லாங்கு, குறுநிலமன்னர், பாலைநிலத்தார், வலிமை, கானவர், சிறூர்

குறும்பூழ் = காடை

குறும்பொறி = உதரபந்தம்

குறும்பொறை = காடு, குறிஞ்சி நிலத்தார் சிறு மலை, மலை

குறுவாழ்க்கை = வறுமை

குறுவிலை = வறுமை. பஞ்சம்

குறை = காரியம், குற்றம், கடன், வேண்டு கோள், கட்டை, வறுமை

குறைகோள் = யாசித்தல்

குறைத்தல் = வெட்டுதல்

குறைநேர்தல் = குறையை நீக்க உடன்படுதல்

குறைவில் = வானவில்
குற்குலு = குங்கிலியம்
குற்சிதம் = அருவருப்பு
குற்றவிடு = குற்றம் நீக்கம்
குற்றி = தறி, மரக்கட்டை
குற்றுதல் = பறித்தல்
குனித்தல் = ஆடல், வளைத்தல்
குனிப்பு = ஆடல், வளைக்கை
குனை = முனை
குன்றவாணர் = வேடர்
குன்றவில்லி = சிவன்
குன்றெறிந்தோன் = முருகன்
குன்றேந்தி = திருமால்
குன்மை = அவமானம், பழி
குன்னாத்தல் = கூனிப்போதல்

## கூ

கூ = பூமி, கூவுதல், ஏவல்
கூகை = ஒருவகைக் கொடி ஆந்தை, கோட்டான்
கூச்சு = கூரிய முனை, புளகம்
கூடகம் = வஞ்சனை
கூடசன் – திருட்டுமகன்
கூடந்தன் = ஆன்மா
கூடமார்க்கம் = கள்ளவழி
கூடம் = கொல்லன் சம்மட்டி, அரை, வீடு, சாலை, பொய், நகரவாயில், மறைவு, இரகசியம், வஞ்சகம், மலையுச்சி,
கூடலர் = பகைவர்
கூடல் = மதுரை, புணர்ச்சி பொருத்து, தோப்பு
கூடல்நாயகன் = சொக்கநாதன்
கூடாங்கம் = ஆமை
கூடார் = பகைவர்
கூடாவொழுக்கம் = தவ ஒழுக்கத்திற்குப் பொருந்தாத ஒழுக்கம்
கூடு = உடல், அடைப்பு, உறை, பறவை, புழு, முதலியவற்றின் கூடு
கூடுவிட்டுக்கூடுபாய்தல் = ஒரு சரீரத்தைவிட்டு மற்றொரு சரீரத்தில் புகுதல்
கூட்டரவு = கூட்டம், சகவாசம்
கூட்டு = துணை, நட்பு, உறவு, திரள், கலப்பு
கூதல் = குளிர்
கூதளம் = தூதுளை
கூதறை = முறைமை இல்லாதவன், இழிந்தது, கிழிந்தது
கூதாளி = தூதுளை
கூதிர் = பனிக்காற்று, ஒரு பருவம்
கூதிர்காலம் = குளிர்காலம்

கூதை = காற்று

கூத்தன் = உயிர், சிவன்

கூத்துக்களரி = நடனசாலை

கூந்தல் = மயிர், தோகை, தலை, குதிரைப் பிடரிமயிர், யானைக் கழுத்தடி மயிர், மகளிர் முடி

கூந்தாலி = கடப்பாரை

கூடம் = கிணறு, குழி

கூம்பு = தேர்க்கொடி, ஒரு பாய்மரம், மூகை, சேறு

கூரம் = பொருமை, யாழ், கொடுமை

கூரல் = கூந்தல், இறகு

கூரன் = நாய்

கூரியன் = புதன்

கூரை = வீடு, சிற்றில், வீட்டின்மேல் இடம்

கூர் = சிறப்பு, மிகுதி, நுனி

கூர்ச்சம் = தருப்பை, தலை

கூர்தல் = ஆராய்தல், வளைதல், நுணுகுதல், கூர்மையாதல், மிகுதல், விரும்புதல், செய்தல்

கூர்த்தல் = கோப மிகுதல் அறிவு நுட்பமாதல், உவர்த்தல்

கூர்ப்பரம் = முழங்கை

கூர்ப்பு = உள்ளது சிறத்தல், உப்புறைத்தல், மிகுதி, கூர்மை, அறிவு நுட்பம்

கூர்மம் = ஆமை

கூர்மன் = வாயு

கூர்மை = புத்தி நுட்பம், நுண்மை, நுனி, சிறப்பு

கூலம் = நீர்க்கரை, கடை வீதி, முறை, பாம்பு, பசு, பலபண்டம், பாகல், விலங்கின்வால், குரங்கு, ஒருவகை மான்

கூவல் = கிணறு, பள்ளம், கூவுதல்

கூவியர் = மடையர், அப்பவாணிகர்

கூவிரம் = ஒரு பூ, தேர்க்கொடிஞ்சி, தேர், வில்வமரம்

கூவிளம் = வில்வம்

கூவிரி = தேர்

கூவை = கூகை, கூட்டம்

கூழை = இறகு, கடை குழைந்தது, நீளம் குறைந்தது, படை வகுப்பு, பின்படை, பெண்மயிர், மயில் தோகை, நெல், கூந்தல், பாம்பு, வால், பொன், மயக்கம், குறை அறிவு, சேறு, போர்ப்படையின் பின் அணி, கடைவரிசை

கூழைமை = கடமை

கூழ் = பொருள், பயிர் சோறு, உணவு, பயன்

கூளி = உறவு, எருது, பூதம், பேய், குற்றம், குள்ளம், கழுகு, கூட்டம், குடும்பம்

கூளியர் = வேடர், வழிபறி கொள்ளையர், வணங்கி நிற்பவர், படைவீரர், ஏவலாளர்

கூறு = தன்மை, பங்கு, பாதி, வகை, பிரிவு, சொல்லல்

கூறுதல் = விற்றல், சொல் ஓதுதல்

கூறை = சீலை, புது ஆடை

கூற்றம் = சொல், எமன், நாட்டின் பகுதி

கூற்று = சொல், நமன், காலன், கொலைத் தொழில்

கூற்றுவன் = நமன்

கூனல் = சங்கு, வளைவு

கூனி = வானவில், பங்குனி

கூனிரும்பு = அரிவாள்

கூனை = மிடா

கூன் = நத்தை, ஆந்தை, பெரும் பாத்திரம், வளைவு

## கெ

கெக்கலி = மகிழ்வு

கெச்சை = முல்லை

கெடவரல் = மகளிர் விளையாட்டு, மகளிர் கூட்டம்

கெடி = ஊர், பயம், கீர்த்தி, வல்லமை, செல்வாக்கு

கெடு = தரித்திரம்

கெண்டை = சேல்மீன்

கெதாயு = இறந்தவன்

கெத்து = உபாயம், தந்திரம்

கெபி = குகை, வளை, குழி, கந்தகம், பாம்பு

கெம்பீரம் = ஆழம், வீரம், மேன்மை [செய்தல்

கெம்புதல் = ஆரவாரம்

கெவுரா = துளசி,

கெவுரிசங்கம் = இரட்டை உருத்திராட்சம்

கெவுளி = பல்லி, சிவந்த சங்கு

கெவுனி = பட்டணவாயில்

கெழி = நட்பு

கெழு = நிறம், பொருந்திய

கெழுதகை = உரிமை, நட்பு

கெழுமுதல் = கூடுதல், நிறைதல், பொருந்துதல்

கெழுமை = பிசாசம், நிறம், வளமை

கெழுமுதல் = நிறைதல், பொருந்துதல்

கெழுவு = நட்பு

கேகயம் = மயில், அசுணமா, ஒரு தேசம்
கேகி = மயில்
கேகை = மயில் குரல்
கேசபந்தி = மயிர் ஒழுங்கு
கேசபாரம் = பெண்மயிர்
கேசம் = மயிர், வேர்
கேசரம் = குங்குமப்பூ, பூந்தாது, மகிழமரம், வண்டு
கேசரர் = வித்தியாதரர்
கேசரி = குதிரை, சிங்கம், புன்னை
கேசவம் = பெண்வண்டு
கேசவன் = திருமால், சோழன்
கேசாதிபாதம் = தலைமுதல் கால்வகை
கேசாரி = குதிரையின் கழுத்து மயிர்
கேடகம் = பரிசை, பலகை
கேடயம் = பாசறை, பரிசை
கேடம் = சிற்றூர், மலைமிக்க ஊர்
கேடு = வறுமை, சிதைவு அழிவு, குறைவு
கேட்டுமுட்டு = சைனர்க்குரிய ஒரு திட்டு, கேட்டதனால் வரும் குற்றம்
கேட்டை = மூதேவி
கேணி = கிணறு, குளம், அகழி

கேண்மை = சினேகம், உரிமை, அன்பு, தாட்சண்யம், உறவு, நட்பு
கேதகை = தாழை
கேதம் = துக்கம், துன்பம், இளைப்பு
கேதல் = அழைத்தல்
கேதனம் = துணிக்கொடி, அடையாளம்
கேதாரம் = மயில், ஒரு சிவதலம், ஓர் இராகம்
கேதாரி = குதிரைப் பிடரி
கேது = ஒளி, அடையாளம், விருதுக்கொடி, கேதுக்கிரகம்
கேத்திரபாலன் = வயிரவன்
கேத்திரம் = பூமி, மனைவி, விளைநிலம், க்ஷேத்திரம், உடம்பு
கேத்திரி = விஷ்ணு,
கேயம் = அகழ், இசைப்பாட்டு
கேயூரம் = தோள் அணி
கேரண்டம் = காக்கை
கேரளன் = சேரன்
கேவணம் = மணி பதிக்கும் குழி
கேவலஞானம் = மூன்று காலங்களையும் உணரும் உணர்ச்சி

கேவலம் = ஆணவம், அற்பம், உறுதி, அவமானம், தனிமை, இரண்டன்மை, மோட்சம், மெலிவு, இணையற்றது,

கேவேடன் = மீன்வலைஞன்

கேழல் = பன்றி. குளமெல், நிறம்

கேழ்பு = நன்மை

கேழ் = உவமை, ஒளி, நிறம்

கேளல் கேளிர் = பகை நட்பு இல்லாத அயலார்

கேளார் = பகைவர்

கேளி = தென்னை, மகளிர், விளையாட்டு

கேளிக்கை = மகளிர் விளையாட்டு, பரத நாட்டியம்

கேளிர் = சுற்றத்தார், நண்பர்

கேள் = அன்பு, உறவு, புருஷன், சுற்றம், நட்பு

கேள்வன் = கணவன்

கேள்வி = கல்வி, காது, மந்திரம், பேச்சு, கேள்வி, இசை, யாழ், பாரம்பரியம், படுக்கூலி

## கை

கை = ஒப்பனை, ஒழுக்கம், சிறகு, சிறுமை, படை, படை வகுப்பு, பக்கம், கைமரம், கைப்பிடி, காம்பு, கைத்தொழில், கிரணம், இடம், சந்திரன், ஆற்றல், செய்கை, துதிக்கை, மிகுதி

கைகோள் = ஒழுக்கம்

கைக்கிளை = ஒரு மருங்கு பற்றிய கேண்மை, ஒருதலைக் காமம்

கைக்கூலி = லஞ்சம்

கைச்சாத்து = கையெழுத்துத்துண்டு, கையெழுத்து

கைஞ்ஞானம் = அற்ப அறிவு

கைதருதல் = மணம் செய்தல், உதவிபுரிதல்

கைதவம் = சூது, வஞ்சனை, பொய், துன்பம்

கைதவன் = பாண்டியன், பொய்யன், வஞ்சகன்

கைதாவுதல் = கையொழிதல், செயலற்றிருத்தல்

கைதை = தாழை, வயல்

கைதைச்சுரிகையன் = மன்மதன்

கைத்தலம் = கை

கைத்தல் = கோபித்தல், செலுத்தல். வெறுத்தல் அலங்கரித்தல், ஊட்டுதல், கசத்தல், நைதல்

கைத்தாய் = செவிலித்தாய்
கைத்து = பொன், பொருள் வெறுப்பு
கைத்தூண் = பிறர் கையால் உண்ணல்
கைந்தலை = விதவை
கைந்நொடித்தல் = விரலை நொடித்தல்
கைப்பரிசு = சிறு தெப்பம்
கைபுனைதல் = அலங்கரித்தல்
கைப்பு = கசப்பு. வாதம், வெறுப்பு
கைம்பெண் = விதவை
கைம்மலை = யானை
கைம்மாறு = பதில் உதவி
கைம்மான் = யானை
கைம்மிகல் = ஒழுக்கக்கேடு, அதிகப்படல், கை கடத்தல்
கைம்மை = சிறுமை, கைம்பெண், அறியாமை
கையடை = அடைக்கலம்
கையமைத்தல் = அபயங் கொடுத்தல்
கையயர்தல் = சோர்தல்
கையரி = தேடுதல்
கையர் = கீழ்மக்கள், மூடர், வஞ்சகர், அஞ்ஞானிகள்
கையறம் = வசைக்கவி, இரங்கற்பா
கையறவு = வருத்தம், செயலற்றது, தரித்திரம் மரணம்
கையறுதல் = சாதல், செயல் அறுதல்
கையறுநிலை = இரங்கற்பா, இறந்தவர்க்காக மற்றவர் வருந்துதல்
கையறை = உதவியின்மை, செயல் இன்மை
கையாறு = துன்பம், ஒழுக்க நெறி, செயலொழிந்தயர்தல்
கையிகந்தல் = மிகுதல், மீறுதல்; கடத்தல், இழுத்தல்
கையுறல் = அகப்படல்
கையுறை = காணிக்கை, கைக்கவசம்
கையை = தங்கை
கைரவம் = குமுதம், வெள்ளாம்பல்
கைரிகம் = பொன், காவிக் கல்
கைவலம் = மோட்சம்
கைவல்லியம் = மோட்சம், அனுகூலம், தனிமை
கைவழி = யாழ்
கைவாரிகள் = அரசசபையில் வாழ்த்துக்கூறுவோர்
கைவிலங்கு = யானை
கைனி = விதவை, அஸ்த நாள்

கொகுடி = முல்லைக் கொடி வகை

கொக்கரை = வலம்புரிச் சங்கு, வளைவு, வில், வலை, பாம்பு

கொக்கு = குதிரை, ஒரு பறவை, செந்நாய், மாமரம், மூல நாள்

கொங்கன் = சேரன்

கொங்காணி = தென்னை யோலைக் கூடு

கொங்கு = தேன், கள் பூந் தாது, சேரன் ஆண்ட தேசம், வாசனை

கொங்கை = முலை

கொச்சை = இழிவு, கீழ்மை, திருந்தாப் பேச்சு, வெள்ளாடு, சீர்காழி

கொஞ்சுதல் = ஒலித்தல், முத்தமிடல்

கொடி = காக்கை, ஒழுங்கு, கயிறு, நீளம், வாசனை, துகில், கிழக்குத்திசை, சிறுமை, சிறுபிரிவு, கழுத்தணி கொடி, படர்புல், வரிசை

கொடிக்கால் = வெற்றிலைக் கொடி, வெற்றிலைத் தோட்டம்

கொடிச்சி = குறிஞ்சி நிலப் பெண்

கொடிஞ்சி = தேர், தேரின் முன்னுள்ள அலங்கார உறுப்பு

கொடிநிலை = சூரியன்

கொடிப்புல் = அறுகம்புல்

கொடிறு = குறடு, பூசநாள், கதுப்பு

கொடிவழி = வம்சவழி, ஒற்றையடிப்பாதை

கொடுகுதல் = ஊதைக்காற்றால் உடல் உதறுதல்

கொடுகொட்டி = சிவன் கூத்து, ஒருவகைப் பறை

கொடுங்கண் = கொடுமை

கொடுங்காய் = வெள்ளரி

கொடுங்கை = வளைந்தகை, கொழுமை, நீண்டுவளைந்த வீட்டு முன்னிலை

கொடுங்கோளூர் = திருவஞ்சைக் களம்

கொடுநுகம் = மகநாள், கலப்பை

கொடுமரம் = வில், தனுர் ராசி

கொடுமுடி = மலையுச்சி

கொடும்பாடு = கொடுமை, மாறுபாடு

கொடும்பாவி — மழைபெய்ய வேண்டி இழுக்க அமைக்கப்படும் உரு

கொடும்பை = குளம், நீர் அருவி, தாம்பு, குன்றம்
கொடுவரி = புலி,
கொடுவாய் = பழிச்சொல், வளைந்தவாய்
கொடுவாள் = மழு, அரிவாள்
கொடை = ஈகை
கொடைமடம் = இன்னது தான் கொடுத்தல் இன்னதுதான் கொடுத்தல் கூடாது எனவரையாது கொடுத்துவிடல்
கொட்குதல் = சுழலல்; வளைதல்
கொட்டகாரம் = பண்ட அறை
கொட்டடி = சாமான் அறை
கொட்டம் = தொழுவம், இறுமாப்பு, சேட்டை, பொல்லாங்கு, முழக்கம், நீரொழுக்கு, வாசனைப் பண்டம், ஓலைப்பெட்டி
கொட்டாரம் = முதல் வாசல், யானைவரிசை, நெல்சேர்க்கும் இடம்
கொட்டி = தாளம், கோபுர வாயில், கூட்டம்
கொட்டியம் = எருது
கொட்டில் = கொட்டகை, சிறு குடில், வில் வித்தை பயில் இடம்

கொட்டு = அடி, தாளம், மண்வெட்டி, பறை ஒலி, வாத்தியம், நெற்கூடு
கொட்டு முழக்கம் = மேள தாளங்கள்
கொட்டை = தலையணை, இடுப்புச் சதங்கை, விதை
கொட்டை நூற்றல் = நூல் நூற்றல்
கொட்பு = சுழற்சி, திரிதல், வளைவு, கொள்கை, குதிரைக்கதி, கருத்து, நிலையின்மை
கொண்கன் = கணவன், நெய்தல் நிலத் தலைவன்
கொண்டல் = கீழ்க்காற்று, மேகம், முன்பனிப் பருவக் காற்று; மேடராசி, மழை
கொண்டல்வண்ணன் = திருமால்
கொண்டி = உணவு, மிகுதி கொள்ளை, கப்பம், விலைப் பொருள், சிறை, பரத்தை, மனவருத்தம், புறங்கூறல்
கொண்டிமகளிர் = பிடித்து வந்த மகளிர், தாசிகள்
கொண்டியம் = பின்னால் இழிவாகப் பேசல்
கொண்டை = இலந்தை, தலை, கொண்டை
கொண்மூ = ஆகாயம், மேகம்
கொதி = சூடு, கோபம், கொதித்தல்,

கொதுகு = கொசுகு
கொத்தடிமை = பழஅடிமை, குடும்பத்தோடு அடிமை
கொத்தம் = எல்லை
கொத்தவால் = சந்தை விசாரணைக்காரன்
கொத்தளம் = அரண், மதிற்புறம்
கொத்து = உணவு, வர்க்கம், கொத்து, பூங்கொத்து, திரள், குடும்பம் சோறு
கொத்தை = பழுது, அஞ்ஞானம், குருடன்
கொந்தகன் = படைத் தலைவன்
கொந்தல் = தணியாக்கோபம், பெருங்குளிர்
கொந்தளம் = மாதர் தலைமயிர், குழப்பம், கூத்து வகை, காண்டாமிருகம்
கொந்து = கொத்து, கோபம்
கொப்பம் = ஓரூர், யானையைப் பிடிக்க வெட்டப்பட்ட பெருங்குழி
கொப்பு = மயிர் முடி
கொப்புள் = கொப்பூழ், குமிழி, நாபி
கொம்பன் = ஆண்யானை
கொம்மை = இளமை, அழகு திரட்சி பெருமை, மேடு, வட்டம், மார்பு, முலை, திடர், அடுப்புக்குமிழ்

கொய்யுளை = குதிரைப் பிடர் மயிர், குதிரை
கொலு = இராச சமூகம், உல்லாசமாக வீற்றிருத்தல்
கொலைஞர் = வேடர், கொலைகாரர்
கொலைமலை = யானை
கொலைவர் = வேடர்
கொல் = வருத்தம், கொலை, கொல்லன்
கொல்குறும்பு = பாலை நிலவூர்
கொல்லத்து வேலை = சிற்பவேலை, கட்டடவேலை
கொல்லர் = அரசர் மாளிகை வாயில் காவலர், கருமார்
கொல்லி = ஒருபண், ஒருமலை
கொல்லிப்பாவை = கொல்லிமலையில் சிரித்துக்கொல்லும் தெய்வம்
கொல்லிவெற்பன் = சேரன்
கொல்லுலை = கருமான்உலைக்களம்
கொல்லை = தோட்டம், புறக்கடை, புன்செய், திணைபுனம்
கொழிஞ்சி = பூவாது காய்க்கும் மரம், நாரத்தை,
கொழிப்பு = குற்றம்
கொழு = மழு, கலப்பை இரும்பு, கொழுப்பு
கொழுகொம்பு = அண்டைகலம் கொடியேறுகொம்பு

கொழுங்குறை = பெரிய தசை

கொழுநனை = மலரும் பருவத்து அரும்பு

கொழுநன் = கணவன்

கொழுந்தன் = கணவன் தம்பி

கொழுந்தி = மனையாள் தங்கை, தம்பியின் மனைவி

கொழுந்து = இளங்கிளை, மருக்கொழுந்து, தீச் சுவாலை

கொழுந்துதல் = கருகுதல், சுவாலித்தல்

கொழுமுறி = இளந் தளிர்

கொழுமை = அழகு, இளமை, நிறம், கொழுப்பு, வளமை

கொழும்புகை = வாசனைப் புகை

கொளு = கருத்து, பொருத்துவாய்

கொளுச்சொல் = கருத்து

கொளுத்து = சந்து, மூட்டு

கொளுவுதல் = பூட்டுதல், தீ மூட்டுதல், அகப்படுத்துதல், தூண்டிவிடுதல்

கொளை = இசைப் பாட்டு, பாட்டு, கோட்பாடு, பயன், தாளம் போடல்

கொள்கை = விரதம், கோட்பாடு பெறுகை, ஒழுக்கம், வாங்குதல், செருக்கு, கற்பு

கொள்வோன் = மாணுக்கன்

கொள்ளம் = குழை சேறு

கொள்ளார் = பகைவர்

கொள்ளி = எருமை நாக்கு

கொள்ளுப்பாட்டன் = மூன்றும் பாட்டன்

கொள்ளை = கூட்டம், மிகுதி, சூறையாடல்

கொறி = ஆடு

கொறுக்கை = உயிர்ப்பு, நாணல்

கொற்கை வேந்தன் = பாண்டியன்

கொற்சேரி = கொல்லன் ஊர்

கொற்றத்தேவி = அரசி

கொற்றம் = அரசியல், வலி, வெற்றி, வீரம்

கொற்றவன் = அரசன், வெற்றியுடையோன்

கொற்றவி = அரசி

கொற்றவை = உமை, துர்க்கை, விரலட்சுமி

கொற்றன் = கற்சிற்பி

கொற்றி = துர்க்கை, பசுவின் இளங்கன்று

கொற்றியார் = வைணவப் பெண் துறவிகள்

கொற்றுறை = கொல்லன், உலைக்களம்

கொன் = அச்சம், காலம், பயன் இன்மை, மிகுதி, பெருமை, விடியற் காலம்

கொன்றை = கொன்றை மலர், ஒருபண்
கொன்றைசூடி = சிவன்
கொன்றூர் = பாவிகள், பயனற்றவர்
கொன்னே = வீணே
கொன்னை = திருந்தாத வார்த்தை

## கோ

கோ = அரசன், தந்தை, நீர், அம்பு, ஆகாயம், மயிர், பெருமை, கண், கிரணம், சந்திரன், மலை, குயவன், சூரியன், திசை, சொல், பசு, பூமி, வச்சிராயுதம், தலைமை
கோகத்தி = பசுக்கொலை
கோகநகம் = செந்தாமரை, ஆம்பல்மலர்
கோகநதை = இலக்குமி
கோகம் = செந்நாய், சக்கரவாகப் பறவை, தவளை, உலர்ந்தபூ
கோகயம் = தாமரை,
கோகரணம் = பசுவைப்போல் காதைஅசைக்கும்வித்தை
கோகனதம் = தாமரை
கோகழி = திருவாடுதுறை, திருப்பெருந்துறை
கோகிலம் = குயில், குரங்கு, பல்லி, துளை, இலந்தை, கரி, உலக்கை, கலப்பை, கிளி
கோகு = தோள், வஞ்சகம், கழுதை
கோகுடி = ஒருவகைமலர்
கோகுலம் = இடையர்குலம், இடைச்சேரி, பசுக்கொட்டில்,
கோக்கள் = பசுக்கள், சிறந்தவர்கள், அரசர்கள்
கோங்கம் = நெல்லி
கோசம் = உறை, புத்தகம், கருப்பை, பொன், வீதி, பொக்கிஷம், மதிலுறுப்பு, முட்டை
கோசரம் = அடங்கல், ஊர், பொறி உணர்ச்சி, பூந்தாது, அறியததக்கது, கோத்திரம்
கோசர் = கொங்குமண்டலத்தரசர்
கோசிகம் = சீலை, பட்டுச்சீலை, கூகை
கோசிகன் = விசுவாமித்திரன்
கோசு = தெரு, தோல்வி
கோடகம் = குதிரை, பலதெருக்கள் கூடும்இடம், புதுமை, நாற்சந்தி, மயிர்முடி

கோடணை = பேரொலி, அலங்காரம், கொடுமை, வாத்தியம்

கோடம் = ஒலி, எல்லை, யாழ் வாசித்தல், வெண்கலம்

கோடரம் = குரங்கு, சோலை, பாக்குமரம், குதிரை, மரப்பொந்து, தேரின்மொட்டு, எட்டி மரம், மரக்கொம்பு

கோடரி = மரம் வெட்டும் கருவி

கோடல் = காந்தள், வளைதல்

கோடவதி = ஒருவகைவீணை

கோடாய் = செவிலித்தாய்

கோடி = புதுச்சீலை, வளைவு, நுனி, எல்லை, முனை, மூலை, புதுமை, நூறுலட்சம்

கோடிகம் = பூந்தட்டு, சீலை, கெண்டிகை

கோடித்தல் = அலங்கரித்தல்

கோடிப்பாலை = ஒருபண்

கோடியர் = நடிகர், பல்லக்குச் சுமப்பவர்

கோடீரம் = சடை, இந்திரன் வில், கிரீடம்

கோடு = மரக்கிளை, வளைவு, பிறை, கிறல், சங்கு, நீர்க்கரை, மேடு, மலை யுச்சி, மலை, கரை, வரம்பு, முனை, வீணைத்தண்டு, கொடுமை, பக்கம், குளம்

கோடுதல் = தவறிநடத்தல், கொள்ளுதல், வளைதல்

கோடை = காற்று, வெண்காந்தள், வேனிற்காலம், குதிரை

கோடைக்காற்று = மேல்காற்று, முதிர் வேனிற் பருவக்காற்று

கோட்டகம் = குளம், நீர்நிலை, கரை

கோட்டம் = கோயில், பொறுமை, கொம்பு, மாறுபாடு, அறை, ஆரவாரம், பசுக்கொட்டில், குராமரம், நாடு, கோணல், வளைவு, சிறை, மருதநிலத்தூர், நியாயம் தவறல், பகைமை வணக்கம், வாசனைப்பண்டம்.

கோட்டாலை = துன்பம்

கோட்டி = சபை, துன்பம், பைத்தியம், பேச்சு, கோபுரவாயில்

கோட்டினம் = எருமைக் கூட்டம்

கோட்டு = நெற்கூடு

கோட்டுதல் = வளைத்தல், கூட்டுதல்; சித்திரம் எழுதுதல்

கோட்டுப்பூ = கிளைப்பூ

கோட்டுமா = பன்றி, யானை, எருமைக்கடா

கோட்டுமீன் = சுறு

கோட்டூர்தி = தந்தப்பல்லக்கு

கோட்டை = அரண், நெல், வைக்கோற்போர், இருபத்தோரு மரக்கால் கொண்ட அளவைக்கருவி

கோட்பறை = செய்தற்பறை, செய்தி அறிவிக்கும்பறை

கோட்பாடு = கொள்கை

கோட்பு = கொள்ளுதல், வலிமை

கோணங்கி = திருமால்கூத்து

கோணம் = குதிரை, வளைவு, சிறுதெரு, மூலை, மூக்கு, வளைந்தவாள், யானையடக்கும் அங்குசம்

கோணாய் = நரி, ஓநாய், நாய்

கோணி = பூமி, தானியப்பை

கோணை = அழிவின்மை

கோண் = வஞ்சனை, மாறுபாடு கொடுங்கோன்மை, வளைவு

கோண்மா = யானை, புலி, சிங்கம்

கோதண்டபாணி = இராமன்,

கோதண்டம் = வில்

கோதம் = குரோதம், கோபம் வெறுப்பு

கோதனம் = பசுக்கன்று, பசுக்கூட்டம்

கோதா = உடும்பு

கோதாட்டு = குற்றமுள்ள விளையாட்டு, சூதாட்டம், குற்றம்தீர்த்தல், பாராட்டு

கோதாட்டுதல் = சீராட்டுதல்

கோது = குற்றம், சக்கை

கோதை = மலர்மாலை, சேரன், ஒழுங்கு, கூந்தல், காற்று, ஸ்ரீ ஆண்டாள், பெண், பூதம்

கோத்திரம் = வமிசம், குலம், பூமி, மலை, வழி, காடு, வயல்

கோத்திரை = மலை, பூமி

கோநகர் = கோயில்

கோபம் = தம்பலப்பூச்சி, சினம்

கோபன் = இடையன், சிவன்

கோபாலன் = இடையன், கண்ணன்

கோபிதாரம் = குராமரம்

கோப்பியம் = இரகசியம், கண்ணியம்

கோப்பு = பெருமை, ஒழுங்கு, சீர், சுமை, கோத்தல், அமைப்பு

கோப்பெண்டு = அரசன் மனைவி

கோமகள் = தலைவி, அரசமகள்

கோமடந்தை = இராசலட்சுமி

கோமயம் = பசுச்சாணம்

கோமளம் = இளமை, அழகு, மென்மை, பசு

கோமாட்டி = தலைவி

கோமான் = அரசன், தலைவன், பன்றி

கோம்பல் = தணியாக்கோபம்

கோம்பி = ஓந்தி

கோம்பு = கோபக்குறிப்பு

கோம்பை = தேங்காய் ஓடு, அறிவிலி, குரும்பை

கோயில் = சிதம்பரம், அரசன் வீடு, ஸ்ரீரங்கம், விழுதிப்பை, தேவாலயம்

கோய் = பரணி, குகை, கள் முகந்தெடுக்கும் பாத்திரம்

கோரகம் = இளம்பூ வரும்பு

கோரகை = பிச்சைப்பாத்திரம், அரும்பு, அகப்பை, குயில்

கோரணி = கோளாறு, ஆசியம்

கோரம் = அச்சம், கொடுமை, குதிரை, வட்டில், வளைவு, சோழன் குதிரை, விகாரம்

கோரம்பர் = கழைக்கூத்தர்

கோரன் = சிவன்

கோரி = பார்வதி

கோலம் = அழகு, குரங்கு, அலங்கரிப்பு, விளையாட்டு, வேடம், இலந்தைக்கனி, நீரோட்டம், பன்றி, பாக்கு, மாக்கோலம், கருங்குவளை, வளைவு, கழுநீர், தொய்யில்

கோலாகலம் = பேரொலி

கோலி = இலந்தை

கோலிகன் = நெய்வோன்

கோலுதல் = வளைதல், வகுத்தல், அமைத்தல்

கோல் = அம்பு, குதிரைச் சம்மட்டி, தண்டு, ஊன்றுகோல், தடி, தராசுகோல், அளவுகோல், செங்கோல், யாழ்நரம்பு, எழுதுகோல், திரட்சி

கோல்கோடுதல் = அரசமுறை தவறுதல்

கோல்வளை = திரண்டவளை, பெண்

கோவர் = இடையர், அரசர்

கோவிதன் = அறிஞன்

கோவிலங்கு = சிங்கம்

கோவில் = அரசர் மாளிகை ஸ்ரீரங்கம், கோயில், சிதம்பரம்

கோழம்பம் = குழப்பம்

கோழி = உறையூர், விட்டில்

கோழிக்கூடு = கள்ளிக் கோட்டை

கோழிக்கொடியோன் = ஐயனார், முருகன்

கோழிவேந்தன் = சோழன்

கோழ் = கொழுத்த, செழிப்பான

கோளகம் = மிளகு, மண்டலிப் பாம்பு, பட்டுச்சீலை, திப்பிலி

கோளகை = அண்டமுகடு, உருண்டை வட்டம், பூண்

கோளம் = வட்டம், சிவலிங்கம்

கோளரி = சிங்கம்

கோளாளன் = மறவாதவன்

கோளி = பூவாது காய்க்கும் மரம், ஆத்தி, ஆல்

கோளிகை = குதிரை, கழுதைகளின் பெட்டை

கோள் = இடையூறு, கிரகம், ஒளி, மேகம், தீமை, பாம்பு, இயல்பு, கொலை, கொள்ளல், வித்து, புறங்கூறல், கோட்பாடு, வலி, குலை

கோறல் = கொல்லல்

கோற்றொடி = திரண்ட வளையல், பெண்

கோற்றொழில் = அருமையான வேலைப்பாடு, அரசு புரிதல்

கோறன் = இடையன்

கோன்மை = அரசாளுகை

கோன் = அரசன், இடையன் தலைவன்

## கௌ

கௌ = கொள்ளு, தீங்கு

கௌசலம் = வேலைத்திறன், வாழ்த்து

கௌசல்யம் = சாமர்த்தியம், வல்லமை

கௌசனை = உறை, கௌபீனம்

கௌசிகம் = கூகை, பட்டுச் சீலை, விளக்குத் தண்டு, பாம்பு, குங்கிலியம், ஒரு பண், சாமவேதம்

கௌசிகபலம் = தென்னை

கௌசிகன் = இந்திரன், விசுவாமித்திரன் பாம்பாட்டி

கௌஞ்சம் = கிரௌஞ்சமலை

கௌடி = பல கறை, ஒரு பண்

கௌடில்யம் = வளைவு

கௌணியர் = திருஞான சம்பந்தர்

கௌண்டர் = சண்டாளர், ஒருசாதியார்

கௌதமன் = புத்தன், ஒரு ரிஷி

கௌதமை = கோதாவரி

கௌதுகம் = மங்கலம், சந்தோஷம், தாலி, புதுமை

கௌதூகலம் = அதிக உற்சாகம்

கௌஸ்துபம் = திருமாலின் மார்பணி, துளசி மணி, பதுமராகம்

கௌந்தி = ஒரு தவப் பெண், கோவலனுடன் மதுரைக்குச் சென்றவள், வால்மிளகு, குந்திதேவி

கௌபம் = கிணற்று நீர்

கௌப்பு = பெருமை
கௌமாரம் = முருகப்பெருமானை வழிபாடு செய்யும் சமயம்
கௌமுதி = நிலவு, திருவிழா
கௌமோதகி = விஷ்ணுவின தண்டாயுதம்
கௌரம் = வெண்மை, செம்மை, அச்சம், கீர்த்தி, சுத்தம், தாமரை, பொன்
கௌரவர் = குருகுலவேந்தர், துரியோதனாதியர்
கௌரி = துளசி, பார்வதி. சரஸ்வதி
கௌரிசங்கம் = உருத்திராக்க வகை
கௌரியன் = பாண்டியர்
கௌலாலகம் = மண்பாண்டம்
கௌவியம் = பசுவினிடம் உண்டான பால், தயிர், நெய், கோசலம், கோமயம்
கௌலேயகன் = நாய்
கௌவை = ஒலி, கள், பழிச்சொல், துன்பம், முழக்கம், எள், இளங்காய், ஆயில்யம்
கௌளி = தேங்காய்ஓடு பாத்திரம், வெற்றிலைக்கட்டு பல்லி

## ஙு

ஙனம் = தன்மை, இடம்

## ச

சகமனம் = உடன் கட்டை ஏறல்
சகசண்டி = முருடன், வெட்கமற்றவன்
சகசம் = கூடப்பிறந்தது, இயற்கை
சகசாலம் = உலகமாயம்
சகச்சிரம் = ஆயிரம்
சகடக்கால் = தேர்ச்சக்கரம்
சகடம் = வண்டி, தேர், சக்கரம், ஊர்க்குருவி, உரோகிணி, வட்டில்
சகடை = வண்டி, ஒரு வாத்தியம், உரோகிணி
சகதி = சேறு, பொல்லா நிலம்
சகத்திரம் = ஆயிரம்
சகத்து = உலகம்

சகார்க்கம் = யோகவழி

சகம் = உலகம், வெள்ளாடு, பாம்புச் சட்டை

சகலகலாவல்லி = சரஸ்வதி,

சகலகுணசம்பன்னன் = பல நற்குணம் உள்ளவன்

சகலம் = துண்டு, எல்லாம்

சகலர் = ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மல முடைய ஆன்மாக்கள்

சகவாசம் = கூட இருத்தல், சினேகம்

சகவாழ்வு = உலகவாழ்வு

சகளம் = உருவம்

சகளீகரித்தல் = உருவம் கொள்ளுதல்

சகனம் = ஆதனம்

சகன் = நண்பன், தோழன், சாலிவாகனன்

சகாப்தம் = சாலிவாகனன் ஆண்டு

சகி = தோழி, தோழன்

சகிதம் = கூடியிருத்தல்

சகுடம் = நாய்

சகுந்தம் = பறவை, கழுகு

சகுலி = கொழுக்கட்டை, அப்பவகை

சகுனம் = கிழங்கு, நிமித்தம், ஒருபறவை

சகோடம் = 16 நரம்புடைய ஒருயாழ்

சகோரம் = நிலவின் ஒளியை உண்ணும் பறவை, பே ஆந்தை

சக்கரபாணி = திருமால்

சக்கரம் = பூமி, பெருமை தேர்உருளை, சக்கரவாகப் பறவை, செக்கு, வட்டம் அரசு, கிரிகை

சக்கரவாகம் = ஒரு வகைப் பறவை

சக்கரவாளம் = ஒருமலை

சக்கரன் = இந்திரன், திரு மால்

சக்காரம் = தேமா

சக்கிரதரன் = திருமால்

சக்கிரி = அரசன், குயவன், திருமால், பாம்பு, தேர் தேவேந்திரன்

சக்கு = கண்

சக்கை = பலாக்காய், கோது

சங்கக்குழையோன் = சிவன்

சங்கதம் = வடமொழி

சங்கதி = தொடர்பு, வர லாறு

சங்கநிதி = குபேரனது நவ நிதிகளுள் ஒன்று, சங்கு வடிவாய் அமைந்தது

சங்கபாணி = திருமால்

சங்கமம் = இயங்கு திணைப் பொருள், கலத்தல், கூடு தல், சிவனடியார் திரு கூட்டம்

சங்கமர் = வீரசைவர், லிங்க தாரிகள்

சங்கம் = கூட்டம், அழகு, ஒரு பேர் எண், லட்சங் கோடி, கைவளை, சங்கு, மதுரைத் தமிழ்ச் சங்கம், கணைக்கால், சபை, புல வர், நெற்றி

சங்கயம் = சந்தேகம்

சங்கரம் = கலப்பு

சங்கரன் = இன்பம் தரும் சிவபெருமான்

சங்கரி = பார்வதி

ங்கருடணம் = இழுத்தல்

சங்கலார் = பகைவர்

சங்கற்பம் = விருப்பம், நிய மம், எண்ணம், துணிவு, மனோ நிச்சயம், கொள்கை

சங்கனனம் = நரம்பு

சங்காசம் = உவமை

சங்காட்டம் = சேர்க்கை

சங்காதம் = கூட்டம்

சங்காத்தம் = இணக்கம், சினேகம், வசிக்கை

சங்காளர் = காமுகர்

சங்கிதை = சரித்திரம், பிரிவு

சங்கித்தல் = சந்தேகப்படல், அஞ்சுதல், கனப்படுத்து தல்

சங்கியை = எண்ணிக்கை

சங்கிரகணம் = ஏற்றுக் கொள்ளல்

சங்கிரகம் = சுருக்கம்

சங்கிராந்தி = பொங்கற் பண்டிகை, உத்தராயண நாள்

சங்கிராமம் = போர்

சங்கிரேணம் = கலப்பு

சங்கீர்த்தனம் = புகழ்ச்சி

சங்கு = கைவளை, தூண், கோழி, ஆணி, ஆப்பு, ஒருபேரெண்

சங்கேதம் = ஏற்பாடு, குழூஉக்குறி, குறிப்பு, ஒற்றுமை உணர்ச்சி, நியமம், உடன்பாடு

சங்கேபம் = சுருக்கம்

சங்கை = அச்சம், கனம், சந்தேகம், கணைக்கால், எண்ணம், எண்

சங்கோசம் = அடக்கம், மஞ்சள், கூச்சம், சுருங் கல்

சசம் = முயல்

சசி = இந்திராணி, கற்பூரம், பயிர், சந்திரன், கடல், மழை

சசிசேகரன்
சசிதரன் } = சிவன்

சசிமணாளன் = இந்திரன்

சசியம் = பயிர், மரங்களின் வருவாய்

சசிவன் = மந்திரி

சச்சரி = ஒருவகை வாத்தி யம்

சச்சாரம் = யானைக் கூட்டம்

சச்சிதானந்தம் = சத்தும் சித்தும் ஆனந்தமும் ஆயிருக்கும் பிரமம்

சச்சிதானந்தன் = சிவன்

சச்சை = ஆராய்ச்சி, ஓதுதல்

சஞ்சயம் = கூட்டம்

சஞ்சரம் = உடல், அசைவு

சஞ்சரீகம் = வண்டு

சஞ்சலம் = துக்கம், காற்று, அசைவு

சஞ்சலை = மின்னல், இலக்குமி, திப்பிலி

சஞ்சிதம் = அனுபவித்தது போக மிகுந்துள்ள கருமம், திரட்டியது

சஞ்சீவகரணி = மூர்ச்சையைப்போக்கி உயிர்தரும் மருந்து

சஞ்சீவனி = உயிர் தரும் மருந்து

சஞ்சு = பறவை மூக்கு

சஞ்சை = சூரியன் மனைவி

சடகம் = ஊர்க்குருவி, கரிக்குருவி, வட்டில்

சடகோபன் = நம்மாழ்வார்

சடக்கரி = ஆறு எழுத்தால் ஆன மந்திரம்

சடக்கு = உடல், செருக்கு

சடங்கம் = சடங்கு

சடங்கவி = வேதாங்கம் ஆறையும் அறிந்தவன்

சடம் = அசித்துப்பொருள், உடல், பொய், கொடுமை, வஞ்சகம், சடவாயு

சடரம் = வயிறு

சடலம் = உடலம்

சடன் = மூடன், இழிமகன்

சடாக்கரம் = முருகனது ஆறு எழுத்தால் ஆன மந்திரம்

சடாடவி = சடைத்திரள்

சடாட்சரி = பார்வதி

சடாதரன் = வீரபத்திரன், சிவன்

சடாய்த்தல் = அதட்டல்

சடானனன் = ஆறுமுகன்

சடிலம் = குதிரை, சடை, நெருக்கம், அசைவு, மின்னல்

சடுத்தம் = போட்டி, போராட்டம்

சடை = வேர், விழுது, மயிர், வேதபாடபேதம், நெம்பு

சடையன் = சிவன்

சட்சு = கண்

சட்ட = முழுதும், விரைவாக, ஒழுங்காக

சட்டகம் = உடல், வடிவு, மக்கள் படுக்கை, பிணை

சட்டம் = எழுதும் ஓலை, நேர்மை, ஒழுங்கு, நீதி, பாடு, சட்டம்

சட்டம்பி = உபாத்தியாயன்

சட்டன் = மாணாக்கன்
சட்டி = அறுபது, ஆறும் திதி
சட்டுவம் = அகப்பை, தோசை திருப்பும் கருவி
சட்பதம் = வண்டு, ஆறு கால்
சட்பம் = அறுகு, மயிர் இளம்புல்
சட்ரசம் = அறுசுவைஉண்டி
சணகம் = கடலை
சண்டப்பிரசண்டம் = மிகு வேகம்
சண்டமாருதம் = பெருங் காற்று
சண்டம் = கொடுமை, கோபம், வேகம், மிகுவலி
சண்டன் = சண்டேசுர நாயனார், சிவன், அலி, இயமன்
சண்டி = காளி, பிடிவாதக் காரன்
சண்டிகை = காளி, துர்க்கை
சண்டு = பதர், பயிரில் விழும் வண்டு
சண்ணித்தல் = பூசுதல்
சண்பு = கோரை
சண்பை = சீர்காழி
சதகம் = நூறு செய்யுட் களைக்கொண்ட நூல்
சதகோடி = வச்சிராயுதம், நூறு கோடி
சதக்கிரது = இந்திரன்

சதக்கினி = நூற்றுவரைக் கொல்லும் ஒரு பொறி
சதசத்து = ஆத்மா, சத்தும் அசத்தும் ஆனது
சதசு = சபை
சததளம் = தாமரை
சதபத்திரம் = தாமரை, மயில்
சதமகன் = தேவேந்திரன்
சதம் = இறகு, நித்தியம், நூறு, அறுபட்டமயிர்
சதனம் = இறகு, இலை, வீடு
சதா = மரக்கலம், எப்போதும்
சதாகதி = காற்று, ஓயாநடை
சதாசிவன் = அனுக்கிரக மூர்த்தி
சதாபலம் = தென்னை, எலுமிச்சம்பழம்
சதி = உரோகிணி, மனைவி, கற்புடையவள், துரோகம் தாளவொத்து, வஞ்சனை
சதித்தல் = அழித்தல்
சதிரிசம் = உவமை
சதிர் = நாட்டியம், பெருமை, வேறு, நிலைமை
சதுக்கம் = நாலுதெருகூடும் இடம், நான்கு, சதுரம், சந்து
சதுக்கல் = வழுக்கல்
சதுமுகன் = அருகன், பிரமன்

சதுரப்பாடு = சாமர்த்தியம்

சதுருபாயம் = சாமபேததானதண்டமாகிய நான்கு உபாயங்கள்

சதுரம் = வல்லமை, விவேகம், சாமர்த்தியம்

சதுர் = ஆற்றல், உபாயம்

சதுர்த்தம் = நான்காவது

சதுர்முகன் = பிரமன், அருகன்

சதுர்வேதம் = இருக்கு, யசுர் சாமம், அதர்வணமாகிய நான்கு வேதங்கள்

சதைதல் = நசுங்குதல்

சதோடம் = குற்றத்துடன் சேர்ந்தது

சத்தசமுத்திரம் = ஏழு கடல்

சத்தப்பிரமாணம் = ஆகமப் பிரமாணம்

சத்தமன் = எல்லோரினும் சிறந்தவன்

சத்தமுகில் = ஏழுமேகம்

சத்தம் = இலக்கண நூல், ஒலி, வார்த்தை, ஏழு,

சத்தம் = ஏழு (இசை

சத்தன் = அருவுரு உடைய சிவன், வல்லமையுடையோன்

சத்தி = சூலம், பார்வதி, வலி, இடிதாங்கி, கொடி நடும் குழி, வேல், விருதுக் கொடி, சிவனருள், வாந்தி

சத்திநிபாதம் = சிவசத்தி பதிதல், திருவருள்பற்றுதல்

சத்தியயுகம் = கிரேதாயுகம்

சத்தியலோகம் = பிரம்மலோகம்

சத்தியவதி = வியாசர் தாய்

சத்திரம் = யாகம், மடம், அன்னசாலை, இரணவைத்தியக் கத்தி, கைவிடாப் படை, ஆயுதம், கைவேல், குடை

சத்திரவித்தை = ரணசிகிச்சைசாத்திரம்

சத்து = பிரமம், பெரியோர், நன்மை, உண்மை, அறிவு, அமைதிகுறிக்கும் சொல், சாரம்

சத்துவம் = சுபாவம், குணம், சாரம், வலி, சாத்விகக் குணம், நன்மைத்தன்மை

சத்தை = இருக்கை

சநசமூகம் = ஜனக்கூட்டம்

சநபதம் = நாடு, ஊர்

சந்தசு = வடமொழியாப்பிலக்கண நூல்

சந்தடி = கூட்டம், ஒலி

சந்தம் = அழகு, சந்தனம், வடிவு, செய்யுள், நிறம், கவியின் வண்ணம்

சந்தயம் = சந்தேகம்

சந்தர்ப்பணம் = மகிழ்வித்தல்

சந்தனம் = இரதம், சந்தனம்

சந்தனசலம் = பொதிகை மலை

சந்தாபம் = வெப்பம், மன வேதனை

சந்தானகுரவர் = சைவ சித்தாந்த ஆசிரியர் நால்வர், மெய்கண்டார், அருணந்தி சிவாசாரியார், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியார்

சந்தானம் = சந்ததி, வமிசம், ஐந்தருவில் ஒன்று

சந்தி = இணைப்பு, சந்தியா வந்தனநேரம், பல தெருக்கள் கூடும் இடம், பாடை நட்பாக்கல்

சந்திபண்ணுதல் = சமாதானம் செய்தல்

சந்திரிகம் = மிளகு, மயில் தோகையின் கண்

சந்திரகலை = இடப்பக்கநாசி, வழியே வரும் சுவாசம் சந்திரன் ஒளி

சந்திப்பு = ஆறுதெருக்கள் கூடும் இடம், கூடுதல், எதிர்கை

சந்திரகாசம் = கத்தி

சந்திரகாந்தம் = சந்திரன் ஒளி கண்டு நீரைக்கசியும் கல்

சந்திரகி = மயில்

சந்திரசாலை = நிலாமுற்றம்

சந்திரசூடன் } = சிவன்
சந்திரசேகரன் }

சந்திரதிலகம் = சந்தனம்

சந்திரமௌலி = சிவன்

சந்திரம் = பொன், அழகு, கற்பூரம்

சந்திரன் = மதி, குபேரன், இடைகலை

சந்திரோதயம் = சந்திர கிரணம்

சந்திரிகை = நிலவு

சந்நிவிக்கிரம் = அடித்துக் கெடுத்தல்

சந்து = சந்தனம், இடை, பிளவு, தூது, சமாதானம், இசை, சமயம்

சந்தேகம் = பயம்

சந்தை = வேதம், கூட்டம்

சந்நத்தம் = சண்டைக்குத் தயாராயிருத்தல்

சந்நிதி = அருகு, முன்

சபம் = மூங்கில், செபம்

சபரியை = பூசை

சபலம் = அசைவு, நடுக்கம், நிறைவேறல், பயன்படல், நிலையற்ற மனம்

சபலை = இலக்குமி, மின்னல்

சபாநாதன் } = நடராசன்
சபாபதி }

சபாரஞ்சிதம் = சபைக்கு இதமான தன்மை

சபை = சிதம்பரம், சங்கம்,
சப்பாணி = கைதட்டுதல், நடக்க இயலாதவன்
சப்பியம் = ஒழுங்கானபேச்சு
சமகம் = சிவன், வேத மந்திரம்
சமதை = ஒப்பு, பட்சபாதம்
சமந்தானம் = அரச சபை
சமத்காரம் = வியப்பு, அதிசயம், செய்யுள் நயம்
சமம் = போர், நடுவுநிலைமை முன்படை
சமயக்கணக்கர் = மதவாதிகள்
சமயாதீதன் = சமயங்கடந்த கடவுள்
சமரபுரி = திருப்போரூர்
சமரம் = போர். கவரிமா, முள்ளம்பன்றி
சமரி = துர்க்கை
சமர் = போர்
சமவாயம் = சட்டம், கூட்டம், நீக்கமின்றி நிற்றல்
சமவிருஷ்டி = சமமழை
சமழ்த்தல் = நாணுதல், வருந்துதல்
சமழ்ப்பு = நாணம், வருத்தம்
சமழ்மை = இழிவு, பழிப்பு
சமன் = சமம், எமன்
சமஷ்டி = தொகுதி
சமஸ்தம் = எல்லாம்
சமஸ்தானம் = இராச்சியம்
சமாசம் = சமூகம், சபை
சமாப்தி = முடிவு
சமாராதனை = பிராம்மண உணவு, திருப்திசெய்கை
சமி = அருகன், வன்னிமரம்
சமிஞ்ஞை = குறி, பெயர்
சமித்தம் = யாகமண்டபம்
சமித்தல் = பொறுத்தல் அழிதல், சவறுதல்
சமீரணன் = காற்று
சமீரணி = வீமன், அனுமன்
சமீன் = நிலம்
சமுகம் = கூட்டம், இனத்தார், சந்நிதி
சமுசயம் = சந்தேகம்
சமுசாரம் = குடும்பம், இல்வாழ்க்கை மனைவி, உலகப்பற்று
சமுச்சயம் = கூட்டம், தொகுதி
சமுதாயம் = கூட்டம், ஊர்ப்பொதுச் சொத்து
சமுத்திரயானம் = கடற் பிரயாணம்
சமுத்திரராசன் = வருணன்
சமூகம் = கூட்டம்
சமை = பொறுமை
சமைதல் = அமைதல், பூப்படைதல், ஆயத்தமாதல்

சமைத்தல் = உண்டாக்கல்

சம்சயம் = சந்தேகம்

சம்சர்க்கம் = ஒற்றுமை, சேர்தல்

சமஸ்காரம் = மந்திரத்தினால் சுத்தம் செய்யும் சடங்கு

சம்படம் = சிலை

சம்பந்தம் = திருமணம், தொடர்பு

சம்பம் = இடி, வச்சிராயுதம்

சம்பரசூதனன் = மன்மதன்

சம்பரம் = நீர், மேகம், மேன்மை, ஒருபறவை, மருதமரம்

சம்பராரி = மன்மதன்

சம்பர்க்கம் = கலப்பு

சம்பவம் = பிறப்பு, நிகழ்ச்சி, காரணம்

சம்பன்னன் = நிறைவுள்ளவன்

சம்பாரம் = கூட்டுவர்க்கம்

சம்பாவனை = வெகுமானம், மரியாதை

சம்பான் = படகு

சம்பிரதம் = சித்து, விளைவு, பயம்

சம்பிரதாயம் = உபாயம், சாதுரியம், பரம்பரை, விதி

சம்பிரமம் = திருப்தி, வேகம், இடம்பம், விரைவு, பரபரப்பு, மகிழ்ச்சி

சம்பிரேட்சியம் = ஆராய்ந்தறிதல்

சம்பு = சிவன், விஷ்ணு, பிரமன், நாவல், சுகந்தருபவன்

சம்புகம் = நரி

சம்புடம் = புத்தகப்பகுதி

சம்புரோட்சணம் = தெளித்தல்

சம்பூரணம் = நிறைவு

சம்பை = மின்னல்

சம்மட்டி = சவுக்கு, கொல்லன் கூடம்

சம்மேளனம் = கூடுதல்

சம்யுக்தம் = கூடியிருத்தல்

சம்யோகம் = கூடுதல்

சம்ரட்சணம் = காத்தல்

சம்ராட்டு = சக்ரவர்த்தி

சம்வர்த்தகம் = மணிகளைப் பொழியும் மேகம்

சம்வற்சரம் = வருஷம்

சம்வாகம் = ஊர்

சம்வாதம் = தர்க்கம்

சய = போற்றி

சயகண்டி = பெரிய வட்டமான மணி

சயந்தனம் = தேர்

சயந்தன் = இந்திரகுமாரன், சந்திரன்

சயமகள் } = துர்க்கை, வீரலட்சுமி
சயமடந்தை }

சயம் = வெற்றி, சூரியன், மாலை, கூட்டம்

சயம்பு = அருகன், தானே தோன்றியது

சயனம் = புணர்ச்சி, படுக்கை, தூக்கம்

சயிக்கம் = மென்மை

சயிலம் = மலை

சயை = பார்வதி, அஷ்டமி, திரியோதசி, திருதியை

சரகம் = தேனீ, தேன்பாண்டம்

சரகூடம் = அம்புப் பந்தல்

சரக்க = விரைவாக

சரசு = குளம்

சரடம் = ஓந்தி, குரூரம், பல்லி

சரடு = நூல், கயிறு, வரிசை, தந்திரம்

சரணம் = மயில்தோகை, வணக்கம், மயில், மருதநிலத்தார், அபயம், புகலிடம், வீடு, அரசமரம்

சரணாரவிந்தம் = பாத தாமரை

சரணி = வழி

சரண் = பாதம், அடைக்கலம்

சரதம் = உண்மை, உறுதி

சரபம் = எண்கால் பறவை, குறும்பாடு, ஒட்டகம், மலையாடு

சரப்பணி } = வயிரச்சங்கிலி
சரப்பளி }

சரமகவி = இறந்தவர்மேல் பாடப்படும் பாடல்

சரமம் = முடிவு, மேற்கு

சரமோடல் = மூச்சு ஓடல்

சரம் = மணிவடமாலை, சுவாசம், சஞ்சலம், அசையும் பொருள், கொத்து, நடை, அம்பு, நீர்

சரவணம் = நாணல், தாமரை, இமயமலையில் உள்ள ஒரு பொய்கை

சரவணோற்பவன் = கந்தன்

சரவருடம் = அம்புமாரி

சரளம் = நேர்மை, தடையின்மை, தேவதாரு

சரற்காலம் = மாரிக்காலம், கூதிர்க்காலம்

சரன் = தூதன், ஒற்றன்

சராசரம் = அசையும் பொருளும், அசையாப் பொருளும், உலகம்

சராசனம் = வில், அரசமரம்

சராயுசம் = கருப்பையில் பிறப்பது

சராவம் = அகல்

சரி = கைவளை, சமம், வழி, சரிவு, கூட்டம். ஒப்பு

சரிதம் = நடை

சரித்தல் = வசித்தல், சஞ்சரித்தல்

சரிதை = ஒழுக்கம், கதை

சரியை = ஒழுக்கம்

சருகு = உலர்ந்த இலை

சருக்கம் = படலம்

சருச்சரை = சொரசொரப்பு

சருமம் = தோல், பரிசை, கேடகம்

சருவசங்க பரித்தியாகம் = முற்றும் துறத்தல்

சருவசாட்சி = கடவுள், சூரியன்

சருவஞ்ஞத்துவம் = எல்லாவற்றையும் அறியும் தன்மை

சருவரி = இருள், சூரியன்

சருவாணி = பார்வதி

சருவாந்தரியாமி = எங்கும் நிறை கடவுள்

சருவுதல் = கிட்டுதல், மருவுதல், பழகுதல்

சரை = நரை, கிழத்தன்மை

சரோருகம் = தாமரை

சரோவரம் = தடாகம்

சர்ச்சை = ஆராய்ச்சி, வாதம்

சர்ப்ப = விரைவாக

சர்ப்பனை = வஞ்சகம்

சர்மம் = தோல்

சர்வன் = சிவன்

சலகாமி = நீர்மேல் நடக்கும் குதிரை

சலகை = தெப்பம்

சலசம் = தாமரை, முத்து, பாசி

சலசரம் = முதலை, மீன், படகு

சலசலோசனன் = விஷ்ணு

சலசை = இலக்குமி

சலஞ்சலம் = வலம்புரிசங்கு

சலதம் = மேகம்

சலதரம் = குளம், கடல், மேகம்

சலதி = சமுத்திரம், பொய் கூறுவோன்

சலநிதி = சமுத்திரம்

சலபதி = வருணன்

சலபம் = விட்டிற் பறவை

சலம் = அசைவு, மாறுபாடு, பட்சபாதம், பொய், வஞ்சகம், நடுக்கம். வெறுப்பு, நீர், கோபம், இச்செயல், பிடிவாதம், துக்கம்

சலராசி = கடல்

சலவர் = பகைவர், வஞ்சகர், நெய்தல் நிலத்தவர்

சலவியன் = கோபம் உள்ளவன்

சலனம் = அசைவு, காற்று, போதல், கால்

சலாகை = சட்டி, நாராசம், முள், ஊசிக்காந்தம், வாகுவலயம்

சலாசயம் = நீர் நிலை

சலாபம் = முத்துக்குளித்தல்

சலாவணி = எங்கும் வழங்குகை

சலிகை = பெருமை, செல்வாக்கு

சலித்தல் = வெறுத்தல், அசைதல், சோர்தல்

சலியாமை = அசைவின்மை, இளையாமை

சலிலம் = நீர்

சல்லகி = ஆத்திமரம்

சல்லபம் = முள்ளம்பன்றி

சல்லரி = பம்பை, மேளம்

சல்லாபம் = கூடிப்பேசல்

சல்லியம் = அம்பு, சச்சரவு, முட்பன்றி, ஆப்பு, கடன், உபத்திரவம், எலும்பு, இருப்புக்கோள்

சவங்குதல் = மெலிதல், வற்றுதல்

சவடன் = பயனற்றவன்

சவடி = காதணி, கழுத்தணிவகைகள்

சவடு = உவர்மண், வண்டல்

சவட்டுதல் = வளைவாக்குதல், மெல்லுதல், அழித்தல், வருந்துதல், கொல்லுதல், மிதித்தல்

சவணம் = கேட்டல்

சவம் = பிசாசு, பிணம், மூங்கில்,

சவரம் = ஒருபொன் காசு, சாமரம்

சவரன் = வேடன்

சவரி = சாமரம், கவரிமான்,

சவர் = உவர், இழிவு

சவலை = தாய்ப் பால் இல்லா மெலிவு, மனக்குழப்பம், உறுதி அற்றது, இளமை மின்னல்

சவளம் = குந்தம், சிரவணம்

சவனம் = வேகம்

சவி = அழகு, ஒளி, மணி, வடம், செம்மை

சவிதா = சூரியன்

சவிஸ்தாரம் = விரிவு

சவுரம் = சூரிய சம்பந்தமுடையது

சவுரி = இயமன், திருமால், திருடன்

சவுரியம் = சூரத்தனம், களவு

சவை = அம்பலம், கூட்டம், புலவர் சங்கம்

சவ்வியசாசி = அருச்சுனன்

சவ்வியம் = தெற்கு, இடப்பக்கம்,

சழக்கன் = நீதிக்கு வேறானவன்

சழக்கு = குற்றம், பொய், தளர்ச்சி, பயனின்மை, அநீதி, தீமை

சழுங்குதல் = அசைதல், நழுவுதல், சோர்தல்

சழிதல் = நெருங்கிக்கிடத்தல்

சனகன் = மனநிலையற்றவன்
சனம் = துன்பம், வஞ்சனை, மூர்க்கம், நடுக்கம்
சற்கன்மம் = நற்காரியம்
சற்காரம் = உபசாரம்
சற்சங்கம் = நல்லோர் கூட்டம்
சற்பாத்திரம் = உத்தமன்
சற்புத்திரமார்க்கம் = கிரியா மார்க்கம்
சனனம் = பிறப்பு
சனு = வேண்டியவர்
சன்னி = தாய்
சனுதனதர்மம் = முற்கால முதலே வந்து கொண்டிருக்கும் தர்ம மார்க்கம்
சனுசாரம் = உலகநடை
சனுர்த்தனன் = விஷ்ணு
சன்மசாபல்யம் = பிறவிப் பேறு
சன்மலி = இலவு
சன்மயன் = மகன்
சன்மார்க்கம் = ஞானமார்க்கம், நன்னெறி
சன்னதம் = தெய்வங்கூறல் மிகு கோபம், ஆவேசம்
சன்னது = உரிமைச்சாசனம்
சன்னத்தம் = ஆயத்தம்
சன்னம் = நுண்மை, நுண்ணிய பொடி, மறை பொருள், வெள்ளை, அழகு
சன்னவீரம் = வெற்றிமாலை,
சன்னாகம் = போர்க்கவசம் ஆயத்தம்
சன்னிதானம் = திருமுன், கடவுள் ஆவேசித்தல்
சன்னித்தல் = பிறத்தல்
சன்னிதி = திருமுன், கோவில்
சன்னை = குறிப்பு, பரிகாச வார்த்தை

## சா

சா = சாதல், மரணம், பேய்
சாகசம் = வீரம், வெள்ளாடு துணிவு, இலை, தற்கொலை, தேக்கு, யானை, பாசாங்கு, தேனி, வில், பலாத்காரம்,
சாகதன் = வீரன்
சாகம் = ஆடு, தேக்கமரம், இலை, சிறுகீரை
சாகரம் = விழிப்பு, கடல், பதினாயிரம் கோடி
சாகாடு = வண்டி, சக்கரம், ரோகிணிநாள்
சாகாமருந்து = தேவாமுதம்
சாகித்தியம் = இலக்கியம், கூட்டம், புலமை
சாகியம் = கூட்டம்

சாகினி = வெள்ளாடு, சிறு கீரை

சாகை = சாதல், தங்குமிடம் பிரிவு, மரக்கொம்பு, வேத நூற்பிரிவு, வட்டில்

சாக்காடு = சாவு

சாக்கியர் = புத்தர், சாக்கிய நாயனார்

சாக்கிரதை = விழிப்பு

சாக்குருவி = ஆந்தை

சாக்கை = அரசரது கருமத் தலைவன், நிமித்திகன்

சாக்கையன் = கூத்தாடும் சாதியான்

சாக்தேயர் = சக்தியை வழி படுபவர்

சாங்கியம் = கபிலர்மதம், கிரியை

சாங்கோபாங்கம் = முழுமை, ஒன்றும் விடாமை

சாசனம் = உறுதிப்பத்திரம், ஆக்ஞை, தானபத்திரம், வெண்கடுகு

சாசுவதம் = அசையா நிலை, மோட்சம், நித்தியம்

சாடராக்கினி = வயிற்றுத் தீ

சாடி = சீலை, தாழி, புறங் கூறல்

சாடு = வண்டி, கைத்தலத்-தில் இடும் உரை

சாட்சத்து = கண்கூடாக

சாட்சிபூதம் = சாட்சியாய் இருத்தல்

சாட்டாங்கம் = இருகை, இரு பாதம், இரு செவி, தலை, மார்பு ஆகிய எட்டு உறுப் புக்கள் நிலத்தில் படிய வணங்கும் வணக்கம்

சாட்டியம் = பொல்லாங்கு, வஞ்சகம், அசீர்ணம்

சாட்டை = கயிறு, கசை

சாணம் = தழும்பு, சந்தனக் கல், சாணி

சாதகப்புள் = வானம்பாடி

சாதகம் = பிறப்பு, பயிற்சி, வானம்பாடி, பூதம், பேய், பிறவிக்குணம், பழக்கம்

சாதம் = உண்மை, கூட்டம், சோறு, இளமை, பிறப்பு, சுகம்

சாதவேதா = நெருப்பு

சாதனசாத்தியம் = காரண காரியம்

சாதனம் = சாசனம், கருவி, பத்திரம், முயற்சி, சித்தி, பயிற்சி, திரவியம், முடிப் பது

சாதரூபம் = பொன்

சாதனை = பயிற்சி

சாதன்மியம் = ஒப்புமை

சாதாரி = முல்லை நிலப்பண்

சாதி = கள், தேக்கு, மரம், பிரம்பு, சிறுசண்பகம்

சாதித்தல் = கொல்லுதல், பழகல் அழுத்தல், வெல் லுதல்

சாது = அழகு, சாந்தம், துறவி, தயிர்
சாதுசங்கம் = நல்லோர் கூட்டம்
சாதுரங்கம் = இரத, கஜ, துரக பாதாதியாகிய நால் வகைச்சேனைகள்
சாதுரியம் = நாகரிகம்
சாதுரிசியம் = ஒப்புமை
சாதுவன் = அருகன்
சாத்தவர் = குதிரை வீரர்
சாத்தன் = ஐயன்
சாத்தம் = சப்தப்பிரமாணம்
சாத்தல் = வேதம்
சாத்தியம் = அனுகூலம்
சாத்தன் = அருகன், வாணிகர் கூட்டத்தலைவன், சாத்தனர் [கலை
சாஸ்திரம் = ஒழுங்கு, விதி,
சாத்தினர் = குதிரை வீரர்
சாத்து = அடி, அணிதல், அப்புதல், குதிரைச்சேவகன், வாணிகம் செய்வோர் கூட்டம்
சாத்மீகம் = சாந்தகுணம்
சாநவி = கங்கை நதி
சாநு = முழந்தாள்
சாந்தம் = சந்தனம், பொறுமை, தயை
சாந்தனையும் = சாகும்வரையிலும்
சாந்தாற்றி = விசிறி
சாந்தி = பூசை, கழிப்பு, ஓமம்,
சாந்திரமானம் = சந்திரனைக் கொண்டு அளவிடுதல்
சாந்திராயணம் = வளர்பிறையில் ஒவ்வொரு பிடி அன்னம் கூட்டி உண்டுவந்து, அவ்வாறே தேய்பிறை வருங்காலத்து ஒவ்வொரு பிடி அன்னம் குறைத்து உண்டு அனுட்டிக்கும் ஒருவகை விரதம்
சாந்து = சந்தனம்
சாந்தை = பூமி
சாந்நித்தியம் = சமீபம்
சாபம் = குட்டி, வில், சபித்தல்
சாபல்யம் = அனுகூலம், பேறு
சாப்பை = புல்பாய்
சாமக்கிரியை = உபகரணம், உணவுப்பண்டம்
சாமந்தர் = படைத் தலைவர், சிற்றரசர், மந்திரிகள்
சாமம் = பாதி இரவு, ஏழரை நாழிகை, சமாதானம், ஓர் உபாயம், சாமவேதம், கருமை, பச்சை, பஞ்சம், அறுகு
சாமரம் = போர், கவரி, கழு
சாமளம் = பச்சை, கருமை
சாமளி = பார்வதி, காளி
சாமன் = காமன் தம்பி

சாமானியம் = பொது
சாமி = கந்தன், கடவுள், தலைவி, பொன், செல்வம்
சாமியம் = ஒப்புமை
சாமிகரம் = பொன்
சாமீபம் = கடவுள் அருகில் இருக்கும் பேறு
சாமுசித்தன் = முற்பிறப்பில் சரியை, கிரியை, யோகம், மார்க்கங்களை முடித்து ஞானத்தோடு பிறந்தவன்
சாமுண்டி = காளி, துர்க்கை
சாமுத்திரிகம் = உடல் உறுப்பின் இலக்கண நூல்
சாம்பல் = பழம்பூ, சாம்புதல், நாவல், முதுமை
சாம்பவி = பார்வதி
சாம்பன் = அம்மையப்பன்
சாம்பான் = சிவதீட்சை பெற்ற பெற்றான்சாம்பான், என்னும் பெயரிய பறையர் குலத்தவன்
சாம்பிராச்சியம் = பெருஞ் செல்வம், சக்கரவர்த்தி, தன்மை
சாம்பு = பறை, படுக்கை, புடவை, பொன், நாவல்
சாம்புதல் = ஒடுங்குதல், கூம்புதல், உணர்வழிதல் சோர்தல், இழுத்தல், வாடுதல், கெடுதல்
சாம்புநதம் = ஒரு வகைப் பொன்
சாயகம் = அம்பு, வாள்
சாயம் = அம்பு, அந்திப் பொழுது
சாயல் = அழகு, ஒப்பு, காய்தல், நிழல், நிறம், நுண்மை, மிருது, மென்மை, மேன்மை, இளைப்பு, துயிலிடம், மேனி, சார்பு, இணைப்பு
சாயாதேவி = சூரியன் மனைவி
சாயாநந்தம் = ஓந்தி
சாயுச்சியம் = இறைவனோடு இரண்டறக் கலத்தல், மோட்சம்
சாயை = மனைவி, நிறம், புகழ், நிழல், ஒப்பு,
சாய் = கோரை, புகழ், நிறம்
சாய்தல் = மெலிதல், அசைதல், அழிதல், தோற்றோடல், கவிழ்தல், தளர்தல் வருந்துதல்
சாரகம் = தேன்
சாரங்கம் = சாதகப்பறவை, தாமரை, மயில், வண்டு, மான், விஷ்ணுவில்
சாரசம் = குருகு, தாமரை, வெண்ணுரை
சாரணர் = ஒற்றர், தூதுவர் சமணமுனிவர்
சாரதம் = பூதம்
சாரதா = சாஸ்வதி

சாரதி = புலவன், தேர்ப்பாகன்

சாரதை = சரஸ்வதி

சாரமேயன் = நாய்

சாரம் = இனிமை, மருந்து, சத்து, கருத்து, திரவியம், மரவயிரம், பலம், நீர், வெண்ணெய்

சாரர் = ஒற்றர்

சாரல் = மலைப்பக்கம், குளிர் காற்று

சாரி = வட்டமாக ஓடுதல், முறை, சூதாடு கருவி, வாகன மீது செல்லல்

சாரிகை = மைனாப்பறவை, சுழல் காற்று, வட்டமாய் ஓடல்

சாரியை = குதிரையின் சுற்று வரவு

சாரு = அழகு, கிளி

சாருகன் = கொலைசெய்பவன்

சாருபம் = கடவுள் உரு பெற்று விளங்கும் பேறு

சார் = அணை, அழகு, கறை, இடம், திண்ணை, பக்கம், கூடுகை, வகை

சார்ங்கம் = விஷ்ணுவின் வில்

சார்த்தூலம் = புலி

சார்ந்தார் = நண்பர், உறவினர்

சார்பு = பற்று, உதவி, இடம், சேர்பு, ஆதாரம், பிறப்பு, அணைவு, அடைக்கலம்

சார்வபூபன் = சிவன், எவரையும் வணங்காது உலகையாள்பவன்

சார்வபௌமன் = எவரையும் வணங்காது உலகையாள்பவன், சிவன்

சால = மிக

சாலகம் = பூவரும்பு, மதகு, சிலந்திவலை, பறவைக்கூடு, சலதாரை, பலகணி

சாலக்கிராமம் = விஷ்ணுவடிவாகக்கருதப்படும் ஒருகல்

சாலம் = கூட்டம், நடிப்பு, மதில், வலை, அரண், சபை, மாயவித்தை

சாலி = அருந்ததி, நெல், கள், மிக்கோன்

சாலிகர் = நெய்தொழிலாளர்

சாலிகை = கவசம்

சாலினி = அருந்ததி, தேவராட்டி

சாலுதல் = பொருந்துதல், அமைதல், மிகுதல், நிறைதல், ஒவ்வுதல்

சாலேகம் = பலகணி, சாளரம், சந்தனம், பூவரும்பு

சாலேயம் = நெல்விளையும் நிலம்

சாலை = அறை, அறச்சாலை, கூடம், பொது மண்டபம், குதிரைப் பந்தி

சாலோகம் = இறைவன் உலகத்து இருக்கும் பேறு

சால் = மிகுதி, அமைதி
சால்பு = அமைதி, நிறைவு, குணம், மாட்சிமை
சாவகம் = ஒரு தீவு, மாணாக்க நிலை, நோன்பு
சாவகர் = சமணர்
சாவதானம் = கவனம்
சாவி = பதர், திறவுகோல்
சாவித்திரி = சத்தியவான் மனைவி, பிரமன் மனைவி, பார்வதி,
சாழல் = மகளிர் விளையாட்டு
சாளிகம் = வண்டு
சாளிகை = பணப்பை
சாறு = கொத்து, திருவிழா, கள், மிளகு, ரசம். பூசை, திருமணம்
சாறுதல் = வழுக்கல், சரிதல்
சாற்றமுது = மிளகு ரசம்
சாற்றுதல் = சொல்லுதல், விற்றல் நிறைத்தல், அடித்தல், உணர்த்தல்
சானவி = கங்கை
சான்றவர் = அறிந்தவர்
சான்றாண்மை = பொறுமை, ஞானம், சால்புடைமை
சான்று = சாட்சி
சான்றோன் = அறிஞன்

## சி

சிகண்டம் = தலைமுடி, மயில் தோகை
சிகண்டி = ஒருபண், விஷ்ணு, அலி, மயில், ஒருமுனிவர்
சிகண்டிசன் = வியாழன்
சிகதை = மணற் குன்று, வெண்மணல்
சிகரம் = மலை, பாரத்தின் நுனி, அந்தம், வட்டில், அலை, காக்கை, கோபுரம், உயர்ச்சி
சிகரி = எலி, கருநாரை, கோபுரம், மரம், மலை
சிகல் = தொழில்
சிகழி = குடுமி
சிகழிகை = மயிர்முடி, மாலை கொண்டை
சிகாமணி = தலையாபரணம், சிறந்தோன்
சிகாவலம் = மயிர், பாசி
சிகி = மயில், தீ, கேது, மரம், மலை, ஆமணக்கு
சிகிச்சை = வைத்தியம், பரிகாரம்
சிகித்துவசன் = மயிற்கொடியோன், முருகன்
சிகுவை = நா, வாக்கு
சிகை = குடுமி, கொண்டை, பந்தம், தலை, மலைமுடி, கவனம், அக்கினிச்சுவாலை

சிக்கம் = உச்சி, குடுமி, சிறை, சிப்பு, உறி, வலை

சிக்கர் = கள்

சிக்கி = நாணம்

சிக்கு = சந்தேகம், தடை, உறுதி

சிக்குரு = முருங்கை

சிக்கென = உறுதியாக, விரைவாக

சிங்கநோக்கு = சிங்கத்தின் முன் பின் பார்வை

சிங்கல் = குறைதல், கெடுதல்

சிங்கவாகனி = பார்வதி, துர்க்கை

சிங்கன் = குறவன்

சிங்கி = விஷம், பின்னல், குறத்தி, மான்கொம்பு, சுக்கு

சிங்குவை = நா

சிசிரம் = பின்பனிக்காலம், குளிர்

சிசுமாரம் = முதலை

சிசுருக்ஷை = குற்றேவல், தொண்டு

சிச்சிலி = மீன் குத்திப்பறவை

சிஞ்சம் = புளியமரம்

சிஞ்சினி = வில் நாண்

சிஞ்சை = முழக்கம், புலி

சிட்சித்தல் = தண்டித்தல், போதித்தல்

சிட்சை = பயிற்சி, தண்டனை

சிட்டபரிபாலனம் = நல்லோரைக்காத்தல்

சிட்டம் - பெருமை, சிரேஷ்டம், பொறுமை, நல்லறிவு

சிட்டன் = ஞானி, மாணக்கன்

சிஷ்டாசாரம் = மேலோர் ஆசாரம்

சிட்டி = கட்டளை, மட்கலம், சிருட்டி

சிட்டை = ஒழுங்கு

சிணுங்கல் = மழைதூறல், கொஞ்சுதல், அழுதல்

சிண்டு = குடுமி, தலைமயிர்

சிதகம் = தூக்கணங் குருவி

சிதடன் = அறிவில்லான், குருடன்

சிதடு = பேதமை, குருடு

சிதம் = ஞானம், நட்சத்திரம், வெண்மை, வெற்றி

சிதர் = உறி, வண்டு, சீலை, மெத்தெனல், மழைத்துளி, திவலை, பூந்தாது,

சிதலை = கறையான், நோய், சீலை

சிதவல் = கந்தைத்துணி, தேரின் கொடி, வெட்டுதல்

சிதறி = மழை

சிதன் = சுக்கிரன்

சிதாகாசம் = ஞானகாசம்

சிதாத்மா = கடவுள்

சிதாபாசன் = சிவன்

சிதார் = மரவுரி, கந்தைத்துணி

சிதி = கறுப்பு
சிதிகண்டன் = சிவன்
சிதிரம் = வாள், தீ, கோடரி
சிதை = ஈமவிறகு, கப்பல் பாய், இழிசொல், வெண்துளசி,
சித்தசன் = மன்மதன்
சித்தப்பிரமை = பைத்தியம், மனமயக்கம்
சித்தம் = நித்தியம், உறுதி, மனம், திண்மை
சித்தர் = முனிவர்
சித்தலயம் = மனஒடுக்கம்
சித்தன் = சிவன், வயிரவன், முருகன், அருகன், வியாழன்
சித்தாந்தம் = முடிந்தமுடிவு, சுத்தாத்துவிதசைவசமயம்
சித்தாந்தி = தருக்க முடிவு கூறுபவன், கணிதன்
சித்தி = அறிவு, மோட்சம்
சித்திநெறி = மோட்ச மார்க்கம்
சித்தியர் = தெய்வமங்கையர்
சித்திரகம் = பொட்டு
சித்திரகாயம் = புலி
சித்திரகுத்தன் = யமன் கணக்கன்,
சித்திரகூடம் = ஒருமலை
சித்திரபானு = சூரியன்
சித்திரம் = அதிசயம், புலி, ஆகாயம், பொட்டு, வெளி, பல்நிறம், அசோகு, கலகம், நிந்தை, மெய்யென எண்ணும்படி பேசப்படும் பொய், பேரழகு, இரகசியம், குறைவு
சித்தினி = ஒருவகைப்பெண்
சித் = அறிவு
சித்து = அறிவு, பொருள், ஆன்மா, மாயம்,
சித்துப்பொருள் = அறிவு மயமான பொருள்
சிந்தை = தோல் துருத்தி
சிந்தகம் = புளியமரம்
சிந்தம் = கொடி, புளியமரம்,
சிந்தனை = துயரம், கவலை, ஆராய்தல், எண்ணம், தியானம்
சிந்தாகுலம் = மனத்துயர்
சிந்தாமணி = எண்ணியதை எண்ணியபடி ஈயவல்ல தெய்விகமணி
சிந்தினர் = குள்ளர்
சிந்து = ஆறு, கடல், நீர், முச்சீர் கொண்ட பாடலின் அடி, ஒரு வகைப்பா, ஒரு தேசம், கொடி
சிந்தூரம் = சிவப்பு, பொட்டு புளியமரம், செஞ்சுண்ணம், யானை
சிந்துவாரம் = வெண்ணொச்சி, கருநொச்சி

சிந்தை = எண்ணம், மனம், மனவருத்தம்
சிபுகம் = மோவாய்
சிமயம் = மலை, மலையுச்சி
சிமாளம் = மகிழ்வு
சிமிட்டுதல் = வஞ்சித்தல்
சிமிலி = குடுமி, தோணி, எள்ளுருண்டை, சிள்வீடு, உறி
சிமிழ் = செப்பு
சிமிழ்த்தல் = கட்டல், பிடித்தல், கண்மூடல்
சிமிழ்ப்பு = பந்தம்
சிமை = குடுமி, மலையுச்சி
சிம்புளித்தல் = கண்மூடுதல்
சிம்புள் = சரபம்
சிம்பை = அவரைக்கொடி
சிம்மாளம் = மகிழ்ச்சி
சிரகம் = கிரகம்
சிரக்கம்பம் = தலையசைப்பு
சிரங்கை = கை கொண்ட அளவு
சிரஞ்சீவி = பொன், காகம், இலவமரம், நீண்டகாலம் வாழ்பவன்
சிரட்டை = கொட்டாங்கச்சி
சிரத்தை = விருப்பம், அன்பு
சிரபங்கம் = தலைச்சேதம்
சிரமம் = சிலம்பம், வருத்தம், இளைப்பு
சிரம் = நெடுங்காலம், தலை
சிரல் = மீன்குத்திப்பறவை, முடிவிடம்
சிரவணம் = காது, கேள்வி, திருவோணம்
சிரவம் = காது, கீர்த்தி, கவுதாரி [சிதறுதல்
சிரறுதல் = மாறுபடுதல்,
சிரற்றுதல் = கோபித்தல்
சிரற்றல் = ஒலித்தல்
சிராந்தி = இளைப்பு
சிராவணம் = ஆவணிமாதம், புதுப் பூணல் அணிதல், கல், இடுக்கி
சிரீ = இலக்குமி, ஸ்ரீ
சிரீவற்சம் = ஒரு குதிரை, விஷ்ணு மார்பின் மறு
சிருகாலன் = நரி
சிருக்கு = யாகக்கரண்டி
சிருங்கம் = மலைமுடி, விலங்கின் கொம்பு
சிருங்கலம் = சங்கிலி
சிருங்கலை = விலங்கு, யானையைக்கட்டும் காற் சங்கிலி
சிருங்காடகம் = நான்குவழி கூடும் இடம்
சிருங்கி = ஒரு மருந்து, ஒரு சுவை, சுக்கு, பொன்
சிருட்டிகர்த்தா = பிரமன், கடவுள்
சிரேட்டம் = முதன்மை
சிரேணி = இடையர் வீதி, வரிசை

சிரேயசு = கீர்த்தி
சிரை = நரம்பு, குரங்கு
சிரோத்திரம் = காது
சிரோருகம் = தலைமயிர்
சிரௌதம் = வேதம் விதித்தது
சிலகம் = அக்கபை
சிலதன் = தோழன், வேலையாள்
சிலதி = தோழி
சிலந்தி = சிலந்தி, கொப்புளம்,
சிலம்பம் = படைக்கலப் பயிற்சி
சிலம்பன் = குறிஞ்சி நிலத் தலைவன், முருகன்
சிலம்பு = மலை, ஒலி, காற் சிலம்பு
சிலாசாஸனம் = கல்வெட்டு
சிலாதலம் = கற்படி, பாறை
சிலாவட்டம் = சாணைக்கல்
சிலாவர்ஷம் = கல்மழை
சிலீமுகம் = அம்பு, வண்டு, போர்
சிலுகு = குற்றம், துன்பம், குழப்பம்
சிலேடை = ஒருசொல்லோ ஒரு தொடரோ இரு பொருள்பட இருப்பதும் பல பொருள் அமைய இருப்பதும் ஆகும்
சிலேட்டுமம் = கோழை
சிலை = ஒலி, வில், மார்கழி மாதம், கல், மலை, வால், கல்லுருவம், ஒளி
சிலைத்தல் = ஒலித்தல், கோபித்தல், இடைதல்
சிலோச்சயம் = மலை
சில் = வட்டமானது, தேர் உருளை, அற்பம்
சில்காற்று = தென்றல்
சில்மிஷம் = குறும்பு,
சில்லி = தேர் உருளை, வட்டம், சிறுகீரை, ஓட்டை
சில்லு = ஓடு
சில்லை = பழிச்சொல், தேருருள், நீர்ப்பறவை, சிள் வண்டு
சிவகதி = மோட்சம்
சிவசத்தி = சிவனை நீங்காத சத்தி
சிவஞானம் = பதி அறிவு, தெய்வ அறிவு
சிவணுதல் = பொருந்தல், ஒத்தல், கிட்டல், கலத்தல்
சிவத்தல் = கோபித்தல், சிவத்தல்
சிவபுரம் = காசி, சிவலோகம்
சிவப்பு = கோபக்குறி
சிவமயம் = மங்களகரம்
சிவம் = நன்மை, சுகம், மங்கலவிதி, நீர் முத்தி, வேதம்
சிவல் = கவுதாரி

சிவிகை = பல்லக்கு
சிவிறி = விசிறி
சிவை = உலைமுக்கு, உலைத் துருத்தி, பார்வதி, நரி, வேர்
சிவோகம்பாவனை = நான் சிவன் எனப்பாவித்தல்
சில்வீடு = சில்வண்டு, சுவர்க்கோழி
சிறகு = பக்கம், இறகு
சிறக்கணித்தல் = சுருக்குதல் கடைக்கண்பார்வை
சிறங்கை = கைநிறை அளவு
சிறத்தல் = மிகுதல்
சிறப்பு = திருவிழா, செல்வம், தலைமை, மிகுதி, நைமித்திக உற்சவம்
சிறார் = சிறுவர்
சிறுகாலை = விடியற் பொழுது, சிறுவயது
சிறுகால் = தென்றல்
சிறுசொல் = பழிச்சொல்
சிறுதிசை = கோணதிசை
சிறுநனி = சிறிதுபொழுது, விரைவாக
சிறுநீர் = மூத்திரம்
சிறுபட்டி = கட்டுக்கடங்காச் சிறுவன்
சிறுபதம் = வழி, தண்ணீருணவு
சிறுபுறம் = பிடறி, முதுகு, சிறுகொடை
சிறுப்பம் = சிறுபிராயம்
சிறுமை = தரித்திரம், நோய், குற்றம், துன்பம், எளிமை, மிக்ககாமம், அற்பம், இளமை
சிறுவரை = அற்பகாலம்
சிறுவிதி = தட்சன்
சிறுவிலை = பஞ்சம்
சிறை = மதில், பக்கம், நீர்க் கரை, துடை, காவல், இறகு, அடிமை, இடம், சிறைச்சாலை, அறை, அணை
சிறைக்கணித்தல் = கடைக் கணித்தல், புறக்கணித் தல்
சிறைதல் = நிறம்கெடுதல்
சிறைத்தல் = நீரைத்தடுத் தல்
சிறைப்புறம் = காவல், மலைப் புறம், ஒதுக்கிடம், வேலிப் புறம்
சிற்குணன் = கடவுள்
சிற்சபை = சிதம்பர நடன சபை, ஞானசபை
சிற்பம் = சிந்தித்தல், அற் பம், நுண் தொழில்
சிற்பரம் = பரப்பிரம்மம்
சிற்பரன் = கடவுள், அறிவுக்கு அப்பாற்பட்டவன்
சிற்பறை = பராசக்தி
சிற்றம்பலம் = சிதம்பரம், ஞானசபை
சிற்றவை = சிறிய தாய்

சிற்றில் = குடிசை, மணல் வீடு

சிற்றினம் = ஆகாதகூட்டம்

சினகரம் = சைனர்கோவில், சிறு கோவில்

சினகர் = சைனர்

சினம் = கோபம், நெருப்பு, வெயில், வெம்மை, போர்

சினன் = அருகன், புத்தன்

சினை = உறுப்பு, பூவரும்பு, முட்டை, கர்ப்பம், மரக்கிளை

சினைத்தல் = பருத்தல், எழுதல், தோன்றுதல்

சின்மயம் = ஞானமயம்

சின்முத்திரை = ஞானமுத்திரை

சின்மொழி = இழிசொல்

சின்னப்பூ = விடுபூ, அடையாளப் பூ

சின்னம் = முறம், துண்டு, பொடி, காளம்

சின்னூல் = குணவீரபண்டிதர் எழுதிய நேமிநாதம் என்னும் ஓர் இலக்கண நூல்

சினை = பயிற்சி, ஒழுங்கு

## சீ

சீ = இகழ்ச்சிக்குறிப்பு, சீழ், இலக்குமி, காந்தி, சிறப்பு சம்பத்து, ஒளி

சீகண்டன் = சிவன்

சீகரம் = கவரி, கடல் அலை, மழை, துளி, செல்வவளம்

சீக்கை = கோழை

சீசம் = ஈயம்

சீட்டி = ஊதுகுழல், சீழ்க்கை

சீதகிரணன் = சந்திரன்

சீதம் = குளிர், நீர், பனி, மேகம், ஒருநாடு, கள், சந்தனம்

சீதரன் = விஷ்ணு

சீதளம் = தாமரை, முத்து, சந்தனம், குளிர்

சீது = கள்

சீதேவி = இலக்குமி

சீதை = இராமன் மனைவி, பொன்னாங்கண்ணி, உழுபடைச்சால், தேன்

சீந்தல் = கோபித்தல், மதித்தல், விரும்பல்

சீபதி = அருகன், விஷ்ணு

சீமான் = குபேரன், அருகன், விஷ்ணு, செல்வன்

சீமுதம் = மேகம், மலை

சீமை = எல்லை, கரை, வயல், தேசம்

சீயம் = சிங்கம்

சீரகத்தாரோன் = குபேரன்

சீரம் = மரவுரி, கலப்பை, பால்

சீரியர் = செல்வர், நல்லோர்

சீருணம் = செம்பு

சீருள் = ஈயம், செம்பு

சீரை = சிலை, தராசு, இசைப் பாட்டு, மரவுரி

சீர் = அழகு, அளவு, ஒழுங்கு சிறப்பு, செல்வம், தராசு, நன்மை, பாரம், புகழ், பெருமை, அளவு, தாளம்

சீர்தூக்குதல் = ஆராய்தல்

சீர்த்தல் = சிறப்புக்கொள் ளல், கோபித்தல்

சீர்த்தி = மிகுபுகழ்

சீர்மை = கீர்த்தி, சிறப்பு, செம்மை

சீலம் = குணம், நடை, யானை யைப் பயிற்றுதல், சுபா வம், பழக்கம், நல்லறிவு, நல் ஒழுக்கம்

சீவ = நெடிது வாழ்க

சீவகர் = புத்த தவசிகள்

சீவகலை = உயிர்ப்பு

சீவசாட்சி = அறிவுக்கு ஆதா ரமாய் இருப்பது

சீவதசை = சீவித்திருக்கும் காலம்

சீவதம் = ஆமை, சீவன், மயில், மேகம்

சீவந்தி = பாலைமரம்

சீவரட்சை = சீவனைக்காத் தல்

சீவரம் = காவியாடை

சீவனம் = நீர், வெண்ணெய், உயிர்வாழ்க்கை

சீவனீயம் = நீர்

சீவன் = வியாழ பகவான், உயிர்

சீவன்முக்தன் = உயிரோடு வாழும் பொழுதே உலகப் பற்றைக் கடந்த மெய்ஞ் ஞானி

சீவன்முக்தி = உயிர் உட லில் உள்ளபோதே மோட் சம் அடைதல்

சீவான்மா = உயிர்

சீறடி = சிறியபாதம்

சீறியகற்பு = மறக்கற்பு

சீறு = கோபம்

சீறார் = வேடர், ஊர்

சீற்றம் = கோபம்

சு = நன்மை, சுகம், மங்கலம், சொந்தம்

சுகதம் = ஒரு பௌத்த நூல்

சுகதன் = அருகன், புத்தன்

சுகந்தம் = நறுமணம்

சுகம் = கிளி, இணக்கம், இன்பம்

சுகாந்தம் = மோட்சம்

சுகிர்தம் = நன்மை, நற்செயல், இன்பம்

சுகிர்தல் = கிழித்தல், வடித்தல், வகிர்தல், பஞ்சு எஃகுதல்

சுகிர்த்து = நட்பு,

சுகிர்ல்லாபம் = நட்பைப் பெறுதல்

சுகுமாரம் = மென்மை

சுகுச்சை = அருவருப்பு

சுக்கான்கல் = சுண்ணும்புக் கல்

சுக்கிரன் = தீ, வெள்ளி

சுக்கிலபட்சம் = வளர்பிறை பக்கம்

சுக்கிலம் = வெண்மை, இந்திரியம்

சுக்கை = மாலை, நட்சத்திரம்

சுங்கன் = சுக்கிரன்

சுசி = கோடைக்காலம், சந்திரன், நெருப்பு, சுத்தம், வெண்மை

சுசிரம் = துளை

சுசீலம் = நற்குணம், நேர்மை

சுசுருஷை = பணிவிடை

சுசுந்தரி = மூஞ்சூறு

சுடரோன் = சூரியன்

சுடர் = அக்கினி, ஒளி, சந்திரன், சூரியன், விளக்கு, நெருப்பு

சுடலை = சுடுகாடு

சுடலையாடி = சிவன்

சுடிகை = உச்சி, தலை, கிரீடம், சுட்டி

சுடுமண் = செங்கல், ஓடு

சுடுவன் = இரத்தம்

சுட்டி = நெற்றியணி, சுழி, நாக்கு

சுட்டிகை = மாதர் நெற்றியணி

சுட்டு = குறிப்பு, மதிப்பு, புகழ்

சுணங்கன் = நாய்

சுணங்கு = தேமல், பூந்தாது, மெலிவு

சுணம் = சுண்ணப்பொடி, அழகுதேமல்

சுணை = கூர்மை, சுரணை, அறிவு, தினவு, இலைச் சொறி

சுண்டன் = மூஞ்சூறு, சதய நாள்

சுண்டம் = கள், யானைத் துதிக்கை

சுண்டாலி = யானை

சுண்டி = கள், சுக்கு

சுண்டை = கள், யானைக் கை

சுண்ணப்பொடி = வாசனைப் பொடி, மகரந்தம்

சுண்ணம் = சுண்ணாம்பு, பொடி, மலர், பட்டுவகை

சுதகம் = குறைவு

சுதம் = கேடு, சுருதியறிவு, முறைமை

சுதரிசனம் = கண்ணாடி, திரு மால், சக்கரம், அழகு

சுதனம் = நற்பாக்கியம்

சுதன் = மகன்

சுதன்மை = இந்திர சபை

சுதாகரன் = கருடன், சந்தி ரன்

சுதி = இசை, சுருதி

சுதினம் = நல்லதினம்

சுதை = உதைகால் பசு வெண்மை, நீர், அமிழ்து, சுண்ணம்பு, மகள், கேடு

சுத்தம் = முழுமை, தூய்மை

சுத்தாத்துவைதம் = உயிர் இறைவனுடன் இரண்ட றக்கலந்து அனுபவிக்கும் நிலை

சுத்தி = சங்கு, கிளிஞ்சில்

சுத்தோதகம் = தூயநீர்

சுந்தரம் = அழகு, நன்மை, சிந்தூரம், நிறம்

சுந்தரி = பார்வதி, இந்தி ராணி, பெண், அழகு

சுந்தரேசன் = சிவன்

சுந்து = நீர்

சுபட்சம் = தன்கொள்கை

சுபமஸ்து = மங்கலச்சொல்

சுபன்னன் = கருடன்

சுபாசுபம் = நன்மை, தீமை

சுப்பிரதீபம் = நல்ல உறுப் புக்களையுடையது, வட கிழ்த்திசை யானை

சுப்பிரம் = ஒளி, சந்தனம், தூய்மை, வெண்மை, வெள்ளி

சுமடர் = கீழ்மக்கள், அறி விலார்

சுமதி = நன்மதி, பாரம்

சுமத்தல் = பணிதல், தாங் குதல், மிகுதல்

சுமம் = பூ

சுமனசம் = பூ, கோதுமை

சுமனை = சிவப்புப் பசு

சுமாரகம் = நினைப்பு

சுமார்த்தர் = ஸ்மிருதிவழி நிற்போர்

சுமாலி = கள்

சுமைதலை = பொறுப்பு

சுமையடை = சும்மாடு

சும்பனம் = முத்தமிடல்

சும்புளித்தல் = ஒளியால் கண்கூசல்

சும்மை = ஒலி, ஊர், சுமை, நகர், நாடு, நெற்போர்

சுயஞ்சோதி = கடவுள்

சுயம்பு = வேதம், கடவுள், தானாக உண்டாதல்

சுயம்வரம் = தானாகக் கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளல்

சுயாதிபதி = சக்கரவர்த்தி

சுயோதனன் = துரியன்

சுரகுரு = வியாழன்

சுரதம் = அன்பு, புணர்ச்சி, இனிமை

சுரநதி = ஆகாயகங்கை, கங்கை

சுரபி = கபிலை, வசந்தகாலம், பொன், அழகு, மல்லிகை, வாசனை

சுரம் = அருநெறி, வழி, கள், காடு, பாலை நிலம், இசை

சுரம்போக்கு = பாலையில் செல்லல்

சுரர் = தேவர்

சுரன் = சூரியன், தேவன், அறிஞன்

சுரா = கள்

சுராபகை = கங்கை

சுராலயம் = மேரு, தேவருலகு

சுரி = முறுக்கு, சுழற்சி, நரி, துளை

சுரிகுழல் = சுருண்ட மயிர்

சுரிகை = உடைவாள், கவசம்

சுரிதகம் = தலையணி

சுரிமண் = சேறு

சுரிமுகன் = சங்கு, நத்தை

சுரியல் = மயிர், வளைவு, நீர்ச்சுழி

சுருக்கம் = வறுமை, சிறுமை, குறைவு, சுருங்கல், சங்கிரகம்

சுருக்கு = வலை, நெய்துடுப்பு, சுருக்கம், கட்டு, பூமாலை வகை, குறைவு, விரைவு

சுருங்கு = சலதாரை, சாக்கடை

சுருங்கை = கரந்த படை, கோட்டைக் கள்ள வழி, மதகு, நுழைவாயில், சாளரம்

சுருணை = பூண், சுருள்

சுருதி = காது, இசை, சுரம், சுதி, வேதம், கேள்வயறிவு

சுரும்பு = வண்டு, மலை
சுருவம் = யாகநெய்த்துடுப்பு
சுரேசன் = இந்திரன்
சுரேசுவரி = உமை
சுரேந்திரன் = இந்திரன்
சுரை = குழாய், உள் துளை, சுரைக்கொடி, தேன், பூண், பசுவின்மடி, பொய், மூட்டுவாய், அமுதம், களவு
சுரோணிதம் = இரத்தம்
சுரோதா = கேட்கிறவன்
சுரோத்திரம் = கேள்வி, காது
சுரோத்திரியம் = வேதம் கற்றவர்க்குக் கொடுக்கப் பட்ட பூமி
சுலநன் = அக்கினி
சுலவுதல் = சுழலுதல், சூழ் தல்
சுலாவு = காற்று
சுலோகம் = புகழ், ஆரியச் செய்யுள், பழமொழி
சுலோகி = கள்
சுலோசனம் = நல்லகண், மூக்குக்கண்ணாடி
சுல்கம் = மணமகள், விலைப் பொருள்
சுல்லி = அடுப்பு
சுல்வம் = தாமிரம்
சுவ = தனது
சுவச்சம் = அழுக்கின்மை

சுவடி = எழுதிய புத்தகம்
சுவடித்தல் = தின்னுதல், அலங்கரித்தல்
சுவடு = தழும்பு, வண்டி பாதை, அடையாளம்
சுவணகாரர் = தட்டார்
சுவணம் = கருடன், கழுகு, பொன்
சுவத்திரம் = சுகம்
சுவஸ்தி = ஒருமங்கலமொழி
சுவஸ்திகம் = ஓர் ஆசனம்
சுவப்பிரம் = நரகம், பாதளம்
சுவம் = சொத்து
சுவர் = அலங்காரம், உச்ச ஒலி, தெருஞாப்பு, மதில்
சுவர்க்கலோகம் = விண்ணு லகம்
சுவர்ணம் = பொன், நன் னிறம்
சுவலை = அரசமரம்
சுவல் = தோள்மேல், மேடு, பிடர், முதுகு, மயிர், மேட்டு நிலம், மேலிடம், குதிரையின் கழுத்து மயிர்
சுவவு = மூஞ்சூறு, பறவை மூக்கு
சுவனம் = சொப்பனம்
சுவாகதம் = கிளி, நல்வரவு
சுவாகாதேவி = அக்கினி மனை யாள்
சுவாசகம் = கிளி
சுவாசம் = நல்மணம், நல் இருப்பிடம்

சுவாசினி = சுமங்கலை

சுவாது = தித்திப்பு

சுவாஸ்தியம் = சுகம், இன்பம்

சுவாநுபவம் = தன்னிடம் உண்டான அனுபவம்

சுவாமி = பொன், தேவன், குரு, அரசன், கடவுள்

சுவாமிநாதன் = சுப்ரமணியன்

சுவார்ச்சிதம் = தானே சம்பாதித்த பொருள்

சுவானம் = நாய்

சுவாநுபூதி = தெய்வ அறிவு

சுவிகரித்தல் = தனதாக்கல்

சுவிகாரம் = அங்கீகரித்தல்

சுவிகை = கள்

சுவேகம் = உறை

சுவேதசம் = வேர்வையில் பிறப்பவை

சுவேதம் = வெண்மை, வேர்வை

சுவேதவனம் = திருவெண்காடு

சுவேதவாகனன் = அர்ச்சுனன்

சுழல் = காற்றுடி, வளைவு, சுழல்வு, சஞ்சலம்

சுழல்படை = வளைதடி

சுழி = கபடம், மூர்க்கம், சுழி, கடல்

சுழிமுனை = நடுநாடி

சுழியல் = மயிர், சுருள்

சுழியன் = சுழல்காற்று, வஞ்சகன்

சுழுத்தி = நல்லுறக்கம், புலன்கள் செயலற்ற நிலை

சுழுமுனை = இடைநாடி, இடைபிங்கலை

சுளகு = முறம்

சுளிப்பு = குறிப்பு

சுளுந்து = சபதம்

சுள் = உலர்ந்த மீன், சிறுமை

சுள்ளாப்பு = உறைப்பு, விளைவு, அடி, பழிச்சொல்

சுள்ளி = அனிச்சமரம், மா மரம், சுள்ளி, ஆச்சாமரம் கொன்றை, தேன்

சுற்றுப்படாகை = அயல் கிராமம்

சுனகன் = நாய்

சுனை = நீர்மலையூற்று, நிலை

சுனைதல் = வாடுதல் [தினவு

சுன்னம் = சுழி, சுண்ணம்

சூகம் = ஊர்வன, தாமரை, நெல்வால்

சூகரம் = பன்றி, ஒருவகை மான்

சூகை = யானை, எறும்பு களில் ஒருவகை

சூக்குமசரீரம் = நுண்ணிய வடிவான உட்சரீரம்

சூக்கம் = கூர்மை, நுண்மை

சூக்குமம் = அணு, அற்பம், வஞ்சகம்

சூக்தம் = நன்கு உரைக்கப் பட்டது, வேதப் பகுதி, ஆன்றோர் மொழி

சூசகம் = தருப்பை, உளவு, அறிகுறி

சூசனம் = அறிவிப்பு, அபி நயம், குறிப்பு, கூர்மை,

சூசி = ஊசி, குறிப்பு, அட்ட வணை, துளை

சூசிப்பித்தல் = சுருங்கச் சொல்லல்

சூசுகம் = முலைக்கண்

சூடகம் = கைவளை

சூடம் = தலை, சிவன்சடை, உச்சிச்சடை

சூடன் = கற்பூரம், மீன்

சூடாமணி = முடிமணி, தேவ மணி

சூடி = புடவை

சூடிகை = முடி, ஸ்தூபி

சூடு = அரிக்கட்டு, கோழிக் கொண்டை, இறைச்சி, வடு, குடுமி, சுடுதல், நெல் லரிக்குவியல், சூடுதல்

சூடை = குடுமி, கைக்கட கம், தலை

சூட்சம் = சுருக்கம், தந்தி ரம், சூத்திரம்

சூட்சுமம் = நுண்மை, கூரறிவு

சூட்டிகை = கூரியபுத்தி

சூட்டு = நுதல் அணி, போர்ப்பூ, முடிப்பு, கூர்மை சக்கரவிளிம்பு, பாம்பின் படம், மயிலின் உச்சிக் கொண்டை, ஏவறை

சூதகம் = மாமரம், தீட்டு, பழமை, முலைக்கண்

சூதசாலை = மடப்பள்ளி

சூதம் = வண்டு, பாவம், பிறப்பு, மாமரம், மடைத் தொழில், சூது

சூதர் = பாணர், புகழ்வோர்

சூதனம் = அழித்தல், அங்கிகாரம்

சூதன் = பாணன், தச்சன், புகழ்வோன், சூரியன், வஞ் சகன், சமையற்காரன், தேர்ப்பாகன்

சூதானம் = எச்சரிப்பு, சேமம்

சூதிகை = பிள்ளை பெற்ற வீடு

சூது = தாமரை, வெற்றி, சூதாட்டு, வஞ்சகம், உபாயம்

சூத்திரப்பா = நூற்பா

சூத்திரம் = யந்திரம், இரகசியம், உபாயம், நூல், நியாயம், பூணூல், சில எழுத்தால் பல பொருள் விளக்கும் யாப்பு வகையில்ஒன்று

சூம்புதல் = வாடிச்சிறுத்தல்

சூரணம் = கருணைக்கிழங்கு, பஸ்பம்

சூரணிகை = கருத்துரை

சூரம் = வீரம், அச்சம், கடலை

சூரரமகளிர் = தெய்வப் பெண்கள்

சூரல் = பிரம்பு

சூரன் = சூரபத்மன், வீரன், நாய், நெருப்பு, சூரியன்

சூரி = காளி, புலவன், சூரியன், கத்தி

சூரிகலை = வலப்பக்க நாசி வழிவரும் சுவாசம், பிங்கலை

சூரியகாந்தம் = சூரியன் ஒளி பட்டதும் நீர்கசியும் கல்

சூரியகிரணம் = சூரியஒளி

சூரியன் = சோழன், சூரியன்

சூர் = அச்சம், தெய்வம், சூரன், நோய், கொடுமை, வனதேவதை

சூர்ணிகை = கருத்து விளக்கும் தொடர்

சூர்த்தல் = அச்சங்கொடுத்தல், சுழலுதல்

சூர்ப்பம் = முறம்

சூர்ப்பு = பயம், கடகம், வளைவு

சூலி = காளி, சிவன், கர்ப்பிணி

சூலினி = பார்வதி

சூலுதல் = தோண்டுதல், அறுத்தல்

சூல் = முட்டை, கர்ப்பம், சூலம்

சூழல் = கூட்டம், சூழ்ச்சி, குறிப்பு, இடம், சுற்றுப்புறம், மணற்குன்று

சூழி = உச்சி, யானைமுகபடாம், நெற்றி நீர்நிலை, தலையணி, கடல்

சூழிகை = கள்

சூழியம் = குழந்தை நகை

சூழுதல் = ஆலோசனை பண்ணல்

சூழ் = கடலை, தலைமாலை, ஆலோசனை, சுற்று

சூழ்கோடை = சூறவளி காற்று

சூழ்ச்சித்துணைவர் = மந்திரிமார்

சூழ்ந்தோர் = உறவினர்

சூழ்வு = பக்கம், ஆராய்வு

சூளறவு = சபதம், சத்தியம் செய்தல்

சூளாமணி = முடிமணி, ஓர் இலக்கிய நூல்

சூளிகை = யானைக்காதின் அடி, செய்குன்று, வீட்டினுச்சி, நிலாமுற்றம், நீர்க்கரை

சூளுறவு = ஆணையிடுதல்

சூளை = வேசி, செங்கற்சூளை, காளவாய்

சூள் = ஆணை, சபதம்

சூருவளி } = சுழல்காற்று
சூருவாரி }

சூறுதல் = சூழ்தல்

சூறை = கொள்ளை, மயிர்முடி, சல்லடம், சுழல்காற்று

சூறையர் = பரத்தையர்

சூனர் = மாமிசம் விற்பவர்

சூனியம் = ஆகாயம், இன்மை பாழ், குறைவு, மரணவித்தை

சூனு = மகன்

சூன் = மாமிசம், குற்றம், வளைவு, கபடம், பெருவயிறு

சூன்முகில் = கருமேகம்

சூன்றல் = தோண்டல்

சூன்றிடல் = குடைதல்

## செ

செகநாதன் = கடவுள்

செகம் = உலகம்

செகில் = தோள், தோள்மேலிடம், சிவப்பு

செகிள் = பழத்தோல்

செகுத்தல் = அழித்தல், வெல்லுதல்

செக்கணி = ஒரு கூத்து

செக்கம் = கோபம், மரணம், சிவப்பு

செக்கு = சதயநட்சத்திரம்

செங்கண்மா = கரடி

செங்கல்வரை = திருத்தணிகை மலை

செங்கழுநீர் = செங்குவளை மலர்

செங்களி = செம்பஞ்சுக் குழம்பு

செங்குவளை = ஒருவகை மலர்

செங்கீரை = பிள்ளைத்தமிழ் நூற்களில் வரும் ஒரு பருவம். செம்மையான மொழிகளைப் பேசுமாறு தாதியர் குழந்தையை வேண்டல், (அல்லது) இருகைகளை நிலத்தில் ஊன்றியும் ஒரு முழந்தாளையும் ஊன்றியும் ஒரு தாளைப் பின் நீட்டியும் தலை தூக்கி ஆடுமாறு தோழியர் குழந்தையை வேண்டல்

செங்கை = ஆதிரைநாள், கொடைகொடுக்கும் கை

செங்கோல் = நல்லரசுபொன்

செங்கோற்கடவுள் = இயமன்

செச்சை = சந்தனக்குழம்பு, நீறு, இலைவீடு, சிவப்பு, சட்டை, வெள்ளாடு

செஞ்சடையோன் = சிவன்

செஞ்சம் = நேர்மை, முழுமை

செஞ்சாலி = செந்நெல்

செஞ்சுடர் = சூரியன், அக்கினி

செஞ்சொல் = வெளிப்படைச் சொல், நல்லமொழி

செஞ்சோற்றுக்கடன் = உண்டதற்குத் திருப்பிச்செய்யும் உதவி

செடி = ஒளி, குற்றம், பாவம் புதர் தீமை, துன்பம், பூண்டு, தீய வாசனை, நெருக்கம், இழிவு

செட்டி = முருகன், வைசியன்

செட்டு = சிக்கனம்வாணிபம்

செட்டை = இறகு, தோள் பட்டை

செண்டு = சவுக்கு, குதிரை வட்டமாக ஓட அமைந்த வெளி, கூர்மை, பந்து, பூஞ்செண்டு, வையாளிவீதி

செண்டை = ஒருவாத்தியம்

செண்ணம் = பூத்தொழில், அழகிய வடிவு, நுட்ப வேலை

செண்ணுதல் = அலங்கரித்தல்

செதுகு = சருகு, தீங்கு, கூளம்

செதுகுதல் = தவறுதல்

செதுகை = தீமை

செதுக்கு = வாடல், சேறு, பூதம், பெண்குரங்கு

செதுத்தல் = சோர்தல், ஒளிமழுங்கல்

செதுமொழி = பொல்லாச் சொல்

செதும்பல் = சேற்றுநிலம், சின்னீர்

செதும்பு = சேறு, கணுக்கால் அளவு நீரோட்டம்

செத்துதல் = ஒத்தல், கருதுதல், செதுக்குதல்

செந்தளிர்ப்பு = மகிழ்ச்சி, செழிப்பு

செந்தாது = பொன்
செந்தி = திருச்செந்தூர்
செந்திரு = இலக்குமி
செந்தில் = திருச்செந்தூர்
செந்திறம் = தெளிவு, சிவப்பு
செந்தினை = கம்பு
செந்திவண்ணன் = சிவன்
செந்து = அணு, நரி, பிராணி
செந்தொடை = அம்புஎய்யும் குறி, சிவப்புமாலை
செந்நீர் = இரத்தம், புது வெள்ளம்
செபம் = தந்திரம், பிரார்த் தனை
செபித்தல் = மந்திரம் உச்ச ரித்தல், மன்றுடுதல்
செம்பட்டை = சிறகு
செப்பம் = வீதி, வழி, நெஞ்சு, நடுநிலை, கூர்மை, செவ்வை
செப்பு = சொல், விடை, சிமிழ்
செப்புப்பட்டயம் = செம்புத் தகட்டில் எழுதிய உறுதிச் சாசனம்
செமித்தல் = பொறுத்தல், பிறத்தல், சீரணித்தல்
செம்பாகம் = இனிமை, சரிபாதி
செம்பாம்பு = கேதுக்கிரகம்
செம்பால் = இரத்தம்
செம்பியன் = சோழன்
செம்புயிர் = மாக்கள் உயிர்
செம்புலம் = போர்ப்பூமி, நல்லபூமி
செம்புள் = பருந்து
செம்புனல் = இரத்தம்
செம்பூறல் = செம்பிறக்களிம்பு
செம்பொருள் = கடவுள், உண்மைப்பொருள்
செம்போத்து = கள்ளிக் காக்கை
செம்மருதல் = சந்தோஷம் அடைதல்
செம்மலர் = நெற்றிமாலை
செம்மல் = தலைமை, புதல் வன், அரசன், கடவுள், பெருமை, பழம்பூ, வலி, நீர், பெருமையில் சிறந்தோன்
செம்மாத்தல் = இறுமாத் தல், மிகக்களித்தல்
செம்மான் = சக்கிலியன்
செம்மீன் = அருந்ததி
செம்முதல் = மூடுதல், பரவு தல், விங்குதல்
செம்மை = தலைமை, ஒழுக் கம், நடுவுநிலைமை, பெரு மை, நேர்மை, செவ்வை, சிவப்பு, முறைமை
செம்மொழி = ஒருபொருள் தரும் வார்த்தை, நன் மொழி
செயந்தி = திருச்செந்தூர்
செயலறவு = வலியின்மை
செயலை = அசோகமரம்

செயல் = ஒழுக்கம், வலிமை, நிலைமை, தொழில், பொருள்தேடுகை, காவல்

செயிரியர் = வீணை முதலிய இசைக்கருவிகளை இயக்குபவர், பாணர்

செயிர் = குற்றம், கோபம், துன்பம், போர், நோய், வருந்துதல்

செயிர்ப்பு = கோபம், குற்றம்

செய் = வயல், செய்கை

செய்கால் = சாகுபடி நிலம்

செய்கை = வேளாண்மை, வேலைப்பாடு, ஒழுக்கம்

செய்தல் = ஒத்தல், இயற்றுதல், சம்பாதித்தல்

செய்தி = நன்றி, செய்கை, இயல்பு, காரியம், சங்கதி, ஒழுக்கம்

செய்ய = அழகிய, சிவந்த

செய்யல் = சேறு, ஒழுக்கம், காவல், செய்தல்

செய்யவள் = இலக்குமி

செய்யன் = சிவன்

செய்யாமொழி = வேதம்

செய்யார் = பகைவர்

செய்யாள் = இலக்குமி

செய்யுள் = விளைநிலம், பாட்டு, காவியம்

செரு = போர், ஊடல்

செருக்கம் = மாதுளை, கள் மயக்கம்

செருக்கு = கர்வம், பெருக்கம், களிப்பு

செருத்தணி = திருத்தணிகை மலை

செருத்தல் = எருமை மடி, பசுமடி

செருநர் = பகைவர், படைவீரர்

செருந்தி = கோரைப்புல்

செருந்து = இதழ்

செருமல் = செருகல்

செருமுதல் = இருமுதல், விக்குதல், அடைசுதல், நெருக்குதல்

செருவுறுதல் = ஊடுதல்

செலந்தி = புண்

செலவழுங்குதல் = பிரிதலைக் கெடுத்தல்

செலவு = பயணம், படையெடுப்பு, வழி, ஒழுக்கம், வீதி, விடை, ஓட்டம், இறந்தகாலம், பிரிவு, ஆலாபனம், பொருளழிவு

செலு = மீன், சிறை

செல் = மேகம், கடன், இடி, போதல், பற்று, வேல், கறையான், ஆகாயம்

செல்கதி = பிழைப்பு, புகலிடம்

செல்லல் = துன்பம், கெடுதல், போதல், பரத்தல்

செல்வம் = இன்பம், அழகு, பொருள், சீர், சுவர்க்கம், கல்வி, செழிப்பு [கடவுள
செல்வன் = மகன், அரசன்,
செவி = ஓர் அங்குல மழை, கேட்கை
செவிடு = ஆழாக்கில் ஐந்தி லொன்றாகிய அளவு
செவிப்புலன் = கேள்வி
செவிமடுத்தல் = கேட்டல்
செவிமறை = காதில் மறு வுள்ள எருது
செவியறிவுறூஉ } = உபதே
செவியுறை } சஞ்செய்தல்
செவியன் = முயல்
செவிலி = வளர்ப்புத் தாய், தமக்கை
செவ்வல் = செம்மண் நிலம்
செவ்வழி = நெய்தல் நிலப் பண், நல்வழி
செவ்வனம் = நேரே
செவ்வனிறை = நேரானபதில்
செவ்வி = ஏற்ற சமயம், அழகு, தகுதி, காட்சி, புதுமை, பருவம் [செம்மை
செவ்வு = இசை, நேர்மை,
செவ்வை = நேர்மை, மிகுதி
செழிதல் = வளர்தல்
செழியன் = பாண்டியன்
செழுந்து = செழிப்பு
செறல் = கொல்லல்
செறிவு = அடக்கம், நெருக்கம், மிகுதி, அடங்குதல்
25

செறிப்பு = அடக்கம்
செறு = வயல், பாத்தி, குளம்
செறுதல் = அழித்தல், கொல்லல், வெல்லுதல், தடுத்தல், கோபித்தல், பகைத்தல்
செறுத்தல் = கோபித்தல், அடக்குதல், தடுத்தல், வெறுத்தல்
செறுநர் = பகைவர்
செறுமுதல் = கனைத்தல், தேம்பியழுதல்
செறும்பு = பெருங்கோபம்
செற்றம் = கோபம்
செற்றலர் = பகைவர்
செற்றல் = கொல்லல், கேடு, வெறுத்தல், கெடுத்தல்
செற்றார் = பகைவர்
செற்றுதல் = நெருங்குதல், கொல்லுதல், பின்னுதல், பதித்தல்
செற்றை = நன்னீர் மீன், கூட்டம்
செனகன் = தந்தை, சிதை யன் பிதா
செனனி = தாய்
சென்மசாபல்யம் = பிறவி எடுத்தபலன்
சென்மபத்திரிகை = சாதகம்
சென்னம் = ஒரு பறவை
சென்னி = சோழன், தலை, பாணன்
சென்னை = சென்னபுரி, கன்னம்

சே = எருது, சிவப்பு, ஏறு, ஒரு வகை மரம்
சேகண்டி = சேமக்கலம், தெருக்காவல்
சேகரம் = கூட்டம், மாமரம், அழகு, தலை, முடி
சேகிலி = வாழை
சேகில் = சிவந்த எருது
சேகு = தழும்பு, குற்றம், பகை, திடம், சிவப்பு, ஐயம், மரவயிரம்
சேகை = சிவப்பு
சேக்குதல் = சிவத்தல், கிடத்தல்
சேக்கை = படுக்கை, கட்டில், தங்குமிடம், உடல்தழும்பு, கூடு
சேடகம் = கேடகம்
சேடல் = மல்லிகை, பவழக்கால்
சேடன் = பெரியோன், ஆதிசேடன், பாங்கன், நெய்தல் தொழில் செய்பவன், தோழன், இளையோன்
சேடி = வித்தியாதரர் உலகு, இடையர்வீதி, இளையாள், தோழி, வேலை செய்பவள்
சேடு = அழகு, இளமை, திரட்சி, நன்மை, பெருமை
சேட்சி = தூரம்
சேட்டன் = மூத்தவன்
சேட்டம் = பெருமை, தலைமை
சேட்டித்தல் = தொழிற்படுத்துதல்
சேட்டை = அக்காள், மூதேவி, தொழில், பெருவிரல், முறம், விசாகம்
சேட்படல் = தூரப்படுத்தல், எதிர்த்தல், நெடுங்காலமாதல்
சேண = உயர
சேணம் = கலணை, மெத்தை
சேணி = ஏணி, வரிசை, செடி
சேணியன் = வித்தியாதரன், இந்திரன், சேணியன்
சேண் = தூரம், ஆகாயம், தேவர் உலகம், அகலம், உயர்வு, நீளம், மலைஉச்சி, நெடுங்காலம்
சேண்டிரவர் = நெய்பவர்
சேதகம் = சிவப்பு, சேறு
சேதனம் = அறிவு, வெட்டுதல், அறிவுடைப்பொருள்
சேதனன் = ஆத்மா, அறிவுடையோன்
சேதா = சிவப்புப்பசு, பசு
சேதாரம் = மாமரம், பொன் உரை
சேதித்தல் = அழித்தல், வெட்டல்

சேதிமம்
சேதியம் } = தேவாலயம், பௌத்தப்பள்ளி

சேது = இராமேஸ்வரம், சிவப்பு, செய்கரை

சேத்தல் = சிவத்தல், எய்துதல். துயிலல், கோபித்தல், தங்கல்

சேத்திரம் = உடம்பு, வயல், தலம்

சேத்து = ஒப்பு, சிவப்பு, கருத்து

சேந்தன் = குமரன், முருகன்

சேந்தி = கள்

சேந்து = தீ, சிவப்பு, அசோகு

சேப்புதல் = தங்குதல்

சேமநிதி = புதையல்

சேமம் = இன்பம், நன்மை, அரசனிடம், சிறைச்சாலை க்ஷேமம், காவல், போற்றி வைத்த பொருள்

சேயவன் = முருகன்

சேயம் = கரை

சேயிழை = பெண், நகை

சேய் = முருகன், சிவப்பு, செம்மை, தலைவன், குழந்தை, இளமை, தூரம், நீளம், மகன், மூங்கில்

சேய்மை = நீளம், தூரம்

சேரலன் = சேர மன்னன், பகைவன்

சேரலி = நெல்

சேரார் = பகைவர்

சேரி = தெருவு, ஊர்

சேர்பு = வீடு

சேர்ப்பன் = நெய்தல் நிலத் தலைவன், வருணன்

சேர்ப்பு = கலப்பு, கடற் கரை

சேர்வு = வீடு, கூட்டம், திரட்சி, மருத நிலத்து ஊர்

சேர்வை = சேனை, கலப்பு, கட்டு

சேலம் = ஆடை, ஓர் ஊர்

சேலை = அசோகு, ஆடை

சேவகம் = யானை, துயில் இடம், வணக்கம், வீரம், தூக்கம், தொழில்

சேவல் = காவல், ஆண் குதிரை, சேறு

சேவித்தல் = வணங்குதல், வாத்தியம் வாசித்தல்

சேவை = ஊழியம், வணக்கம்

சேறல் = செல்லுதல்

சேறு = இனிமை, தேன் விழா, செறிவு, களி, சாறு, பாகு

சேனம் = பருந்து

சேனாபதி = முருகன்

சேனை = படை, ஆயுதம் கூட்டம், தெருவு

சை = கைப்பொருள்

சைகதம் = மணல், மணல் காடு

சைங்கிகேயன் = இராகு

சைசவம் = இளமை

சைதனம் = ஆத்மா

சைதன்னியம் = அறிவு, ஆத்மா, கடவுள், தத்துவ ஞானம்

சைத்தியம் = குளிர்மை, புதுக்கோயில், புத்தன் ஆலயம்

சைத்தியன் = சுக்கிரன்

சைத்திரம் = சித்திர வேலை, சித்திரைமாதம்,

சைத்திரதம் = குபேரனது வனம்

சைந்தவம் = குதிரை, சிந்து நதி

சையம் = குடகுமலை, கல், செல்வம், நியமம்

சையோகம் = புணர்ச்சி, கலப்பு, கூட்டம்

சைலம் = மலை, சேலை

சைவசாத்திரம் = சிவாகமம், சைவசித்தாந்த சாத்திரம்

சைவசித்தாந்தம் = சைவ ஆகம முடிவாகிய மதம், சைவ சமயத்தின் முடிந்த முடிவு இன்னது எனக் கூறும் சமயக் கொள்கை

சைவலம் = பாசி, தாமரைத் தண்டு

சைவம் = இளமை, சிவ மதம்

சைனன் = அருகன்

## சொ

சொகினம் = சகுனம்

சொக்கம் = அழகு, தூய்மை, சுவர்க்கம்

சொக்கன் = சிவன், பொன்னுடையோன், அழகன்

சொக்கு = அழகு, பொன், மயக்கு

சொங்கு = குற்றம்

சொச்சம் = குற்றமின்மை, மிச்சம், குறை

சொடக்கு = கைந்நொடிப் பொழுது, சோம்பல்தன்மை

சொட்டுதல் = வஞ்சித்தல், அபகரித்தல், துளித்தல், கொத்துதல்

சொட்டை = குழிவு, வளைதடி, பள்ளம்

சொண்டு = செருக்கு, பறவை மூக்கு, குற்றம், உதடு

சொம் = உடைமை

சொரிதல் = சுழலல், பொழிதல், உதிர்தல்

சொருபஞானம் = பரம ஞானம்

சொருபம் = அழகு, உடம்பு, சாயல், வடிவு, பரம்

சொர்ணம் = பொன்

சொலவு = சொல்லுதல், பழமொழி

சொலி = மரப்பட்டை

சொலித்தல் = ஒளிர்தல், எரிதல், உரித்தல், போர்த்தல்

சொல் = நெல், புகழ், மொழி, வாக்கியம், சரஸ்வதி

சொல்லானந்தம் = சொற்குற்றம்

சொல்லெச்சம் = சொல் குறைந்து நிற்பது

சொல்லேருழவர் = புலவர், மந்திரிகள்

சொல்வளம் = சொல்நயம், சொல் சாமர்த்தியம்

சொல்விளம்பி = கள்

சொற்செலவு = செல்வாக்கு, பரிந்துபேசுதல்

சொற்புள் = காகம்

சொற்றல் = சொல்லல்

சொன்றி = சோறு, சுக்கு

சொன்னகாரர் = தட்டார்

சொன்மாலை = புகழ்மாலை

சொன்னம் = பொன்

சொன்னல் = சோளம்

# சோ

சோ = வாணாசூரன் நகர், மதில், அரண்

சோகம் = சோம்பல், திரட்சி அசோகு, ஒட்டகம், அது நான் அவன் நான் என்னும் தத்துவம்

சோகம்பாவனை = பரம் பொருள் நான் என்று பாவித்தல்

சோகாத்தல் = துன்பமுறல்

சோகாப்பு = துயரம்

சோகி = பலகறை, பிடாரன்

சோகு = பிசாசு

சோங்கு = மறத்தல், மலைச்சோலை, மரக்கலம், நாரை

சோசித்தல் = சோர்வடைதல், துக்கப்படல், வற்றுதல்

சோடகம் = பதினாறு
சோடணம் = உலர்தல்
சோடித்தல் = வற்றுதல்
சோடு = ஒப்பு, கவசம், ஓர் எடை
சோடை = வறட்சி, அறிவிலி, ஒருநோய், விருப்பம், மகிழ்ச்சி, கடமை, வண்டிப்பாதை
சோணகிரி = திருவண்ணாமலை
சோணங்கி = நாய்
சோணம் = தீ, சிவப்பு, பொன், திருவண்ணாமலை
சோணாடு = சோழநாடு
சோணிதம் = சிவப்பு, இரத்தம்
சோணை = காதின் அருகு, ஓர் ஆறு
சோணை = திருவண்ணாமலை, ஒரு நதி
சோதகம் = துளி, மழைவிடல் கழிக்கும் தொகை
சோதகன் = கல்விமான், ஆசிரியன்
சோதரம் = உடன்பிறப்பு
சோதனி = துடைப்பம், செத்தை
சோதி = சிவன், ஒளி, அருகன், சூரியன், சோதிமரம், கிரணம், தீபம், நட்சத்திரம், கடவுள் ஞானம்
சோதிநூல் = சோதிட நூல்
சோத்திரம் = அஞ்சலி, தோத்திரம்
சோத்திரியம் = கேள்வி
சோத்திரம் = காது
சோபம் = மூர்ச்சை, துக்கம், அழகு, ஒளி, கள்
சோபனம் = பல்லாண்டு, சுபம், நன்மை, வாழ்த்து, ருதுசாந்தி
சோபானம் = கற்படி, படி, தாழ்வாரம்
சோபிதம் = அலங்கரிக்கப்பட்டது
சோபை = அழகு, ஒளி
சோமசுந்தரன் = உமையோடு கூடிய அழகிய சிவபெருமான்
சோமதிக்கு = வடதிசை
சோமபானம் = மதுபானம்
சோமம் = அமுதம், கள், ஒரு யாகம்
சோமன் = சந்திரன், சிவன், வஸ்திரம்
சோமேசன் = சிவன்
சோரம் = திருட்டு, வஞ்சனை
சோரி = இரத்தம், மழை
சோறு = மோட்சம், பரணி
சோழகன் = சோழநாட்டான்
சோவிகை = பிச்சைக்காரன் பை
சோனகர் = யவனர்
சோனம் = மேகம்

சோழகன் = ஒருவகைக் காட்டுச் சாதியான், கள்ளர்க்குரிய பட்டப்பெயர்

சோனம் = மேகம்

சோனுமாரி = விடாமழை

சோழகம் = தென்காற்று

சோனை = விடாமழை, திருவோணநாள், கார்மேகம்

## சௌ

சௌக சூத்திரன் = பள்ளி எழுச்சி பாடுபவன்

சௌகதன் = புத்தன்

சௌகந்திகம் = குவளைமலர்

சௌகம் = கிளி, துக்கம்

சௌகரிகன் = வேடன்

சௌசம் = சுத்தம் செய்தல்

சௌசன்யம் = சிநேகம், பட்சம், அன்பு, இனியகுணம்

சௌகி = தையற்காரன்

சௌசேயன் = வண்ணான்

சௌடீரியம் = வீரம்

சௌண்டிகர் = கள்விற்பவர்

சௌதம் = மாளிகை, அரண்மனை, சாலை, வெள்ளி, மலிவு

சௌதாயம் = சீதனம், பந்தயப்பொருள், நன்கொடை

சௌந்தரி = பார்வதி, அழகி

சௌபலன் = சகுனி

சௌப்திகம் = தூக்கத்தில் நிகழும் செய்தி, உறங்குவோர் கொலை

சௌமியம் = அழகு, சாந்தம்

சௌமியன் = சிவன், புதன், சாந்தன்

சௌரகன் = நாவிதன்

சௌரமானம் = சூரியன் சஞ்சாரத்தால் கால அளவு செய்தல்

சௌரம் = சூரியமாதம், மயிர் வாங்குதல், குடுமி வைத்தல்

சௌரி = கன்னன், திருமால்

சௌரியம் = களவு, வீரம்

சௌலப்பியம் = எளிதான தன்மை

சௌளம் = குடுமி வைத்தல்

## ஞ

ஞஞ்ஞை = மயக்கம்

ஞண்டு = நண்டு

ஞப்தி = அறிவு

ஞமலி = நாய், மயில், கள்

ஞமன் = யமன், தராசுக்கோல்

ஞயம் = நயம், இனிமை

ஞரலுதல் = முழங்குதல்

ஞலவல் = மின்மினிப்பூச்சி, கொசுகு

ஞரு = மயில் குரல்

ஞாங்கர் = பக்கம், கரை முன், வேல், மேல் இடம், இனி, அங்கு

ஞாஞ்சில் = கலப்பை, மதில் உறுப்பு

ஞாட்பு = போர், போர்க்களம் வலி, பாரம், கனம் கட்டடம்

ஞாண் = கயிறு, வில் நாண்

ஞாதம் = அறிவு, அறியப் பட்டது

ஞாதா = அறிகிறவன்

ஞாதிகள் = தாயத்தார், பங்காளிகள்

ஞாதுரு = அறிகிறவன், அறிவு

ஞாத்தல் = கட்டுதல், பொருந்துதல்

ஞாபகம் = அறிவு, நினைவு

ஞாபதம் = போதித்தல்

ஞாயர் = தாய்மார்

ஞாயில் = மதில் உறுப்பு, மதில்

ஞாயிறு = சூரியன், ஞாயிற்றுக் கிழமை

ஞாய் = தாய்

ஞாலம் = பூமி, உலகம், வித்தை, உயர்ந்தோர்

ஞாலுதல் = சாய்தல், முழங்கல், தொங்குதல்

ஞாழல் = குங்குமமரம், வைரம் கோங்கு மரம், புலி நகக் [கொன்றை

ஞாழ் = யாழ்

ஞாளம் = தண்டு

ஞாளி = கள், நாய்

ஞாளியூர்த்தி = வைரவன்

ஞாறுதல் = தோன்றுதல், மணம் வீசுதல்

ஞாற்சி = தொங்குதல்

ஞானசாதனம் = ஞானப் பயிற்சி

ஞானதிட்டி = ஞானக்கண்

ஞானநாயகன் = சிவன்

ஞானபுத்திரன் = சீடன்

ஞானம் = அறிவு, தெளிவு

ஞானவல்லி = உமை, தத்துவ நூல்

ஞானன் = கடவுள், பிரமன்

ஞானார்த்தம் = ஞானபரமான பொருள்

ஞானி = பிரமன், அருகன், பேரறிஞன்

ஞானியண்டம் = கோழி முட்டை

ஞானேந்திரியம் = அறிகருவி, மெய், வாய், கண், மூக்கு செவிகள்

ஞான்று = காலம், நாள்

## ஞி

ஞிமிர்தல் = ஒலித்தல், நிமிர் தல்

ஞிமிறு = பொன்வண்டு, தேனீ

## ஞெ

ஞெகிழம் = சிலம்பு

ஞெகிழி = சிலம்பு, தீக்கடை, கோல், நெருப்புக்கொள்ளி, தீ, விறகு

ஞெகிழ்தல் = நெகிழ்தல், சுழல்தல், அலையல், மலர் தல், மனம் இளகுதல், உருகுதல்

ஞெண்டு = நண்டு

ஞெண்டுதல் = கிண்டுதல்

ஞெப்தி = நினைவு

ஞெமர்தல் = பரத்தல்

ஞெமலுதல் = திரிதல்

ஞெமிய = மறைய

ஞெமிர்தல் = முறிதல், பரத் தல், நிறைதல், தங்கு தல், முற்றுதல்

ஞெமிர்த்தல் = ஒடித்தல்

ஞெமுங்குதல் = அழுந்தல்

ஞெரல் = ஒலி

ஞெரிதல் = முறிதல்

ஞெலிகோல் = தீக்கடைக் கோல்

ஞெலிதல் = தீக்கடைதல், குடைதல்,

ஞெலுவன் = தோழன்

ஞெளிர் = உள் ஓசை

ஞெள்ளல் = சோர்வு பள்ளம், மேன்மை, வீதி தவறு, மிகுதி

## ஞே

ஞேயம் = அறியப்படுவது நட்பு, கடவுள்

ஞொள்கள் = மெலிதல், அஞ்சுதல், சோம்புதல் குலைதல்

## ஞொ

ஞொள்குதல் = இளைத்தல், அலைதல், சோம்புதல், குத்தல்

தகடு = இலை வடிவு, இதழ்,
தகண் = தட்டு, தழும்பு, தடை
தகம் = சூடு,
தகரம் = மயிர்ச் சாந்து, ஒரு மரம், இருதயம், ஈயம்
தகர் = மேட்டு நிலம், செம் மறியாடு, பூமி, பொடி
தகர்தல் = உடைதல், விழு தல்
தகல் = தகுதி, தடை
தகவல் = உதாரணம்
தகவு = கிருபை, குணம், தகுதி, அறிவு, தெளிவு பெருமை, நடுநிலைமை, வலிமை, கற்பு
தகளி = அகல்
தகழி = உண்கலம், அகல்
தகனகிரியை = ஈமச்சடங்கு
தகனன் = அக்கினி
தகாமை = ஒவ்வாமை
தகுணிதம் = ஒரு தோற் கருவி
தகுதி = ஒழுக்கம், குணம், உரிமை நடுவு நிலைமை, பொறுமை
தகுவர் = அசுரர்
தகுவியர் = அரக்கமகளிர்
தகை = அழகு, அன்பு, அருள், குணம், தகுதி, தாகம், மேம்பாடு, பெரு மை, தடை, கூறுபாடு, மாலை, மிகுதி, உரிமை, பொருத்தம், தன்மை, நன்மை, நிகழ்ச்சி
தகைதல் = தடுத்தல், பிடித் தல், அடக்குதல், ஒத்தல்
தகைத்தல் = சுற்றுதல், தடுத்தல், கட்டுதல், அரி தல், வாட்டுதல், களைத் தல்
தகைத்து = தன்மையுடை யது
தகைப்பு = மாளிகை, படை வகுப்பு, மதில் சுற்று
தகைமை = அழகு, குணம், தகுதி, பெருமை,
தக்கரம் = களவு, வஞ்சகம்
தக்கன் = கள்வன், சமர்த் தன்
தக்கார் = நடுநிலைமையுடை யோர், நிபுணர், தகுதியு டையவர்
தக்கிணம் = தெற்கு, வலப் பக்கம்
தக்கிரம் = மோர்
தக்கை = பம்பை, வாத்தி யம், காதிடு தக்கை
தக்கோலம் = வால் மிளகு, தாம்பூலம்,

தங்கலர் = பகைவர்
தச்சகம் = பத்து
தசக்கிரீவன் = இராவணன்
தசபலன் = புத்தன்
தசமஸ்கந்தம் = பத்தாவது பாகம்
தசமுகன் = இராவணன்
தசம் = பத்து
தசனம் = கவசம், பல், மலை முடி
தசாங்கம் = அரசர்க்குரிய அங்கங்கள் பத்து. அவை ஊர், யானை, கொடி, செங்கோல், நாடு, குதிரை, மலை, மாலை, முரசு, ஆறு
தசாவதாரம் = திருமால் எடுத்த பத்து அவதாரங்கள். அவை மச்சாவதாரம், கூர்மாவதாரம், வராகவதாரம், வாமனவதாரம், நரசிம்மாவதாரம், பரசுராமாவதாரம், தசரதராமாவதாரம், பலராமாவதாரம், கிருஷ்ணாவதாரம், கற்கி அவதாரம்
தசும்பு = குடம், பொன், விமான கலசம்
தசை = நிலை, மாமிசம்
தஸ்கரம் = களவு
தஞ்சம் = அடைக்கலம், எளிமை, தாழ்மை, துணை, பற்றுக்கோடு புகலிடம்
தட = பெருமை
தடக்கை = வளைந்தகை
தடங்கண் = பெரியகண்
தடத்தம் = அருகில் இருப்பது, கரையில் இருப்பது, நடுநிலை, கிருத்திய நிலை, பொருட்குளதாம், பொது இயல்பு
தடஸ்தன் = ஞானி, பாரபட்சம் இல்லாதவன்
தடம் = குளம், மலை, வழி, கரை, பெருமை, அகலம், வளைவு, வரம்பு, மனை வாயில், மூங்கில் தாழ்வாரம், மணல் குன்று
தடயம் = ஆபரணம்
தடரல் = தடவுதல், வளைவு
தடவு = பெருமை, தூபக்கால், வளைவு, ஓமகுண்டம், சுனை, ஒரு மரம்
தடவுதல் = வீணை வாசித்தல், வருடுதல்
தடவுவாய் = மலைச்சுனை
தடறு = ஆயுத உறை, பறை
தடா = பெருமை, மிடா
தடாம் = வளைவு
தடாரி — உடுக்கை, பம்பை,
தடி = சிறுவயல், மாமிசம், தண்டு, பற்றுக் கோடு, வில், உடும்பு, கருவாடு
தடிதல் = குறைத்தல் வெட்டுதல், அழித்தல்
தடித்து = மின்னல்
தடிநி = நதி

தடையம் = கத்திப்பிடி
தட்சணம் = உடனே
தட்சிணம் = தெற்கு, வலப் பக்கம்
தட்சிணாசலம் = பொதிகை மலை
தட்சிணாயனம் = சூரியன் தென் திசைப்பக்கம் பயணம் செய்யும் வீதி
தட்டம் = உண்கலம், பல், பெரும்பூ, கச்சு, பாம்புப் பல் தாங்குமிடம், நீர்நிலை,
தட்டான் = கிழக்குரங்கு, தட்டான்
தட்டி = காவல், கேடகம், கதவு, வெற்றிலைக்கட்டு, அரைச்சல்லடம்
தட்டு = குற்றம், தந்திரம், தேர்நடு, முறம், வட்டம், திங்கு
தட்டுளுப்பு = தடுமாற்றம்
தட்டை = கிளியோட்டும் கருவி, அரிதாள் தினைத் தாள், மூங்கில், கரடிகைப் பறை
தட்பம் = குளிர்ச்சி, அன்பு
தணக்கு = நுணா, வால்
தணத்தல் = நீங்கல், பிரிதல், போதல்
தணிக்கை = மேல்போர்வை
தணிகை = திருத்தணிகை
தணியல் = கள்
தணிவு = கீழ்மை, குறைவு
தண் = குளிர், நீர், அருள்
தண்டகம் = முதுகெலும்பு தண்டகாரண்யம்
தண்கதிர், தண்சுடர் = சந்திரன்
தண்டதரன் = அரசன், யமன்
தண்டநாயகன் = நந்திகேஸ்வரன், சேனாதிபதி
தண்டபாணி = பழனியாண்டவன், யமன்
தண்டமிழ் = இனிய தமிழ்
தண்டம் = குதிரை, உடம்பு, படை, யானை செல்வழி, வணக்கம், நஷ்டம், வலை தடி, ஊன்றுகோல்
தண்டயம் = பல்லக்குத் தண்டு
தண்டலர் = பகைவர்
தண்டலை = சோலை, தோட்டம்
தண்டல் = அமைதல், தணிதல், நீங்கல்
தண்டவாளம் = உருக்கு இரும்பு
தண்டாமை = நீங்காமை
தண்டி = சண்டேசுர நாயனர், வானப் பிரஸ்தன், நிறைவு
தண்டிகை = பல்லக்கு
தண்டியம் = தண்டு
தண்டு = ஓடம், பல்லக்கு, தாள், சேனை, தடி, வீணை, கதை

தண்டுதல் = மனமமைதல், வருந்துதல், தணிதல், நீங்குதல், இணைத்தல்

தண்டுலம் = அரிசி

தண்டை = வால், மாதர் கால் அணி, கேடகம்

தண்ணடை = நாடு, பசிலை மருத நிலத்தூர்

தண்ணம் = ஒருகண் பறை, மழு, குளிர்

தண்ணவன் = சந்திரன்

தண்ணளி = கிருபை

தண்ணுமை = மத்தளம்

தண்பணை = மருத நிலம்

தண்பதம் = புது நீர், தாழ் நிலை

தண்மை = குளிர்மை, எளிமை, சாந்தம், புல்லறிவு, இன்பம், மென்மை, தாழ்வு

ததரல் = மரப்பட்டை

ததர் = அடர்த்தி, கொத்து, சிதறல்

ததர்த்தல் = வருத்துதல்

ததா = அப்படி

ததாகதன் = புத்தன்

ததாகாரம் = அந்த ரூபம்

ததாஸ்து = அப்படியேயாகுக

ததி = தயிர், கூட்டம், சமயம், பலம்

ததியர் = அடியார்

ததியோதனம் = தயிர்ச்சாதம்

ததும்புதல் = முழங்குதல், நிறைதல்

ததைதல் = நெருங்கல், சிதறல்

தத் = அது, ஒற்றுமை

ததைந்த = செறிந்து மலர்ந்த

தத்தம் = ஈகை

தத்தல் = தாண்டுதல்

தத்து = சுவீகாரம், ஆபத்து, தவறு

தத்துவஞானம் = உண்மை ஞானம்

தத்துவப்பொருள் = கடவுள்

தத்துவமசி = அது நீயாகிறாய், அது நீ

தத்துவம் = உண்மை, இயற்கை, பொருள்

தத்துவாதீதன் = கடவுள்

தத்துறுதல் = வருத்தப்படுதல்

தத்தை = கிளி, முன் பிறந்தவள்

தந்ததாவனம் = பல்சுத்தி

தந்தம் = யானைக் கொம்பு, பல், மலைமுகடு

தந்தாவளம் = யானை

தந்தி = யானை, யாழ், நரம்பு, பாம்பு

தந்திமுகன் = விநாயகர்

தந்தியுரியோன் = சிவன்

தந்திரம் = செல்வம், கல்வி நூல், தொழில், உபாயம், பிரதானம், படை, வீடு, காரணம், ஆகமம்

தந்திரி = மந்திரி, யாழ் நரம்பு, படைத்தலைவன்

தந்து = கயிறு, தந்திரம், நூல், கல்வி

தந்துரை = பாயிரம்

தந்துவாயன் = சிலம்பி, நெய்பவன்

தந்துவை = மாமியார்

தபதி = தச்சன், சிற்பி

தபனம் = வெப்பம், தாகம்

தபனன் = அக்கினி, சூரியன்

தபனியம், தபனீயம் = பொன்

தபுதல் = சாதல், கெடுதல்

தபுதாரநிலை = மனையாள் இறந்த நிலை

தபுதி = அழிவு

தபுத்தல் = கெடுத்தல்

தபோநிதி = முனிவன்

தமசு = ஆணவமலம், இருள்

தமம் = இராகு, இருள், நிக்கிரகம், புறக்கரணம் அடக்கல்

தமரகம் = சுவாசக்குழல்

தமரம் = இசை, ஒலி

தமரிடுதல் = துளைத்தல்

தமருகம் = உடுக்கை

தமர் = உறவினர், து... சுற்றம்

தமனம் = மருக்கொழுந்து

தமனியம் = பொன்

தமாலம் = இலை, பச்சி... மரம், பச்சிலைக்கொடி

தமி = தனிமை

தமித்தல் = தனித்தல்

தமியன் = ஏழை, தனித்... வன்

தமிழ் = இனிமை, நீர்மை, தமிழ்மொழி, தேவாரம்

தமிழ்நாடன் = பாண்டியன்

தமிழ்நாடு = பாண்டிநாடு

தமிழ்மலை = பொதிகைமலை

தமிழ்முனி = அகத்தியன்

தமிழ்வாணர் = தமிழ்ப்புல... வர்

தமை = அடக்கல், புறக்கரணம்

தமோகுணம் = காமகோப மயக்கக் குணம்

தம்பதி = புருஷன்மனைவி

தம்பம் = தூண், கவசம், வஞ்சனை

தம்பித்தல் = அசையாதிருத்தல்

தம்பலம் = தாம்பூலம், வெற்றிலை

தம்பிராட்டி = தலைவி

தம்பிரான் = பசுபதி, கடவுள், தலைவன், உயிர்நாயகன்

தம்மவன் = உறவினன்
தம்மனை = தாய்
தம்மான் = தலைவன்
தம்மில்லம் = மயிர்முடி, தம் வீடு
தம்முன் = அண்ணன்
தம்மை = தாய்
தம்மோய் = தாய்
தயக்கம் = விளக்கம், ஒளி விடுகை, அசைவு, வாடுதல்
தயங்குதல் = விளங்குதல், அசைதல், திகைத்தல்
தயித்தியர் = அசுரர்
தயினியம் = எளிமை
தரக்கு = புலி
தரங்கம் = அலை, கடல், ஈட்டி, மனக்கலக்கம்
தரங்கிணி = ஆறு
தரணம் = தரித்தல், கடத்தல்
தரணி = சூரியன், ஓடம், பூமி, மலை, வைத்தியன்
தரம் = உயர்வு, தலை, வகை, விதம், முறை, வலி, மலை, வீரம், மட்டம், வரிசை
தரவு = கட்டளை, தருதல்
தரளம் = முத்து, அசைவு, ஒளி
தரா = செம்பும் காரீயமும் கலந்த உலோகம்
தராதரம் = உயர்வு தாழ்வு
தராதலம் = பூமி
தராபதி = அரசன்
தராய் = மேட்டுநிலம்
தராவலயம் = பூகோளம்
தரிசனம் = அறிவு, கண்ணாடி, கனவு, காட்சி, வழிபாடு, சாத்திரம், மதக்கொள்கை
தரிசனவேதி = காட்சியில் இரும்பைப் பொன்னாக்கும் மருந்து
தரிசு = விளைவு அற்றநிலம், பரல்கல்
தரித்தல் = பொறுத்தல், தங்கல், அணிதல், தாமதித்தல், தாங்குதல்
தரித்திரி = பூமி
தரிப்பு = பொறுத்தல்
தரியலர் } = பகைவர்
தரியார் }
தரு = மரம், கற்பகம்
தருகை = ஈகை
தருக்கம் = மேம்பாடு
தருக்கு = அகங்காரம், மகிழ்ச்சி
தருக்குதல் = வருந்துதல் உடைத்தல், அலங்கரித்தல், மகிழ்தல்
தருணம் = இளமை, சமயம், புதுமை
தருணன் = காளை
தருணி = இளம்பெண்
தருப்பணம் = ஓம விறகு, கண்ணாடி

தருப்பம் = கர்வம், அகங்காரம்
தருமசமஸ்காரம் = அநாதைப் பிணத்தைச் சுடுதல்
தருமசாஸ்திரம் = ஸ்மிருதி
தருமதேவதை = இயமன்
தருமபுரம் = இயமன் உலகு
தருமம் = இயல்பு, நீதி, நல்வினை, அறம், கடமை,
தருவி = அகப்பை [சகை
தரை = பூமி
தர்ச்சனி = சுட்டுவிரல்
தலம் = இலை, பூமி, இடம், க்ஷேத்திரம்
தலைஇ = பெய்து
தலைகவிழ்தல் = நாணுதல்
தலைக்கடை = முதல்வாயில்
தலைக்கோடு = தலைப்பாகை
தலைக்கோலம் = தலையணி
தலைச்சாத்து = தலைப்பாகை
தலைத்தலை = இடம்தோறும், ஒவ்வொருவரும்
தலைமக்கள் = மேன்மக்கள், வீரர்
தலைமயங்குதல் = கலத்தல், கூடுதல், பெருகுதல், கெடுதல்
தலைமாடு = தலைப்புறம்
தலைய = பெய்ய
தலையல் = முதல்மழை, தூரல்
தலையளி = பேரன்பு, முகமலர்ந்து கூறுதல்
தலையளித்தல் = காத்தல், பேர் அன்பு செய்தல்
தலையாயார் = பெரியோர்
தலையாரி = காவற்காரன்
தலைவன் = இறைவன், அரசன்
தலைவி = மனைவி
தவ = மிக
தவசம் = தானியம், பலபண்டம்
தவண்டை = பெருடுக்கை
தவத்தல் = நீங்குதல்
தவம் = நோன்பு, புண்ணியம், கற்பு, தோத்திரம்
தவர் = வில், துளை, முனிவர்
தவல் = குறைவு, பிழைபடுதல், குற்றம், கெடுதல், இறத்தல், வறுமையால் வாடல்
தவளச்சத்திரம் = வெண்குடை
தவளம் = கர்ப்பூரம், அழகு, வெண்மை
தவளிதம் = வெண்மை
தவறுதல் = இறத்தல்
தவனம் = வெப்பம்,
தவனன் = சூரியன்,
தவாநிலை = வழுவாநிலை
தவிசு = ஆசனம், தடுக்கு, பீடம், மெத்தை

தவிப்பு = தாகம், இளைப்பு
தவிர்தல் = வெறுத்தல், ஒழிதல், விலகுதல், தணிதல்
தவ்வி = அகப்பை, தோசை திருப்பி
தவ்விதல் = ஒடுங்குதல், பாய்தல்
தவ்வை = அக்காள், மூதேவி, தாய்
தழங்குதல் = ஒலித்தல்
தழல் = தீ, மனம், கவண், கிளி ஒட்டும் கருவி
தழிச்சுதல் = தழுவுதல், புகுதல்
தழிஞ்சி = தோற்றவர்மேல் ஆயுதம் செலுத்தாத பண்பு
தழூவணி = குரவைக்கூத்து
தழை = இலை, தளிர், பீலிக் குடை, மயில் இறகு, மாலை
தழைத்தல் = தளிர்த்தல், வளர்த்தல், வாழ்ந்திருத்தல்
தளகர்த்தன் = சேனைத்தலைவன்
தளபதி = சேனாபதி
தளப்பு = கேடு
தளம் = இலை, பூ இதழ், சாந்து, படை, உப்பரிகை முல்லை
தளம்பு = மதகு
தளவம் = முல்லை,
தளவாடம் = கருவிகள்
தளவாய் = படைத்தலைவன்
தளவு = முல்லை, யானைவாய்
தளி = கோயில், குளிர், துளி, மேகம், விளக்குத் தாழி
தளிகை = உண்கலம், பிரசாதம், பீடம், உணவு
தளிமம் = அழகு, மெத்தை, வாள்
தளியல் = பெண்
தளிவம் = தகடு
தளை = ஆண் மயிர், கட்டு, கால் விலங்கு, கால் சிலம்பு, கயிறு, வயல், வரம்பு
தளைப்படுதல் = சிறைப்படுதல், கட்டுப்படுதல்
தளையவிழ்தல் = பூமலர்தல்
தள்ளல் = பொய்
தள்ளை = தாய்
தறி = நாண், ஆப்பு, நெசவு இயந்திரம், முளைக் கோல்
தறிகை = கோடரி
தறித்தல் = வெட்டுதல்,
தறுகணாளன் = சூரன்
தறுகண் = அஞ்சாமை கொல்லுகை, கொடுமை
தறுவுதல் = குறைதல்

தறைதல் = இறுக்குதல், தட்டையாதல்

தற்கரன் = கள்வன்

தற்சனி = சுட்டுவிரல்

தற்பதம், தற்பரன் = கடவுள்

தற்பம் = கருவம், பாவம், மேல்நிலை, மனைவி, துயிலிடம்

தற்போதம் = தன்னறிவு

தற்றுதல் = இறுக உடுத்தல்

தனகு = மனமகிழ்ச்சி

தனஞ்சயன் = அருச்சுனன், தீ, ஒரு வாயு

தனாதன் = குபேரன்

தனபதி = குபேரன்

தனம் = தன்மை, பொன், சம்பத்து, வருத்தம் பசுக் கன்று, முலை, சந்தனம்

தனயன் = மகன்

தனயை = மகள்

தனுநிபதி = குபேரன்

தனி = ஒப்பின்மை, தனிமை

தனிகன் = செல்வன்

தனிகம் = கடன்

தனிட்டை = அவிட்டம்

தனிதம் = முழக்கம்

தனிநிலை = ஆய்த எழுத்து

தனிமுதல் = கடவுள்

தனிமை = உவமை இன்மை

தனியன் = தனிப்பாடல்

தனிவீடு = மோட்சம்

தனு = ஓர் இராசி, உடல், சிறுமை, வில்

தனுசன் = மகன், அசுரன்

தனுசு = வில்

தனை = அளவு, எண்,

தன்மாத்திரை = பொறிகளின் மூலம். சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் என்னும் மூலப் பொருள்கள்

தன்மேம்பாட்டுரை = தற் புகழ்ச்சி,

தன்வழி = தன்பொறுப்பு,

தன்னம் = அற்பம், மரக் கன்று

தன்னியம் = முலைப்பால்

தன்னியன் = தனவான், தீவினை நீங்கினவன்

தன்னுதல் = பொருந்துதல், சிறிது சிறிதாக எடுத்தல், மெல்லத் தள்ளுதல்

தன்னை = தாய், தமயன், தமக்கை

தன்னையறிதல் = ஆத்ம தரிசனம்.

தா = பரப்பு, கொடு, கேடு, பகை, வருத்தம், வலி, பாய்தல், குற்றம்

தாகம் = ஆசை, எரிவு

தாகன் = தியாகன்

தாக்கணங்கு = இலக்குமி, காமநோய்தரும் தேவதை

தாக்கு = போர், இடம், அடி, தடி, மிகு பாரம்

தாங்கல் = நீர் நிலை, பூமி, துன்பம், சகிப்பு

தாங்கி = ஆதாரம், பூண்

தாங்குதல் = அணைத்தல் பொறுத்தல், படகு தள்ளுதல், விலக்கிப்போதல்

தாசரதி = இராமன்

தாசன் = செம்படவன், அடிமையாள்

தாசி = பரணிநாள், அடிமை, நாடகக்கணிகை

தாசேரம் = ஒட்டகம்

தாடங்கம் = காதணி,

தாடனம் = அடித்தல், தட்டுதல்

தாடாண்மை = முயற்சி

தாடு = வலிமை தலைமை,

தாட்சாயணி = தட்சன்மகள், பார்வதி

தாட்டானை = கிழக்குரங்கு

தாட்டி = தைரியம், சாமர்த்தியம்

தாட்டிகம் = அகந்தை, பலம்

தாட்படை = கோழி

தாணு = நிலைபேறு, தாவரம் சிவன், தூண், மலை

தாண்டவம் = கூத்து

தாண்டவராயன் = நடராசன்

தாதகி = ஆத்திமரம்

தாதசி = தவப்பெண்

தாதுமார்க்கம் = தொண்டு வழி

தாதன் = தந்தை, அடிமை

தாதா = பாட்டன், பிரமன், வள்ளல்

தாதாத்மியம் } = ஒருமைப்பட்டிருத்தல்
தாதான்மியம் }

தாது = காவிக்கல், சுக்கிலம், உலோகம், நாடி, தேன், சொல்லின் மூலம், சக்தி, நீறு, பகுதி, பூந்தாது, பொடி, சாணம்

தாதை = தந்தை, பிரமன் பாட்டன்

தாத்திரி = பூமி, தாய்

தாபசன் = தவசி

தாபதநிலை = கைம்மை நோன்பு

தாபதம் = முனிவர் வாழ்க்கை

தாபதர் = முனிவர்

தாபந்தம் = வேதனை

தாபம் = துன்பம், வெப்பம் காடு
தாமசம் = இருள்
தாமணி = மாட்டுத்தும்பு, கயிறு
தாமம் = ஊர், இடம், யானை, ஒளி, கயிறு, ஒழுங்கு, சார்பு, பிறப்பு, பூ, மலை, மணிமாலை, கொன்றை, பரமபதம்
தாமரசம் = பொன், தாமரை
தாமரைக்கண்ணன் = விஷ்ணு
தாமனி = பசுக்கட்டும்கயிறு
தாமன் = சூரியன்
தாமிரம் = செம்பு
தாமோதரன் = திருமால்
தாம்பு = கயிறு
தாயகம் = ஈகை, அடைக்கலம்
தாயம் = உரிமை, இடம் நாடு, தந்தை வழி வந்த சுற்றம், சூதாடு கருவி, பிதிராச்சிதம்
தாரகம் = பிரணவம், ஆதாரம், நட்சத்திரம்
தாரகன் = தாங்குபவன்
தாரகாபதி = சந்திரன்
தாரகை = நட்சத்திரம், கண் மணி
தாரணம் = தரித்தல், நிலைத் திருத்தல்
தாரணி = பூமி, மலை, இய மன்
தாரணை = தரித்தல், உறுதி, புலனடக்கல்
தாரம் = நா, அரும்பண் டம், பிரணவம், மனைவி, வெள்ளி, பார்வை, ஒரு வீணைநரம்பு, முத்து
தாரா = நட்சத்திரம்
தாராகணம் = நட்சத்திரக் கூட்டம்
தாராதரம் = மேகம்
தாராபதி = சந்திரன்
தாரி = வழி, தாங்கியிருப்ப வன், முறைமை, வண் [டொலி
தாரு = மரம்
தாருகாரி = முருகன், தாருக னைக் கொன்றவன்
தாருணம் = அச்சம், கூச் சம், துக்கம்
தாருண்ணியம் - இளம்பருவம்
தாரை = கண்மணி, காளம், கீர்த்தி, கூர்மை, தேர் ஓடல், நீர் ஒழுக்கு, பெரு மழை, நட்சத்திரம், கூத் தற்பனை, குருபத்னி
தாரைவார்த்தல் = தத்தம் பண்ணி நீர்விடுதல்
தார் = மாலை, பூ, முன் சேனை, கயிறு, ஒழுங்கு, குலை, உபாயம், பிடரிமயிர்
தார்க்கியன் = கருடன்

தாலகேதனன் = பலராமன்

தாலபத்திரம் = பனையோலை

தாலம் = நாக்கு, பனை, பூமி, யானைக்காது, உண்கலம், தேன், தட்டு

தாலவட்டம் = பூமி, யானை வால்

தாலவிருந்தம் = விசிறி, பேர் ஆலவட்டம்

தாலிபுலாக நியாயம் = ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்னும் நியாயம்

தாலு = நா

தாவகம் = காட்டுத்தீ

தாவடம் = உருத்திராக்க மாலை

தாவடி = போர், பிரயாணம்

தாவம் = காடு, காட்டுத்தீ, துன்பம், தாவரம், வெப்பம், அவசரம், நிலையியற் பொருள், உடல், மரம், மலை

தாவளம் = இடம், ஊர்

தாவளி = கம்பளி

தாவனம் = சுத்தி

தாவினை = நன்மை

தாவு = இளைப்பாறுமிடம், வலிமை, உறைவிடம், செலவு, கேடு, பாய்ச்சல்

தாவுதல் = குறைதல், பரத்தல், தாண்டுதல்

தாழி = குடம், கடல், சட்டி பரணி

தாழை = தென்னை, தாழை மரம், தெங்கம்பாளை

தாழ்தல் = விரும்புதல், வணங்குதல், தங்குதல்

தாழ்வடம் = முத்துமாலை

தாளாண்மை = முயற்சி

தாளாளர் = முயற்சியுடையவர்

தாளி = அனுடநாள், பனை

தாள் = முயற்சி, பாதம், ஆதி, படி, கயிறு, கடையாணி, வைக்கோல், காகிதம், தாழ்ப்பாள், திறவுகோல்

தாறு = முள், குலை, இரும்பு, அங்குசம், முள்கோல்

தாற்பரியம் = கருத்து

தாற்றுக்கோல் = முள்கோல்

தானத்தார் = கோயில் விசாரணைக்குரியோர்.

தானம் = வலி, தேவலோகம், யானை மதம், ஈகை, இடம்

தானவர் = அசுரர், வித்தியாதரர்

தானவாரி = இந்திரன், திருமால்

தானாதிபதி = சேனைத் தலைவன்

தானி = இடத்திலுள்ள பொருள், இருப்பிடம், பண்டசாலை

தாணிகன் = பூசாரி

தானை = சேனை, ஆயுதம், ஆடை

தான்றி = எல்லை, ஒரு மரம்

தான்தோன்றி = சுயம்பு, பிறரால் உண்டாக்கப் படாதவன்

## தி

திகதி = தேதி

திகந்தம் = திசையின் முடிவு

திகம்பரன் = நிருவாணி, சிவன், அருகன்

திகழ்தல் = விளங்குதல், ஒளி செய்தல்

திகிரி = சக்கரம், தேர், மலை, மூங்கில், வட்டம், சூரியன்

திகை = திசை, தேமல்

திக்கசம் = திசை யானை

திக்காரம் = நிந்தை

திக்கு = சமயம், திசை, புகலிடம்

திக்குவிசயம் = எல்லாத் திசைகளையும் வெல்லல்

திங்கள் = திங்கட்கிழமை, சந்திரன், மாதம்

திசைச்சொல் = தமிழும் சமஸ்கிருதமும் அல்லாத வேற்றுமொழிச் சொற்கள்

திசைமுகன் = பிரமன்

திடகாத்திரம் = கட்டுள்ள தேகம்

திடப்பிரஞ்ஞன் = சிவன் முத்தன்

திடர் = மலைமேடு, மணற்குன்று, வெளியிடம்

திடல் = வெளியிடம்

திட்டாணி = மரத்தைச் சுற்றிய மேடை

திட்டி = கண், திஷ்டி, மேடு

திட்டிவாயில் = ஒடுக்கவாயில்

திட்டை = உரல், திண்ணை, மேடு

திட்பம் = திண்மை, மனவுறுதி

திணர் = செறிவு

திணுக்கு = நடுக்கம்

திணை = ஒழுக்கம், நிலம், குலம், வீடு

திண்டி = யானை, பருமம்

திண்டிமம் = தம்மட்டம்

திண்டிறல் = மிக்க வீரம்

திண்ணகம் = செம்மறிக்கடா

திண்ணக்கம் = வலி

திண்ணம் = வலி, இறுக்கம், உறுதி

திண்மை = உறுதி, வலி

திதம் = அசைவின்மை
திதலை = தேமல், வெண்மை நிறம்
திதி = காத்தல், நிலைபேறு, இருப்பு, சம்பத்து, நிலைசம், அசுரர் தாய், காசியபர் மனைவி, வளர்ச்சி
திதிகர்த்தா = விஷ்ணு
திதிட்சை = பொறுமை
திதிமைந்தர் = அசுரர்,
திதைதல் = பரவுதல்
தித்தம் = கசப்பு
தித்தி = துருத்தி, தேமல், இன்பம், ஒரு வாத்தியம்
தித்தியம் = யாக குண்டம்
தித்துப்பாடு = திருத்தம்
தித்திருணி = புளியமரம்
திப்பியம் = மேன்மை, விளக்கம், சுவர்க்கம் திவ்வியம், தெய்வத்தன்மையுடையது
திப்பிரமை = மனக்குழப்பம்
திப்பை = மேடு
திமிசு = வேங்கைமரம்
திமிதம் = உறுதி, சரம், பேர் ஒலி, குதித்தாடல்
திமிரம் = இருள், கருமை
திமிர்தல் = பூசுதல், வாரி இறைத்தல், வளர்தல்
திமிலம் = பேர் ஒலி
திமிலை = ஒருபறை, மேளம்
திமிலர் = நெய்தல் நிலமக்கள்
திமில் = எருத்தின் முசுப்பு, மரக்கலம், வேங்கை மரம்
திம்மன் = ஆண் குரங்கு
தியாகம் = கைவிடல், துறத்தல், கொடை
தியாகராயன் = சிவன்
தியாகி = தன்னலம் கருதாதவன், கொடையாளி
தியாச்சியம் = விலக்கப்படும் நேரம்
திரஸ்கரித்தல் = நீக்குதல், நிந்தித்தல்
திரஸ்காரம் = நிந்தை, நீக்கம்
திரங்கல் = மிளகு
திரங்குதல் = உலர்தல், சுருளுதல், சுருங்குதல், தளர்தல்
திரணம் = புல், துரும்பு
திரளை = உருண்டை, மாலை, பக்கத்திண்ணை
திரம் = மலை, பூமி, உறுதி
திரயம் = மூன்று
திரவியம் = பொன், பொருள்
திரள் = சேனை, கூட்டம் உருண்டை, மிகுதி
திராணி = சக்தி
திரிகடுகம் = சுக்கு, மிளகு, திப்பிலி, ஒரு நூல்
திரிகரணம் = மனோவாக்கு காயங்கள்

திரிகூடம் = ஒருமலை

திரிகை = எந்திரம், குயவன் சக்கரம்

திரிசிகை = சூலம்

திரிசொல் = செய்யுள் சொல்

திரிதல் = வேறுதல், கெடுதல், சலித்தல், கைவிடுதல்

திரிநயனன் = சிவன்

திரிபதகை = கங்கை

திரிபதார்த்தம் = பதி, பசு பாசம்

திரிபலை = கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய்

திரிபிடகம் = பௌத்தாகமங்கள்

திரிபு = விபரீதம், விகாரம்

திரிபுடி = ஞாதுரு, ஞானம், ஞேயம்

திரிபுண்டரம் = மூன்று வரிசையாகத் திருநீற்றை அணிதல்

திரிபுரம் = இரும்பு, வெள்ளி, பொன்னால் ஆன இயங்கும் கோட்டை

திரிபுராந்தகன் = சிவன்

திரிபுரை = பார்வதி

திரிபுவனம் = சுவர்க்கம், மத்திமம், பாதளம்

திரிமூர்த்தி = பிர்மா, விஷ்ணு ருத்திரன்

திரியக்கு = விலங்கு, குறுக்கானது

திரியம்பகம் = சிவன் வில்

திரிவிக்ரமன் = திருமால், சூரியன்

திரியம்பகன்
திரிலோசனன் } = முக்கண்ணுடைய சிவன்

திரு = அழகு, இலக்குமி, ஸ்ரீ, கண்டாரால் விரும்பப்படும் தன்மை, செல்வம், தெய்விகம், நல்வூழ்

திருக்கம் = வினை, வஞ்சகம்

திருசியம் = தோற்றமுள்ளது

திருச்சிற்றம்பலம் = சிதம்பரத்தில் உள்ள சபை

திருடதை = உறுதி

திருடம் = பலம்

திருட்டாந்தம் = சாத்திரம், உதாரணம்

திருட்டி = கண், பார்வை

திருமணம் = புல், துரும்பு

திருணபதி = பனை

திருதி = உறுதி

திருத்தம் = தீர்த்தம், ஒழுங்கு

திருநீற்றுக்கோவில் = திருநீற்றுப் பை

திருந்தலர்
திருந்தார் } = பகைவர்

திருப்பணி = கோயில் வேலை,

திருப்பதி = திருவேங்கட மலை
திருப்பள்ளி = இறைவன் பள்ளி கொண்டிருத்தல்
திருமகள் = இலக்குமி
திருமஞ்சனம் = அபிடேகம், திருமுழுக்கு
திருமண் = நாமம்
திருமரம் = அரசமரம்
திருமலர் = தாமரை
திருமறுமார்பன் = திருமால், அருகன்
திருமால் = அரசன், விஷ்ணு
திருமுகம் = பெரியோர் கடிதம்,
திருமுறை = நூல், சைவத் திருமுறைகள்
திருமுற்றம் = கோயிற் சந்நிதானம்
திருமுன் = சந்நிதானம்
திருமுழுக்கு = அபிடேகம்
திருமை = அழகு
திருவாபரணம் = தெய்வத்திற் குரிய நகை
திருவாய் மலர்தல் = சொல்லுதல்
திருவாழ்த்தான் = விகடன்
திருவாளன் = செல்வன்
திருவிளையாட்டு = தெய்வ விளையாட்டு
திருவுரு = தெய்வ விக்கிரகம்
திருவுளச் சீட்டு = தெய்வத்தின் உள்ளம் அறிய அமைக்கப்படும் சீட்டு
திருவுளம்பற்றுதல் = திருவை பாலித்தல்
திருவோலக்கம் = தெய்வ சபை
திரை = அலை, வெற்றிலை, உடலில் தோன்றும் மூப்புக் குறி, திரைச் சீலை, சுருள்
திரைதல் = சுருங்குதல்
திரையல் = வெற்றிலை, சுருங்கல்
திரையன் = தொண்டைமான், நெய்தல் நிலத் தலைவன்
திரையெறிதல் = அலைவீசுதல்
திரை விழுதல் = உடல் சுருங்குதல்
திரோதம் = மறைப்பு
திரோதான சக்தி = மறைப்புச் சக்தி
திரோதானம் = மறைப்பு
திரோபவம் = மறைப்பு, இறைவனது ஐந்து தொழில்களில் ஒன்று
திலகம் = பொட்டு, முதன்மையானது
திலகடம் = எள்ளுப்பிண்ணாக்கு
திலதம் = சுட்டி

திலதர்ப்பணம் = எள்ளும் நீரும் இறைத்தல்

திலம் = எள்

திலோதகம் = எள்ளும் நீரும்

தில்லம் = காடு

தில்லை = சிதம்பரம், ஒருமரம்

தில்லை மூவாயிரவர் = சிதம்பர தீட்சதர்கள் மூவர்யிரவர்

தில்லையம்பலம் = பொற்சபை

திவசம் = நாள், திவசம்

திவம் = வானம், பரமபதம்

திவலை = துளி, மழை

திவவு = படி, வீணையின் முறுக்காணி

திவளுதல் = அசைதல், துவளுதல், விளங்குதல், வாடுதல், திளைத்தல்

திவா = பகல், நாள்

திவாகரன்
திவாமணி } = சூரியன்

திவி = சுவர்க்கம்

திவ்யசட்சு = ஞானக்கண்

திவ்வியம் = இனிமையானது, தெய்வீகமானது, மேன்மையானது

திளைத்தல் = அசைதல், விளையாடல், அனுபவித்தல், அழுந்துதல், நிறைதல், விடாது பயிலல், மகிழ்தல், பொருதல்

திறத்தார் = பக்கத்தார்

திறப்பாடு = வகை

திறம் = காரணம், நரம்புள்ள வீணை, கூறுபாடு, சுற்றம், குலம், பக்கம், போர்வகை, வலி, வழி, வரலாறு, ஒழுக்கம், மேன்மை, இயல்பு, செவ்வை, கற்பு, செய்தி, உபாயம், செல்வம், வல்லமை

திறம்புதல் = தவறுதல் மாறுபடுதல்

திறல் = பகை, வலி, வெற்றி, ஒளி

திறை = அரசர்க்குக் கொடுக்க வேண்டிய கப்பம்

தீற்றி = தின்னற் குரியது இறைச்சி

தினகரன்
தினநாதன்
தினமணி } = சூரியன்

தினம் = நட்சத்திரம், நாள்

தினை = சிறுமை, தினையரிசி

தின்மை = தீமை

தின்றி = உணவு

தீ = தீமை, நெருப்பு, அறிவு, கோபம், இனிமை

தீக்கதர் = தீட்சை பெற்றோர்

தீக்குளித்தல் = தீப்பாய்தல்

தீக்கை = மந்திரோபதேசம், யாகம்

தீக்கோள் = தீயகிரகம்

தீஞ்சுவை = நற்சுவை

தீஞ்சொல் = இனிய சொல், நல்சொல்

தீட்சணம் = உக்கிரம், கூர்மை, வெப்பம், மரணம்

தீட்சை = விரதநியமம், உபதேசம்

தீட்சை பண்ணுதல் = உபதேசம் செய்தல்

தீட்டுதல் = எழுதுதல், சித்தரித்தல், மினுக்குதல்

தீட்பு = இழிவு

தீத்தல் = எரித்தல்

தீத்திரள் = ஊழித்தீ

தீத்தொழில் = அக்கினி, தகாத செயல்

தீந்தமிழ் = இனிய தமிழ்

தீந்தொடை = யாழ், தேன் அடை

தீபகம் = விளக்கு

தீபனம் = பசி, ஆகாரம்

தீபாவலி } = விளக்குவரிசை,
தீபாவளி } ஒரு பண்டிகை

தீபிகை = விளக்கு

தீம் = இனிமை, தித்திப்பு

தீம்பு = கேடு, குறும்பு

தீரம் = கரை, அம்பு, தைரியம்

தீர்க்கக்கிரீவம் = ஒட்டகம்

தீர்க்கதரிசி = முக்கால நிகழ்ச்சிகளை அறிபவன், வருவதுணரும் ஞானி

தீர்க்கம் = உறுதி, நீளம், தெளிவு, பூரணம், அறிவுத் தெளிவு

தீர்க்காயுசு = காகம், நீண்ட ஆயுள்

தீர்த்தங்கரர் = சைனமதாசாரியர்

தீர்த்தம் = சுத்தம், யாகம், சாத்திரம், அபிடேக நீர், புண்ணிய நீர், ஆகமம்

தீர்த்தர் = பரிசுத்தர்

தீர்த்தன் = அருகன், குரு, சிவன், பரிசுத்தன்

தீர்த்தகை = நதி

தீர்வு = பிராயச்சித்தம்

தீர்வை = இரி, முடிவு, சுங்கம்

தீவகச்சாந்தி = இந்திரவிழா

தீவகம் = விளக்கு, தீவு, பார்வை, மிருகம்

தீவலம்செய்தல் = திருமணம்

தீவளர்த்தல் = ஹோமம் செய்தல்

தீவளர்ப்போர் = அந்தணர்

தீவாணம் = அரசாட்சி, நியாய சபை

தீவிரம் = கூர்மை, கடுமை, விரைவு

தீவேட்டல் = யாகம் செய்தல், கலியாணம்

தீவேள்வி = கலியாணம்

தீம்ப்பு = கீழ்மை. தீட்டு

தீற்றுதல் = பூசுதல், ஊட்டுதல், தூய்மை செய்தல்

தீனபந்து = கடவுள்

தீனம் = வறுமை, நோய், நட்பு

தீனன் = தரித்திரன், யாசகன்

## து

து = அனுபவம், சுத்தம், உணவு

துகத்தல் = கசத்தல்

துகள் = குற்றம், தூசு, பூந்தாது

துகி = மகள்

துகிர் = பவளம்

துகிலிகை = எழுதுகோல், சித்திரம்

துகில் = பட்டு, சீலை, துகில் கொடி

துகினம் = பனி, சந்திரகிரணம்

துகிற்கிழி = உறை

துகினம் = பனி

துகைத்தல் = வருத்தல், உழக்குதல், சஞ்சரித்தல்

துகின்மனை = கூடாரம்

துக்கம் = துன்பம், வான்

துக்கரம் = செய்தற்கரியது

துங்கம் = உயர்ச்சி, மலை, பெருமை, வெற்றி, அக லம், முதன்மை

துச்சம் = கீழ்மை, பதர், பொய், நிலையின்மை

துச்சில் = ஒதுக்கிடம்

துஞ்சுதல் = இறத்தல், தூங்குதல், நிலைபெறுதல், தொங்குதல், குறைதல், சோம்புதல்

துஞ்சுநிலை = கட்டில்

துடக்கு = கட்டு, மகளிர் சூதகம்

துடவை = சோலை, தோட்டம், விளைநிலம்

துடி = அகில், ஏலம், உடுக்கை, வேகம், காலநுட்பம், வலி, மயிர்ச்சாந்து, உடுக்கை பாலைநில வாத்தியம்

துடிதலோகம் = தேவலோகம்

துடியடி = யானைக்கன்று

துடியிடை = பெண், உடுக்கை போன்ற இடையுடைய பெண்

துடுப்பு = பூவரும்பு, அகப்பை, காந்தள்மலர்

துடும்புதல் = கூடுதல்

துடுவை = நெய்த்துடுப்பு

துட்கு = அச்சம்

துட்டநிக்கிரகம் = துஷ்டரை அழித்தல்

துட்டு = தீமை, பணம்

துணங்கறல் = திருவிழா, இருள்

துணங்கை = ஒருவகை ஆடல்

துணர் = பூ, பூங்கொத்து, பூந்தாது, பழக்குலை

துணி = துண்டு, சிலை

துணிதல் = வெட்டுதல், தெளிதல், நீங்குதல்

துணித்தல் = வெட்டல், கிழித்தல்

துணியல் = துண்டம்

துணுக்கம் = அச்சம், நடுக்கம்

துனை = அளவு, இணை, உதவி, ஒப்பு

துணைமை = பிரிவின்மை, ஆற்றல், உதவி

துணையல் = பூமாலை

துணைவன் = தோழன்

துணைவி = மனைவி, தோழி

துண்டம் = சாரைப்பாம்பு, முகம், பறவை மூக்கு, மூக்கு, துதிக்கை, பிரிவு

துண்டி விநாயகர் = காசியில் உள்ள கணபதி

துண்டீரன் = காஞ்சியரசன்

துதம் = அசைவு

துதி = துளை, தோத்திரம், புகழ், நுனி, துருத்தி

துதைதல் = நெருங்குதல், மிகுதல், படிதல்

துத்தம் = வயிறு, ஏழிசைகளில் ஒன்று சமனிசை, பால், நாய்

துத்தி = தேமல், பாம்பின் படப்புள்ளி, யானைப்புகர்,

துத்தியம் = துதி, புகழ்ச்சி

துந்தம் = வயிறு

துந்தி = நாபி, வயிறு

துந்துபி = தெய்வலோக பேரிகை

துப்பு = பவளம், வலிமை, அனுபவம், ஆயுதம் உளவு, சுத்தம், துணை, அறிவு, தன்மை, நெய், வலி, நன்மை, பொலிவு, மெழுகு, முயற்சி, அனுபவிக்கக் கூடிய பொருள் பகை, கருவி, உணவு

துப்புரவு = சுத்தம், முழுமை, அனுபவம், சமர்த்து

துமி = சிறுதிவலை, வெட்டு

துமிதம் = நீர்த்துளி

துமித்தல் = அறுத்தல், துளித்தல், வெட்டுதல், விலக்குதல்
துமிலம் = முழக்கம், போர்,
தும்பி = யானை, வண்டு, கரும்பு
தும்பு = கயிறு, குற்றம், கரும்பு, தூசி
தும்புரு = வீணை, ஒரு கந்தருவன்
தும்பை = போர், ஒரு செடி
துயக்கம் = அறிவு வேறுபடுதல், சோர்தல்
துயலுதல் = அசைதல், தொங்குதல்
துயிலுணர்தல் = விழித்தல்
துயிலெடை = உறக்கத்திலிருந்து எழுப்புதல்
துயில் = உறக்கம், தங்குதல், கனா, சாவு, துணி
துயில்கூர்தல் = உறங்குதல்
துயிறல் = உறங்குதல், தங்குதல்
துய் = பஞ்சு, மென்மை, கூர்மை
துய்த்தல் = புசித்தல், அனுபவித்தல், நூல் நூற்றல்
துய்யது = சுத்தமானது
துய்யாள் = சரஸ்வதி
துரகதம் = குதிரை
துரக்கு = சந்தேகம்
துரகம் = குதிரை, மனம்
துரங்கமம் = குதிரை
துரங்கம் = குதிரை, மனம்
துரத்தல் = எரிதல், ஒட்டுதல், செலுத்தல், முயலுதல், துரத்தல்
துரந்தரதன் = தலைவன்
துரப்பு = நீக்குதல்
துரம் = ஓரிசைக் கருவி, சுமை, பொறுப்பு
துராக்கிருதம் = தீயதொழில், நிந்தை
துராசாரம் = தீய ஒழுக்கம்
துரால் = செத்தை
துரிசு = குற்றம், துன்பம்
துரிதம் = பாவம், விரைவு
துரியம் = பரமாத்மா, தன்மயமாய் நிற்பது, சிரேஷ்டம், பொதிமாடு, சுமத்தல்
துருக்கம் = அரண், காடு, குங்கும மரம், கத்தூரி மதில், கல்க்கம்
துருசு = மாசு
துருத்தி = காற்றுத்துருத்தி, ஆற்றிடைக்குறை, தோல்
துருநாமம் = மூலநோய்
துருமம் = மரம், பாரிசாதம்
துருமோற்பலம் = கோங்கு மரம்
துருவண்ணம் = வெள்ளி

துருவம் = அசையா நிலை ஒப்பு, துருவ நட்சத்திரம்
துருவல் = ஆராய்தல்
துருவாடு = செம்மறியாடு
துருவுதல் = கடைதல், தேடுதல், ஆராய்தல்
துருவை = ஆடு. பார்வதி
துரூஉ = செம்மறியாடு
துரோணம் = காக்கை, சரபப் பட்சி, வில், தும்பைச் செடி, பதக்கு
துர்க்கம் = அரண், மலைக் கோட்டை
துர்க்கை = பார்வதி, காளி, வீரமகள்
துர்த்திநம் = மழைநாள், கெட்டநாள்
துர்பிட்சம் = பஞ்சம்
துர்லபம் = கிடைப்பதற்கு அருமையானது
துலக்கம் = ஒளி, தெளிவு
துலங்குதல் = விளங்குதல், சிறத்தல்
துலா = ஏற்றமரம், நிறை கோல், ஒப்பு, அளவு, தராசு
துலாபாரம் = தன் அளவுக்குப் பொன் கொடுக்கத் தன்னை நிறுத்தல்
துலாம்பரம் = தெளிவு, விளக்கம்
துலை = ஒப்பு, அளவு, தூரம், தராசு, தோட்டம்
துல்லபம் = அருமை, எட்டாதது
துல்லிபம் = மேன்மை
துல்லியம் = உவமை, ஒப்பு, சுத்தம்
துவக்கு = உடல், கட்டு, தோல், சங்கிலி, பற்று, தொடர்பு
துவசம் = கொடி, அடையாளம்
துவசர் = கள் விற்பவர்
துவசாரோகணம் = திருவிழாவின் போது கொடியை ஏற்றல்
துவடர் = பகைவர்
துவட்சி = வாடுதல், சோர்வு
துவட்டா = விஸ்வகர்மா
துவந்தனை = அலைவு, தடை, பந்தம்
துவம் = அசையா நிலை, இரண்டு
துவயம் = இரண்டு
துவர = மிக
துவரை = துவாரகாபுரி
துவர் = சிவப்பு, பவளம், துவர்ப்பு, விறகு
துவர்க்காய் = பாக்கு
துவர்தல் = முதிர்தல், பிரிதல், உலர்தல், புலர்த்துதல், வகிர்தல்
துவர்த்தல் = சிவத்தல், பூசுதல்,

துவலை = மழை, துளி, கூட்டம்

துவளுதல் = அசைதல், அடர்தல், வாடல், வளைதல், துடித்தல், வருந்துதல்

துவனம், துவனி } = ஒலி

துவன்றல் = நெருங்கல், நிறைதல்

துவாதசம் = பன்னிரண்டு

துவாந்தம் = இருள், நரகம்

துவாரபாலகர் = வாயில் காவலர்

துவாரம் = வாயில், வழி, மூலம், தொளை

துவாலை = இரத்தப்பெருக்கு

துவி = இரண்டு

துவிசன் = இருபிறப்பாளன்

துவிதம் = இரண்டு

துவிதவாதி = கடவுளும் ஆன்மாவும் வேறு என வாதிக்கும் ஒரு சமயவாதி

துவை = ஒலி, புளியங்கறி, மிதித்தல், இறைச்சி, பிண்ணாக்கு, துவையல்

துவைதம் = கடவுளும் உயிரும் வேறு என்பது

துவைத்தல் = ஆரவாரித்தல், கடைதல், இடித்தல்: குற்றுதல், சேர்த்து வைத்தல், புகழப்படுதல், ஒலித்தல்

துளக்கம் = அசைவு, வருத்தம், ஒளி, அச்சம், கலக்கம்

துளங்கல் = ஒளி செய்தல், தளர்தல்

துளவம், துளவு } = துளசி

துளர் = பயிரின்களை

துளர்தல் = மணத்தல், கொத்துதல்

துளும்பல் = கலக்குதல்

துளை = மூங்கில்

துளைதல் = அனுபவித்தல் அழுந்திக்கிடத்தல், நீர் விளையாடல்

துள்ளல் = ஆடு, கொசுகு, விரைந்து பாடும் இசை கூத்து

துறக்கம் = தேவலோகம்

துறத்தல் = பற்றுதல், நீங்கல், கைவிடல்

துறவறம் = இல்லறத்தை விட்டு நீங்கிய நிலை

துறுதல் = நெருங்குதல் குவிதல், அடைதல்

துறுமல் = திரட்சி

துறுமுதல் = நெருங்கல் திரட்டல்

துறுவுதல் = உண்ணல்

துறை = ஆறு, இடம், நூல் வழி, கடற்கரை, ஒழுங்கு நீர்த்துறை, உபாயம்

துறைபோதல் = முற்றக் கற்றறிதல், முடிவறிதல்

துறைவன் = நெய்தல் நிலத் தலைவன்

துற்றுதல் = நெருங்குதல் உண்டல்

துற்றி = உண்ணப்படுவது,

துற்று = உணவு, சோறு

துனி = அச்சம், ஊடல், துன்பம், முதிர்வு, கோபம், பிரிவு, வெறுப்பு, வறுமை, நோய்

துனித்தல் = வெறுத்தல்

துனைவு = விரைவு

துன்றுதல் = நெருங்குதல், பொருந்துதல்

துன்னகாரர் = தையற்காரர்

துன்னம் = துளைத்தல், தைத்தல், ஊசித்துளை

துன்னர் = தையற்காரர், சக்கிலி

துன்னலர்
துன்னார் } = பகைவர்

துன்னியார் = அடுத்தோர், சிநேகிதர்

துன்னீதி = அநீதி, துர்நடை

துன்னுதல் = நெருங்குதல், தைத்தல், பொருந்துதல், ஆலோசித்தல்

துன்னுநர் = அடுத்தோர், சிநேகிதர்

துன்னூசி = தையல் ஊசி

## தூ

தூ = சுத்தம், தசை, பகை, பற்றுக்கோடு, வெண்மை, வலி, இறகு

தூக்கணம் = உறி, தொங்கல், தூக்கணாங் குருவி

தூக்கு = ஆராய்வு, உயர்ச்சி, உறி, கூத்து, தூக்கணம், நிறை, பாட்டு, தொங்கும் பொருள், செய்யுள்

தூங்கல் = ஆடல், தாழ்தல், யானை, சாதல், உறங்குதல், தொங்குதல், மிகுதல், தங்குதல், அசைதல்

தூங்காமை = சோர்வில்லாமை

தூங்குதல் = சோம்பியிருத்தல், உறங்குதல், தொங்குதல், அசைதல், வாடுதல்

தூசம் = யானைகட்டும் கயிறு

தூசி = குதிரை, முன் சேனை போர்

தூசிப்படை = முன் செல்லும் சேனை

தூசு = சீலை, யானை கட்டும் கயிறு, பஞ்சு, முன் அணிச் சேனை

தூடணம் = நிந்தனை

தூணம் = அம்புக்கூடு, தூண்

தூணி = அம்புக்கூடு, நாலு மரக்கால்

தூது = பருக்கைக்கல், செய்தி, தூதர்

தூதுணம் = புறா

தூதை = மட்கலம், மரப்பாணை

தூபம் = புகை

தூபி = மலைமுடி, உச்சி

தூபிகை = கோவில் சிகரம்

தூமகேது = அக்னி, வால் நட்சத்திரம், விண்வீழ் கொள்ளி

தூமம் = குளோ, புகை

தூமை = சுத்தம்

தூம்பு = உள்துளை, ஏரி மதகு, சாக்கடை, மரக் கால், மூங்கில், வாயில்

தூயம் = சுத்தமானது

தூயவர் = முனிவர்

தூய்மை = சுத்தம், முத்தி, நன்மை

தூரதரிசி = திர்க்கதரிசி

தூரம் = வேறுபாடு, புறம்பு

தூரி
தூரிகை } = எழுதுகோல்

தூரியம் = புகழ்ச்சிப்பறை, எருது, எழுது கோல், நல்லாடை, வாத்தியம்

தூரியன் = தூரத்தில் உள்ளவன்

தூர் = சேறு, வேர்

தூர்ச்சடி = சிவன்

தூர்த்தகுணம் = காமுகத் தன்மை

தூர்த்தல் = நிரப்புதல், அடைத்தல், பெருக்கிச் சுத்தம் செய்தல்

தூர்த்தன் = காமுகன், வஞ்சகன்

தூர்வகம் = சுமத்தல், பொதி எருது

தூர்வை = அறுகு

தூலசரீரம் = தசையுடன் கூடிய உடல், புற உடல்

தூலம் = ஆகாயம், பஞ்சு, பருமை கண்ணுக்குத் தெரிவது

தூலலிங்கம் = கோபுரம்

தூலிகை = எழுதுகோல் அன்னத்தினிறகு

தூலித்தல் = பருத்தல்

தூவத்தி = வாள்

தூவல் = அம்பிறகு, சிந்தல் துளி, மழை, தூரியக் கோல், தளிர்

தூவானம் = மழைத் திவலை

தூவி = இறகு, மயில்தோகை எழுதுகோல், தூபி

தூளி = புழுதி, பூந்தாது குதிரை

தூளிதம் = திருநீறு, தூள்

தூறு = பழிச்சொல், புதர், குவியல், குறுங்காடு, சுடுகாடு, போர், தீங்கு

தூறுதல் = நிந்தித்தல், சிதறுதல், பழி சொல்லல், இளைத்தல், பரவுதல்

தூற்றுதல் = பழி கூறுதல், சிதறல், அறிவித்தல், பரவுதல்

## தே

தேகிழ்தல் = விரிதல், நிறைதல் விளங்குதல்

தேக்கணம் = தெற்கு, வலப்பக்கம் தட்சணம்

தேக்கு = தெற்கு,

தேக்குதல் = கொள்ளுதல்,

தேங்கு = இனிப்பு, தென்னை

தேட்சணாமூர்த்தி = சிவன், அகத்தியன்

தேட்சிணம் = தெற்கு, வலப்பக்கம்

தேட்டுதல் = வஞ்சித்தல், அபகரித்தல்

தேட்டு = வஞ்சனை, பறித்தல்

தேட்பம் = பேரறிவு, தெளிவு, முதிர்ச்சி

தேண்டம் = வணக்கம், அபராதம், வின்

தேண்டு = கோல், கற்றை

தேண்டித்தல் = முயற்சி எடுத்தல், தண்டித்தல்

தேண்டிரை = கடல்

தெண்டு = ஒறுதன்

தெண்ணர் = அறிவில்லாதவர்

தெண்மை = தெளிவு

தெம்முனை = போர்க்களம்

தெய் = கொலை, தெய்வம்

தெய்வகம் = தெய்வ விளக்கம்

தெய்வதம் = தெய்வம்

தெய்வப் புலமை = இறைவன் அருளால் வந்த பேரறிவு

தெய்வம் = விதி, கடவுள்

தெய்வவீடு = விமானம்

தெய்வவுத்தி = சீதேவி என்னும் தலையலங்காரம்

தெய்வாதீனம் = தெய்வத்திற்கு அடங்கியது, தெய்வ சுதந்திரம்

தெய்விகம் = தெய்வ சம்பந்தமானது, தெய்வத் தன்மை

தெய்வோபாசனை = தெய்வ வழிபாடு

தெரிசம் = அமாவாசை
தெரிதரல் = அறிதல்
தெரித்தல் = எழுதல், சொல்லல் விளக்குதல், தெரிவித்தல், பங்கிடுதல்
தெரிப்பு = பிரிப்பு, ஆராயவு சொல்லுதல்
தெரியலர் = பகைவர்
தெரியல் = மாலை
தெரியிழை
தெரிவை } = பெண்
தெருட்சி = அறிவு, தெளிவு
தெருட்டுக்கல்யாணம் = ருது சாந்தி
தெருட்டுதல் = தெளிவித்தல், வற்புறுத்தல், ஊடல் தீர்த்தல்
தெருண்டபெண் = ஆளான பெண்
தெருண்டமேலவர் = அறிவிற் சிறந்தவர்
தெருமரல் = அச்சம், சுழலல், மனக் கவலை
தெருள் = அறிவின்தெளிவு ஞானம்
தெவிட்டுதல் = உமிழ்தல் திரளுதல், தொனித்தல், ஒலித்தல், நிறைதல், அடைத்தல், மறைத்தல், தங்குதல்
தெவ் = பகை, போர்
தெவ்வுதல் = கவர்தல் நிறைத்தல், கொள்ளுதல்
தெவ்வினை = போர்
தெழித்தல் = கோபித்தல், ஒலித்தல். அதட்டுதல், முழக்குதல், அடக்குதல், வருத்துதல், நீக்குதல், ஆரவாரித்தல்
தெழிப்பு = அதட்டல்
தெளிஞன் = அறிஞன்
தெளித்தல் = விதைத்தல், சபதம்கூறல்தெளிவித்தல்
தெள்விளி = ஓர் இசைப் பாட்டு
தெள்ளிமை = தெளிவு
தெள்ளியர் = அறிவுடையோர்
தெள்ளுதமிழ் = செந்தமிழ்
தெள்ளுதல் = ஆராய்தல், தெளிவாதல்
தெள்ளேணம் = மகளிர் விளையாட்டு, கை கொட்டிப்பாடியாடல்
தெறல் = வெம்மை, கோபித்தல், அழித்தல்
தெறித்தல் = முற்றுதல், சிந்தல், துள்ளுதல், பிளத்தல், குலைதல்
தெறுக்கால் = தேள்

தெறுதல் = அழித்தல், சுடுதல், வருத்துதல், கப்பம் செலுத்தல், சொல்லல், தண்டனை, அச்சுறுத்தல், செய்தல், கொல்லுதல், பகைத்தல், காய்ச்சுதல்

தெறுநர் = பகைவர், கொலையாளிகள்

தெறுழ் = ஒருவகைத் தாவரக் கொடி,

தெற்றி = திண்ணை, மேட்டிடம்

தெற்றியம்பலம் = சித்திர கூடம்

தெற்று = தடைப்படுதல்

தெற்றுதல் = பின்னல், மாறுபடல், பிணங்குதல், தடுத்தல், தடைப்படுதல் அலைத்தல், கொடுத்தல்

தெற்றென = தெளிய, விரைவாக

தெனாது = தெற்குள்ளது

தென் = அழகு, தெற்கு, இசை, இனிமை

தென்கலை = தமிழ்

தென்கால் = தென்றல் காற்று

தென்பாரிசம் = தென்திசை

தென்பால் = தென்பக்கம்

தென்புலத்தார் = பிரமனால் படைக்கப்பட்ட ஒரு கடவுள் சாதியார், பிதுரர், தென்திசையில் வாழ்பவர்

தென்புலம் = இயம உலகம், பாண்டிய நாடு, பிதுரர் உலகம்

தென்புறம் = தென்பக்கம்

தென்மலை = பொதியமலை

தென்றற்றேரோன் = மன்மதன்

தென்றி = தென்றல், தெற்கு

தென்றிசைக்கோன் = இயமன்

தென்றுதல் = இனம்பிரிதல் சிதறுதல்

தென்னவன் = இயமன், பாண்டியன், இராவணன்

தென்றுதல் = கிளம்புதல்

# தே

தே = கடவுள், கொள்கை, நாயகன்

தேகவியோகம் = சாவு

தேககாந்தி = சரீரஒளி

தேகாந்தம் = சாவு

தேகி = சிவாத்மா

தேக்கம் = தியக்கம், ஏப்பம், கவலை, நிறைவு

தேக்கிடுதல் = நிறைந்து வழிதல்
தேசசு = ஒளி, அழகு, விந்து
தேசவியவகாரம் = தேச வழக்கம்
தேசன் = குரு,
தேசாதிபத்தியம் = தேசத்தை ஆளும் அதிகாரம்
தேசாந்தரம் = பரதேசம்
தேசாந்திரி = பரதேசி
தேசி = ஒரு கூத்து, அழகு பெரிய குதிரை
தேசிகம் = ஒரு கூத்து, ஒரு நாட்டுச் சொல், அழகு, ஒளி, பொன்; திசைச் சொல்
தேசிகன் = குரு, ஆசிரியன், தந்தை
தேசியம் = அந்த நாட்டு பாஷை
தேசு = அழகு, ஒளி, புகழ், வீரம், ஞானம், பெருமை, பொன்
தேசோமயம் = ஒளிவடிவம், பேரொளி
தேசோரூபம் = ஒளியுருவம்
தேட்டம் = கவலை, ஆராய்வு விருப்பம், பேராசை, சேகரிப்பு
தேண்டுதல் = தேடுதல்
தேத்தடை = தேன்கூடு
தேமா = இனிப்பு மாமரம்
தேம் = இனிமை, இடம், தேன், வண்டு, மணம்
தேம்பல் = வாட்டல், பழம் பூ
தேம்புதல் = மெலிதல், வாடல், தேய்தல்
தேயம் = கொடைப்பொருள், தேசு, இடம், நாடு, களவு, உடல்
தேயன் = திருடன்
தேயு = தீ, மயங்கம்
தேய்மானம் = பொன்னுரை
தேய்வை = சந்தனக் குழம்பு
தேரர் = புத்த முனிவர்
தேரார் = படிக்காதவர், பகைவர், தேரார்
தேரலர் = பகைவர்
தேரி = மணல் திட்டை
தேர்ச்சி = கல்வியறிவு, ஆராய்தல், எண்ணல்
தேர்ச்சித்துணைவர் = மந்திரி
தேர்தல் = அறிதல், ஆராய்தல், நிச்சயித்தல், தேடுதல்
தேர்த்தல் = கலத்தல்
தேர்வு = ஆராய்ச்சி, சுவை பயிற்சி
தேவகுலம் = கோவில்
தேவசேனாபதி = முருகப் பெருமான்

தேவதாயம் = கோவிலுக்கு விடப்பட்ட நிலம்
தேவதேவன் = மகாதேவன் சிவன்
தேவதை = பேய், தெய்வம்
தேவநகர் = கோவில்
தேவபாடை = சமஸ்கிருத பாஷை
தேவபாணி = தேவரை வாழ்த்தும் பாட்டுவகை
தேவமணி = குதிரைக்கழுத்துச் சுழி
தேவயானம் = விமானம்
தேவரன் = கணவனுடன் பிறந்தவன்
தேவராட்டி = மருள் வந்து ஆடுபவள், குறி சொல்பவள்
தேவர் = உயர்ந்தவர், மறவர் பட்டப் பெயர், வள்ளுவர், தேவர்
தேவர்கோன் = இந்திரன்
தேவலன் = முனிவன், பூசாரி
தேவவிரதன் = பீஷ்மன்
தேவன் = அரசன், கடவுள், மறவன், அகம்படியன்
தேவாங்கம் = பட்டுச் சீலை
தேவாரம் = வீட்டில் வைத்துப் பூசிக்கத்தக்கது, அப்பர், சுந்தரர், சம்பந்தர், ஆகிய சைவசமய ஆசிரியர்கள் பாடியதோத்திர நூல். தேவனுக்குரிய பாமாலை

தேவி = பார்வதி, அரசி, மனைவி, தலைவி
தேவு = தெய்வம்
தேவை = இராமநாதபுரம்
தேறலர் = பகைவர், அறிவிலார்
தேறல் = தேன், தெளிவு, சாரம்
தேறார் = பகைவர், அறிவிலார்
தேறு = தேற்றாமரம், உறுதி, துண்டு, தெளிவு, கொட்டுதல்
தேறுதல் = தெளிதல், முதிர்தல், நம்புதல், துணிதல்
தேற்றம் = துணிவு, தெளிவு, நிச்சயம், உண்மை அறிவு
தேற்றார் = பகைவர்
தேனன் = திருடன்
தேனித்தல் = இனித்தல்
தேனிறால் = தேன்கூடு
தேனு = தெய்வப்பசு, பசு, எருமை, குதிரை
தேன் = கள், வண்டு, வாசனை

தை = தைத்தல், தைமாதம், அலங்காரம், பூசநாள் அத்திப்பிசின்

தைசசம் = நெய், பலம், உலோகம்

தைசதம் = சத்துவகுண அகங்காரம்

தைதம் = விரல்நுனி

தைதிலம் = காண்டாமிருகம்

தைத்தல் = உட்புகுதல், பொருத்துதல், அலங்கரித்தல், பதித்தல், சூழ்தல்

தைத்தியர் = அசுரர்

தைத்தியாரி = திருமால்

தைத்திரம் = சிச்சிலிக் குருவி

தைநம் = எளிமை

தையல் = அழகு, பெண், தைத்தல், மேகம்

தைலமாட்டுதல் = எண்ணெய் முழுக்கு, பிணை அலங்காரம் பண்ணல்

தைலி = பணப்பை

தைவதம் = தெய்வம், இசைச் சுரம்

தைவதீபம் = கண்

தைவம் = ஊழ், பாக்கியம்

தைவருதல் = துடைத்தல், தடவுதல்

தைவலேககன் = சோதிடன்

தைவாகரி = எமன், சனி

தைவிகம் = தேவசம்பந்தமுடையது, தெய்வச் செயலாய்ச் சம்பவிப்பது

## தோ

தோகுதல் = மறைதல், சுருங்குதல்

தோகை = கணக்கு, புலவர், கழகம், மொத்தம்

தோக்கு = உடல், தோல் துவையல், மரப்பட்டை, பற்று, அற்பம்

தோங்கல் = குடை, மாலை, மயில் தோகை

தோடக்கு = இட்டு, கட்டு, பற்று

தோடர் = சினேகம், கோவை, பிசின், சங்கிலி

தோடர்பு = உறவு, ஒழுங்கு, பாட்டு, சிநேகம்

தோடலை = மகளிர் விளையாட்டு, மாலை, மேகலை

தொடி = ஒருபலம், கங்கணம் கைவளை, பூண்

தொடிமகள் = விறலி

தொடு = தோட்டம், மருத நிலம், வஞ்சம்

தொடுகை = தோண்டுதல்

தொடுதல் = தொடங்கல், தோண்டல், நினைத்தல், தரித்தல், பிழிதல், ஆணையிடுதல், பிடித்தல், இடுதல், கட்டல், தீண்டுதல்

தொடுதோல் = செருப்பு

தொடுப்பு = கலப்பை, பழக்கம், புறங்கூறல், சேர்க்கை

தொடை = அம்பு, மாலை, நாணி, கொத்து, நரம்பு, யாழ் நரம்பு, கேள்வி, கட்டு, சந்து, பாட்டு, தாறு

தொடையல் = தேன் கூடு, தொடர்ச்சி, தோளணி, மாலை கட்டுதல்

தொட்டல் = தோண்டுதல்

தொட்டிமை = ஒற்றுமை, அழகு

தொண்டகம் = ஆ கோட் பறை குறிஞ்சிப்பறை

தொண்டலம் = யானைத் துதிக்கை

தொண்டி = நெல்லால் செய்யப்பட்ட கள், சோழ நாட்டு நகரங்களில் ஒன்று

தொண்டியோர் = சோழர் குலத்தவர்

தொண்டு = ஒன்பது, பழமை அடிமை, வழிபாடு

தொண்டை = கொவ்வைக் கனி, மிடறு, யானைத் துதிக்கை, பெருங்குரல்

தொத்து = அடிமை, திரள், பற்று, சார்பு, பூங்கொத்து

தொந்தம் = நெடுங்கோபம், இரட்டித்தது, பழமை, தொடர்பு, பிணைப்பு, சம்பந்தம்

தொந்தித்தல் = பற்றுதல், கலத்தல்

தொப்பாரம் = மூட்டை

தொம்பர் = கழைக்கூத்தாடிகள்

தொய் = குற்றம்

தொய்தல் = இளைத்தல், தளர்தல், உழுதல்

தொய்யகம் = தலைப்பாளை

தொய்யல் = இளைத்தல், அகமகிழ்ச்சி, இன்பம், உழவு, துன்பம், சேறு

தொய்யில் = எழுதும்குழம்பு, மார்பில் சாந்தினால் எழுதப்படும் கோலம், அழகு, உழுநிலம்

தொலித்தல் = உரித்தல், உமி போகக் குற்றுதல்

தொலை = ஒப்பு, அழிவு, தூரம்

தொலைத்தல் = அழித்தல், கொல்லல்

தொலைவு = அழிவு, தோல்வி
தொல்லை = பழமை
தொல்வினை = விதி, பழவினை
தொழித்தல் = கோபித்தல், ஆரவாரித்தல், சிதறல்
தொழில் = சாமர்த்தியம், வேலை, செயல்
தொழிற்றுறை = வியாபாரம்
தொழு = குஷ்டம், இரேவதி இல்வாழ்க்கை, பட்டி, மடு, பசுக்கொட்டில், சிறை
தொழுகுலத்தோர் = அந்தணர்
தொழுதி = கூட்டம், திரட்சி,
தொழுத்தை = அடிமைப் பெண், அடிமை
தொழுநோய் = குஷ்டரோகம்
தொழுந்தகை = தொழத் தக்கவன்
தொழும்பர் = குற்றேவல் செய்வோர், இழிஞர்
தொழும்பு = தொண்டு
தொழுவர் = உழவர், தொழில் செய்பவர்
தொழுனை = யமுனையாறு
தொளி = சேறு, விதி
தொள்ளு = சேறு, வலை, பள்ளம்
தொள்ளை = துளை, மரக்கலம், குழி, குற்றம், அறியாமை
தொறு = கூட்டம், பசுக் கூட்டம், இடைச்சாதி, தொழு
தொறுச்சி = இடைச்சி
தொறுவர் = இடையர்
தொறுவி = இடைச்சி
தொற்று = ஒட்டு, பற்று
தொற்றுதல் = பற்றுதல் ஒட்டுதல், ஏறுதல்
தொனி = ஒலி
தொனித்தல் = குறிப்புப் பொருள் தோன்றுதல், ஒலித்தல்
தொன்மரம் = ஆலமரம்
தொன்மை = நூலின் ஓர் அழகு, பழமை
தொன்று = ஊழ், பழமை
தொன்னீர் = கடல்

## தோ

தோகம் = சிறுமை, பால், துக்கம்
தோகை = மயில், மயிற்பீலி, மயிர் வால், முன்தானை, ஆடை, பொன்
தோகையர் = பெண்கள்
தோக்கை = மேற்போர்வை சீலை, தோகை
தோடகம் = கொப்புளம், தாமரை

**தோடம்** = பாவம், குற்றம், சன்னி,

**தோடு** = கூட்டம், பூ இதழ், குடுமி, தொகுதி, ஒரு காதணி, பழ ஓடு, ஓலை

**தோட்கோப்பு** = கட்டுச் சோறு

**தோட்சுமை** = காவடி,

**தோட்டி** = அழகு, கதவு, காவல், அங்குசம், ஆணை, வெட்டியான்

**தோணி** = படகு, அம்பு, நீர், இரேவதி நாள், கப்பல், மதில் உறுப்பு, சேறு, நீர்த்தொட்டி,

**தோணோக்கம்** = ஒருவகைக் கூத்து, மகளிர் விளையாட்டு

**தோண்டான்** = ஓநாய்

**தோதகம்** = வஞ்சகம், வருத்தம், ஒழுக்கமின்மை,

**தோது** = தொடர்பு, தொகுதி

**தோப்பி** = நெல்லால் செய்யப்பட்ட கள்

**தோமரம்** = இருப்புலக்கை, கைவேல், தண்டாயுதம், வாத்தியம்

**தோம்** = குற்றம், தீமை, பாவம், துன்பம்

**தோயதரம்** = மேகம்

**தோயதி** = கடல்

**தோயம்** = நீர், கடல்

**தோய்தல்** = முழுகுதல், நனைதல், உறைதல், செறிதல், பொருந்துதல், ஒத்தல், முகத்தல், கலத்தல்

**தோரணம்** = குரங்கு, யானை நடை, அலங்கார முகப்பு

**தோரணி** = வரலாறு, பரம்பரை

**தோரணை** = நடை, முறை

**தோரியமடந்தை** = கூத்துப்பெண்

**தோரியம்** = கூத்து

**தோரை** = மூங்கிலரிசி, மலைநெல், பொன்மாலை, இரத்தம், தொகை விசிறி

**தோலாப்பறவை** = அன்னம்

**தோல்** = சருமம், யானை, கேடகம், தொல்வி, துருத்தி; அழகு, புகழ், சிறந்த பொருள் தரும் மெல்லென்ற சொல்

**தோழமை** = நட்பு

**தோழம்** = தொழுவம், கடல், பேரெண்

**தோழ்** = தொழுவம்

**தோளாமணி** = முழுமணி

**தோற்றம்** = தோன்றுதல், காட்சி, எண்ணம், வலி, பிறப்பு, உயர்ச்சி, மேன்மை, பொலிவு, தன்மை

**தோற்றரவு** = வெளிப்படல்

**தோற்றுவாய்** = ஆரம்பம், பாயிரம்

தோன்றல் = ஆடவரில் சிறந்தவன், அரசன், தலைவன், உற்பத்தி, காட்சி, மகன், உயர்ச்சி

தோன்றி = செங்காந்தள் பூ ஒரு மலை, கார்த்திகைப் பூ இரத்தம்

தோன்றுந்துணை = கடவுள், அந்தரங்கத்துணை

## தௌ

தௌகித்திரன் = மகளது மகன்

தௌசாரம் = குளிர், பனி பேரன்

தௌதம் = வெள்ளி

தௌதிகம் = முத்து

தௌத்தியம் = தூது, செய்தி, தவம்

தௌரிதகம் = குதிரைநடை

தௌர்ப்பல்லியம் = பலவீனம்

தௌர்ப்பாக்கியம் = பாக்கியம் இல்லாமை

தௌலம் = துலாக்கோல்

தௌலிகன் = சித்திரக்காரன்

தௌலேயம் = ஆமை

தௌவாரிகன் = துவாரபாலகன்

தௌவை = அக்காள், தாய், மூதேவி

## ந

ந = சிறப்பினையும் மிகுதியையும் உணர்த்தும் இடைச்சொல், இன்மைப் பொருளையும் உணர்த்தும்

நகம் = பங்கு, மரம், மலை, நகம்

நகர் = கோயில், ஊர், வீடு, அரண்மனை, மனைவி,

நகல் = சிரித்தல், பிரதி, நட்பு, ஒளி

நகழ்தல் = துன்பப்படுதல், நகர்தல்

நகாசு = நுட்பமானவேலை நேர்த்தி

நகார் = பல்

நகிலம் = முலை

நகில் = முலை

நகுதல் = ஒளிவிடுதல், சிரித்தல், புஷ்பித்தல், தாழ்த்துதல்

நகுலம் = கீரி
நகுலன் = சிவன், பாண்டவரில் ஒருவன்
நகேசன் = இமயமலை
நகை = ஆபரணம், ஒளி, இகழ்ச்சி, மகிழ்ச்சி, பல், சிரிப்பு, பூவரும்பு
நகைத்தல் = நிந்தித்தல், சிரித்தல்
நக்கரம் = முதலை, தேள்
நக்கல் = நிண்டல், சிரித்தல்
நக்கன் = சிவன், நிர்வாணி
நக்கரித்தல் = நகர்ந்து செல்லுதல், தவழ்தல்
நக்கினம் = நிர்வாணம்
நக்கிராகியம் = முதலை
நங்குதல் = பழித்தல்
நங்கூரம் = கப்பல் ஆடாது அசையாதிருக்கச் செய்யும் கருவி
நங்கை = மாதர்களுள் சிறந்தவள்
நசித்தல் = அழித்தல், சாதல்
நசியம் = மூக்கில் இடும் பொடி
நசை = அன்பு, ஆசை, ஈரம், குற்றம், விருப்பம்
நசை = விரும்புதல்
நசையுநர் = விரும்புவோர்
நசைவு = ஈரம்

நச்சு = ஆசை, சிறுமை, விடம், தொந்தரை
நச்சுக்குழல் = தூரதிருஷ்டிக் கண்ணாடிக் குழல்
நச்சுதல் = விரும்புதல்
நஞ்சம் = விஷம்
நஞ்சுணி = சிவன்
நடத்தை = ஒழுக்கம்
நடமாடி = நடராஜன்
நடம் = கூத்து
நடலம் = செருக்கு, பாசாங்கு வீண் செலவு
நடலை = பொய், வஞ்சனை வருத்தல், துவளுதல்
நடவை = வழி நடக்குமிடம், உபாயம்
நடாத்துதல் = நடத்துதல்
நடி = கூத்தி, நடனமாது
நடிப்பு = பாசாங்கு, கூத்து
நடு = நதி, இடுப்பு, நடுநிலை
நடுநிலை = நீதி
நடுவன் = நமன்,
நடுவாந்தரம் = இடை
நடுவின்மை = நீதிக்கேடு
நடுவுநிலைமை = நீதி
நடை = ஒழுக்கம் செலவு, முறை, வழக்கம் வழி, இடைகழி
நடைக்கலம் = மரக்கலம்

நடைப்பரிகாரம் = வாழ்க்கைக்கு வேண்டிய பண்டங்கள்

நடைபாவி = படிக்கிணறு

நடைமலை = யானை

நட்சத்திரேசன் = சந்திரன்

நட்டல் = நடுதல், சிநேகம் பண்ணுதல்

நட்டார் = உறவினர், சிநேகிதர்

நட்டுவம் = நாட்டியம்

நட்டோர் = உறவினர்

நணி = அணிமை

நணுகலர் = பகைவர்

நண்ணலர் } = பகைவர்
நண்ணார் }

நண்ணுதல் = பொருந்துதல், கிட்டுதல், செய்தல்

நண்மை = சமீபம்

நதம் = மேற்கேயோடும் ஆறு

நதி = யாறு, கிழக்கோடும் ஆறு, வணக்கம்

நதிபதி = கடல், வருணன்

நதுத்தல் = அவித்தல், கெடுதல், மறைத்தல்

நத்தமாலம் = புன்கமரம்

நத்தம் = ஊர், சங்கு, வாழை, கெடுதல், வளர்தல் இரவு, ஆக்கம்,

நத்து = சங்கு, மூக்கணி, விருப்பம்

நத்துதல் = விரும்புதல் அண்டுதல்

நத்தை = கடுகு, சங்கு

நந்தகம் = வாள்

நந்தம் = சங்கு, பெருமகிழ்ச்சி

நந்தனம் = பூந்தோட்டம், நந்தை, தவளை, இந்திரன் நந்தவனம்

நந்தனன் = மகன், மகிழ்விப்பவன்

நந்தன் = புத்திரன், கிருஷ்ணன் தந்தை, இடையன், திருமால்

நந்தாமணி = சிறந்தமணி

நந்தி = சிவன், எருது, போகை, சாணார் பட்டப்பெயர்

நந்திளி = மகள்

நந்து = ஆக்கம், சங்கு, பறவை

நந்துதல் = கெடுதல், அவிதல், குறைதல், வளர்தல், தழைத்தல், மறைதல், விளங்குதல், செருக்குதல் தாண்டுதல்

நந்தை = கலப்பைக் கயிறு, கபிலப் பசு

நபம் = கார்காலம்

நபனம் = அபிடேகம்

நபி = தீர்க்கதரிசி

நபுஞ்சகம் = பேடு, அலித் தன்மை

நபுஞ்சகன் = பேடன்

நப்பின்னை = கிருஷ்ணன் மனைவி, இலக்குமி

நமகம் = உருத்திர மந்திரம்

நமனுதல் = வணங்குதல்

நமன் = இயமன், நம்மவன்

நமித்திரர் = பகைவர்

நமைத்தல் = தின்றல், குட்டுதல், வருந்துதல்

நம்பன் = சிவன், கடவுள்

நம்பி = ஆடவரில் சிறந்தவன்

நம்பிக்கை = விசுவாசம்

நம்பு = நசை, நாவல்

நம்பூரி = மலையாள பிராம்மணரில் உயர்ந்தவர்

நயத்தல் = மகிழ்தல், மலிதல், நீதி புரிதல், விரும்பல்,

நயந்தோர் = சினேகிதர்

நயப்பு = அன்பு, ஆசை மலிவு, சந்தோஷம்,

நயம்புணர்வு = தாட்சண்யம்

நயம் = மகிழ்ச்சி, இன்பம் நன்மை, நீதி, மலிவு, நற்பயன், அருள், அன்பு

நயனம் = கண்

நயன் = அருள், அன்பு, உபாயம்

நயிட்டிகப் பிரமசாரி = காலமெல்லாம் பிரமசாரியாகவே இருந்து வாழ்பவன்

நயினர் = ஆண்டவன், எசமானன்

நரகரி = நரசிங்கம்

நரகர் = கீழ் உலகவாசிகள்

நரகல் = மலம்

நரங்குதல் = தேய்ந்து தேய்ந்து கெடுதல்

நரதேவன் = அரசன்

நரந்தம் = கஸ்தூரி, நாரத்தை, ஒரு புல்

நரபதி
நரபாலன் } = அரசன்

நரமடங்கல் = நரசிங்கம்

நரமேதம் = நரபலியிட்டுச் செய்யப்படும் யாகம்

நரம்பு = நார், நாடி, தந்தி

நரர் = மனிதர்

நரலுதல் = ஒலித்தல், சத்துதல்

நரலை = கடல், ஒலி, மதில் உறுப்பில் ஒன்று

நரலோகம் = பூமி

நரவரி = நரசிங்கம்

நரவாகனம் = பல்லக்கு

நரவாகனன் = குபேரன்

நரற்றல் = ஒலித்தல்

நரன் = அருச்சுனன், மனிதன்

நராதிபதி = அரசன்

நரிதல் = வருத்துதல்

நரித்தல் = நிந்தித்தல், வருத்துதல், கெடுதல்
மூப்பு, பெருமை, மரச்சொத்தை

நரேசன் = அரசன்

நரேந்திரன் = விஷவைத்தியன், அரசன்

நரை = எருது, கவரிமா, வெண்மை, பெருமை, வெண்மயிர், மூப்பு, மரச்சொத்தை

நரையான் = மீன்குத்திப் பறவை

நலங்குதல் = வருந்துதல்

நலம் = அழகு, இன்பம், உபகாரம், நன்மை, விருப்பம், உயர்வு, சிவப்பு, அன்பு, குணம், புகழ்

நலம்பாராட்டுதல் = அலங்கரித்து அழகைப் பாராட்டிப் பேசுதல்

நலிதல் = மெலிதல், வருந்தல், நெருக்கல், அழிதல்

நல்குதல் = ஈதல், விரும்பல், படைத்தல், வளர்த்தல், பயன்படுதல்

நல்குரவு = தரித்திரம்

நல்கூர்தல் = தரித்திரப்படல், துன்புறுதல்

நல்ல = கடுமையான, அதிகமான, நன்மையான

நல்லம் = கறுப்பு

நல்லறம் = இல்வாழ்க்கை

நல்லார் = பெண்கள், நல்லவர்

நல்லாறு = நல்வழி

நல்வினை = புண்ணியம்

நவக்கிரகம் = சூரிய, சந்திர, அங்காரக, புத, வியாழ, சுக்கிர, சனி, இராகு, கேதுக்களாகிய ஒன்பது கிரகங்கள்

நவதானியம் = உளுந்து, எள்ளு, கடலை, கொள்ளு, சாமை, தினை, துவரை, நெல்லு, பயிறு ஆகிய ஒன்பது தானியங்கள்

நவதி = தொண்ணூறு

நவதை = புதுமை

நவத்துவாரம் = இருகண் துளை, வாய், இரு நாசித் துளை, இரு செவித்துளை, மலங்கழிவாயில், சிறுநீர் கழிவாயில், ஆகிய ஒன்பது துளைகள்

நவநீதம் = வெண்ணெய்

நவமணி = ஒன்பது மணிகள்

நவம் = புதுமை, கார்காலம், ஒன்பது, பூமி, நட

நவரசம் = காவியத்தில் அமைக்கப்படும் ஒன்பது சுவைகள்

நவரதம் = ஒன்பது சுவைகள்
நவியம் = கோடரி, மழு, புதுமை
நவிரம் = ஆண் மயிர், புன்மை, மயில், மலை, உச்சந்தலை, வாள்
நவிர் = ஆண் மயிர், வாள்
நவிலுதல் = பயிலல், சொல்லல், செய்தல், கற்றல், பழகுதல், தாங்குதல், குறித்தல்
நவிழ்த்தல் = அவித்தல்
நவிற்றல் = சொல்லல்
நவீனம் = புதுமை
நவை = குற்றம், இகழ்ச்சி, தண்டனை
நவ்வல் = நாவல்
நவ்வு = மான், அஸ்த நட்சத்திரம், அழகு, மரக்கலம்
நவ்வியம் = புதுமை
நவ்வி = தோணி
நளி = குளிர், நெருக்கம், பெருமை, அகலம், தேள்
நளிதல் = பரத்தல், ஒத்தல்
நளிர் = நண்டு, குளிர், பகை
நளினம் = தாமரை, நீர், பாசி, இனிமை
நளினி = இலக்குமி, தாமரை, குளம்
நள் = இரவு, நடு
நள்ளலர் } = பகைவர்
நள்ளார்
நள்ளி = நண்டு, உறவு
நள்ளிருநறி = இருவாட்சிப் பூ
நள்ளிருள் = அடர்ந்த இருள்
நள்ளுதல் = நட்புக் கொள்ளுதல், விரும்புதல்
நள்ளுநர் = நண்பர்
நறவம் = அனிச்சபாரம், கள், மணம், தேன், பால்
நறவு } = கள், தேன், வாசனை
நறு
நறுக்கு = ஓலைத்துண்டு
நறுங்காழ் = சந்தனம், அகில்
நறுநாற்றம் = நல்மணம்
நறுநுதல் = நல்லநெற்றி, நல்லநெற்றியுடையபெண்
நறுநெய் = பசுநெய்
நறுமணம் = நல்லவாசனை
நறுமருப்பு = இஞ்சி
நறுமை = நன்மை, வாசனை
நறை = தேன், கள், வாசனை, நறும்புகை, பச்சிலைக் கொடி, குற்றம்
நற்கதி = மோட்சம்
நற்கந்தம் = நன்மணம்
நற்றம் = நற்குணம்
நற்றமிழ் = தூய தமிழ், இனிய தமிழ்

நற்றாய் = பெற்றதாய்
நற்றிறம் = நீதிநெறி, நோன்பு
நற்றம் = நற்குணம்
நற்று = நன்மை
நனந்தலை = உச்சி, நடுவிடம், திசை, அகல் இடம்
நனவு = தெளிவு, தோற்றம், பரப்பு, பகல், மெய்மை
நனம் = அகற்சி
நன்காடு = சுடுகாடு
நனி = மிகுதி
நனை = கள், தேன், பூவரும்பு
நனைவு = ஈரம்
நன்கு = அழகு, நன்மை, மிகுதி
நன்குணர்தல் = கற்றறிதல்
நன்கொடை = உபகாரத்தின்பொருட்டுக் கொடுக்கப்படும் பொருள்
நன்செய் = நெல், கோதுமை விளையும் நிலம்
நன்மை = நலம், பயன், மேம்பாடு, வாழ்த்து, அழகு
நன்மையாகுதல் = குதுவாதல்,
நன்றி = அறம், உபகாரம்
நன்றிகோறல் = செய்ந்நன்றி மறத்தல்
நன்றியறிதல் = செய்ந் நன்றியை மறவாதிருத்தல்
நன்று = சுகம், நன்மை, நல்வினை, பெரிது, ஆக்கம், நற்குணம்
நன்னடை = நல் ஒழுக்கம்
நன்னயம் = நன்மை
நன்னர் = நன்மை
நன்னி = சிறியது
நன்னலம் = மேன்மை
நன்னிலை = தவம், நல் ஒழுக்கம்

## நா

நா = நடு, நாக்கு, பேச்சு, பொலிவு
நாகணவாய்ப்புள் = மைனைப் பறவை
நாகநாதன் = இந்திரன்
நாகபாசம் = பாம்பு வடிவான கயிறு
நாகபூஷணன் = பாம்பை ஆபரணமாக அணிந்துள்ள சிவபெருமான்
நாகம் = ஆகாயம், குரங்கு, மேகம், தேவலோகம், நற்புடைவை, பாம்பு, புன்னைமரம், மலையானை
நாகரம் = வடமொழிஎழுத்து

நாகராசன் = ஆதிசேடன்
நாகரிகம் = சாதுரியம், தாட்சண்யம், மரியாதை, நகர சம்பந்தமுடையது
நாகரிகர் = காமுகர், நகரத்தார், சதுரர்
நாகர் = தேவர், நாகலோக வாசிகள்
நாகலோகம் = தேவலோகம், கீழ்லோகம்
நாகல் = நாவல்
நாகவல்லி = வெற்றிலைக் கொடி
நாகாபரணன் = பாம்பாபரணனை சிவன்
நாகு = இளமை, சங்கு, பசுக்கன்று, நத்தை, புற்று
நாகை = நாகபட்டினம்
நாக்குறுதி = சொல்வன்மை
நாங்கூழ் = பூநாகம், நாக்குப்பூச்சி, மண் புழு
நாசாக்கிரம் = நாசிநுனி
நாசி = மேல் வாயிற்படி, மூக்கு
நாசிகாக்கிரம் = மூக்குத்தூள்
நாசிகாசூரணம் = மூக்குப் பொடி
நாசிதாரு = மேல்வாயிற்படி
நாசித்துவாரம் = மூக்குத் துளை
நாசுவன் = அம்பட்டன்
நாஞ்சில் = கலப்பை, மதில் உறுப்பு
நாடகக்கணிகை = நாடகசாலைப் பெண்
நாடி = தாது, நரம்பு, நாடி, இரத்தக்குழாய், நாழிகை நாளிகை, மேலுறுப்பு
நாடிகேளம் = தேங்காய்
நாடுதல் = விரும்புதல், தேடுதல், அளத்தல், தெரிதல்
நாட்காலம் = விடியற்காலம் ஏற்ற பருவம்
நாட்டமிலி = குருடன்
நாட்டம் = கண், வாள், விருப்பம், சோதிடநூல் அழகு, ஆராய்தல், நோக்கம், சஞ்சாரம்
நாட்டாண்மை = ஊர் அதிகாரம்
நாட்பூ = புதுமலர்
நாணயம் = உண்மை, காசு, உயர்வு, நாணயம், நேர்மை
நாணி = வில்நாண்
நாணுதல் = அடங்குதல், வெட்கப்படுதல்
நாண் = கயிறு, வில்நாண்
நாண்மகிழிருக்கை = திருவோலக்கம்
நாண்மலர் = அன்றலர்ந்தபூ
நாண்மீன் = நட்சத்திரம்

நாதம் = இந்திரியம், ஒலி, இசை, சிவதத்துவம்

நாதன் = குரு, தலைவன், கணவன், கடவுள், அரசன்

நாதித்தல் = ஒலித்தல்

நாத்தழும்பேறுதல் = நாக்கு நல்ல பயிற்சி பெற்றிருத்தல்

நாத்தி = இன்மை, நாசம்

நாத்திகம் = தெய்வம் இல்லை என்னும் மதம்

நாநா = பல

நாந்தகம் = வாள்

நாந்தல் = சரம், மந்தாரம்

நாந்தி = பாயிரம், மங்கல வாழ்த்து

நாபி = கஸ்தூரி, கொப்பூழ்

நாபிதன் = அம்பட்டன்

நாப்பண் = நடு

நாப்பு = பரிகாசம்

நாமகரணம் = பெயரிடும் சடங்கு

நாமகள் = சரஸ்வதி

நாமசேடம் = மரணம்

நாமடந்தை = சரஸ்வதி

நாமதேயம் = பெயர்

நாமநீர் = கடல்

நாமமிடுதல் = பெயர் வைத்தல்

நாமம் = பெயர், திருமண், அச்சம், புகழ்

நாமயம் = தற்போதம்

நாமாவளி = பெயர் வரிசை

நாம் = அச்சம்

நாம்பல் = இளைத்தல்

நாம்பு = மெலிவு

நாயகம் = ஆளுகை, தலைமை, சிறப்பு

நாயகமணி = நடுமணி

நாயகன் = கணவன், கடவுள், அரசன், தலைவன்

நாயகி = தலைவி, மனைவி

நாயக்கன் = சேனைத்தலைவன்

நாயனம் = நாதசுரம்

நாயனர் = தலைவர்

நாயன் = தலைவன், பெருமையிற் சிறந்தவன்

நாயன்மார் = சிவனடியார்கள், பெருமையிற் சிறந்தவர்கள்

நாயிறு = சூரியன், ஒரு கிழமை

நாய் = சூதாடுகருவி, நாய்

நாய்கன் = செட்டி, தலைவன்

நாய்ச்சி = தலைவி

நாரணன் = திருமால்

நாரணி = துர்க்கை, பார்வதி

நாரம் = நீர், பாசி, மக்கட் கூட்டம், அன்பு

நாரன் = மன்மதன்

நாராசம் = அம்பு, இருப்புச் சலாகை

நாராயணி = துர்க்கை, பார்வதி

நாரி = கள், நாணி, பன்னாடை, பார்வதி, பெண், தேன், சேனை

நாரிகேளம் = தெங்காய்

நாரிகை = பெண்

நாரிபாகன் = சிவன்

நார் = அன்பு, கயிறு, நார், நூல், பன்னாடை

நாலல் = தொங்குதல்

நால்வாயன் = விநாயகன்

நால்வாய் = யானை

நாலுதல் = தொங்குதல்

நாவரசர் = அப்பர் சுவாமிகள், புலவர்

நாவலர் = புலவர், மந்திரிமார்

நாவல் = வெற்றியொலி துக்கக் குறிப்பு

நாவாய் = இரேவதி நட்சத்திரம், கப்பல், ஒருபறை

நாவி = கத்தூரி, கத்தூரிமான், புழுகுப்பூனை, கொப்பூழ், மயிர்ச்சாந்து, கப்பல்

நாவிகன் = கப்பலோட்டி

நாவிதன் = அம்பட்டன்

நாவுரி = ஒன்றரைப்படி

நாழூறு = நாத்தோரும்

நாழை = கொழுநுனி

நாழி = உள்தொளையுள்ள பொருள், ஒருபடி, பூரட்டாதி அம்பறாத்தூணி, ஏர், நாழி, நாடா

நாழிகை = வட்டம், கடிகாரம்

நாழ் = குற்றம், செருக்கு,

நாளங்காடி = பகற்கடை

நாளந்தி = சிறுநாலை

நாளம் = பூந்தண்டு, உட்டுளை

நாளரும்பு = புதிய அரும்பு

நாளாறும் = நாள்முற்றும்

நாளார் = இயமன்

நாளி = கள், ஞாளி

நாளிகேரம் = தென்னைமரம்

நாளிருக்கை = திருவோலக்கம்

நாளொலித்தல் = நாள்கழிதல்

நாளோலை = ஜாதகம், முகூர்த்த ஓலை

நாள் = காலம், பகல், நட்சத்திரம்

நாறி = கற்றாழை

நாறுதல் = பூதழைத்தல், மணத்தல், தோன்றுதல், முளைத்தல், பிறத்தல்

நாற்கதி = தேவர் மனிதர், நரகர் விலங்கு என்னும் நால்வகைப் பிறப்புக்கள்

நாற்கவி = ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரக் கவிகள்

நாற்சந்தி = நாலுதெருக்கள் கூடும் இடம்

நாற்பான் = நாற்பது

நாற்றம் = வாசனை, புலனறிவு, தோற்றம்

நாற்றி = நான்கு மடங்கு

நாற்றிசை = கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு

நாற்று = முளைபயிர்

நாற்றுதல் = தூக்குதல்

நானம் = கஸ்தூரி, வாசனை, கவரிமான், முழுகல்

நானிலம் = குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம், ஆகிய நான்கு நிலங்கள், பூமி

நான்மறை = நான்குவேதம், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய இவற்றை விளக்கும் நான்கு நூல்கள்

நான்மறையோன் = பிரமன், முனிவன்

நான்முகன் = பிரமன், அருகன்

# நி

நி = இன்மை, அதிகம், அருகு, உறுதி, வன்மை, விருப்பம், ஆகியவற்றை உணர்த்திச் சொல்லுக்கு முன் நிற்கும் ஓர் எழுத்து

நிகடம் = அருகு

நிகண்டு = சொற்பொருள் உணர்த்தும் நூல்

நிகமம் = வேதம், கடைவீதி, வழி, முடிவு, விதி

நிகமாகமம் = வேதாகமங்கள்

நிகரம் = கூட்டம், திரவியம், தொகை, கொடை, விழுங்குதல்,

நிகர் = ஒப்பு, போர், ஒளி

நிகழ்தல் = ஒளிவிடுதல், நடத்தல், தங்குதல், நிறைவேறுதல், விளங்குதல்

நிகளம் = சங்கிலி, கைவிலங்கு, பந்தம்

நிகாதம் = நரகம்

நிகாயம் = மருதநிலத்து ஊர், வாழ் இடம், கூட்டம்

நிகாரம் = அவமானம், அபகாரம்

நிகிலம் = எல்லாம்

நிகுஞ்சம் = குகை, புதர், வீடு

நிகேதனம் = வீடு, கோயில், நகரம்

நிக்கந்தன் = அருகன்

நிக்கிரகம் = கட்டுதல், தண்டித்தல், வெறுத்தல், அதட்டல், அழித்தல்
நிக்கிரகித்தல் = கொல்லல், தண்டித்தல்
நிசா = இரவு
நிசாகரன் = சந்திரன்
நிசாசரன் = இராக்கதன், சந்திரன்
நிசாந்தம் = விடியிற்காலம்
நிசாபதி = சந்திரன்
நிசாரி = சூரியன்
நிசான் = கொடி
நிசி = பொன், மஞ்சள், இரவு
நிசிசரர் = இராக்கதர்
நிசிதம் = கூர்மை, இகழ்ச்சி இரும்பு
நிசித்தம் = விலக்கு
நிசிந்தன் = கடவுள், ஈசன்
நிசிமணி = சந்திரன்
நிசும்பர் = கொலைஞர்
நிச்சம் = தினம், எப்பொழுதும்
நிச்சலம் = அசைவின்மை, உறுதிநிலை
நிச்சலன் = கடவுள்
நிச்சிந்தன் = கடவுள், எண்ணமற்றவன், அருகன்
நிச்சுவாசம் = சுவாசத்தை வெளிவிடல், சுவாசத்தை அடக்கல்
நிடலம் = நெற்றி
நிடேதம் = தடை, விலக்கு
நிட்களம் = உருவின்மை
நிட்களங்கம் = களங்கமற்றது
நிட்காமியம் = விருப்பமின்மை
நிட்சேபம் = துடைத்தல், விடுதல், புதையல்
நிட்டூரம் = கொடுமை
நிட்டை = உறுதி, நம்பிக்கை, மனம், வாக்கு, உடம்பு ஆகிய திரிகரணங்களும் அசைவின்றி இருத்தல்
நிணம் = கொழுப்பு, மாமிசம்
நிணர்தல் = கட்டுதல், செறிதல்
நிணவை = பின்னல், பிணிப்பு
நிணறு = உருக்கம், இதம்
நிதளம் = வறுமை, நாசம்
நிதம்பம் = பெண்குறி, மலைப்பக்கம்
நிதானம் = மூலகாரணம், பொன், இரத்தினம், படை, தீர்மானம், நேர்மை, நிதானம்
நிதி = பொன்
நிதித்தியாசனம் = இடைவிடாது தியானித்தல்
நித்தம் = நடனம், அழியாநிலை, நித்திய கருமம்

நித்தியம் = கடல், என்றும் உண்மை, தினமும்

நித்தியானந்தன் = கடவுள்

நித்திலம் = முத்து

நித்திலவடம் = முத்துமாலை

நிந்தாத்துதி = பழிப்பது போலப் புகழ்வது

நிபந்தம் = கடமை, படித்தரம்

நிபந்தனை = கடமை, ஏற்பாடு, தண்டனை, கட்டுப்பாடு

நிபம் = வஞ்சனை, உவமை, காரணம், கோள்

நிபாதம் = இறங்குதல், விழுதல்

நிபிடம் = நெருக்கம்

நிபுணன் = கல்வியிற் சிறந்தவன்

நிமலம் = அழுக்கின்மை

நிமலன் = கடவுள்

நிம்பில் = வாய் நெளிதல்

நிமித்தம் = அடையாளம், காரணம், சகுனம், இலக்கு

நிமித்திகன் = சகுனம் சொல்வோன், குறிசொல்வோன், சோதிடன்

நிமிரல் = சோறு, நிமிர்தல்,

நிமிர்தல் = உயர்தல், நெருங்குதல், பரத்தல், இறுமாத்தல், மிகைத்தல், முயலுதல், நிளுதல்

நிமை = இமை

நிம்பத்தாரோன் = பாண்டியன்

நிம்பம் = வேம்பு

நிம்பன் = பாண்டியன்

நிம்பிரி = பொறுமை தோன்றும் குறிப்பு

நிம்பிரித்தல் = கோபித்தல்

நியக்குரோதம் = ஆலமரம், வன்னிமரம்

நியதம் = செய்கடன், எப்பொழுதும்

நியதி = ஊழ், செய்கடன், முறைமை, வரையறை

நியமநிஷ்டை = சந்தியாவந்தனம்

நியமம் = கடைவீதி, தெரு, நியதி, தேவர் கோயில், நீதி, உறுதி, நகரம், வீதி, மண்டபம்

நியமனம் = கட்டளை, அமைவு, வகைப்படுத்தல்

நியர் = ஒளி

நியாசம் = விடுதல், வைத்தல், சமர்ப்பித்தல்

நியாயதுரந்தரன் = நியாயம் பேசுவோன்

நியாயவிதாயகன் = நியாயம் விதிப்பவன்

நியுதம் = இலட்சம்

நியோகம் = கட்டளை, தொழில்

நியோகித்தல் = ஏவுதல்

நிரசனம் = அழித்தல், தள்ளுதல், பட்டினி
நிரஞ்சனம் = அழுக்கின்மை
நிரஞ்சனன் = கடவுள், சிவன்
நிரஞ்சனி = பார்வதி
நிரட்சம் = பூகோள சமரேகை
நிரட்சரம் = எழுத்தின்மை
நிரதம் = எப்போதும்
நிரதிசயானந்தம் = தனக்கு மேற்பட்ட ஓர் ஆனந்தம் இல்லாமை
நிரத்தல் = கலத்தல், பரத்தல், நிரம்புதல், ஒழுங்கு செய்தல், சமாதானப் படல்
நிரத்தியயம் = குற்றமின்மை
நிரந்தம் = குரங்கு
நிரந்தரம் = இடைவெளி இன்மை, சராசரி, அழிவு, நெருக்கம், குரங்கு, எப்பொழுதும்
நிரந்தரன் = கடவுள், சிவன்
நிரந்தரி = பார்வதி
நிரந்தரித்தல் = நிறைதல், நெருங்கல்
நிரபராதி = குற்றமற்றவன்
நிரப்பு = குறைபாடு, வறுமை
நிரம்பாமொழி = மழலைமொழி
நிரயம் = நரகம்
நிரல் = வரிசை, ஒப்பு
நிரலுதல் = ஒழுங்கு படுதல்



நிரவுதல் = குறைதீர்த்தல், பரவுதல், அழித்தல், சமனுதல்
நிரல்நிறை = ஒழுங்காக நிறுத்துதல்
நிராகரணம் = மறுத்தல், தூரப்போக்குதல்
நிராகரிப்பு = மறுப்பு
நிராகாரம் = ரூபமின்மை
நிராக்கிருதி = வடிவம் இன்மை
நிராகுலம் = சந்தோஷம்
நிராசை = ஆசையின்மை
நிராதாரன் = கடவுள்
நிராமயம் = நோயின்மை
நிராமன் = கடவுள்
நிராலம்பம் = ஆதாரம் வேண்டாதது
நிராலம்பன் = கடவுள்
நிரியாசம் = பிசின்
நிரியாணம் = சாவு, மோட்சம், யானைக் கடைக்கண்
நிரீட்சணம் = பார்வை
நிருதர் = அரக்கர்
நிருதி = அரக்கி, தென்மேற்குத் திசைப்பாலன்
நிருதிதிசை = தென்மேல் திசை
நிருத்தம் = பதம் பிரித்துப் பொருள் கூறும் நூல், நடனம், பற்றின்மை

நிருத்தன் = நடராசன்

நிருபதி = அரசன், குபேரன்

நிருபம் = கடிதம், கட்டளை

நிருபமன் = ஒப்பில்லாதவன்

நிருபன் = அரசன்

நிருமலம் = குற்றமற்றது

நிருமாணம் = நிருமித்தல்

நிருமாலியம் = பூசித்துக் கழித்த பொருள்கள்

நிருவாணம் = மோட்சம், ஆடையில்லா நிலை

நிருவாணி = அருகன், திகம்பரன்

நிருவிகற்பம் = ஒருமை புணர்ச்சி

நிருவிகாரம் = விகாரம் இன்மை

நிருவிக்கினம் = தடையின்மை

நிருவிசாரம் = கவலையின்மை

நிருபணம் = ஆராய்தல்

நிரை = ஒழுங்கு, வரிசை, பசு

நிரைச்சல் = படை வகுப்பு, இரவல், மறைப்பு

நிரைத்தல் = நிரம்புதல், கோத்தல், பரப்புதல், ஒலித்தல், திரளுதல்

நிரையம் = நரகம்

நிரோட்டம் = இதழ்குவித்து ஒலிக்கக்கூடிய எழுத்துக்கள் சேர்க்கப்படாமல் பாடப்படும் ஒரு வகைக் கவி

நிர்க்குணம் = குணம் இன்மை

நிர்க்குணன் = கடவுள்

நிர்த்தாரி = ஒன்றும் இல்லாமல்படி அறிதல்

நிர்மாலியம் = பூசித்துக் கழித்த பொருள்

நிர்மூலம் = முழுக்கேடு

நிர்வாணம் = முத்திநிலை, அம்மணம்

நிலயம் = இடம், கோயில், படி, மருதநிலத்தூர், பூமி, நிலை, கூத்து

நிலையம் = பூமி

நிலவல் = ஒளிசெய்தல்

நிலவு = ஒளி, சந்திரன்

நிலவுதல் = ஒளி செய்தல், பொருந்துதல், நிலைபெறுதல், விசாலித்தல்

நிலாக்காலுதல் = ஒளிவீசுதல்

நிலாமணி = சந்திர காந்தக் கல்

நிலாமுகி = சகோரப்பறவை

நிலாமுற்றம் = மேல்மாடியில் வெட்டவெளியான இடம்

நிலை = குணம், பூமி, நிச்சயம், ஆச்சிரமம்

நிலையாமை
நிலையின்மை } = அநித்தியம்

நிலைவரம் = நிலைபேறு, நிச்சயம், நிலைமை

நீவத்தல் = உயர்தல், வளர்தல், படர்தல், மேல்வழிதல், தோன்றுதல்

நீவப்பு = உயர்ச்சி

நீவர்தல் = உயர்தல்

நிவாசம் = வீடு, இருப்பிடம்

நிவாரணம் = பிராயச்சித்தம், நீங்கல், தடை

நிவிர்த்தன் = துறவி

நிவிர்த்தி = துறவு, போக்கு, விடுதலை

நிவேசனம் = ஊர், வீடு

நிவேதனம் = ஒப்புவித்தல், தெய்வங்களுக்குச் சமர்ப்பிக்கும் உணவு

நிழத்துதல் = ஓய்தல், இல்லையாக்குதல்

நிழல் = நோய், ஒளி, கிருபை, சாயை

நிழற்றுதல் = ஒளிவிடல், நிழல் செய்தல், அருள் காட்டல்

நிறத்தல் = சிறப்படல், பயன் அளித்தல், சோபித்தல், நிறம்பிடித்தல்

நிறம் = மார்பு, வண்ணம், குணம், ஒளி, இயல்பு, உயிர்நிலை, நடுவிடம், உடல், தோல், வர்ணம்

நிறுதிட்டம் = நேரேநிற்றல்

நிறை = கற்பு, அளவு, அழிவின்மை, தைரியம், நீர்ச்சால், நிதி, மாட்சிமை, வரையறை, திண்மை

நிறைகலை = பூரணசந்திரன்

நிறைகோல் = தராசுக்கோல்

நிறைசூல் = நிறை கருப்பம்

நிறை செல்வன் = குபேரன்

நிறைமதி = பூரணசந்திரன்

நிறைமொழி = பெரியோர் வாக்கு, சாபமும் அனுக்கிரகமும் உடனே பலிக்கவல்ல வார்த்தை, மந்திரம்

நிறைமொழி மாந்தர் = முனிவர்

நிறையழிதல் = கற்பழிதல்

நினைவு = ஆலோசனை, வருத்தம்

நின்மலம் = அழுக்கின்மை

நின்மலன் = அழுக்கற்ற குணமுடைய கடவுள்

நின்மதி = உண்டாக்குதல், தொடக்கம்

நிஷாதன் = வேடன்

நிஷித்தம் = விலக்கப்பட்டது

நிஷேதம் = விலக்கு

நிக்ஷேபம் = புதைபொருள்

நிஷ்களம் = உருவமில்லாமை

நீ = நீங்குதல்
நீகாமன் = மீகாமன்
நீகாரம் = பனி, பனிக்காலம், அவமதிப்பு
நீகான் = மீகாமன்
நீக்குதல் = கொல்லல், அகற்றுதல், கழித்தல், பிரித்தல்
நீசம் = தாழ்வு, இழிவு
நீடம் = பறவைக்கூடு
நீடாணம் = கறி
நீடுதல் = நீளுதல், பரத்தல் தாமதித்தல், கெடுதல், நிலைத்தல்
நீட்டல் = ஈதல், மயிர்வளர்த்தல்
நீணெறி = நீண்டவழி
நீண்டவன் = விஷ்ணு
நீதம் = நீதி, தகுதி
நீதி = முறைமை, ஒழுக்கம், தருமம், மெய்
நீதிநெறி = சன்மார்க்கம்
நீதிபரன் = அரசன், நீதிமான்
நீத்தம் = வெள்ளம், ஆழம் கடல், மிகுதி
நீத்தல் = பிரிதல், துறத்தல், தள்ளுதல், வெறுத்தல்
நீத்தார் = முனிவர்
நீத்து = நீந்தக்கூடிய ஆழம், வெள்ளம்
நீபம் = கடம்பு, உத்திரட்டாதி, காரணம்
நீப்பு = பிரிவு, துறவு
நீபாம் = ஒரி
நீபரன் = மாலுமி
நீரகம் = தாமரை, கடல் சூழ்ந்த இடம், பூமி
நீரணி = நீர்விளையாட்டுக் கோலம்
நீரதம் = மேகம், நீர் இல்லாமை
நீரம் = நீர்
நீரரண் = அகழ்
நீரமகளிர் = நீரில் வாழும் தெய்வப் பெண்கள்
நீராகாரம் = பானகம், சோற்றுநீர்
நீராஞ்சனம் = ஆரத்தி, மஞ்சள் கலந்த நீர்
நீராவி = புகை, கேணி
நீராளம் = நீரின் தன்மை, நீர்மிகுதி
நீர் = குணம், தன்மை, ஒளி நீங்கள், கடல், முறை
நீர்க்கடன் = திலதர்ப்பணம்
நீர்த்தாம்பு = மதகு
நீர்நிலை = குளம், மடு
நீர்பிரிதல் = கோபித்தல்
நீர்ப்பாடு = நீர் இழிவுநோய்
நீர்மை = குணம், ஒளி, நீரின் தன்மை, வள்ளல்
நீர்வாரம் = குளநெல்
நீலாஞ்சனம் = கறுப்புக்கல்
நீலகண்டம் = மயில்

நீலி = காளி, பார்வதி, கரு நிறம், துஷ்டி

நீலகண்டன் = ஈஸ்வரன் நீலமேனியன் விஷ்ணு

நீலோற்பலம் = கருங்குவளை

நீவாரம் = குளநெல், வன நெல்

நீவி = கொய்சகம், சீலை, மூலதனம்

நீவுதல் = நீக்குதல், கோது தல், கடத்தல், துடைத் தல், அறுத்தல், கை விடல், அழித்தல், பூசு தல், தடவிக் கொடுத் தல், பரப்புதல்

நீளம் = பறவைக்கூடு

நீறு = சாம்பல், விபூதி

# நு

நுகம் = பாரம், வலி, கணையமரம், நுகத்தடி, நடுவு நிலைமை

நுகர்ச்சி = உணவு, அநு பவம்

நுகர்தல் = அநுபவித்தல், புசித்தல், செய்தல், அருந்துதல்

நுகும்பு = பனையின் இளங் காய், குருத்து, ஓலை

நுகைதல் = தளர்தல், இளகுதல்

நுகைவு = இளக்கம், தளர்வு பொருந்தவி

நுங்குதல் = விழுங்குதல், உண்ணுதல், கைக்கொள் ளல்

நுங்கை = உன் தங்கை, உன்தாய்

நுசுப்பு = இடை

நுடக்குதல் = கழுவுதல், துவட்டுதல், மாய்த்தல், கரைத்தல், மடக்குதல்

நுடங்குதல் = துவளுதல், அசைதல், அடங்குதல்

நுணங்கு = நுண்மை, தேமல்

நுணங்குதல் = அசைதல், நுட்பமாதல், வாடுதல், துவளுதல், வளைதல், செறிதல்

நுணல் = தவளை

நுணவுதல் = தடவித்தெரி தல்

நுணித்தல் = கூர்மைஆக்கு தல், பொடியாக்குதல், நுணிகி ஆராய்தல்

நுணுகுதல் = நுட்பமாதல், கூர்மையாதல்

நுண்ணியர் = அறிவுடை யோர், மந்திரிகள்

நுதலணி = நெற்றிச் சுட்டி, ஒருநகை

நுதலல் = கருதல், குறித்தல்

நுதலுதல் = தோற்றுவித்தல், கூறுதல், கருதுதல்

நுதல் = நெற்றி, புருவம், தலை, மேலிடம்

நுதற்கண் = நெற்றிக்கண்

நுதுவெட்டி = துர்க்கை

நுதி = முனை, வணக்கம், முன், கூர்மை

நுதித்தல் = அவித்தல், அழித்தல், நீக்குதல்

நுநுத்தல் = அடக்கல்

நுதுப்பு = தணிப்பு

நுந்துதல் = தாண்டுதல்,

நுந்தை = உம் தந்தை

நுமர் = உம்மவர்

நும்பி = உம் தம்பி

நும்மோர் = உம்மவர்

நுவணை = இனிமா, நுண்மை, கல்வி நூல்

நுவலல் = கூறுதல், விரும்பல்

நுவறுதல் = அராவுதல்

நுழுந்துதல் = நுழைத்தல், பதுங்கல், முடித்தல்

நுழை = பலகணி, துவாரம், நுண்மை, சிறுவழி, குகை

நுழைபுலம் = நுண்ணறிவு

நுளம்பு = கொசுகு, மின்மினி

நுளையர் = நெய்தல் நில மாக்கள், சனர்

நுணித்தல் = உற்று ஆராய்தல், கூராக்கல், கூர்ந்து நோக்குதல்

நுனை = முனை

# நூ

நூ = எள்ளிளங்காய், எள், யானை, ஆபரணம்

நூக்குதல் = செலுத்தல், தள்ளுதல், பொடியாக்குதல், ஊசலாடல், எறிதல், தாண்டுதல், சாத்துதல்

நூங்கு = பெருமை, மிகுதி

நூபுரம் = காற்சிலம்பு

நூலறிவு = கல்வியறிவு

நூலோர் = படித்தவர், அறிஞர்

நூல் = பஞ்சி நூல், இழை, கல்வி நூல், ஆலோசனை சாஸ்திரம், தாலி, ஆகமம்

நூல்வெண்மாடம் = கூடாரம்

நூவு = எள்

நூழிலாட்டு = கொன்று குவித்தல்

நூழில் = கொன்றுகுவித்தல், செக்கு, தொளை, அல், ஒருகொடி, யானை

நூழை = நுண்மை, துவாரம், குழை, சிறுவாயில்

நூறு = சுண்ணாம்பு, நூறு, நீறு, பொடி

நூறுகோடி = வச்சிராயுதம்

நூறுதல் = அழித்தல், வெட்டுதல், துரத்தல்

நூற்பா = சூத்திரம்

நூனம் = நிச்சயம், குறைவு

நூன்மடந்தை = சரஸ்வதி

நூன்முகம் = பாயிரம்

## நெ

நெகிடி = நெருப்புக்குவை

நெகிழ்தல் = இளகுதல், அவிழ்தல், தளர்தல், மலர்தல்

நெக்குதல் = உருகுதல்

நெக்கு = உடைபடல்

நெக்குடைதல் = மனமுடைந்துருகுதல், நெகிழ்ந்துருகுதல்

நெஞ்சறிவுறுத்தல் = மனத்துக்கு அறிவுறுத்தல்

நெடி = நாற்றம், காலம், சிள்வண்டு

நெடித்தல் = தாமதித்தல்

நெடியோன் = திருமால், பெரியோன்

நெடியோன்குன்றம் = திருப்பதிமலை

நெடில் = மூங்கில், நெட்டெழுத்து

நெடுங்கணக்கு = அரிச்சுவடி

நெடுங்கழுத்தல் = ஒட்டகம்

நெடுங்கை = யானை

நெடுந்தகை = பெரியோன்

நெடுநீர் = கடல், நீட்டித்துச் செய்யும் இயல்பு, ஆழமாகிய நீர்

நெடுமால் = திருமால்

நெடுமை = பெருமை, ஆழம், கொடுமை

நெடுமொழி = வஞ்சினம், தன் மேம்பாட்டுரை, புகழ்ச்சொல்

நெடுவரி = ஒழுங்கு

நெட்டாங்கம் = செருக்கு, பழிப்பு

நெட்டிடை = நெடுந்தூரம்

நெட்டிலிங்கு = அசோகு

நெட்டு = கர்வம், நெடுந்தூரம்

நெட்டுயிர்த்தல் = பெருமூச்சு விடுதல்

நெட்டுயிர்ப்பு = பெருமூச்சு

நெநி = செல்வம், முத்து, தியானம்
நெம்பு = விலா எலும்பு, மேலெழும்புதல்
நெய் = தேன், புனுகு, இரத்தம், சினேகம்
நெய்தல் = ஆம்பல், இரங்கல், கடலும் கடல்சார்ந்த இடமும், நெய்தல் பறை, ஆடை நெய்தல், சாப்பறை
நெய்தற்பறை = சாப்பறை
நெய்தற் தெய்வம் = வருணன்
நெய்த்தல் = கொழுத்தல், ஒளிர்தல்
நெய்த்தோர் = இரத்தம்
நெய்ப்பு = கொழுப்பு
நெய்யணி = பிள்ளைப்பேற்றின்பின் முதல் முதல் முழுகுதல்
நெய்யரி = பன்னாடை
நெரிகுழல் = சுருண்ட கூந்தல்
நெரிதல் = உடைதல், வளைதல், நெருங்குதல், நொறுங்குதல்
நெரியல் = மிளகு
நெருடு = கோணல், வஞ்சனை, தடவுகை

நெருநல் = நேற்று
நெருநற்று = நேற்று
நெளித்தல் = வளைத்தல், இறுமாப்புக் காட்டல்
நெளிப்பு = இறுமாப்பு
நெளிவு = ஒரு மோதிரம், வளைவு
நெறி = வழி, ஒழுங்கு, நீதி, சன்மார்க்கம், வளைவு, சுருள், சமயம், விதி, வழி, கட்டி, சுளுக்கு, நரம்புத்திரட்சி
நெறித்தல் = சிலிர்த்தல், செவ்வேறுதல், நிமிர்த்தல்
நெறிப்படுத்தல் = ஒழுங்காக்கல்
நெறிநீர் = கடல்
நெறிப்பு = சிலிர்ப்பு
நெறிமை = நீதி
நெறியிலார் = கீழ்மக்கள்
நெறியிலி = துன்மார்க்கர்
நெற்குவை — நெற்போர்
நெற்றி = கொண்டை
நெற்று = உலர்ந்த பழம் மோதுதல்
நென்னல் = நேற்று முன்னாள்

# நே

நே = நேயம், அன்பு, அருள், நேசம், தகுதி

நேடல் = தேடல், எண்ணல்

நேதா = தலைவர்

நேதி = முறை

நேத்திரம் = கண், பட்டாடை

நேத்திரவீட்சணம் = அருளோடு பார்த்தல்

நேத்திராம்பு = கண்ணீர்

நேபத்தியம் = நாடகமேடையில் வேடம் தரிக்கும் இடம்

நேமகம் = நியமித்தல், ஒழுங்கு, இருப்பிடம்

நேமம் = நியமம், காலம், எல்லை, பாதி

நேமி = சக்கரம், கடல், சக்கரவாளப்பறவை, வட்டம், தேர் உருள், பூமி

நேமிவலயம் = பூமண்டலம்

நேயம் = எண்ணெய், நெய், பக்தி, அன்பு, நன்மை

நேரலர்
நேரார் } = பகைவர்

நேரி = விந்தமலை

நேரிசம் = அம்புவகை, எறிபடை

நேரிழை = பெண்

நேரேடு = நாவல்மரம்

நேர் = உவமை, உடன்பாடு, வலிமை ஒப்புரவு, சரி, செவ்வை நீதி, நுட்பம், பாதி, பிகுதி, கூடுதல், நேர்மை, பரிதி

நேர்ச்சி = இணக்கம், சம்மதம், நட்பு, தகுதி, நேர், சபதம் செய்தல்

நேர்தல் = கொடுத்தல், உடன்படல், செல்லல், சம்பவித்தல், வேண்டுதல், இண்டல், பொருந்துதல், எதிர்ப்படல், பெறுதல்

நேர்த்தி = திருத்தம், சிறப்பு முயற்சி

நேர்த்திக்கடன் = பிரார்த்தனை செய்துகொண்டது

நேர்ந்தார் = நண்பர்

நேர்மை = நுண்மை, செவ்வை, நீதி

நேர்வு = கொடை, எதிர்த்தல், உடன்படுதல்

# நை

நைகரம் = துன்பம், வருத்தம், குறைவு

நைசர்க்கிகம் = இயல்பு

நைச்சிகம் = தாழ்வு

நைதல் = வதங்கல், வருந்தல், கெடுதல், குறைதல்

நைத்தல் = உண்ணல், கெடுத்தல், எரித்தல்

நைத்தியம் = நித்தியத்துவம்

நைமித்திகம் = விசேட ஆராதனை

நையல் = துன்பம், மெலிவு

நையாண்டி = இகழ்ச்சி, பரிகாசம்

நையாயிகன் = நியாயசாஸ்திரி

நைவரல் = இரங்குதல்

நைவளம் = பாலைப்பண், குறிஞ்சியாழ்த்திறம்

## நொ

நொ = துன்பம், நோய், மென்மை

நொக்குதல் = அடித்தல்

நொங்குதல் = விழுங்குதல்

நொசிதல் = நுண்மையாதல், வளைதல், வருந்துதல், வாடல், அருமையாதல்

நொச்சி = மதில், சிற்றூர், மதில் காத்தல், ஒரு பூ

நொடி = சொல், விடுகதை, காலநுட்பம், கைநொடிப்பு, ஒடி

நொடுத்தல் = விற்றல்

நொடை = விலை, பலபண்டம்

நொண்டல் = முகத்தல்

நொதி = பெருஞ்சோறு

நொதுத்தல் = அழித்தல், தளர்தல்

நொதுமலர் = அயலவர்

நொதுமல் = விருப்பு வெறுப்பு இல்லாமை, அயல், மென்மை

நொந்தார் = பகைவர்

நொப்பு = நுரை

நொய்து = விரைவு, இழிவு, மெல்லியது

நொய்ப்பம் = சமர்த்து

நொய்மை = எளிமை, மென்மை

நொவ்விதாக = விரைவாக

நொவ்வு = தளர்வு, வருத்தம்

நொள்குதல் = முகத்தல், சுருங்குதல்

நொள்ளை = குருடு

நொறில் = ஒடுக்கம், விரைவு, நுடக்கம்

நொறுங்கு = சிறுநொய்

நொறுவை = சிற்றுண்டி

# நோ

நோ = துன்பம், வியாதி

நோக்கம் = எண்ணம், அழகு, காவல், அறிவு, பார்வை, கண், விருப்பம்

நோக்கன் = கழைக்கூத்தாடி

நோக்கு = அழகு, எண்ணம், கண், அறிவு

நோக்குதல் = காத்தல், கருதல், பார்த்தல்

நோட்டம் = விலை, மதிப்பு

நோதல் = துன்புறல், இரங்குதல், வறுமைப்படல்

நோப்பாளம் = கோபம்

நோய் = வருத்தம், நோய், துன்பம்

நோய்முகன் = சனி

நோலாதார் = தவம் இல்லார், பொறுமையில்லார்

நோலாமை = தவம் இன்மை, பொறுமை

நோலுதல் = நோற்றல், பொறுத்தல்

நோலை = எள்ளுருண்டை

நோற்பு = தவம், பொறுத்தல்

நோற்றல் = பொறுத்தல், தவம்செய்தல்

நோறுமை = பொறுமை

நோறார் = தவம் இல்லார், பொறுமை இல்லார்

நோனுதல் = தவம்செய்தல், பொறுத்தல்

நோன்பு = தவம், விரதம்

நோன்மை = பொறுமை, தவம், வலிமை

நோன்றல் = பொறுத்தல், தாங்கல்

நோன்றாள் = வலியகால்

# நௌ

நௌ = மரக் கலம்

நௌவி = மான்

பகடி = பரிகாசம், விகடம், கூத்து

பகடு = எருது, பெருமை, வலிமை, அகலம், மரக்கலம், ஆண் யானை

பகண்டை = விகடப்பாடல்

பகம் = அழகு, பெண்குறி, அவா இன்மை மோட்சம் ஐசுவரியம் புகழ் திரு ஞானம் வைராக்கியம் ஆகிய ஆறு குணங்கள்

பகரம் = அழகு, பிரதி

பகர்தல் = சொல்லுதல், விற்றல், ஒளிர்தல், கொடுத்தல்

பகலவன் }
பகல் } = சூரியன்

பகல் = ஒளி, சூரியன், தினம், நடுநிலை, உச்சிவேளை, பிரிவு, நடு, நுகத்தின் நடு ஆணி, பகுத்தல், முகூர்த்தம், நாள்

பகவதி = பார்வதி, காளி

பகவன் = கடவுள், குரு, சிவன், முனிவன்

பகவான் = கடவுள், சூரியன்

பகவு = பிளவு, பிரிவு, பங்கு, துண்டு

பகழி = அம்பு, அம்பின் இறகு

பகன்றை = கிலுகிலுப்பை

பகிரண்டம் = அண்டத்தின் வெளி

பகிர் = துண்டம், வெளிப்புறம், பங்கு

பகினி = உடன் பிறந்தாள்

பகீரதி = கங்கை

பகு = அதிகமான

பகுதி = குடிமக்கள் செலுத்தும் வரி, இயல்பு, பங்கு

பகுத்தறிவு = நன்மை தீமைகளைப் பிரித்தறியும் அறிவு

பகுவசனம் = பன்மை

பகுவாய் = பிளவுபட்டவாய்

பகுளம் = கிருஷ்ணபட்சம்

பக்கநுத்தல் = நொறுங்குதல்

பக்கணம் = ஊர், வேடர்தெரு

பக்கத்தார் = மந்திரிகள், இனத்தவர்

பக்கம் = அருகு, சகாயம், சட்டம், இறகு, நட்பு, புட்டம், சேனை, பதினைந்து நாட்கள் கொண்டது, இடம், தன்மை

பக்கரை = சேணம்

பக்கறை = துணியுறை, சட்டம்

பக்தி - பட்சி
பக்துவம் = ஆற்றல், தகுதி
பங்கஜம் = தாமரை
பங்கம் = சேறு, துண்டு, தோல்வி, பழுது, பயம், பாவம், கொலை, பங்கு, பின்னம், அவமானம், பிரிவு
பங்கயம் = நாரை, தாமரை
பங்கயன் = பிரமன்
பங்கி = ஆண்மயிர், புறமயிர், வகை
பங்கு = முடம், சனி, பாகம்
பங்குனன் = அர்ச்சுனன்
பங்குனி = உத்திராட நட்சத்திரம், ஒரு மாதம்
பங்கேருகம் = தாமரை
பசத்தல் = நிறமாறுதல், பசுமையாதல், பொன்னிறமாதல்
பசப்பு = ஏமாற்றம், பசலை
பசப்புதல் = மயக்குதல், ஓயாமற் பேசுதல்
பசலை = தேமல், வருத்தம், பொன்னிறம், இளமை, காமநிற வேறுபாடு
பசறு = பச்சிலைச் சாறு
பசனம் = வழிபாடு, சமைத்தல்
பசாசம் = பேய்
பசாசரதம் = பேய்த் தேர்
பசிதம் = விபூதி, சாம்பல்

பசு = உயிர், பசு எருது, மிருகம், யாகத்திற்குரிய ஆடு, ஆன்மா
பசுகரணம் = சீவச்செயல்
பசுங்கதிர் = சந்திரன்
பசுத்துவம் = மிருகத்தன்மை
பசுநிரை = பசு மந்தை
பசுந்தி = அழகு, நேர்த்தி, மேன்மை
பசுபதி = உயிர்களின் தலைவன், சிவபெருமான்
பசுபாசம் = மலம்
பசுபாலனம் = பசுவைக் காத்தல்
பசுபாலன் = ஆபுத்திரன், கோபாலன்
பசுபுண்ணியம் = சீவன்களுக்குச் செய்யும் புண்ணியம்
பசுப்பட்டி, பசுமந்தை = பசுத் தொழுவம்
பசுமை = ஈரம், பசுமை, இளமை, பொன்னிறம், செவ்வி, செழுமை
பசும்பிடி = பச்சிலை
பசை = ஈரம், சாரம், இலாபம், பற்று, அன்பு, பயன், இரக்கம், பக்தி
பச்சவடம் = நீண்டசீலை
பச்சிமம் = பின், முதுகு, மேற்கு

பச்சை = மரகதம், புதன், பசுமை, தோல், ஒரு நிறம், இளமை, ஈரம், கலியாண வரிசை, பயறு

பஞ்சகம் = ஐந்தின் கூட்டம்

பஞ்சகல்யாணி = ஐந்து நடையுடைய குதிரை

பஞ்சகவ்யம் = கோமயம், கோசலம், தயிர், பால், நெய்

பஞ்சகிருத்தியம் = இறை செய்யும் ஐவகைத் தொழில்கள், அவை படைப்பு, காப்பு, அழிப்பு மறைப்பு, அருளல்

பஞ்சசக்தி = இச்சாசக்தி, ஞானசக்தி, ஆதிசக்தி, கிரியாசக்தி, பராசக்தி

பஞ்சதந்திரம் = மித்திரபேதம், சுஹிர்ல்லாபம், சந்திவிக்ரகம், லப்தஹானி அசம்பிரேட்சிய காரித்துவம் ஆகிய ஐந்து உபாயங்கள்

பஞ்சதாரை = சீனி, சர்க்கரை

பஞ்சதிரவியம் = பஞ்சகவ்வியம்

பஞ்சதிராவிடர் = தெலுங்கர், திராவிடர், கன்னடர், மகாராஷ்டிரர், கூர்ஜரர்

பஞ்சத்துவம் = மரணம்,

பஞ்சநதம் = திருவையாறு

பஞ்சபாண்டவர் = தருமன், பீமன், அர்ச்சுனன், நகுலன், சகாதேவன்

பஞ்சபாதகம் = சூதாடல், காமம், கள்ளுண்ணல், பொய்மொழிதல், ஈதல் மறுத்தல்

பஞ்சபூதம் = மண், நீர், தீ, காற்று, விண்

பஞ்சம் = ஐந்து, பஞ்சகாலம்

பஞ்சரம் = பறவைக்கூடு, உடம்பு, இடம்

பஞ்சரித்தல் = விரிவாய்ப் பேசல், கெஞ்சிக் கேட்டல்

பஞ்சலட்சணம் = ஐந்திலக்கணம், எழுத்து, சொல், பொருள் யாப்பு, அணி

பஞ்சலிங்கம் = திருவாரூரில் உள்ள மண்வடிவான லிங்கம், திருவானைக்காவில் உள்ள நீர்வடிவான லிங்கம், திருவண்ணமலையில் உள்ள அக்கினி வடிவான லிங்கம், திருக்காளத்தியிலுள்ள காற்று வடிவான லிங்கம், சிதம்பரத்திலுள்ள ஆகாய வடிவான லிங்கம்

பஞ்சவடி = ஒருதலம், மயிரினாலான பூணூல்

பஞ்சவன் = பாண்டியன்

பஞ்சவாசம் = ஐந்து வகையான வாசனைப்பொருள்கள், அவை, இலவங்கம், ஏலம், கர்ப்பூரம் சாதிக்காய், தக்கோலம்

பஞ்சாக்கரம் = ஐந்தெழுத்தால் ஆன மந்திரம், நமசிவாய

பஞ்சாக்கினி = நான்கு திசைகளிலும் அமைக்கப்பட்ட தீயுடன் மேல், சூரியனாகிய தீயும் சேர்ந்த ஐந்து அக்கினிகள்

பஞ்சாங்கம் = திதி வாரம், நட்சத்திரம், யோகம், கரணம்

பஞ்சாமிர்தம் = பால், தயிர், நெய், தேன், சர்க்கரை

பஞ்சாயத்து = ஐவர் கூடிய நியாய சபை

பஞ்சாயுதம் = சங்கு, சக்கரம், கதை, வாள், வில்

பஞ்சாய் = கோரை

பஞ்சானனம் = சிங்கம்

பஞ்சி = வெள்ளிய ஆடை, செம்பஞ்சுக்குழம்பு, நார்

பஞ்சுரம் = பாலைப்பண்

பஞ்சை = தரித்திரன், பிச்சைக்காரன், பலஈனன்

பஞ்ஞிலம் = மக்கள் தொகுதி

படகம் = மத்தளம், பாண்டம், பரண்; கலகம், பறை

படங்கன் = கூடாரம், மேற்கட்டி

பஞ்ஞிலம் = மக்கள் தொகுதி

படங்கு = கூடாரம், ஆடை பெருங்கொடி, மேற்கட்டி, இடுதிரை

படப்பு = வைக்கோற்போர், கொல்லை

படப்பை = தோட்டம், பக்கம், ஊர்ப்புறம், கொல்லை

படமரம் = நெய்வார்கருவி

படம் = சீலை, காற்றாடி, திரைச் சீலை, ஆடை, சட்டை, கொடி, காற்றாடி

படர் = துன்பம், நினைவு வருத்தம், ஏவல் செய்பவர், தூதர்

படர்ச்சி = நடை, பரவுதல்

படர்தல் = வருந்துதல், நினைத்தல், செல்லுதல்

படலம் = மூடி, கண்படலம், கூடு, இலக்கியங்களில் வரும் ஒரு சிறுபாகு பாடு, கூட்டம், பரப்பு, விதானம், அடுக்கு

படலிகை = பூந்தட்டு, வட்டம், பூம்பெட்டி, கண்ணோய்

படலை = இலைமாலை, பரந்த வடிவு, தழை, கூட்டம், வெளிக்கதவு

படனம் = படித்தல்

படாகை = விருதுக்கொடி

படாம் = சீலை, பெருங்கொடி, முகபடாம்

படி = ஒப்பு, குணம், சம்பளம், பூமி, விதம், உருவம், பிரதி, வேடம், கற்படி, வகை, முறைமை

படிகம் = பளிங்கு

படிகாரர் = வாயிலாளர்

படிகை = யானைபோல்தவிசு

படிக்கால் = ஏணி

படிச்சந்தம் = பிரதிவடிவம்

படிதம் = மாணிக்கம், துதி

படிதல் = இருந்தல், குளித்தல், கலத்தல், அமைதல், அமர்தல், தணிதல்

படித்தரம் = நியந்தனை

படித்தல் = சொல்லுதல், படித்தல், துதித்தல், பழகுதல்

படித்திரம் = கூட்டிறைச்சி

படித்துறை = ஸ்நான கட்டம்

படிப்பனை = போதனை

படிமக்கலம் = கண்ணாடி

படிமத்தான் = மருள்வந்து ஆடுபவன்

படிமம் = சுத்தம், வெண்மை, வடிவம், பாவை, விரதம், பூதம், வெறியாட்டு

படிமா = ஒப்பு

படிமானம் = இருத்தம், விலை குறைதல், கீழ்ப்படிதல்

படிமை = தவவேடம், விரதம்

படியளந்தோன் = இருநால்

படிவம் = வடிவம், உடம்பு, தான் வழிபடு தெய்வம், விரதம், தோற்றம், தவவேடம்

படிவர் = முனிவர் [

படிவு = வடிவு, குளித்தல், அழுந்துதல், அடங்குதல்

படிறர் = வஞ்சகர், திருடர்

படிறு = களவு, பொய், வஞ்சகம், கொடுமை

படுகம் = சந்தானம், கருங்காலி

படு = கள், நாளம், கொடுமை, பெரிய, மரத்தின் குலை, கூர்மை, கொடிய, நிபுணன், பேரறிவு

படுகர் = நீர்நிலை, இறங்கி ஏறும் வழி, பள்ளம், வயல்

படுகளம் = யுத்தகளம்

படுகாடு = சுடுகாடு

படுகால் = ஏணி

படுகை = ஆற்றங்கரை அடுத்த வயல், நீர்நிலை

படுநாசம் = முழுநாசம், மருந்துத்தாள்

படுநாயிறு = மாலையின் மறையும் சூரியன்.

படுதம் = கூத்துவகை

படுதல் = சாதல், அழிதல், மறைதல், துன்புறுதல், தொங்குதல், தாழ்தல், ஒலிதல், உடன்படுதல், பொறுத்தல், தங்குதல், உண்டாதல்

படுத்தல் = செய்தல், சேர்ப்பித்தல், வளர்த்தல், பரப்புதல், வீழ்த்துதல், தாழ்த்தல், அழித்தல், அகப்படுத்தல், கிடைத்தல், உறங்குதல்

படுத்துவம் = வல்லமை
படுநிலம் = பாலைநிலம், மயானம்
படுபனை = காய்க்கும் பனை
படுபொருள் = நிகழ்வது, புதைபொருள்
படுவர் = கள்விற்பவர்
படுவி = கற்பில்லாதவள், குறியவர்
படுவை = தெப்பம்
படை = அடுக்கு, கல்லணை, பரிவாரம், மெத்தை, தானை, கலப்பை, நிரை, ஆயுதம்
படைக்கலம் = ஆயுதம்
படைச்சால் = உழுபடைச்சால்
படைத்தல் = பரிமாறுதல் பெறுதல்
படைத்துணை = போர்ச் சகாயம்
படைப்பு = செல்வம், சிருஷ்டி, சிருஷ்டிக்கப் பட்ட பொருள்.
படைப்பௌஞ்சு = படை வகுப்பு
படைமுகம் = போர் முகம்
படையெடுத்தல் = சேனை எழுதல்
படையெழுச்சி = சேனை யெழுதல்
படைவகுப்பு = படையணி
படைவரம் = குதிரைச் சேணம்



படைவீடு = ஆயுதச்சாலை, பாசறை, கூடாரம்
பட்சம் = உருக்கம், பக்கம் நேசம், அன்பு, கட்சி
பட்சாந்தம் = அமாவாசை பூர்ணிமை
பட்சிசாலம் = பறவைக் கூட்டம்
பட்சித்தல் = உண்ணால், விழுங்கல்
பட்சியம் = பலகாரம்
பட்டகசாலை = பண்டகசாலை
பட்டடைக்கழனி = தண்ணீர் இறைத்துப்பயிரிடும் கழனி
பட்டணப் பிரவேசம் = நகரி வலம் வருதல்
பட்டணவர் = செம்படவர்
பட்டம் = காற்றாடி, பருவம், நீர் நிலை, கவரிமா, குளம், நெற்றிப் பட்டம், வழி, விலங்கின் படுக்கை, பட்டம், மேலாடை, உயர் பதவி
பட்டயம் = வாள், பிரசித்த மான பத்திரிகை
பட்டர் = ஆதி சைவப்பிராமணர்
பட்டவர்த்தனர் = பட்டந் தரித்த மன்னர், சிற்றரசர்
பட்டன் = ஞானி, புலவன்
பட்டாங்கு = மெய், சாஸ்திரம்

பட்டாரகர் = குருக்கள் இருடிகள்

பட்டி = அட்டவணை, கள்வன், ஆட்டுக்கிடை, களவு, மனமடக்கமற்றவன், திருட்டுமாடு, சீலை, மந்தை, நாய், வியபசாரி, இடம், சிற்றூர், வெற்றிலைச் சுருள்

பட்டிகர் = திருடர்

பட்டிகை = அரைநாண், ஏடு, யோகப்பட்டி, தெப்பம், செவ்வந்தி, அரசபத்திரம், அரைக்கச்சை

பட்டிக்காடு = காட்டிற்குள் ஊர்

பட்டினவர் = செம்படவர்

பட்டு = சிற்றூர், கட்டியம்

பட்டோலை = அரசர் விடும் கடிதம், காரியக் குறிப்பு எழுதும் ஓலை

பணச்சலுகை = செல்வச் [செருக்கு

பணதரம் = பாம்பு

பணதி = ஆபரணம், வேலைப்பாடு, செயல், கற்பனை

பணம் = பொன், விலை, பாம்பின் படம், யானையை நடத்தும் ஆயுதம்

பணயம் = பந்தயம், அடகு

பணவை = பரண், பேய், கழுகு

பணாடவி = ஆதிசேஷன்

பணாமணி = நாகரத்தினம்

பணி = ஆபரணம், விதி, தொண்டு, கட்டளை, பணிதல், தொழில், பாம்பு, சொல்

பணிக்கன் = உபாத்தியாயன், யானைப்பாகன், அம்பட்டன்

பணிக்களரி = தொழிற் செய்யும் இடம்

பணிக்கு = திருத்தம்

பணிக்கை = நேர்த்தியான செய்கை, பணிதல்

பணிதம் = பந்தயப்பொருள்

பணித்தல் = சொல்லல், குறைத்தல், மிதித்தல், ஏவுதல், தாழ்த்துதல், கொடுத்தல்

பணிமொழி = நன்மொழி

பணியார் = பகைவர்

பணிலம் = சங்கு, முத்து

பணை = அரசமரம், பருமை, மரக்கொம்பு, முரசு, பறை, மிகுதி, மூங்கில், வயல், பந்தி, குதிரை யானை தங்குமிடம், மருதநிலம்

பணைத்தல் = பருத்தல், பிழைத்தல், செழித்தல்

பண் = பாட்டு, இசை, சீர், கல்லணை, நீர்நிலை, தகுதி, அலங்காரம்

பண்டகன் = அலி

பண்டம் = மெய்யுணர்வு, பழம், பொருள் அறிவு, உடல், உண்மை

பண்டர் = அசுரர், பாணர்

பண்டன் = ஆண் தன்மை இல்லாதவன்

பண்டாரசந்நிதி = திருமடத் தலைவர்

பண்டாரம் = பொக்கிஷம், களஞ்சியம், சிவனடியான்

பண்டி = வயிறு, வண்டி, யானை, உரோகிணிநாள்

பண்டிதம் = வைத்தியம்

பண்டிதன் = புதன், புலவன், சுக்கிரன், வைத்தியன், அம்பட்டன்

பண்டு = பழமை

பண்டையர் = முன்னோர்

பண்ணவன் = தேவன், கடவுள், குரு, முனிவன், பாணன்

பண்ணியம் = இசைக்கருவி, பண்டம், சோறு, நுகர் பொருள்

பண்ணுவர் = குதிரைப்பாகர்

பண்ணுறுத்தல் = சீர்ப்படுத்தல்

பண்ணை = நீர்நிலை, மகளிர் கூட்டம், மகளிர் விளையாட்டு, வயல், விலங்கின் படுக்கை, சபை, தோட்டம்

பண்ணையார் = மிராசுதார்

பண்ணைவீடு = தானியவீடு

பண்படுதல் = சீர்திருந்தல்

பண்பி = பண்புடைய பொருள்

பண்பு = குணம், தகுதி, அழகு, முறை, நன்மை செயல்

பண்புரைப்பார் = தூதர்

பதங்கம் = பறவை, விட்டில் பூச்சி

பதங்கன் = சூரியன்

பதச்சேதம்பண்ணுதல் = தொடராய் அமைந்தவற்றைச்சொல், சொல்லாகப் பிரித்தல்

பதடி = பதர், பயன் இன்மை

பதணம் = மதிலுள்மேடை, மதில்

பதநீர் = பனஞ்சாறு

பதப்பாடு = மதில்

பதப்பேறு = பதமுத்தி

பதம் = சொல், பதவி, அடையாளம், இடம், ஈரம், மொழி, சோறு, பக்குவம், மந்திரம், இனிமை, பொருள், பொழுது, முயற்சி, வழி, இசைப் பாட்டு, கள்

பதயுகம் = இணையடிகள்

பதர் = அறிவீனன், பயனற்றது

பதலை = பலை, சாடி, ஒரு கண்பறை, கலசம், தாழி, தோணி

பதலம் = அறுகு

பதலியது = மிருதுவானது

பதவு = அறுகு, புல், புன்மை, அமைதி

பதவை = வழி

பதனம் = பத்திரம், விழுதல் பாதுகாப்பு, இறக்கம், தாழ்மை, அமைதி

பதனி = பனஞ்சாறு

பதன் = பக்குவம், பதம்

பதாகன் = கொடியுடையவன்

பதாகினி = சேனை

பதாகை = பெருங்கொடி

பதாதி = காலாட்படை

பதார்த்தம் = பதத்திற்குப் பொருள், கறி

பதி = ஊர், அரசன், கடவுள், குதிரை, குரு, கணவன், தலைவன், காப்பவன், நாற்று, கோவில்

பதிகம் = பாசி, பாயிரம், பத்துப்பாடல் கொண்டது

பதிகன் = வழிச்செல்வோன், காலாள்

பதிஞானம் = இறை, அறிவு

பதிதல் = அழுந்துதல், ஒடுங்குதல், கீழ்ப்படிதல், பணிதல், பள்ளமாதல்

பதிதன் = ஒழுக்கத்தில் தவறினவன்

பதிபக்தி = கணவன்மீது வைக்கும் அன்பு

பதிமை = பிரதிமை

பதிவிரதம் = மகளிர் கற்பு

பதிவு = சாய்வு, பதிதல்

பதிவைத்தல் = நாற்றுப் பதித்தல்

பதுக்கம் = கபடம், பதுங்கும் தன்மை

பதுக்கை = கற்குவை, சிறு தூறு

பதுமநாபன் = தாமரை நாபியுடைய திருமால்

பதுமநிதி = தாமரைவடிவாய் அமைந்துள்ள பொக்கிஷம், பெருநிதி

பதுமம் = தாமரை, ஈயம், கோடாநுகோடி, ஒருநிதி

பதுமயோனி = பிரமன்

பதுமன் = பிரமன்

பதுமாக்கன் = திருமால்

பதுமினி = முதற்சாதிப் பெண்

பதுமை = இலக்குமி, பாவை, விக்ரகம்

பத்ததி = ஒழுங்கு, வழி, சொற்பொருள், நெறிநூல்

பத்தம் = கட்டு

பத்தயம் = போன்

பத்தர் = தொட்டி, குடுக்கை, அடியார்
பத்தல் = நீர் இறைக்கும் சால், குழி
பத்தாயம் = பெட்டி
பத்தி = வரிசை, வீட்டிறப்பு அன்பு, தொண்டு, பக்தி
பத்திசாரர் = திருமழிசை யாழ்வார்
பத்திமை = அன்பு, பக்தி
பத்தியம் = பாட்டு, நன்மை
பத்திரம் = அழகு, இலை, இறகு, வாள், உடை, உறுதிப்பத்திரம், அழகிய உருவம், அம்பு, நன்மை, பாதுகாப்பு, பொன், ஏடு
பத்திராசனம் = சிங்காசனம்
பத்திரி = அம்பு, இலை, குதிரை, பறவை
பத்திரை = காளி, நற்பசு
பத்திரைகேள்வன் = வீரபத்திரன்
பத்தினி = மனைவி, கற்புடையாள்
பத்தினிக்கடவுள் = கண்ணகி
பந்தணம் = பற்று
பந்தம் = உறவு, கட்டு, கை விளக்கு, உடல், திரட்சி, நூல், மயிர்முடி, தொடர்பு
பந்தர் = பந்தல்
பந்தனம் = கயிறு, கட்டல்
பந்தனை = கட்டு
பந்தி = வரிசை, குதிரைச் சாலை, ஒழுங்கு
பந்தித்தல் = கட்டுதல்
பந்து = சுருள், நீர்வீசும் கருவி, சுற்றம்
பப்பு = பரப்பு, ஒப்பு
பப்புவர் = புகழ்வோர்
பமரம் = வண்டு, பேரொலி
பம் = நட்சத்திரம்
பம்பல் = துளி, களிப்பு, பரந்தவடிவு
பம்புதல் = எழுதல், நெருங்குதல், பொலிதல், பரவல், செறிதல், ஒலித்தல், வேடிக்கை செய்தல்
பம்பை = சுருண்ட மயிர், முல்லைப்பறை, ஒருநதி
பம்மல் = மூடுதல், பின் வாங்குதல்
பம்முதல் = மூட்டம் போடுதல், செறிதல்
பயசு = நீர், பால்
பயத்தல் = கொடுத்தல், விளைதல், பலித்தல், பிறப்பித்தல், பூத்தல், பெறுதல்
பயப்பு = இருமை, நிறம், தோமல், பசப்பு
பயம் = அச்சம், நீர், பால், பயன்

பயம்பு = பள்ளம், யானை படுகுழி
பயனை = பசப்பு
பயனுரைத்தல் = உரைகூறல்
பயன் = பால்,பொருள்,பயன்
பயிக்கம் = பிச்சை
பயிர் = பறவைக்குரல்,விலங்கொலி, பசுமை, பயில், வாச்சியம், சைகை, பயிர்
பயிர்தல் = அழைத்தல், இசைத்தல்
பயிர்த்தல் = அமைத்தல், அருவருத்தல்
பயிர்ப்பு = அருவருப்பு,மனம் கொள்ளாமை, பிசின்
பயிலல் = நெருங்கல்,பழகல், தங்குதல், கற்றல், சொல்லுதல், நிகழ்தல், ஒலித்தல்
பயில் = சைகை
பயிறல் = ஒலித்தல்
பயினி = இணக்கம், ஒருபூ
பயின் = குருத்து, பிசின், அரக்கு,பாலேடு, சுக்கான்
பயோததி = பாற்கடல்
பயோதரம் = முலை, மேகம், கடல், பால்
பரகதி = மோட்சம்
பரகாயப்பிரவேசம் = உடல் விட்டு வேறோர் உடலில் புகுதல்
பரகாயம் = பிறசரீரம்
பரகீயம் = பிறர்க்கு உரியது
பரக்கழி = பழி, கீழ்மை
பரக்கழிவு = பழிவிளைதல்
பரசிவம் = கடவுள்
பரசு = கோடரி, மழு, மூங்கில்
பரசுதல் = துதித்தல்
பரசுபாணி = சிவன், பரசுராமன்
பரஞானம் = சிவஞானம், இறைஞானம்
பரஞ்சுடர் } = கடவுள்
பரஞ்சோதி }
பரடு = காடு, கணு
பரணம் = தரித்தல், தாங்குதல்
பரணி = நகைப்பெட்டி, பரணிநாள் ஒருவகைப் பிரபந்தம், ஆயிரம் யானைகளைக்கொன்ற வீரமகன் மீது பாடப்படும் நூல்
பரதசாத்திரம் = நடன சாத்திரம்
பரதந்திரம் = சுதந்தரமின்மை
பரதம் = கூத்து, நடனநூல்
பரதர் = செம்படவர், நெய்தல் நிலமக்கள், வணிகர்
பரதவருடம் = பரதகண்டம்
பரதவர் = நெய்தல் நில மக்கள்

பரதனம் = பிறர்பொருள்
பரதாரம் = பிறன் மனைவி
பரதேவன் = கடவுள்
பரத்தர் = தூர்த்தர், காமுகர்
பரத்துவம் = கடவுள் தன்மை
பரத்தை = வேசி, வேற்றுப் பெண்
பரந்தாமம் = வைகுந்தம்
பரந்தாமன் = திருமால்
பரபட்சம் = பிறமதத்தர் களில் தன்மைகளைக் கூறும் பகுதி, விரோதம்
பரபதம் = மோட்சம்
பரபத்தி = சிவபத்தி
பரபத்தியம் = பணங் கொடுக்கல் வாங்கல் பண்ணுதல்
பரபோகம் = பேரின்பம்
பரம = சிரேஷ்டமான, பிர தானமான
பரமகதி = மோட்சம்
பரமகுரு = மேலான குரு ஆசிரியர்க்கு ஆசிரியர்
பரமண்டலம் = வானுலகம்
பரமதம் = பிறசமயம்
பரமபதம் = மோட்சம்
பரமம் = முதன்மை, மேன் மை, முதற் கடவுள்
பரமலோகம் = மோட்சம்
பரமன் = சிவன், கடவுள், பெரியவன்
பரமாகாயம் = வெறுவெளி
பரமாணு = அதிருட்சும அணு
பரமாத்துமன் = சந்நியாசி, கடவுள், பெருமையிற் சிறந்தவன்
பரமாத்மா = கடவுள்
பரமார்த்தம் = ஞானார்த்தம், மெய்ம்மை, உண்மை அறிவு
பரமான்னம் = சர்க்கரை புணரவு
பரமுத்தி = சாயுச்சியம், மோட்சம்
பரமேஸ்வரன் = கடவுள், சிவன்
பரமேட்டி = பிரமன்
பரம் = கடவுள், பாரம், உடல், முன், மோட்சம், சட்டை, கேடகம், உத்த மம், மேலானது, மேலுல கம், அன்னியம், சார்பு
பரம்பரன் = கடவுள்
பரம்பரை = வரன்முறை, வரிசை முறை, வம்சம்
பரம்பு = வயலைத் திருத் தும் பலகை, வரப்பு,
பரம்புதல் = நிறைதல்
பரர் = அன்னியர், பகைவர்
பரல் = விதை, பருக்கைக் கல்
பரவசம் = தன்வசமற்றிருத் தல், பிரமை, மூர்ச்சை மிகுகளிப்பு

பரவர் = செம்படவர், வலைஞர்
பரவுதல் = துதித்தல், பரத்தல், புகழ்தல், போற்றுதல்
பரவை = கடல், ஆடல், பரப்பு
பரவைவழக்கு = உலகவழக்கு
பரற்பரம் = ஒன்றுக்கொன்று
பரன் = கடவுள், பிறன், ஆன்மா, மேலானவன், அன்னியன்
பரஸ்பரம் = ஒருவர்க்கொருவர்
பரா = மிகுதி
பராகம் = மகரந்தம், தூளி
பராக்கு = அசட்டை, பலவற்றையும் பார்த்தல், வேறு புலனாய் இருத்தல், கவனமின்மை
பராங்குசர் = நம்மாழ்வார்
பராசயம் = தோல்வி
பராசரன் = வியாசர் தந்தை
பராசியம் = பலர் அறிந்தது
பராதீனம் = சுதந்திரமற்றது
பராபரம் = சிவம்
பராபரன் = பரமேசுவரன்
பராபரை = பார்வதி
பராபவம் = தோல்வி, அபசாரம்
பராமரிசம் = ஆராய்ச்சி
பராமரித்தல் = வளர்த்தல், ஆலோசித்தல், ஆதரித்தல்
பராமரிப்பு = விசாரிப்பு
பராமுகம் = முகங்கொடாமை
பராயணம் = பெருவிருப்பு, நன்னிலை, குறிப்பு
பராயத்தம் = பிறர் ஆதீனம்
பராரை = பருமரத்தடி
பரார்த்தம் = ஆயிரங்கோடி, பிறர்க்கு உபகாரமானது
பராவணம் = துதிக்கப்படும் பொருள்
பராவு = வாழ்த்து, வணக்கு
பரான்னம் = பிறர் கொடுத்த போசனம்
பரி = குதிரை, பெருமை, விரைவு, செலவு, சுமை, மிகுதி
பரிகம் = அகழி, வளைதடி
பரிகரம் = இடைக்கட்டு பரிவாரம், கட்டில்
பரிகரித்தல் = நீக்கல், கடத்தல், குற்றங்களைதல்
பரிகலச்சேடம் = உச்சிட்டம்
பரிகலம் = சேனை, பரிவாரம், குருமார் உண்கலம்
பரிகாரம் = நீக்குகை, மாற்று மருந்து, பிராயசித்தம்
பரிகாரி = அம்பட்டன், வைத்தியன்
பரிக்காரர் = குத்துக்கோல்காரர்

பரிக்கிரகம் = மனையவர்கள், சபதம்

பரிக்கிரமம் = சுற்றுதல் அலைந்து திரிதல்

பரிசம் = தொடுதல், ஒரு புலன், பெண்ணிற்குக் கொடுக்கும் வெகுமதி

பரிசயம் = பழக்கம், உறவு

பரிசனம் = உறவு, ஏவல் செய்வோர் தொடுதல்

பரிசனவேதி = இழிந்த லோகங்களை பொன்னாக்கும் மருந்து

பரிசாரகம் = ஏவல்வேலை, வணக்கம், சமையல் தொழில்

பரிசிரமம் = பிரயாசம்

பரிசு = பண்பு, விதம், கொடை, பெருமை

பரிசுத்தாத்மா = மகாஞானி

பரிசை = கேடகம்

பரிச்சயம் = பழக்கம்

பரிச்சேதம் = நூற்களின் உட்பிரிவு, பகுத்தறிதல், எல்லை முழுமை

பரிஞ்ஞானம் = அறிவு

பரிஷ்காரம் = தெளிவு

பரிணதன் = பரிபக்குவமுடையவன், அறிஞன்

பரிணமித்தல் = வேறுபடல்,

பரிணயம் = திருமணம்

பரிணாமம் = வேறுபாடு, விகாரம்

பரிதல் = அறுதல், இரங்கல், அழித்தல், விரைதல், அன்போடு பேசுதல், வருந்துதல், ஓடுதல், பகுத்தறிதல்

பரிதாகம் = வெம்மை

பரிதாபம் = வெம்மை, பெருந்தாகம், இரக்கம்

பரிதானம் = கைக்கூலி, பொருள் கொடுத்துப் பொருள் வாங்குதல்

பரிதி = சக்கராயுதம், சூரிய வட்டம், தேருருளை

பரித்தல் = காத்தல், சுமந்தல், சூழ்தல், தரித்தல், தாங்குதல், ஓடுதல், அறுத்தல்

பரித்தியாகம் = முற்றும் விடுதல்

பரித்தியாகி = சந்நியாசி

பரித்திராசம் = பெரும்பயம்

பரிபக்குவம் = ஏற்றபக்குவம்

பரிபவம் = அவமானம், இகழ்ச்சி, தோல்வி, எளிமை

பரிபாகம் = சாமர்த்தியம், முதிர்ச்சி, சமைக்கைபக்குவம்

பரிபாஷை = குழூஉக்குறி, குறியீடு

பரிபாலனம் = ஆளுகை, காத்தல்
பரிபுரம் = காற்சிலம்பு
பரிபூரணம் = முழு நிறைவு
பரிபூரணன் = கடவுள்
பரிப்பு = இயக்கம், தாங்குதல்
பரிமாணம் = அளவு
பரிமா = குதிரை
பரிமிதம் = எல்லை, அளவு பட்டது
பரிமுகமாக்கள் = கின்னரர்
பரிமேயம் = அளவு பட்டது
பரியகம் = கிங்கிணி
பரியங்கம் = கட்டில்
பரியம் = மணப்பரிசு
பரியவசானம் = முடிவு
பரியாயச்சொல் = ஒருபொருள் குறித்த மறுசொல்
பரியாய நாமம் = ஒருபொருட்கு இனமாய் இருப்பது
பரியாயம் = ஒழுங்கு முறை, பிரதிபதம்
பரியாரம் = பரிகாரம்
பரிவட்டம் = சீலை, விக்கிரக உடை, துண்டு, ஆடை
பரிவருத்தனம் = பொருள் மாற்றுதல்
பரிவாதம் = அபவாதம்
பரிவு = அன்பு, துன்பம், இரக்கம்

பரிவேடம் = சந்திர, சூரியரைச் சுற்றித் தோன்றும் வட்டம்
பரிவேட்பு = வட்டம்
பரிஷ்காரம் = விமரிசை, தெளிவு, உறுதி
பரீஇ = பருத்தி
பருங்கை = பெருஞ்செல்வம்
பருணிதர் = புலவர்
பருதி = சூரியன், வட்டம், தேருருள்
பருந்தாட்டம் = பெருந்துன்பம்
பருப்பதம் = மலை
பருப்பம் = பருமை
பருமம் = கவசம், கல்லணை, மேகலை, அரைப்பட்டிகை, யானைக் கழுத்திடும் மெத்தை
பருமித்தல் = அலங்கரித்தல், படைக்கலம் பயிலல், சிரமஞ் செய்தல்
பருவதம் = மலை, மீன்வகை
பருவதவர்த்தனி = பார்வதி
பருவம் = இளமை, காலம், பக்குவம், பூரணை, பொழுது, வயது
பருவரல் = துன்பமுறல், துன்பம், பொழுது
பருவி = பருத்தி
பருஉ = பருமை
பருஉக்கை = வண்டியின் ஓர் உறுப்பு

பரேர் = மிக்க அழகு
பரை = பார்வதி, ஐந்து மரக்கால் அளவு
பரோட்சம் = காணப்படாதது
பர்க்கன் = சிவபெருமான், சூரியன்
பர்ணசாலை = இலைகளால் அமைந்த குடில்
பர்ணம் = இலை
பர்வதாக்கிரம் = மலையுச்சி
பலகணி = சன்னல்
பலகாரம் = யானைமேல் தவிசு
பலகை = கேடகம், யானை மேல் தவிசு, அப்பவகை
பலசித்தி = பல பேறு
பலதுறை = பலவழி
பலத்தியாகம் = பலனை விடுதல்
பலபட்சணம் = கனியுணவு
பலபத்திரன் = பலராமன்
பலப்பம் = மாக்கல்
பலப்பிராப்தி = பலசித்தி
பலம் = கிழங்கு, பயன் பழம், வலி, நெற்றி, சேனை, வன்மை, உறுதி, எடை
பலர்றிசொல் = அலர்மொழி, பெருஞ்சொல்
பலவு = பலாமரம்
பலாகம் = கொக்கு
பலாசம் = இலை, பசுமை, பலா, புனமுருக்கு
பலாயனம் = புறங்காட்டுதல்
பலாலம் = வைக்கோல்
பலி = மாமிசம், பூசை, காக்கை, சாம்பல், பிச்சை, தேவர் உணவு, ஒரு சக்கிரவர்த்தி, அர்ச்சனைப் பூ
பலிதம் = நரைமயிர், கனியுள்ளது, பலிப்பது
பலிதை = கிழவி,
பலிபுட்டம் = காக்கை
பலினம் = காய்த்திருக்கும் மரம்
பல்கணி = நுழைவாயில்
பல்காழ் = மேகலை
பல்காற்பறவை = வண்டு
பல்குதல் = மிகுதல், பலவாதல்
பல்லணம் = குதிரைக் கல்லணை
பல்லம் = கரடி, அம்பு, ஒரு பேரெண்
பல்லவம் = தளிர், விசாலித்தல், அம்பு, ஒருநாடு
பல்லவர் = பலர், தூர்த்தர் கீழ்மக்கள், ஒருசாதியார்
பல்லாண்டு = வாழ்த்து
பல்லி = சிற்றூர், இடையர் ஊர், வண்டியுறுப்பு, பல்லி, உழுகருவி

பல்லியம் = வாத்தியம், சங்கீதம்
பல்லுகம் = கரடி
பல்லூழி = அநேகயுககாலம்
பல்லூழ் = பலமுறை
பல்வலம் = சிறுகுளம், கிணறு
பல்வலிப்பறவை = சரபம்
பவசாகரம் = பிறவிக்கடல்
பவஞ்சம் = உலகம்
பவணம் = நாகலோகம்
பவதி = பார்வதி
பவமானன் = வாயு
பவம் = பிறப்பு, பாவம், மரம், உலகம், இருத்தல்
பவர் = கொடி, பாவிகள், நெருக்கம்
பவர்க்கம் = நரகம்
பவர்தல் = பரத்தல், கூடுதல், நெருங்கியிருத்தல்
பவனம் = இராசி, பூமி, வீடு காற்று, சுவர்க்கம், விமானம்
பவனன் = காற்று.
பவனாசனம் = பாம்பு
பவனி = உலாப்போதல்
பவன் = கடவுள்- சிவன்
பவானி = பார்வதி, காவிரியின் கிளைநதி
பவிஷு = செல்வம், மானம்
பவித்திரம் = தருப்பை, தருப்பை மோதிரம், தாய்மை, மோதிரம், பூணூல், நெய், தேன்
பவிஷ்யம் = எதிர்காலம்
பவுஞ்சு = சேனை
பவுதிகம் = ஐம்புபூதசம்பந்தமானது
பவுரி = ஒரு கூத்து
பவ்வம் = கடல், பருவம், நுரை
பவ்வியம் = தாழ்மை, அடக்கம்
பழங்கண் = துன்பம், மெலிவு
பழமலை = விருத்தாசலம்
பழம்பொருள் = கடவுள்
பழனமாக்கள் = பள்ளர்
பழனம் = மருதநிலம், வயல், பொய்கை
பழிச்சை = இகழ்ச்சி
பழிச்சுதல் = துதித்தல், வாழ்த்தல், வணங்குதல்
பழு = விலாஎலும்பு பேய், ஏணியின் படிச்சட்டம்
பழுக்கா = பொன்னிறம்
பழுக்காய் = ஒருநிறம், பாக்கு
பழுது = உடம்பு, குற்றம், சிதைவு, பயன் இன்மை
பழுதை = கயிறு, வைக்கோற்புரி
பழுமரம் = ஆலமரம்

பழுவம் = காடு, கூட்டம்
பழை = கள்
பழைமை பாராட்டல் = பழைய உரிமைகளை எடுத்துப்பேசுதல்
பழையர் = கள்விற்போர்
பழையோள் = காடுகிழாள், காளி
பளகு = குற்றம், மூடத்தனம்
பளக்கு = கொப்புளம்
பளிங்கு = கண்ணாடி, சுக்கிரன், கர்ப்பூரம், படிகம்
பளிதம் = கருப்பூரம், பச்சடி, பாற்சோறு, ஒருபேரெண்
பள்குதல் = பதுங்குதல்
பள்ளர் = உழவர்
பள்ளி = இடைச்சேரி, புத்தர் கோயில், மருத நிலத்தார், வேலை செய்யும் இடம், குறும்பன், படுக்கை, பள்ளிக்கூடம், கோவில், உறக்கம், சிற்றூர், ஊர், வன்னியன், முனிவர் வாழ்இடம்
பள்ளிக்கணக்கர் = கற்பவர்
பள்ளித்தாமம் = கோயிலில் சாத்தும் மாலை
பள்ளியந்துலா = படுக்கைப் பல்லக்கு
பள்ளியெழுச்சி = உறக்கம் விட்டு எழுதல்
பள்ளு = உழவுப் பாட்டு
பள்ளை = ஆடு
பள்ளையம் = சிறு தெய்வ ஆராதனை, உண்கலம்
பறட்டை = வளமற்றது
பறண்டுதல் = சுறண்டுதல்
பறண்டை = ஒரு வாத்தியம், கையின் முட்டி
பறத்தல் = அவசரம் பண்ணல், கிளர்தல், விரைவில் ஓடல்
பறந்தலை = சுடுகாடு, போர்க்களம், பாழ் இடம், படைவீடு
பறப்பன் = தேள்
பறப்பை = பறவை, யாக வேதிகை
பறம்பர் = தோல்வினைஞர்
பறம்பி = மோசக்காரி
பறல் = பறவை
பறழ் = குட்டி,
பறளை = குறடு, தகடு
பறி = பொன், கொள்ளை, வலை, ஓலைப்பாய், உடம்பு
பறிதல் = வெளிப்படல், கட்டவிழ்தல், உண்டாதல்
பறை = இறகு, சொல், வாத்தியம், பறவை, அழிகை
பறைதல் = சொல்லுதல், அழிதல், தேய்தல்
பறையலகு = பலகறை
பற்குனன் = அர்ச்சுனன்
பற்சன்னியன் = வருணன்

பற்பதம் = மலை
பற்பம் = தாமரை, தூள்
பற்றலர் = பகைவர்
பற்ருக்கை = அம்புகளைக் கட்டும் கயிறு
பற்றற்ருர் = முனிவர்
பற்ருசு = உலோகங்களை இணைக்கப் பயன்படுத்தும் இடையிடும் துண்டு
பற்ருர் = பகைவர்
பற்று = அன்பு, ஆசை, சிற்றூர், வயல், பசை, நட்பு, பிடி, வாரப்பாடல், செல்வம்
பற்றுக்கோடு = ஊன்றுகோல், கட்டுத்தறி
பற்றுவரவு = கொடுக்கல் வாங்கல்
பற்றுள்ளம் = உலோபம்
பற்றை = செங்காந்தள், சிறுபுதர்
பனசம் = பலாமரம் முள்,
பனவன் = பிராமணன்
பனாட்டு = பனங்கனியில் அட்டது
பனி = துன்பம், குளிர், சொல், அச்சம், நடுக்கம், பயம், நோய், நீர்த்துளி, இனிமை
பனிக்கதிர் = சந்திரன்
பனிச்சை = பின்னி முடிக்கும் மயிர்ச்சுருள், பெண்மயிர்
பனித்தல் = நடுங்கல், துளித்தல், வடிதல், வருந்துதல், அடித்தல்
பனிப்பகை = சூரியன்
பனிமொழி = குளிர்ந்த வார்த்தை, பெண்
பனிவரை = இமயமலை
பனிற்றல் = தூவல்
பனுவல் = நூல், கேள்வி, அறநூல், பஞ்சு, பாட்டு, சொல், கல்வி, ஆராய்ச்சி
பனுவலாட்டி = சரஸ்வதி
பனைக்கொடியோன் = பலராமன்
பன் = அரிவாள், பல
பன்றி = ஒரு கொடுந் தமிழ் நாடு, பன்றி
பன்றிப்பத்தர் = பன்றிக் கூழ்த் தொட்டி,
பன்னகம் = பாம்பு, இலை,
பன்னகாபரணன் = சிவன்
பன்னம் = இலை
பன்னல் = பருத்தி, சொல், ஆராய்தல்
பன்னி = சிப்பு, பனிநீர், பத்தினி
பன்னுதல் = சொல்லுதல், ஆராய்தல், தேர்தல், நெருங்குதல், பின்னுதல், புகழ்தல்
பஃறி = ஓடம், மரக்கலம்
பஃறுளியாறு = குமரியாற்றுக்குத் தெற்கே ஓடிய ஆறு

பா = பரப்பு, பாட்டு, சுத்தம், காத்தல், பஞ்சிநூல்

பாகசாதனன் = இந்திரன்

பாகசாதனி = அருச்சுனன், இந்திரன் மகன்

பாகசாலை = மடைப்பள்ளி

பாகடை = பாக்கு, வெற்றிலை

பாகம் = பிச்சை, பாதி, பங்கு, பக்குவம், பக்கம், சமையல்

பாகலம் = யானை நோய்

பாகல் = பலா, ஒரு கொடி

பாகர் = தேர், தேர்க்கைப்பிடி, யானைப் பாகர்

பாகாரி = இந்திரன்

பாகியம் = புறம்பானது

பாகீரதி = கங்கை

பாகு = குழம்பு, சருக்கரை, பகுதி, பாகன், பாக்கு, பால், பிச்சை, பாகை, கரை, புயம், திறன், அழகு

பாகுடம் = கப்பம், கையுறை

பாக்கம் = ஊர், கடற்கரையூர், அரசன் இருப்பிடம், பக்கவூர், பட்டினம், மருதநிலவூர்

பாக்கன் = பூனை

பாங்கர் = பக்கம், ஒய்யாரம்

பாங்கன் = தோழன்

பாங்கு = அழகு, உரிமை, பாங்கன், தகுதி, மாதிரி, நன்மை, தன்மை, பக்கம்

பாசகன் = அக்னி; சமையற்காரன்

பாசஞானம் = உலக அறிவு

பாசடை = பச்சிலை

பாசண்டம் = வேத ஒழுக்கத்திற்கு வேறான சமயம்

பாசதரன் = வருணன், எமன்

பாசபந்தம் = வலை, மலபந்தம்

பாசபாணி = சிவன், எமன், வருணன்

பாசமோசனம் = பாசநாசம்

பாசம் = அன்பு, கயிறு, வலை, சுற்றம், பாசி, பிசாசம், மாமை, தளை

பாசவர் = கயிறு திரித்து விற்பவர், இறைச்சி இலை விற்பவர்

பாசறை = கூடாரம், போர்க்குச் சென்றவர் வெளியில் அமைத்துக் கொண்ட இடம், துன்பம், இலை அடர்ந்த குகை

பாசனம் = வெள்ளம், சுற்றம், உண்கலம், உறவு, பாத்திரம்

பாசாங்குசதரன் = விநாயகன்

பாசி = நாய், நீர்ப்பாசி, கரிய மணி, கிழக்கு

பாசிலை = பசுமையான இலை, வெற்றிலை

பாசினம் = கிளிக்கூட்டம்

பாசு = பசுமை, மூங்கில், பாசம், தைரியம்

பாசுபதன் = சிவபெருமான்

பாசுபதாத்திரம் = சிவனது அம்பு

பாசுரம் = பாட்டு, வாசகம்

பாஞ்சசன்னியம் = விஷ்ணுவின் சங்கு, தீ, நாணல்

பஞ்சராத்திரம் = வைஷ்ணவ ஆகமம்

பாஞ்சராத்திரி = பாஞ்சராத்திர ஆகமத்தைச் சார்ந்த வைணவம்

பாஞ்சாலி = திரௌபதி, சித்திரப்பாவை

பாடகம் = தெரு, மகளிர் காலணி, பாடுமிடம், துணிவகை, சிவப்பு, நிழல், கரை, கூலி

பாடணம் = சம்பாஷணை

பாடம் = ஒளி, பொன் உறை, படிக்கப்படும் விஷயம்

பாடலம் = குதிரை, பாதிரி மரம், சிவப்பு, சபதம்

பாடவம் = களிப்பு, சமர்த்து, சுகம், பெருமை

பாடாணம் = கல், நஞ்சு

பாடந்தரமாக்குதல் = பிற பாஷையில் அமைத்தல்

பாடாந்தரம் = மறுபாஷை

படி = ஊர், சேனை, பாசறை, நாடு, முல்லை நிலத்தூர்

பாடிதம் = பேச்சு

பாடித்தல் = பேசுதல்

பாடியக்காரன் = உரைவகுப்போன்

பாடியம் = உரை, விருத்தியுரை

பாடிவீடு = பாசறை, கூடாரம்

பாடினி = பாடுபவன்

பாடு = துன்பம், ஓசை, கேடு, இடம், முறைமை உண்டாக்குதல், செவ்வி அத்தமனம், பயன், பக்கம், படுதல், பெருமை, உலகொழுக்கம், உழைப்பு, படுக்கைநிலை, தூக்கம், வேலை, சாவு, பூசுதல்

பாடுகடத்தல் = வரங்கிடத்தல்

பாடுதுறை = புலவர் பாடுதற்குரிய போர்த்துறை

பாடுநன் = பாடுவோன்

பாடுபெயல் = விடாமழை

பாடை = பாஷை, பேச்சு, பாடை

பாட்டம் = தோட்டம், மேகம், மழை, வரி, விளையாட்டுப் பகுதி, தகைமை

பாட்டியம் = பிரதமை, முதல்

பாட்பம் = கண்ணீர் [இந்

பாணர் = தையற்காரர், பாணர் சாதியர், பாட்டுப் பாடிப் புகழ்பவர், வீணர்

பாணி = ஓசை, காலம், கை, தாளம், நீர், அழகு, அன்பு, தாமதம், கூத்து, சொல், நாடு, நீர், பாட்டு, பக்கம்

பாணிகொட்டல் = கைதட்டல்

பாணிக்கிரகணம் = கைப்பற்றல், விவாகம்

பாணித்தல் = தாமதித்தல், பின்வாங்குதல்

பாணிநீயம் = பாணினி முனிவர் செய்த வடமொழி இலக்கணம்

பாணிமுகம் = உடல் விட்டு உயிர் போகும் முறை

பாணு = பாட்டு

பாணி = இசைப்பாட்டு, காலம், தாளம், கூத்து, அழகு, கை, பக்கம், நீர், சொல், ஊர், ஓசை, தாமதம், காலம், அன்பு, நாடு, பாட்டு, செவ்வி

பாண்டரங்கம் = சிவனார் கூத்து

பாண்டரங்கன் = சிவன்

பாண்டல் = பழமை, துர்நாற்றம்

பாண்டவர் = பஞ்சபண்டவர்

பாண்டாகாரம் = பண்டசாலை

பாண்டி = எருது, மாட்டு வண்டி, பாண்டிய நாடு

பாண்டித்தியம் = புலமை

பாண்டியம் = எருது, உழவு, பாண்டி நாடு

பாண்டில் = அகலம், எருது, கிண்ணி, கட்டில், தாளம், குதிரைச் சேணம், விளக்குக்கால், வண்டி, வட்டம், வாகைமரம், நாரையெருது

பாண்டில்விளக்கு = பாதவிளக்கு

பாண்டு = வெண்மை, ஓர் அரசன், ஒருவகை நோய்

பாண்டுகம்பளம் = இந்திரன் ஆசனம்

பாண்டுரம் = வெண்மை

பாதகுறடு = மிதியடி

பாதங்கம் = சாம்பல், பொடி

பாதசரம் } = ஒருகாலணி
பாதசாலம் }

பாததாடனம் = உதை

பாதபம் = மரம்

பாதம் = மரவேர், நீர், செய்யுளடி, கால்

பாதவம் = தோட்டம், மரம், மலை, தோப்பு

பாதனம் = வணக்கம், கீழ்முகம்

பாதாதிகேசம் = அடிமுதல் சிரசு வரை

பாதாளமூலிகை = நெருஞ்சில்

பாதாரவிந்தம் = பாததாமரை

பாதாளம் = நரகம், பிலம்

பாதிடுதல் = பங்கிடுதல்
பாதீடு = காத்தல்பங்கிடுதல்
பாதேயம் = கட்டுச் சோறு
பாதை = மரக்கலம், துன்பம், முறை, வழி
பாதோதகம் = பாதநீர்
பாத்தல் = பங்கிடுதல்
பாத்தி = பயிர் இடும் மேடை
பாத்தியம் = திருவடி அலம்பக் கொடுக்கும் நீர், உரிமை
பாத்திலார் = வேசியர்
பாத்து = இணை, சோறு, நீக்கம், ஐம்புல இன்பம், பங்கு
பாந்தம் = இணக்கம், ஒழுங்கு
பாந்தவம் = உறவுமுறை
பாந்தள் = பாம்பு
பாந்தன் = வழிச்செல்வோன்
பாபரகிதன் = பாவமற்றவன்
பாபவிமோசனம் = பாவ நீக்கம்
பாமகள்
பாமடந்தை } = சரஸ்வதி
பாமம் = பரப்பு, பிரபை, புண், கோபம்
பாமரம் = மூடத்தனம், இழிவு
பாமினி = பெண்
பாமுதல்வி = சரஸ்வதி
பாம்பு = ஆயில்யம், வரம்பு
பாம்புரி = அகழி
பாயசம் = பாற்சோறு
பாயம் = மனத்திற்கு விருப்பமானது, புணர்ச்சி, விருப்பம்
பாயல் = படுக்கை, உறக்கம், பாதி
பாயிரம் = முகவுரை, வரலாறு
பாயுரு = குதம், மலம் கழி வாயில்
பாய்ச்சல் = பெருக்கல்
பாய்மா = குதிரை, புலி
பாரகம் = பூமி, திரைச்சீலை
பாரகன் = கரைகண்டவன், தாங்குபவன்
பாரங்கதன் = கல்வியில் கரை கண்டவன், தாங்குபவன்
பாரசிகை = பருந்து
பாரணம் = விரதமிருந்துண்டல், மேகம், திருப்தி
பாரதர் = குருகுல வேந்தர்
பாரதவருஷம் = பரதகண்டம்
பாரதி = சரஸ்வதி, சொல், பண்டிதன், மரக்கலம்
பாரதியரங்கம் = சுடுகாடு
பாரத்துவாசம் = கரிக்குருவி
பாரபத்தியம் = அதிகாரம், மேல் விசாரணை
பாரமார்த்திகம் = பரமார்த்த சம்மந்தமானது

பாரம் = கரை, கவசம், சுமை, கனம், பருத்தி, தோணி, பொறுப்பு, பெருங் குடும்பம், பருத்திச்செடி

பாரம்பரியம் = வழிவழியாய் வந்தது, ஐதிகம்

பாராசரி = வியாசன்

பாராசாரி = பாரிக்குதிரை

பாராயணம் = நியமமாகப்

பாராவதம் = புரு [படித்தல்

பாராவளை = சுழல்தடி

பாராவாரம் = கடல், கடற்கரை

பாரி = கடை எழுவள்ளல்களில் ஒருவன், கட்டில், நல் ஆடைகள், பூமி, ஊர், பெரிது, மனைவி, சிங்கம், கள்

பாரிசம் = பக்கம், திசை, வசம்

பாரிசாதம் = ஒருதேவதாரு, பவள மல்லிகை

பாரிசேடம் = எஞ்சியது

பாரிடம் = பூதம், பூமி

பாரித்தல் = உண்டாக்கல், சுமத்துதல், பரப்பல், பருத்தல், காத்தல், தோன்றுதல், வளர்த்தல், அணிதல், சுமையாதல், வளைத்தல்

பாரை = கடப்பாரை

பார் = பூமி, தடை, பாறை, தேரின்பரப்பு, வன்னிலம், தட்டு, பருமை

பார்க்கவன் = சுக்கிரன், பரசுராமன்

பார்க்கவி = பார்வதி, திருமகள்

பார்சுவம் = பக்கம்; விலா

பார்த்தன் = அருச்சுனன்

பார்த்திபன் = அரசன்

பார்ப்பு = பறவைக் குஞ்சு

பார்வல் = பார்த்தல், காவல், பகைவரது வருகையைப் பார்க்கும் அரண் உச்சி, பார்வை மிருகம்

பார்வை = கவனம், கண், மதிப்பு, சூனியம்

பாலடி = பாற்சோறு

பாலமை = அறியாமை

பாலம் = நெற்றி, மழு, பூமி

பாலலோசனன் = நெற்றிக் கண்ணன், சிவன்

பாலலோசனி = உமை

பாலனம் = காத்தல்

பாலாட்சன் = சிவன், நெற்றிக் கண்ணன்

பாலார்க்கன் = இளஞ்சூரியன்

பாலி = பாலாறு, ஒருபழைய மொழி

பாலிகை = உதடு, கத்திப் பிடி

பாலித்தல் = ஈதல், காத்தல்

பாலை = பிரிவு, பாலைநிலம், பாலைப்பண், மிருக சீருட நாள்

பாலை = நீரோட்டம், பிரிவு, வெப்பம், பெண்குழந்தை மணல் நிலம், ஒருமரம், ஒரு பண்

பாலைக்கிழத்தி = துர்க்கை

பால் = இடம், இயல்பு, ஊழ், குணம், திசை, பகுதி, பக்கம், பங்கு, நன்னெறி, பாதி, முலைப்பால், சாறு, வெண்மை, குலம்

பால்மாறுதல் = சோம்பி இருத்தல்

பாவகம் = கருத்து, தூய்மை, உருவம், அக்கினி, பாவனை, அபிநயம், தியானம், தோற்றம், மச்சுவீடு

பாவகன் = அக்கினி, தூய்மை செய்பவன்

பாவகாரி = பாவம் செய்பவன்

பாவகி = முருகன்

பாவநிவாரணம் = பாவம் நீக்குதல்

பாவமூர்த்திகள் = வேடர்கள்

பாவம் = மெய்ப்பாடு, விளையாட்டு, அபிநயம், கருத்து தீய செயல்

பாவல் = பரவுதல், பாத குறடு

பாவனன் = வீமன், அனுமான்

பாவனாதீதம் = பாவனைக்கு எட்டாதது

பாவனி = கங்கை, பசு

பாவனை = எண்ணம், தியானம், அபிநயம்

பாவாடம் = நாவை அறுத்துக் கொள்ளும் பிரார்த்தனை

பாவாடை = கோலம், நிலைச்சீலை, ஆடைச்சோறு

பாவித்தல் = எண்ணுதல், பாவனைசெய்தல், தியானித்தல்

பாவை = பெண் பொம்மை, ஒரு நோன்பு

பாழி = அகலம், குகை, சிறுகுளம், போர், பாழ், வலி, விலங்கு, முனிவர் வாசம், பெருமை, தாங்குமிடம், கோயில், ஊர், நகரம், வீடு, குகை, பகைவர் ஊர்

பாளிதம் = குழம்பு, கருப்பூரம், பால்சோறு, பட்டுப் புடவை

பாளை = கருப்பருவம்

பாளையப்பட்டு = பாளையக்காரர்களுக்கு விடப்பட்ட கிராமக்கூட்டம்

பாளையம் = பாசறை, சேனை

பாறல் = எருது

பாறு = பருந்து, மரக்கலம், கழுகு

பாறுதல் = ஓடுதல், அழிதல் சிதறுதல், நீங்குதல், ஒழுங்கறுதல்

பாறை = திட்டை

பாற்கரன் = சூரியன், ஒளியுள்ளவன்

பாற்குணம் = பங்குனி

பாற்பட்டார் = துறவியர், நல்லமுறையில் நடப்பவர்

பாற்றுதல் = நீக்குதல், ஓட்டுதல்

பானபத்திரம் = கிண்ணம்

பானல் = கருங்குவளை மலர், வயல்

பானாள் = பாதி இரவு

பானித்தல் = குடித்தல்

பானியம் = நீர்

பானு = சூரியன், ஒளி

பான்மை = தன்மை, தகுதி, ஊழ், நல்வினைப்பயன்

பாஸ்கரன் = சூரியன்

பாஷாந்தரம் = பிறபாஷை

# பி

பிகம் = குயில்

பிக்குணி = பௌத்தப் பெண் துறவி

பிங்கலம் = குரங்கு, பொன் வடக்கு, பொன்நிறம்

பிங்கலன் = குபேரன்

பிங்கலை = பார்வதி, வல மூக்குவழியேவரும், சுவாசம்

பிங்குசம் = தலைக்கோலம்

பிசி = அரும் பொருள், சோறு, பொய், விடுகதை

பிசிதம் = ஊன், வேம்பு, நீறு

பிசிதாசனன் = இராக்கதன்

பிசிர் = துளி, மழை

பிசினம் = கோட் சொல்

பிசுனம் = காகம், உலோபம் பொய், கோள்

பிச்சம் = ஆண் மயிர், வெண் குடை, வால், மயில் தோகை

பிச்சாடனம் = பிச்சைக்குத் திரிதல்

பிச்சி = முல்லை

பிச்சியார் = சைவத் தவப் [பெண்

பிச்சு = பித்து

பிஞ்சகம் = தலையலங்காரம்

பிஞ்சம் = இறகு, மயில் தோகை

பிஞ்ஞகன் = சிவபெருமான் சங்காரம் செய்பவன்

பிஞ்ஞை = நப்பின்னைப் பிராட்டியார்

பிடகம் = பௌத்தாகமம், ஓலைப்பெட்டி, பிச்சை, கூடை
பிடகன் = வைத்தியன், புத்தன்
பிடகை = பூங்கூடை, பூந்தட்டு
பிடல் = கதவு
பிடி = பெண்யானை, பற்று, உறுதி, தர்ப்பை
பிடியல் = சிறுதுகில்
பிட்குதல் = கத்துதல்
பிட்டம் = இடித்தமா, ஈயம், பிருஷ்ட பாகம்
பிணக்காடு = யுத்தகளம்
பிணக்கு = சண்டை, நெருக்கம், மாறுபாடு
பிணங்குதல் = வெறுத்தல்
பிணர் = கோங்கு, சமம் இல்லா வடிவு
பிணவு = பெண், விலங்கின் பெண்
பிணா = பிணவு, பெண்
பிணி = கட்டு, நோய், துன்பம், பின்னல்
பிணிதல் = சாதல்
பிணிமுகம் = அன்னம், மயில், பறவை, முருகன் யானை
பிணியகம் = காவல்
பிணை = ஆசை, கட்டு, பூமாலை, இணைமான்
பிணைதல் = கலத்தல்
பிணைத்தல் = கட்டல், தொடுத்தல்
பிணையல் = மாலை
பிண்டக்காப்பு = சோறு
பிண்டப்பிரசாதம் = பிதிர் பூசை
பிண்டப்பொருள் = சடப் பொருள், தொகுக்கப் பட்ட பொருள்
பிண்டம் = உடல், கர்ப்பம், கவளம், பிச்சை, பிதிர்களுக்கு இடும் அன்னத் திரட்சி
பிண்டவுரை = பொழிப்புரை
பிண்டாரி = கொள்ளைக்காரன்
பிண்டி = அசோகமரம், அரிசி மா, புனர்பூசம், வடிவம்
பிண்டிகை = கடிவாளம்
பிண்டித்தல் = திரளல்
பிண்டிபாலம் = எறி ஆயுதம்
பிதா = தந்தை, பிரமன்
பிதாமகன் = பாட்டன், பிரமன்
பிதிசாரம் = பரிகாரம்
பிதிராச்சிதம் = முன்னோர் ஈட்டி வைத்த பொருள்
பிதிர் = கதை, திவலை, பொடி துண்டம், பொறி, சேறு, தந்தை, தென்புலத்தார் முதாதையர், தேமல்
பிதிர்க்கடன் = இறந்தவர்க்குச் செய்யும் கடன்

பிதிர்நாள் = அமாவாசி, இறந்தோர் நாள்
பிதிர்வழி = பிதா வமிசம்
பிதிர்வனம் = சுடுகாடு
பித்தளை = செம்பும் துத்தநாகமும் கலந்த உலோகம்
பித்தி = சிறுசண்பகம், சுவர்பங்கு
பித்திகை = சிறுசண்பகம், சுவர், சாதி மல்லிகை
பித்தை = தலைமயிர்
பிந்து = புள்ளி, விந்து, துளி
பிபீலிகை = எறும்பு
பிப்பலம் = அரசு, நீர்
பியல் = பிடர்
பிரகடம் = வெளிப்படை
பிரகடனம் = விளம்பரம்
பிரகரணம் = அத்தியாயம், ஆயுதம்
பிரகஸ்பதி = தேவகுரு
பிரகாண்டம் = அடிமரம்,
பிரகாரம் = ஒப்பு, விதம்
பிரகிருதி = இயல்பு, பகுதி, பஞ்ச பூதம், பிரதானம், பிரபஞ்ச மூலமாயிருக்கும் மாயை, வலி, மறைவு
பிரக்கினை = அறிவு, உணர்வு, பிரஞ்ஞை
பிரசண்டமாருதம் = பலத்த காற்று
பிரசண்டம் = மிகு வெப்பம், மிகுவேகம், வலிமை, கடுமை
பிரசித்தி = புகழ்
பிரசம் = தேனீ, தேன், வண்டு, பூந்தாது
பிரசம்சை = புகழ்ச்சி
பிரசரம் = வேகம், வெளியாதல்
பிரசன்னம் = மகிழ்வு, காட்சி, தூய்மை
பிரசாதம் = அருள், களங்கமின்மை, நிவேதித்த பொருள்
பிரசாபதி = அரசன், பிரமன்
பிரசாபத்தியம் = பெண் சுற்றமும் ஆண் சுற்றமும் ஒத்துத் திருமுன்னர்ச் செய்யும் மணம்
பிரசாரணம் = விரித்தல்
பிரசாரம் = பாவச்செய்கை, வெளியீடு
பிரசினம் = கேள்வி
பிரசூரன் = சுக்கிரன்
பிரசூதம் = பிள்ளைபெறுதல்
பிரசை = குடி, கனம், சந்ததி
பிராஞ்ஞன் = அறிஞன்
பிரஞ்ஞாபங்கம் = அறிவு, கேடு
பிரஞ்ஞை = அறிவு, சரஸ்வதி

பிரஷ்டம் = தள்ளுபடி
பிரஷ்டன் = வழுவினவன்
பிரடை = முறுக்காணி
பிரட்டம் = முதன்மை, தள்ளுதல்
பிரணயம் = அன்பு, நிழப்படி
பிரணவம் = ஓங்காரம் [தல்
பிரதானம் = கீர்த்திபிரகாசம், பெருமை, வெப்பம், வீரம்
பிரதி = பதில், ஒத்ததன்மை
பிரதிட்டை = சடங்கு, தாபனம்
பிரதிநிதி = ஒத்தவடிவம், சமமாக வைக்கப்பட்டது
பிரதிபந்தம் = தடை
பிரதிமானம் = யானைக்கொம்பின் நடு
பிரதிமை = விக்கிரகம், ஒத்தது
பிரதிலோமன் = இழிந்த ஆணிற்கும் உயர்ந்த பெண்ணிற்கும்பிறந்தோன்
பிரதீகம் = அவயவம், பிண்டம்
பிரதீசி = மேற்கு
பிரதேசம் = இடம்
பிரஸ்தாபம் = குறித்துச் சொல்லுகை
பிரதோடம் = பிரதோஷம், மாலைக் காலம்.
பிரஸ்தாபித்தல் = குறித்துச் சொல்லுதல்
பிரஸ்தாவனை = கட்டியம், துவக்கம்
பிரத்தியக்கம் = கண்கூடு
பிரத்தியக்கு = மேற்கு
பிரத்தியாக்கியானம் = தள்ளுதல், மறுத்தல்
பிரபஞ்சம் = உலகம், விசாலம்
பிரபஞ்சவைராக்கியம் = உலக வெறுப்பு
பிரபந்தம் = பாமாலை, நூல் திவ்யபிரபந்தம்
பிரபலம் = முக்கியம், மிகுவலி
பிரபன்னம் = அடைதல்
பிரபாகரன் = சூரியன், சந்திரன், அக்கினி
பிரபாவம் = ஒளி, மகத்துவம், வன்மை, கீர்த்தி
பிரபுத்துவம் = மகத்துவம்
பிரபை = ஒளி, துர்க்கை
பிரபுத்தன் = இளைஞன்
பிரபோதம் = நற்புத்தி, துயிலின்மை, பேரறிவு
பிரப்பு = கலத்தில் வைத்த பல்லுரு, பேருண்டி
பிரமகத்தி = பிராமணக் கொலை
பிரமகுலம் = பிராமணசாதி
பிரமசாரியம் = கற்றுவிரதங் காத்து விவாகமின்றி இருக்கும் நிலை
பிரமசூத்திரம் = முப்புரிநூல், வேதாந்த சூத்திரம்

பிரமஞானம் = கடவுளை யறியும் அறிவு

பிரமணம் = சுழற்சி

பிரமதகணம் = கைலாயத்திலிருக்கும் பத்த சமூகம்

பிரமதண்டம் = பிராமணர்க்குரிய கோல்

பிரமதாயம் = வரியில்லாமல் பிராமணர்க்குக் கொடுக்கும்நிலம்

பிரமபுரம் = சீர்காழி

பிரமமணம் = பிரமசாரிக்குக் கன்னிகையைத் தீ முன்னர்க் கொடுக்கும் மணம்

பிரமம் = கடவுள், மந்திரம், தவறு, சுழல் காற்று, முத்தி, யாகம், வேதம், கலக்கம், சுழற்சி

பிரமயாகம் = வேதமோதல்

பிரமரந்திரம் = சிரத்தின் உச்சித் துவாரம்

பிரமரம் = வண்டு

பிரமராட்சதன் = துர்மரணமடைந்த பிராமணப் பேய்

பிரம்மராயன் = பார்ப்பன மந்திரி

பிரமரி = கூத்து, விகற்பம், சுழலல்

பிரமலிபி = பிரமாவின் எழுத்து

பிரமலோகம் = சத்தியலோகம்

பிரமவமிசம் = பிராமணச் சாதி

பிரமாணம் = அளவை, ஆணை, மெய்யுணர்வு, மூகாந்தரம், விதி

பிரமாண்டம் = உலகம், காத்திரம், ஒரு புராணம், மிகப் பெரியது

பிரமாதம் = தவறல், மதியீனம், அளவு கடந்த அபாயம்

பிரமாத்திரம் = பிரமாஸ்திரம், பிரமபாணம்

பிரமானந்தம் = பேரின்பம்

பிரமி = ஒரு பூடு, சுழல்காற்று

பிரமிதம் = அறியப்பட்டது

பிரமிதி = மெய்யறிவு

பிரமித்தல் = அதிசயத்தாலும் அச்சத்தாலும் விறைத்தல், திகைத்தல்

பிரமுகம் = மேன்மை, பிரதானம், சிறந்தது

பிரமுகன் = முக்கியன்

பிரமேயம் = அளவிடப்படுவது

பிரமை = மயக்கம்

பிரமோதம் = பெருமகிழ்ச்சி

பிரம்பு = சூரல், தேர்முட்டி

பிரயாகை = கங்கை, யமுனை சரஸ்வதி, யென்னும் மூன்றும் கூடு மிடத்திலுள்ள ஒருபுண்ணிய க்ஷேத்திரம்

பிரயாசம் = முயற்சி, வருத்தம்
பிரயோகம் = மருந்து, ஏவல், செலுத்துகை
பிரலாபம் = புலம்புகை
பிரவரம் = வமிசம்
பிரவர்த்தனம் = செய்கை
பிரவாகம் = நீர்ப்பெருக்கு, குளம், தொழில்
பிரவாலம் = தளிர்
பிரவாளம் = பவளம்
பிரவிடை = ஒரு பெண் பருவம், ஐம்பைத்தைந்து வயதுடைய பெண்
பிரவிருத்தி = செய்கை, முயற்சி, மலக்கழிவு
பிரவிருத்தித்தல் = விரிதல், செய்தல்
பிரவீணன் = சமர்த்தன்
பிரளயம் = அழிவு, வெள்ளம், யுகாந்தம்
பிரளயாகலர் = ஆணவமலம், கன்மம் ஆகிய இருமலங்களையுடைய ஆன்மாக்கள்
பிராகாமியம் = நினைத்தபோகமெல்லாம் பெறுவது, ஒரு சித்தி
பிராகாரம் = மதில், பிரகாரம்
பிராகிருதம் = அழியத்தக்கது, இழிசனர் மொழி, திசைமொழி, வடமொழி திரிவு
பிராசனம் = ஊட்டல், உண்கை
பிராசாதம் = கோயில்
பிராசி = கிழக்கு, முன்னுளது
பிராசீனம் = பழமை
பிராஞ்ஞன் = அறிஞன்
பிராட்டி = தலைவி
பிராணன் = காற்று, சிவன், சுவாசம்
பிராணாலயம் = சிவ ஒடுக்கம்
பிராணாயாமம் = பிராணவாயுவை இரேசகபூரக கும்பகஞ் செய்தல்
பிராதக்காலம் = விடியற்காலம்
பிராதா = அண்ணன்
பிராத்தி = ஒரு சித்தி, பேறு, அடைதல்
பிராந்தம் = அருகு
பிராந்தி = சுழலல், மயக்கம்
பிராந்தியம் = சுற்றுப்பட்டு
பிராமணியம் = அத்தாட்சி
பிராமி = சரஸ்வதி, எழுத்துவகை
பிராயச்சித்தம் = பாபபரிஹாரத்திற்காகச் செய்யப்படும் கிரியை
பிராயச்சித்தவிதி = சாந்திமுறை
பிராயம் = பக்குவம், வயதுநிலை

பிராரத்தம் = அனுபவிக்குங் கன்மம், ஊழ்வினை
பிராரம்பம் = ஆரம்பம்
பிரார்த்தனம் = பிரார்த்தனை, மன்றுட்டு, விண்ணப்பம்
பிரீசம் = பிரியம்
பிரியலர் = சிநேகிதர்
பிரிவாற்றுமை = விரக வேதனை
பிருகதி = கத்தரிச்செடி
பிருகுடி = புருவம்
பிருங்கம் = வண்டு
பிருட்டம் = பின்பக்கம், முதுகு, சகனம்
பிருதிவி = பூமி, மண்
பிருதை = குந்திதேவி
பிருத்தியன் = அடிமை
பிருந்தம் } = துளசி
பிருந்தை }
பிரேதம் = பிசாசம், பிணம்
பிரேதவனம் = மயானம்
பிரேரகம் = ஏவுதல்
பிரேரணம் = ஏவுதல்
பிரை = பயன், உறைமோர்
பிலஞ்சுலோபம் = எறும்பு
பிலத்துவாரம் = பாதாளவழி
பிலம் = கீழறை, குகை, வளை
பிலவங்கல் = குரங்கு, மான்
பில்குதல் = வழிதல், பொசிதல்
பில்லி = பூனை, சூனியம்
பிழம்பு = திரட்சி, வடிவம், உடல், கொடுமை
பிழா } = இறை கூடை
பிழார் }
பிழி = கள்
பிழியர் = கள் விற்போர்
பிழியல் = தேன்
பிள்ளை = கரிக்குருவி, காகம், மகன், வயிரவன், இளமை
பிள்ளைக் கிணறு = உட்கிணறு
பிறகிடுதல் = பின்னிடல், தோற்றல், கழிதல்
பிறக்கம் = ஒளி, அச்சம், மரக் கொம்பு, உயர்ச்சி, குவியல், மலை
பிறக்கு = பின், வழு, வேறு, முதுகு, அடுக்கு
பிறங்கடை = மகன், வழித் தோன்றல்
பிறங்கல் = உயர்வு, ஒளிர்தல், பெருக்கம், மலை, மிகுதி, திரள், பெருமை, விளக்கம், அரசன்
பிறங்குதல் = விளங்குதல், உயர்தல், சிறத்தல், நிலைமாறுதல், செறிதல், பெருத்தல், ஒலித்தல்
பிறந்தை = பிறவி, பிறந்தகம், சுபாவம், துன்பம்

பிறழ்தல் = மாறு, துள்ளுதல், விளங்குதல், முரிதல், திகைத்தல், இறத்தல், நடுங்குதல்,
பிறப்பிலி = கடவுள்
பிறழ்வு = ஒளி செய்தல், நடுக்கம், வேருதல், பெயர்தல்
பிறனில் = பிறன் மனைவி
பிருண்டு = பிற இடம்,
பிறை = பாலச்சந்திரன்
பிறைசூடி = சிவபிரான்
பிறையிரும்பு = அரிவாள்
பிறைபடம் = சந்திரகாரம் என்னும் ஆபரணம்
பிறைமுகவாளி = அர்த்த சந்திர பாணம்
பிற்றை = பின்னை நாள்
பிற்றைநிலை = வழிபடும் நிலை, பிற்பட்டநிலை
பிநாகபாணி = சிவபிரான்
பிநாகம் = சிவன் வில்
பிநாகினி = பெண்ணையாறு
பின்பனிக்காலம் = மாசி பங்குனி மாதங்கள்
பின்பிறந்தாள் = இலட்சுமி, தங்கை
பின்றுதல் = மீளுதல், மாறுபடுதல், பின்னிடுதல்
பின்றை = பின்பு, பின்னுள்
பின்னகம் = மயிர்முடி, பின்னிய மயிர் பேதம்
பின்னணை = வீட்டுக் கொல்லை
பின்னம் = வேறு, பிளவு, பொடி, கீழ்வாய் இலக்கம், மாறுபாடு
பின்னிலை = வழிபடல்
பின்னை = இலக்குமி, தங்கை, பின், நப்பின்னை
பின்னைகேள்வன் = திருமால்
பிக்ஷாடணம் = பிச்சைக் காகத் திரிதல்
பிக்ஷு = சந்நியாசி

# பீ

பீசம் = அண்டம், விதை,
பீசாட்சரம் = மந்திரத்தில் முக்ய எழுத்து
பீடனம் = துன்புறுத்தல்
பீடிகை = அணிகலச்செப்பு, ஆசனம், கடைவீதி, பூந்தட்டு, முகவுரை, தேர்த்தட்டு முனிவர் இருக்கை

பீடித்தல் = துன்புறுத்தல்
பீடிப்பு = வருந்துகை
பீடு = பெருமை, வலி, ஒப்பு
பீட்டை = இளங்கதிர்
பீதகம் = பொன், வெட்டிவேர், மஞ்சள்
பீதசாலம் = வேங்கைமரம்
பீதம் = பொன், பொன்னிறம்
பீதன் = சூரியன், குடிப்பவன், அஞ்சுபவன்
பீதாம்பரம் = பொற்புடவை
பீதாம்பரன் = விஷ்ணு
பீதி = அச்சம், வேதனை செய்யும் நோய்
பீதை = பொன்னிறப் பூவுள்ள மருதோன்றி மரம்
பீபற்சு = அருச்சுனன்
பீமம் = அச்சம், பெருமை
பீமன் = சிவன், வீமன்
பீரம் = வாகை, பீர்க்கு, தாய்ப்பால், வீரம்
பீரு = அச்சமுள்ளோன், புருவம்
பீர் = அச்சம், பெருக்கு, பசலை, பீர்க்கு, முலைப்பால்
பீலி = ஆலவட்டம், சிறுசின்னம், மயிற்றோகை, மாதர் காலணி, பனங்குருத்து, மதில்
பீலிக்குஞ்சம் = அலங்காரத் தொங்கல்
பீலு = அச்சமுடையோன், அணு
பீழித்தல் = வருத்துதல்
பீழை = துன்பம்
பீழ்த்தல் = பிடுங்குதல்
பீள் = கர்ப்பம்
பீனசம் = மூக்கடைப்பு, நோய்
பீனம் = பருமை, பெருமை

## பு

புகடுதல் = வீசியெறிதல்
புகட்டல் = உட்புகுத்தல், பருகச்செய்தல்
புகரோன் = சுக்கிரன்
புகர் = கபிலநிறம், குற்றம், சுக்கிரன், நிறம், அழகு, ஒளி, புள்ளி, கறை
புகர்முகம் = யானை, ஒரு பாணம்
புகலி = சிர்காழி, புதுக்குடி
புகலிடம் = ஊர், கஞ்சம்
புகலுதல் = சொல்லுதல், விரும்புதல், தெரிதல், மகிழ்தல், ஒலித்தல்

புகல் = உடல், விருப்பம், இருப்பிடம், சொல், தஞ்சம், வெற்றி, புகுதல், புகழ், கொண்டாடுதல், துணை

புகல்வி = மிருகங்களில் ஆண்

புகல்லு = மனச்செருக்கு, விருப்பம்

புகவு = உணவு

புகழாவாகை = அக்கி, கர்வம்

புகழ்பொருள் = உவமேயம்

புகறல் = சொல்லல், விரும்புதல்

புகற்சி = விருப்பம், காதல்

புகா = உணவு

புகார் = காவிரிப்பூம்பட்டினம், சுழுமுனை, ஆற்றுமுகம்

புகுடி = புருவம், ஒருமாதர் காதணி

புகுதி = சம்பவம், வழி, வருவாய், விட்டுவாயில், நுண்ணறிவு

புகை = தூபம், யோசனை, தாரம்

புக்ககம் = மாமியார் வீடு

புக்கசன் = சண்டாளன், கிழோன்

புக்கில் = உடல், வீடு, புகலிடம்

புங்கம் = மெல்லாடை, அம்பு அம்பினடி, சிறுதுகில், குவியல், உயர்ச்சி, சீலை

புங்கவம் = நந்தி, இடபம்

புங்கவர் = வானோர், உயர்ந்தோர்

புங்காநுபுங்கம் = அம்பின் பின், அம்பு தொடர்கை

புசங்கம் = பாம்பு

புசல் = குச்சுமட்டை

புச்சம் = வால்

புஞ்சம் = திரட்சி, கூட்டம்

புஞ்சவனம் = கருபச்சடங்கு

புடகம் = இலைத்தொன்னை, தாமரை

புடம் = கண்ணிமை, மூடி, எரித்துப் பக்குவப்படுத்தல்

புடவி = பூமி

புடை = பக்கம், முறை, அடி, பகுதி, ஒலி, பகை, போர், வீக்கம்

புடைத்தல் = அடித்தல், குத்துதல், நீந்துதல், வீங்குதல், துவைத்தல், ஆரவாரித்தல்

புடை நூல் = சார்பு நூல்

புடைபெயர்தல் = பக்கத்திற் போதல், கீழ் மேலாதல், அசைதல், வெளியேறுதல்

புடையல் = பனை மாலை

புட்கரம் = ஆகாயம், நீர், நிறைவு, பருந்து, தாமரை, வாள், யானைத்துதிக்கை, நுனி

புட்கரிணி = தாமரைக்குளம், பெண்யானை, கோவில் குளம்

புட்கலம் = நிறைவு, உடம்பு, பிச்சையுணவு

புட்டகமண்டபம் = கூடாரம்

புட்டகம் = புடவை

புட்டம் = காகம், சீலை

புட்பு = கொழுப்பு, குப்பி, வளர்ச்சி, சிறுபடி, பருமை

புட்டில் = குதிரை உணவு கட்டும்பை, கூடு, விரலுறை, கெச்சை, தக்கோலக்காய், அம்பறுத்தூணி

புட்பகாசம் = விமானக்கோயில்

புட்பமஞ்சரி = பூங்கொத்து

புட்பம் = புஷ்பம், பூ, வாழை

புட்பவருடம் = பூமழை

புட்பாகன் = விஷ்ணு

புட்பரசம் = மகரந்தம்

புணரி = கடல், அலை

புணர்ச்சி = இசைவு, கலத்தல்

புணர்ப்பு = இணைப்பு, உடல், மாயம், நட்பு, துணை, தந்திரம், செயல், சூழ்ச்சி

புணை = மரக்கலம், ஒப்பு, உதவி, ஆதாரம்

புண்டரம் = கழுகு, நெற்றிக் குறி, குருக்கத்தி

புண்டரிகம் = தாமரை, புலி, திக்குயானை, வெண்டாமரை, கமண்டலம், வண்டு

புண்டரிகன் = திருமால்

புண்ணியதிசை = வடதிசை

புண்ணியன் = சிவன், கடவுள்

புண்ணியாகவாசனம் = தூய்மைக்கிரியை

புண்டரீகாக்ஷன் = விஷ்ணு

புண்ணீர் = இரத்தம்

புண்பொருலை = புண்சிரங்கு

புதவு = கதவு, வாயில், அறுகம்புல்

புதல் = புதர், தூறு, அரும்பு, புருவம்

புதல்வன் = மகன், மாறுகண்

புதவம் = வாயில், கதவு, அறுகு

புதவு = வாயில், கதவு, மதகு அறுகம்புல்

புகற்பூ = கிலப்பூ

புதா = கதவு, பெருநாரை கொக்கு, மரக்கால்

புதினம் = அதிசயம்

புதுநிரை = புதுவெள்ளம்

புதுமை = அற்புதம், அபூர்வம், பழக்கம் இன்மை, அழகு

புதுவது = புதிது

புதை = அம்புக்கட்டு, அம்புக் கூடு, மறைவிடம், புதைபொருள், உடல்

புத்தகம் = மயில் இறகு, நூல்

புத்திகோசரம் = புத்திக்குப் பொருளானது

புத்திபூர்வம் = மனமறிந்தது

புத்திரகாமேட்டி = புத்திரன் வேண்டிச் செய்யும் யாகம்

புத்திரசந்தானம் = பிள்ளைச் சந்ததி

புத்திரிகை = சித்திரப் பாவை

புத்திரேடணை = புத்திர வாஞ்சை

புத்துரை = புதிய உரை

புத்தேணாடு = தேவலோகம்

புத்தேளிர் = வானோர்

புத்தேள் = தெய்வம், புதுமை

புத்தோடு = புதுப்பானை

புநருக்தி = கூறியது கூறல்

புந்தி = மனம், அறிவு, சிந்தை, புதன்

புந்தியர் = புலவர்

புந்திவாரம் = புதவாரம்

புமான் = ஆண்மா, ஆண்மகன்

பும் = ஆண்

புயக்கறுதல் = வெளியேறுதல், பசுமை அறுதல்

புயங்கம் = ஒரு கூத்து, [பாம்பு

புயங்கன் = சிவன்

புயலேறு = இடி

புயல் = மேகம், காற்று, நீர்

புய்தல் = மறைதல், பற்றப்படுதல்

புரகரன் = சிவன்

புரணம் = அசைவு, துடித்தல், தோன்றுதல், = வி, மயநகம்

புரணி = ஊன்

புரதகனன் = சிவபிரான்

புரத்தல் = அருளல்

புரந்தரன் = இந்திரன்

புரமெரித்தோன் = சிவபிரான்

புரம் = இராஜதானி, ஊர், முன், வீடு, மேல்மாடம், கோயில், உடல்

புரவலன் = அரசன், காப்போன், கொடையாளி

புரவி = குதிரை, குதிரை யானைகளைக் கட்டும் இடம்

புரவிரயன் = சிவன்

புரவு = கொடை, காத்தல், அரசர்கப்பம், வரியிலா நிலம், ஆற்று நீர் பாயும் நிலம்

புராணபுருஷன் = விஷ்ணு

புராணம் = பழமை, பழங் கதை

புராதனம் = பழமை

புராரி = சிவபிரான்

புராவிருத்தம் = இதிகாசம்

புரி = மருதநிலவூர், ஆசை, கட்டு, யாழ்நரம்பு, கயிறு, முறுக்கு, செயல், உடல், நகர், இராஜதானி, ஊர்

புரிக்கூடு = நெற்கூடு

புரிசை = மதில்

புரிதல் = விரும்பல், செய்தல், தியானித்தல், கொடுத்தல், சொல்லுதல், விசாரித்தல், மிகுதல், அசைதல், விளங்குதல்

புரித்தல் = புதித்தல், விரும்பச்செய்தல்

புரிமுகம் = சங்கு, கோபுரம்

புரியட்டகாயம் = சூக்குமதேகம்

புரிவு = தொழில், தவறு, அன்பு, ஆசை, தெளிவு

புரீடம் = மலம், அழுக்கு

புரு = பருமை, மிகுதி, குழந்தை

புருகூதன் = இந்திரன்

புருடன் = ஆன்மா, புருஷன்

புருஷகாரம் = ஆண்மை, முயற்சி

புருஷார்த்தம் = அறம் பொருள் இன்பம் வீடு

புரூரம் = புருவம்

புரை = உள்துளை, குரல்வளை, விளக்குமாடம், குற்றம், பொய், இலேசு, கூறுபாடு, உயர்வு, வீடு, ஆச்சிரமம், கோவில், அறை, பக்கம்

புரைதல் = ஒத்தல், பொருந்தல், மறைத்தல், நேர்தல்

புரைத்தல் = பெருமையாதல், குற்றப்படுதல், மறைவுவெளிப்படுதல்

புரையோர் = உண்மைப்பொருள் உணர்ந்தவர், பெரியோர்

புரோகம் = நாய், முன் செல்லல்

புரோகிதன் = இந்திரன், ஊர்ச்சோதிடன், சடங்கு செய்வோன்

புரோசர் = குறுநிலமன்னர்

புரோசை = யானைக் கழுத்திடு கயிறு

புரோட்சணம் = மந்திரநீரைத் தெளித்தல்

புரோதம் = குதிரை மூக்கு,

புரோதாயம் = தூய்மை நீரில் குளிக்கை

புரோவாதம் = பொருளை முன்னர்க் கூறுவது

புலத்தகை = ஊடல்

புலத்தல் = அறிவுறுத்தல், மனம் வேறுபடல், துன்புறுதல், வெறுத்தல்

வில்லுவம் = வில்வமரம்

வில்லேருழவர் = வில்வீரர், பாலைநிலத்தார், வேடர்

வில்லேப்பாடு = அம்பு விழும் எல்லை

விவகாரம் = வழக்கு

விவசாயம் = முயற்சி, பயிர்த் தொழில், வேளாண்மை

விவச்சுவான் = சூரியன்

விவத்தை = நன்னிலை, ஏற்பாடு, ஒழுங்குமுறை

விவரணம் = விவரம், வியாக்கியானம்

விவரம் = துளை, பிரிவு, வகை

விவர்த்தனம் = விபரீத உணர்வு திரும்புதல், வளர்தல்

விவிதம் = பலவிதம்

விழல் = வீண், ஒருபுல்

விழவு = திருவிழா, மிதுன ராசி, அகங்காரம்

விழா = கொண்டாட்டம், உற்சவம்

விழாவணி = விழாச்சிறப்பு, வீரர் போர்க்கோலம்

விழி = கண்மணி, கண்

விழிப்பு = எச்சரிக்கை

விழுக்காடு = குறைவு, வீதம், விழுதல், வேறுபாடு, பொருளின்றிக் கூட்டும் சொல்

விழுக்கு = நிணம்

விழுதல் = சாதல்

விழுது = வெண்ணெய், ஆல்விழுது

விழுப்பம் = ஆசை, சிறப்பு, நன்மை, மேன்மை, உயர்வு

விழுப்பகை = பெரும்பகை

விழுப்பு = தீட்டு, அநாசாரம், நீக்கக்கூடியது, அசுத்தம்

விழுப்பொருள் = மேன்மையான பொருள்

விழுமம் = சிறப்பு, சீர்மை, நன்மை, துக்கம், வருத்தம்

விழுமியோர் = பெரியோர்

விழைச்சு = இளமை, புணர்ச்சி

விழைதல் = ஆசைப்படல், ஒத்தல்

விழைந்தோர் = கணவர், விரும்பினோர்

விழைவு = ஆசைப்பெருக்கம், கலத்தல்

விளக்குமாறு = துடைப்பம்

விளம்பம் = தாமதம்

விளம்பல் = சொல்லல்

விளம்பனம் = தாமதம்

விளம்பி = கள்

விளரி = இரங்கல் பண், யாழ்

விளர் = இளமை, கொழுப்பு, நிணம், வெண்மை

விளர்தல் = வெளுத்தல், முதிராதிருத்தல்

விளர்த்தல் = வெளுத்தல், வெட்குதல்

விளர்ப்பு = வெளுப்பு

விளவு = வெடிப்பு, வேறுபடல், விளாமரம்

விளா = விளாமரம்

விளாகம் = போர்க்களம், சூழ்இடம்,

விளாக்கைத்தல் = உழுதல்

விளாவல் = உழுதல், கலத்தல்

விளி = இசைப்பாட்டு, அழைப்பு, ஓசை, கூப்பிடு, கொக்கரிப்பு

விளிதல் = சாதல், கெடுதல், சொல்லுதல், பாடுதல், கூப்பிடுதல், நாணமடைதல், குறைதல் கழிதல், கோபித்தல்

விளித்தல் = அழைத்தல், சொல்லுதல், அழித்தல், பேரிரைச்சல் இடுதல்

விளிம்பு = கரை, அருகு, ஓரம்

விளிவு = சாவு, கேடு, தூக்கம், வெட்கம், பேரொலி

விளைஞர் = மருதநில மக்கள்

விளையுள் = வயல், விளைதல், முதிர்கை

விளைவு = பயன், சம்பவித்தல், தான்யம், ஆக்கம், முதுமை, கருத்தோற்றம்

விள் = பேசுதல்

விள்ளல் = தழுவல், திறத்தல், பேசுதல், மலர்தல், விடுதல், மாறுபடுதல்

விறத்தல் = வெற்றிபெறுதல், மிகுதல், செறிதல், அஞ்சுதல்

விறப்பு = அச்சம், பெருக்கம், செறிவு

விறலி = பாடும் மகள், மெய்ப்பாடு தோன்ற ஆடிப்பாடுபவள்

விறல் = பெருமை, வலி, வெற்றி, வீரம், மிகுதி

விற்கிடை = வில்கிடக்கும் தூரம், நான்கு முழ அளவு

விற்படை = அம்பு

விற்பத்தி = சொற்குரிய வேர்ப்பொருள், புலமை, கல்வி வன்மை

விற்பன்னர் = புலவர்

வினயம் = வணக்கம், சூழ்ச்சி கொடுஞ்செயல், அடக்கம்

வினவல் = அளவளாவுதல், கேட்டல்

வினா = கேள்வி, சொல்

வினை = கருத்து, செயல், ஏவல், பரிகாரச் செயல், போர், நல்வினை, தீவினை, முயற்சி, தந்திரம்

வினைஞர் = வேளாளர், செயலாளர்

வினைமுதல் = கருத்தா

வினையம் = செயல்

வினையிலி = கடவுள்

வினையுரைப்போர் = தூதுவர்

வின்னாண் = வில்லில் பூட்டும் கயிறு

விஷமம் = வன்மம், துஷ்டச் செயல்

விஷயம் = சிறப்பியல்பு

விக்ஷேபம் = கலக்கம், வீசுதல், திரிபு

## வீ

வீ = பறவை, பூ, நீக்கம், கேடு, ஒழிவு, மரணம், அழிவு

வீகம் = மோதிரம்

வீக்கம் = பெருமை, கட்டு, பருமை, மிகுதல்

வீக்கு = கட்டு

வீக்குதல் = அழித்தல், கட்டுதல், அடக்குதல், முறுக்குதல், நிறைத்தல், வேகமுறச்செய்தல்

வீங்குதல் = பூரித்தல், ஏக்கம் கொள்ளுதல்

வீசம் = $\frac{1}{16}$ வித்து, முளை, காரணம், மாகாணி, பங்கு

வீசல் = ஈதல், எறிதல், சிதறுதல்

வீசனம் = சிற்றால வட்டம், விசிறி

வீசி = அலை, சுகம், அற்பம்

வீசிமாலி = சமுத்திரம்

வீசை = மீசை

வீடல் = சாதல், விடுதல்

வீடாரம் = பாசறை

வீடி, வீடிகை = தாம்பூலம்

வீடு = மோட்சம், முடிவு, விடு, விடல், வினைநீக்கம்

வீடுமன் = பீஷ்மன்

வீட்சணம் = பார்வைவிழுதல்

வீட்டுதல் = கொல்லுதல், நீக்குதல், அழித்தல்

வீட்டுநெறி = மோட்சவழி

வீணாகானபுரம் = யாழ்ப்பாணம்

வீணாதண்டம் = முதுகெலும்பு

வீணைவல்லோர் = கந்தருவர்

வீதசோகம் = அசோகு

வீதம் = நட்பு, விழுக்காடு, சமாதானம், அளவுமுறை பங்கு, அமைதி, விடப்பட்டது

வீதராகர் = பற்றற்றவர்

வீதல் = கெடுதல், சாதல், நீங்குதல், விடுதல்

வீதி = போதல், அகலம், வரிசை, பிரபை, நேரோடல், விசாலம்

வீதிஹோத்திரம் = அக்னி

வீபத்சு = அர்ச்சுனன்

வீமசேனன் = தமயந்தியின் தந்தை, வீமன்

வீமம் = பயங்கரம், பருமன்

வீம்பு = பெருமை

வீரகம் = அலரி

வீரகேயூரம் = இரும்புத் தோளணி

வீரக்கழல் = வீரத்தண்டை

வீரட்டானம் = இறைவன் வீரம் காட்டிய இடம்

வீரதரு = மருது

வீரதை = வீரம்

வீரபத்திரம் = அசுவமேதக் குதிரை

வீரபத்தினி = கண்ணகி

வீரபானம் = யுத்த முடிந்த பின் அருந்தும் பானம்

வீரப்பாடு = வெற்றி

வீரம் = மிளகு, வலி, வேகம்

வீராணம் = பெரும்பறை

வீரி = காளி, துர்க்கை

வீரியம் = சுக்கிலம், வலி, பிரபை, பராக்கிரமம்

வீரை = துன்பம், கடல், வாழை, நெல்லி

வீவு = சாவு, கேடு

வீழி = வீரக்கனி, விழுத்திப் பழம்

வீழ் = விழுது

வீழ்க்கை = ஸ்வாதி நட்சத்திரம்

வீழ்தல் = ஆசைப்படுதல், திரளுதல், விழுதல், நீங்குதல்

வீழ்த்தல் = விழச்செய்தல், வீணாகக்கழித்தல், தாழ இருத்தல்

வீழ்வு = விரும்பல், விழுதல்

வீளை = சத்தம், சீழ்க்கை

வீறு = புண்ணியம், பெருமை சிறப்பு, பொலிவு, வெற்றி செழுமை, பகுப்பு, தனக்கேயுரிய அழகு

வீறுதல் = மேம்படுதல், மிகுதல், கீறுதல், வெட்டுதல்

வீற்றாதல் = பிரிவுபடுதல்

வீற்றிருக்கை = அரசிருக்கை

வீற்றிருத்தல் = இறுமாந்திருத்தல், சிறப்புடன் அமர்ந்திருத்தல், வருத்தம் இன்றி இருத்தல், தனித்திருத்தல்

வீற்று = தனி, வேறுபாடு, கூறு

வீற்றும் = மற்றும்

வீற்று வீற்று = வேறு வேறு

வேகுட்சி = கோபம்
வேகுமஞ்சரி = துளசி
வேகுமூலம் = முருங்கை
வேகுளி = கோபம்
வேகுளுதல் = பகைத்தல், கோபித்தல்
வேகுள்வு = கோபம்
வேக்கை = மிக்க உஷ்ணம், கடாவிடுகளம், நிலக் கொதிப்பு
வேங்கண் = கொடுமை
வேங்கதிர் = சூரியன்
வேங்களம் = போர்க்களம்
வேங்குரு = கோழி
வேஞ்சமர் = போர்
வேஞ்சுடர் = சூரியன்
வேடி = அச்சம், இடி, கள், நறும்புகை, வெளி, ஒலி, பகை, கேடு, முழக்கம்
வேடித்தல் = வீசுதல், பகைத்தல், முழங்குதல், பிளத்தல், விள்ளுதல்
வேடிபடுதல் = அஞ்சுதல், பேராசையுண்டாதல்
வேட்சி = பசுக் கூட்டங் களைக்கவர்தல், ஒருவகை மலர்
வேகட்டி = வீண், ஒருவகைச் செடி
வேட்டிமை = கொடுமை
வேட்டெனா = கடுமையாக, கொடுமையாக

வெட்டை = வெளிமிகு வெப்பம்
வெண்கமலை = சரஸ்வதி
வெண்கதிர் = சந்திரன்
வெண்களமர் = வேளாளர்
வெண்கை = வெறுங்கை, அழகியகை
வெண்கொல் = வெள்ளி
வெண்சலசமுற்றாள் = சரஸ் வதி
வெண்டலை = தலையோடு
வெண்டாது = வெள்ளி
வெண்டாமரையாள் = சரஸ் வதி
வெண்டேர் = கானல்
வெண்டையம் = ஒரு சிறு மணி
வெண்டோடு = பனந்தோடு
வெண்ணஞ்சு = நிணம்
வெண்ணிலை = கைம்மாற்றுக் கடன்
வெண்பலி = சாம்பல்
வெண்பாட்டம் = கோடை காலமழை
வெண்போழ் = தாழைமலர்
வெண்பொன் = வெள்ளி
வெண்பொன்மலை = கைலா யம்
வெண்மீன் = வெள்ளி
வெண்மலை = கைலாமலை
வெண்மை = அறிவின்மை, இளமை, களங்கமின்மை

வெலரிவனம் = பத்தரிகாஸ்ரமம்

வெதிரேகம் = விசேடம், எதிர்மறை

வெதிர் = மூங்கில், நடுக்கம், செவிடு

வெதிர்ப்பு = கலக்கம், நடுக்கம்

வெதுப்புதல் = வாட்டுதல், வெம்மையாக்கல்

வெதும்புதல் = வாடுதல், கொதித்தல், கோபங்கொள்ளல்

வெந் = முதுகு

வெந்தை = பிட்டு, ஆவியில் வெந்த பண்டம்

வெந்நிடுதல் = புறமுதுகு காட்டல், தோற்றோடுதல்

வெப்பம் = விருப்பம், வெம்மை

வெப்பர் = வெம்மை, சூடான உணவு

வெப்பு = சுரநோய், நெருப்பு, தொழுநோய், வெம்மை, கொடுமை

வெம்பல் = பெருங்கோபம், வெதும்புதல்

வெம்புதல் = ஒலித்தல், வாடுதல், கொதித்தல், விரும்புதல், கோபித்தல்

வெப்புள் = வெம்மை

வெம்மை = உஷ்ணம், விரைவு, கடுமை, ஆசை

வெயர்ப்பு = கோபம்

வெயிலெறித்தல் = ஒளி வீசுதல்

வெயில் = ஒளி, சூரியன், சூரியகிரணம், வெம்மை

வெய்து = கொடியது, விரைவு, விருப்பத்தைத் கொடுப்பது, வெப்பமுள்ளது

வெய்துயிர்த்தல் = பெருமூச்சு விடுதல்

வெய்துறல் = துன்பமுறுதல்

வெய்யவன் = கொடியோன், சூரியன், விரும்பியவன்

வெய்யன் = விரும்பியவன், கொடியவன்

வெய்யோன் = விரும்பியோன், சூரியன், கொடியவன்

வெரிந் = முதுகு

வெரு = அச்சம்

வெருகம் = மிருகங்களின் வாலின் சிறப் பகுதி

வெருகு = காட்டுப்பூனை, மரநாய்

வெருக்கொளல் = அச்சம் கொள்ளல்

வெருட்சி } = அச்சம், மயக்கம்
வெருட்டு }

வெருவந்தம் = அச்சம்

வெருவரல் }
வெருவல் } = அஞ்சுதல்
வெருவுதல் }

வெருவு = அச்சம்

வெருளி = செல்வச்செருக்கு, மயக்கமுடையது

வெருளுதல் = மயங்குதல், [மருளுதல்

வெருள் = மயக்கம்

வெரூஉ = அச்சம்

வெலவு = வெல்லல்

வெலீஇயோன் = வெல்வித் [தோன்

வெல்லுமா = புலி

வெல்வி = வெற்றி

வெவ்வர் = வெம்மை

வெவ்வினை = போர்

வெளி = வெண்பா, புறம், ஆகாயம், வெளியிடம்

வெளிமை = புல்லறிவு

வெளியார் = புல்லறிவாளர், புறம்பானவர்

வெளில் = அணில், தயிர் கடை மத்து, யானைத் தூண், கப்பம்

வெளிறர் = அறிவில்லார்

வெளிறல் = வெண்மையாதல்

வெளிறு = வெண்மை, இளமை, குற்றம், பயன் இன்மை, அறிவின்மை, புல்லறிவு, அலிமரம், உள் ளீடு இன்மை

வெளிற்றுரை = பொருள் நயமற்ற வார்த்தை

வெள்கல் = வெட்குதல், குலைதல், அஞ்சல்

வெள்ளடை = வெற்றிலை

வெள்ளணி = அலங்காரம், பிறந்தநாள்

வெள்ளணிநாள் = பிறந்த நாள்

வெள்ளம் = நீர், ஈரம், கடல் அலை, நீர்ப்பெருக்கு, கடல், பேரெண், மிகுதி

வெள்ளாட்டி = ஏவற்பெண்

வெள்ளாண்மை = உழவு

வெள்ளி = சுக்கிரன், நட்சத் திரம், வெண்மை

வெள்ளிடை = வெளியிடம், ஆகாயம், தெளிவு

வெள்ளிமலை = கைலாயமலை

வெள்ளிலை = வெற்றிலை

வெள்ளில் = பிணப்பாடை, விளாமரம்

வெள்ளை = சங்கு, பலதேவன், புல்லறிவு, புல்லறிவாளன், வெண்பா, எருது, கள், வெள்ளாடு

வெள்ளைக்கோட்டி = புல்லறிவாளர் சபை

வெள்ளைவாரணன் = ஐராவதமென்னும் யானை மீது வரும் இந்திரன்

வெறி = அச்சம், ஆடு, கலக்கம், கள், பிசாசு, மணம் மருட்சி, வட்டம், நோய், மருள், முருகன் பூசையில் மருள் வந்து ஆடுதல், ஒழுங்கு

வெறிக்குணம் = மூர்க்கக் குணம், மருள் குணம்
வெறிது = வீண்
வெறித்தல் = ஆவேசமாதல், அஞ்சுதல், மயக்குறல், மணத்தல், கலங்குதல்
வெறிப்பு = மயக்கம், மணம், அச்சம், கலக்கம்
வெறியயர்தல் = மருள்வந்து ஆடல்
வெறுக்கை = பொன், மிகுதி செல்வம்
வெறுத்தல் = மிகுதல், கோபித்தல், நெருங்கல், செறிதல்
வெறுநுகம் = ஸ்வாதிநட்சத்திரம்
வெறுப்பு = துன்பம், வேண்டாமை, சினம், நெருக்கம்
வெறுமை = அறியாமை, பயன் இன்மை
வெறுவியது = பயனில்லாதது
வெறுவிலி = ஏழை
வெற்பன் = குறிஞ்சிநிலத் தலைவன்
வெற்பு = மலை
வெற்றிமயில் = துர்க்கை
வெற்றிலைக்கால் = வெற்றிலைத் தோட்டம்
வெற்றிலைத்தம்பலம் = வெற்றிலை பாக்கு மென்றசாரம்
வெற்றிலைப்படலிகை = வெற்றிலைத் தட்டு
வெற்றுரை = வீண்வார்த்தை
வெற்றெனல் = வெறுமையாதல்
வென் } = வெற்றி
வென்றி }
வென்காணல் = வெல்லுதல்
வென்றவர் = முனிவர்
வென்றோன் = அருகன்
வென்னிடுதல் = தோற்றல்

## வே

வேகப்புள் = கருடன்
வேகம் = விரைவு, விஷம், கடுமை, பிரவாகம்
வேகடம் = மணியின் அழுக்கை அகற்றல்
வேகர் = தூதர்
வேகவதி = வைகையாறு
வேகித்தல் = விரைதல் கோபித்தல்
வேங்கடம் = திருப்பதிமலை
வேங்கை = புலி, மரம், பொன்
வேசகம் = யானை வால் நுனி

வேசறவு = துக்கம், மனச் சோர்வு

வேசனம் = நகரம்

வேசா = வேசி

வேசாடல் = மனக்கலக்கம்

வேசாறுதல் = ஆறுதல், துக்கம் அடைதல்

வேடு = வேட்டுவன், வரிக் கூத்துள் ஒருவகை

வேடுபறி = வழிப்பறி

வேடை = விருப்பம், வெப்பம், தாகம், காமநோய்

வேட்கை = ஆசை

வேட்கைத்துணைவி = மனைவி

வேட்கோ, வேட்கோவன் = குயவன்

வேட்டகம் = தலைப்பாகை, மாமியார் வீடு

வேட்டம் = வேட்டை, கொலை, விருப்பம்

வேட்டல் = திருமணம் செய்தல், யாகம் செய்தல், விரும்பல், யாகம், திருமணம்

வேட்டிதம் = தடை, சூழ்வு

வேட்டுவன் = குளவி, வேடன்

வேட்டை = கொலை, வேட்டம்

வேட்டோன் = கணவன், நண்பன்

வேணகை = மதில்

வேணவா = பேராசை

வேணி = ஆகாயம், சடை, யாறு, வெளி, நீர்ப்பெருக்கு நதி, பின்னியமயிர்

வேணு = மூங்கில், உள் துளை, வில், புல்லாங்குழல்

வேணுகம் = யானையங்குசம்

வேணுபுரம் = சீகாழி

வேணுவனம் = திருநெல் வேலி, திருப்பாசூர்

வேண்டலர், வேண்டார் = பகைவர்

வேண்மான் = வேளிர் குல மகன்

வேதகம் = கர்ப்பூரம், நற் சிலை, தானியம், வேறுபடுத் தல், பொன்னாக்கும் பொருள், வேறுபாடு

வேதகாரர் = பிரம்பு வேலைக் காரர்

வேதகீதன் = சிவன்

வேதக்கொடியோன் = துரோ ணர்

வேதசம் = பிரம்பு

வேதசிரசு = உபநிடதம்

வேதஞ்ஞன் = வேதம் அறிந்தவன்

வேதண்டம் = கைலை மலை, வெள்ளிமலை, மலை

வேதநாயகன் = கடவுள்

வேதநீயம் = அறிதற் பாலது

வேதபாரகர் = பார்ப்பார், வேதம் அறிந்தவர்
வேதமாதா = காயத்திரி
வேதமார்க்கம் = வைதிகம்
வேதமுடி = வேதாந்தம்
வேதமுதல்வி = பார்வதி, சரஸ்வதி
வேதம் = அறிவு, மறை, சமய முதல் நூல்
வேதவநம் = திருமறைக் காடு
வேதவாணர் = பிராமணர்
வேதவித்தகர் = வேதம் வல் லவர்
வேதவித்து = விஷ்ணு, வேதம் அறிந்தவன்
வேதனம் = சம்பளம், அறிவு
வேதன், வேதா = பிரமன்
வேதாகமம் = வேதமும், ஆகமமும்
வேதாங்கம் = சிட்சை, கற் பம், வியாகரணம் நிருத் தம், சந்தசு சோதிடம், வேதக்கருவி நூல்
வேதாதி = பிரணவம்
வேதாத்தியயனம் = வேதம் ஓதல்
வதாத்திரி = திருக்கழுக் குன்றம்
வேதாந்தம் = வேதமுடிவு, அத்துவைதம், உபநிடதம்
வேதாளம் = பூதம், பிசாசு, பெரும்பேய்
வேதாளி = காளி
வேதாளியர் = புகழ்வோர், மங்கல பாடகர்
வேதாளிபாடுவார் = துயில் எழுப்புப்பாடுபவர்
வேதி = ஓமகுண்டம், பண் டிதன், கேட்டைநாள், சடங்குமேடை
வேதிகை = கேடகம், திண்ணை, பலிபீடம், வேறுபடுத்தல்
வேதிதம் = துளைக்கப்பட் டது
வேதித்தல் = பேதித்தல், அறிதல், பிளத்தல், வேருக்கல், தீற்றுதல்
வேதியன் = பிரமன்
வேதினம் = ஈர்வாள்
வேது = வெம்மை, நீராவி
வேதை = துன்பம், துளைத் தல்
வேத்தர் = அறிந்தவர்
வேத்தவை = இராசசபை
வேத்தகன் = அறியத் தக் கவன்
வேத்தன் = அறிந்தவன்
வேத்தியம் = அடையாளம், அறியற்பாலது
வேத்திரகரன் = நந்திதே வன்

வேத்திரதரன் = வாயிற் காவலன்

வேத்திரம் = பிரம்பு, அம்பு

வேத்திராசனம் = பிரப்பம் பாய்

வேந்தன் = இந்திரன், அரசன், சந்திரன், சூரியன், வியாழன்

வேந்து = அரசன், அரசியல்

வேபனம் = நடுக்கம்

வேபாக்கு = வேகுதல்

வேமம் = நெசவுத்தறி

வேமானியர் = தேவர், விமானத்தில் செல்பவர்

வேம்பன் = பாண்டியன்

வேம்பின்தாரோன் = பாண்டியன்

வேயாமாடம் = சாந்து முதலியன இட்டு மூடிய மாடம், நிலாமுற்றம்

வேயுள் = வீடு, போர்வை

வேய் = மூங்கில், ஒற்றன், உட்டுளை

வேய்தல் = அணிதல், மூடுதல், சூடுதல், சூழ்தல், பதித்தல், பொருந்துதல், மூடுதல்

வேய்வனம் = திருநெல்வேலி

வேய்வை = குற்றம்

வேரம் = சரீரம், கர்ப்பூரம், செய்குன்று, கோபம்

வேரல் = மூங்கில்

வேரி = கள், வாசனை, வெட்டிவேர், தேன்

வேர்த்தல் = கோபித்தல், மனம் புழுங்கல், வியர்வை விடுதல்

வேர்ப்பு = கோபம், வியர்வு

வேர்வு = கோபம்

வேலனாடல் = தேவர்க்காடும் கூத்து

வேலாவலையம் = கடல், பூமி

வேலன் = பூசாரி, முருகன்

வேலாழி = கடல்

வேலி = ஊர், ஐந்துகாணி, நிலம், காவல், மதில், வயல்

வேலிறை = முருகன்

வேலேறு = வேல்பட்டபுண்

வேலை = கடல், காலம், தொழில், பொழுது, கடற்கரை

வேலையிற்றுயின்றோன் = கடலில் உறங்கிய திருமால்

வேவு = ஒற்று, வேதல்

வேழம் = யானை, கரும்பு, மூங்கில், இசை, நாணல், விளாம்பழநோய்

வேழம்பம் = வஞ்சகம், ஏளனம்

வேழம்பர் = கழைக் கூத்தாடிகள், கோமாளிகள்

வேளாண்மை = உபகாரம், கொடை, உண்மை, உழவுத் தொழில்

வேளாமை = விரும்பாமை, யாகம் செய்யாமை

வேளாளர் = ஈகையாளர், பூவைசியர்

வேளான் = குயவன்

வேளிர் = குறுநில மன்னர்

வேள் = மன்மதன், முருகன், விருப்பம், மண், திருமணம், வேளாளர் பட்டப் பெயர்

வேள்வி = யாகம், ஆராதனை, ஈகை, மகநாள், புண்ணியம், விவாகம், நோன்பு

வேள்விநாயகன் = சிவன், இந்திரன்

வேறல் = வெல்லுதல்

வேற்கோட்டம் = முருகன் கோயில்

வேற்றுப்புலம் = பகையிடம்

வேனல் = வேனில், கோபம், கானல், வெம்மை, கொதிப்பு

வேனிலான் = மன்மதன்

வேனில் = பொலிவு, கோடை, கானல், அழகு

வேனில்வேள் = மன்மதன்

## வை

வை = கூர்மை, வைக்கோல்

வைடிகன் = இரத்தினங்களைச் சுத்தி செய்பவன்

வைகல் = தங்குதல், நாள், விடியல், தங்குமிடம், தூங்கல், கழிதல், வேளை

வைகல்லியம் = குறைவு

வைகறை = விடியற்காலம்

வைகறைப்பாணி = காலை வாத்திய ஒலி

வைகாசி = ஒரு மாதம், விசாகம்

வைகாசநம் = வைஷ்ணவ ஆகமங்களில் ஒன்று

வைகார்ப்பு = இடையறு ஆரவாரம்

வைகுண்ணியம் = குணம் இன்மை

வைகுறு = விடியற்காலம், வைகறை

வைகுதல் = தங்குதல், வற்றுதல், விடிதல், புணர்தல், கழிதல்

வைகைத்துறைவன் = பாண்டியன்

வைக்கோற்பழுதை = வைக்கோற்புரி

வைசயந்தம் = இந்திரன் மாளிகை

வைசயந்தி = திருமால் அணியும் மாலை

வைசித்திரி = புதுமை

வைசியவிருத்தி = வைசியர் தொழில்

வைசிரவணன் } = குபேரன்
வைச்சிரவணன் } இராவணன்

வைசுவதேவம் = ஓமப்பலி, பிதிர்பூசை

வைஷம்மியம் = பகை

வைணுகம் = யானையடக்கும் அங்குசம்

வைதரணி = யமபுரநதி

வைதர்ப்பி = தமயந்தி

வைதவ்வியம் = கைம்மைத் தனம்

வைதனிகன் = கூலிக்காரன்

வைதாலிகன் = உறக்கத்திலிருந்து எழுப்பப் பாட்டுப்பாடுபவன்

வைதாளி = புகழ்பாட்டு

வைதிகம் = வேதமார்க்கம்

வைதிகர் = வேதநெறி நிற்பவர், வேதமுணர்ந்தவர்

வைதேகி = சீதை

வைத்தியநாதன் = சிவன்

வைத்துாறு = வைக்கோல் போர்

வைநதேயன் = கருடன்

வைந்தவம் = குதிரை

வைபரித்துவம் = விபரீத உணர்வு

வைபவம் = செல்வம், மகிமை

வைபாடிகன் = விகற்ப மொழி பேசுபவன்

வைபோகம் = சந்தோஷம், சீர்மை

வைப்பு = இடம், ஊர், சேமநிதி, புதையல், நிலப் பகுதி, உலகம், சூனியம், செயற்கை

வைப்புத்தலம் = தேவாரத்தில் தனித்துமுறையில் பாடப் பெறுமல் சிற்சில பதிகங்களில் தலத்தின் பெயர்களை மட்டும் குறிப் பிடப்பட்ட தலம்

வைமானிகன் = விமானத்தில் செல்பவன்

வையகம், வையம் = பூமி, பல்லக்கு, வைக்கோலால் அமைந்த வீடு, தேர், ஊர்தி, வண்டி, எருது, இடம் புண்ணியத்தலம்

வையாகரணன் = இலக்கணப் பண்டிதன்

வையாபுரி = பழனியில் உள்ள ஒரு குளம்

வையாளிவீதி = குதிரை நடத்தும் தெரு

வையைக்கிழவன் = பாண்டியன்

வைரம் = விரோதம், ஒரு விலையுயர்ந்த கல்

வைராக்கியம் = பற்றின்மை, பிடிவாதம், விடாப்பிடி, நிராசை

வைரி = பகைவன்

வைரியர் = கூத்தர், பாணர்

வைரோசனன் = மாவலி

வைலுவம் = வில்வக்காய்

வைவச்சுவதன் = யமன், மனு, சனி,

வைவு = சாபம், இகழ்வு

வைனதேயன் = கருடன்

வைனன் = கருடன்

## வௌ

வௌவல் = திருடல், கொள்ளையிடுதல், கவர்தல்

வௌவம் = தாமரை

வௌவி = மான்

ஸ்ரீ = செல்வம், திரு.
ஸ்ரீகண்டன் = சிவன்.
ஸ்ரீதேவி = இலக்குமி.
ஸ்ரீநிவாஸன் = விஷ்ணு.
ஸ்ரீபதி = விஷ்ணு.
ஸ்ரீமத் = செல்வம் நிறைந்த பாக்கியமுடைய மாந்தர் பெயரின் முன் வைத்துச் சொல்லும் கவுரவக் குறிப்பு.
ஸ்ரீவத்ஸம் = விஷ்ணுவின் மார்பிலுள்ள மறு

## ஜ்

ஜ்ஞாத்ரு = அறிகிறவன்; ஞாதுரு
ஜ்ஞேயம் = அறியப்படுவது, ஞேயம்
ஜ்யேஷ்டன் = தமையன்
ஜ்யோதி = ஒளி, ப்ரபை

## ஸ்

ஸ்கந்தம் = தோள்
ஸ்தநம் = முலை, பசுவின் மடி.
ஸ்தந்யம் = பால்.
ஸ்தப்தம் = அசைவற்றிருத்தல்.
ஸ்தம்பனம் = தடுத்தல், மந்திரசக்தி.
ஸ்தம்பித்தல் = ஸ்தம்பம் போலாதல்.
ஸ்தலம் = பூமி, இடம்
ஸ்தவம் = துதி.
ஸ்தாணு = அசைவற்றிருப்பது, சிவன்.
ஸ்தாநிகம் = கோயில் தலைமை.
ஸ்தாநிகன் = கோயில் உரிமையாளன்.
ஸ்தாவரம் = அசையாப் பொருள்.
ஸ்திதி = நிற்கை, காப்பு, நிலை.
ஸ்திரம் = உறுதி.
ஸ்துத்யம் = துதிக்கத் தக்கது.
ஸ்தூபம் = மண் முதலியவற்றின் மேடு.
ஸ்தைர்யம் = ஸ்திரமாயிருக்கை.
ஸ்படிகம் = பளிங்கு.
ஸ்பஷ்டம் = தெளிவு.
ஸ்பர்சம் = தொடுகை.
ஸ்புடம் = தெளிவாக்குகை
ஸ்மரணம் = நினைக்கை, ஞாபகம்.
ஸ்மரித்தல் = நினைத்தல்.
ஸ்மாரகம் = ஞாபகசின்னம், ஞாபகம்.
ஸ்மார்த்தம் = ஸ்மிருதி ஸம்பந்தமானது.
ஸ்மிருதி = ஞாபகம், தருமநூல்.
ஸ்வைரஸ்தம் = தன்கார்யம்

ஸ்வகீயம் = தன்னுடையது

ஸ்வதா = தனிச்சையாக.

ஸ்வஸ்தி = நன்மை புண்டாகுக.

ஸ்வபக்ஷம் = தன்பக்கம்.

ஸ்வம் = உடைமை.

ஸ்வயம்பு = தான்தோன்றி.

ஸ்வரம் = ஒலி, குரல்.

ஸ்வரூபம் = இயற்கை.

ஸ்வர்கம் = இந்திரலோகம்.

ஸ்வர்ணம் = பொன்.

ஸ்வல்பம் = அற்பம்.

ஸ்வாகதம் = நல்வரவு.

ஸ்வாதந்தர்யம் = தன்வயமுடைமை.

ஸ்வாது = ருசி.

ஸ்வாத்தியாயம் = வேதமோதல்.

ஸ்வானுபவம் = தன் அனுபவம்.

ஸ்வாமி = இறைவன், குரு, கடவுள்.

ஸ்வாரஸ்யம் = சுவை, பிரியம்

ஸ்வாமினி = இறைவி.

ஸ்வார்த்தம் = தன்னயம்.

ஸ்வீகாரம் = தனதாக்கல், ஒப்புக்கொள்ளல்.

ஸ்வேச்சை = தனிச்சை.

# தொகை அகராதி

## அ

அகக்கூத்து (2) = சாந்திக் கூத்து, விநோதக்கூத்து.

அகச்சமயம் (6) = பாடாண வாதம், பேதவாதம், சிவ சமயவாதம், சிவசங்கி ராந்தவாதம், சிவசத்து விதம், ஒருசிலர் (சைவம் பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரம் என்பர்.)

அகத்திணை (7) = கைக்கிளை குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், பெருந் திணை.

அகத்தியர் மாணவர் (12) = செம்பூட்சேஎய், வையா பிகர், அதங்கோட்டா சான், அவிநயர், காக்கை பாடினியர், தொல்காப் பியர், துராலிங்கர், வாய்ப் பியர், பனம்பாரனார், கழா ரம்பர், நற்றத்தர், வாம னர்.

அகப்பகை (6) = காமம், குரோதம், உலோபம், மோ கம், மதம், மாற்சரியம்.

அகப்புறச்சமயம் (6) = ஐக் கிய வாத சைவம், பாசு பதம், மாவிரதம், காபா லம், வாமம், வைரவம்

அகிற்கூட்டு (5) = சந்த னம், கற்பூரம், எரிகாசு, தேன், ஏலம

அக்கினி (3) = ஆகவனீயம், காருகபத்தியம், தாட்ச ணாக்கினி

அங்கம் (5) = திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம் (பஞ்சாங்கம்)

அங்கம் (4) = யானை, தேர், குதிரை, காலாள் (சது ரங்கம்)

அங்கம் (6) = படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் (அரசியல்)

அங்கம் (10) = மலை, யாறு, நாடு, ஊர், மாலை, குதிரை, யானை, முரசு, கொடி, செங் கோல் (தசாங்கம்)

அசுவகதி (6) = (குதிரை நடை) மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி, சரகதி

அசுவினிதேவர் = (2) தத்ரன், நாதத்தியன்

அணு (3) = அணு, பரமாணு, இலேசம்

அண்டம் (5) = பிருதிவி அண்டம், அப்பு அண் டம், தேயு அண்டம், வாயு அண்டம், ஆகாய அண்டம்

அத்துவா (6) = மந்திரம், வர்ணம், பதம், தத்துவம், புவனம், கலை.

அந்தக்கரணம் (4) = மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

அந்தணர்தொழில் (6) = ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

அரங்கின்எழினி (3) = (நாடக மேடையில், அமைக்கும் திரைச்சீலை,) ஒருமுக எழினி, பருமுக எழினி, கரந்துவரல், எழினி.

அரசர் (3) = சேரன், சோழன், பாண்டியன்.

அரசர்குலம் (3) = சூரிய குலம், (சோழன்) சந்திர குலம், (பாண்டியன்) அக்னிகுலம், (சேரன்)

அரசர்குழு (5) = மந்திரி, புரோகிதன், தூதன், ஒற்றன், சேனாதிபதி, (ஐம்பெருங்குழு.)

அரசர்கொடி (3) = வில் கொடி, (சேரன்) புலிக்கொடி, (சோழன்) மீன் கொடி (பாண்டியன்.)

அரசர்தானை (6) = தேர், யானை, குதிரை, காலாள், வேல், வாள்.

அரசர்க்குத்துணைவர் (8) = மந்திரிமார், கரும அதிகாரர், சுற்றத்தார், வாயில் காப்பாளர், நகரமாக்கள், படைத்தலைவர், குதிரைவீரர், யானைவீரர். (எண்பேராயம்)

அரசர்க்குரியன (10) = சேனை, குடை, கொடி, முரசு, குதிரை, யானை, தேர், முன் செல்லும், படை, மாலை, செங்கோல்.

அரசர்க்குறுதிச்சுற்றம் (5) = நட்பாளர், அந்தணளர், சமயல் தொழிலார், மருத்துவக் கலைஞர், சோதிடர்.

அரசர் தொழில் (6) = ஓதல், வேட்டல், ஈதல், உலகைக் காத்தல், படைக்கலம் பயிறல், போர் செய்து பொருளைச் சேர்த்தல்.

அரசர்மாலை (3) = பனம்பூ, (சேரன்) ஆத்திமாலை, (சோழன்) வேம்புமாலை, (பாண்டியன்.)

அரண் (4) = காடு, மலை, நீர், மதில்.

அரிபிறப்பு (15) = சனகன், சனந்தனன், சனாதனன், சனற்குமாரன், நரநாராயணன், கபிலன், இடபன், நாரதன், அயக்ரீவன், தாத்தாதிரேயன்,

மோகினி, வேள்விப்பதி, வியாதன், தன்வந்திரி, பௌத்தன்.

அருகன் குடை (5) = சகல பாசனம், (பொற்குடை) சந்திராதித்தியம், (முத்துக்குடை) நித்திய விநோதம், (இரத்தினக் குடை.)

அருகன்குணம் (8) = அநந்த ஞானம், அநந்த தரிசனம், அநந்த வீரியம், அநந்தசுகம், பெயரின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியா இயல்பு

அருவவடிவம் (4) = சிவம், சத்தி, விந்து, நாதம்.

அரை (4) = பொருக்கரை, முன்னரை, கோளரை, பொருட்டரை.

அவத்தை (5) = சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.

அறப்பகுதி (2) = இல்லறம், துறவறம்.

அறத்துவகை (3) = ஒழுக்கம், தண்டம், வழக்கு.

அழகு = (10) = சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல், ஓசையுடைமை, ஆழமுடைத்தாதல், முறையின் வைப்பு, உலகம் மலையாமை, விழுமியது பயத்தல், விளங்கு உதாரணத்தாதல்.

அழகு (8) = அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழை, (எண்வகை வனப்பு)

அளவை (8) = காட்சி, (காணல்) அனுமானம், (புகையுண்டெனில் நெருப்பு உண்டென அறிதல்) உவமானம், (முகம் சந்திரன் போன்றது எனல்) ஆகமம் (பெரியோர் வாக்கு) அருத்தாபத்தி (பகல் உண்ணான் பருத்திருக்கிறான் எனில், இரவில் உண்பதால், பருத்திருக்கிறான் என்பது) பாவம், (முன்னும் இல்லை பின்னும் இல்லை ஒரு காலத்தும் இல்லை ஒன்றின் ஒன்றில்லை எனல்) ஐதிகம், (இம்மரத்தில் பிசாசு இருக்கிறது எனல்) சம்பவம், (நூறு என்னும் தொகையில் பத்து என்னும் தொகை அடங்கி இருக்கிறது எனல்.)

அறம் (32) = ஆதுலர்க்குச் சாலை, ஐயம், அறுசமயத்தோர்க்குணவு, ஓதுவார்க்கு உண்டி, சேலை, ஏறுவிடுத்தல், காதோலை, பெண்போகம், மகப்பால், மகப்பேறு, மகவளர்த்தல், மருந்து, கொல்லாமை, விலை கொடுத்துயிர் நோய் தீர்த்தல், பிறரிற் காத்தல், கன்னிகாதானம், சோலை, வண்ணார், நாவிதர், சுண்ணம், மடம் குளம், கண் மருந்து, தண்ணீர்ப்பந்தர், தலைக்கெண்ணெய், சிறைச்சோறு, விலங்கிற்குணவு, பசுவுக்கு வாயுறை, அறவைப் பிண மடக்கல், அறவைத் தூரியம், தின் பண்டம் நல்கல், ஆவுரிஞ்சுதறி.

அறவகை (3) = ஒழுக்கம், வழக்கு, தண்டம், (வடமொழியில்) ஆசாரம், வியவகாரம், பிராயச்சித்தம்.

ஆ

ஆகமமார்க்கம் = (4) சன்மார்க்கம், (மாணிக்க வாசகர்) தாசமார்க்கம். (திருநாவுக்கரசர்) புத்திரமார்க்கம், (திருஞானசம்பந்தர்) சகமார்க்கம் (சுந்தரர்).

ஆசிரியர் = (2) ஞானாசிரியர், போதகாசிரியர்.

ஆசிரியர் = (3) உரையாசிரியர், நூலாசிரியர், போதகாசிரியர்.

ஆச்சிரமம் (4) = பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம்.

ஆடல்வகை (3) = தாண்டவம், நாட்டியம், நிருத்தம்,

ஆடவர்குணம் (4) = அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடித்தல்.

ஆண்பாற் பிள்ளைத் தமிழ்ப் பருவம் (10) = காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்சில் சிதைவு, சிறுதேர் உருட்டல்.

ஆதாரஸ்தலம் (6) = (மூலாதாரம்) திருவாரூர், (சுவாதிட்டானம்) திருவானைக்கா (மணிபூரகம்) திருவண்ணாமலை, (அநாகதம்) சிதம்பரம், (விசுத்தி) திருக்காளத்தி, (ஆக்கினை) காசி.

ஆதாரதேவதைகள் (6) = (மூலாதாரம்) விநாயகக் கடவுள், (சுவாதிட்டானம்) பிரமன் (மணிபூரகம்) விஷ்ணு, (அநாகதம்)

உருத்திரன், (விசுத்தி) மகேசுரன், (ஆக்கினை) சதாசிவன்.

ஆதாரம் (6) = மூலாதாரம், (குதம்) சுவாதிட்டானம், (குய்யம்) மணிபூரகம், (நாபி) அநாகதம் (இதயம்) விசுத்தி (அடிநா) ஆக்கினை (நெற்றி).

ஆதித்தன்பிள்ளைகள் = (8) மனு, யமன், சனி, காளிந்தி சுக்ரீவன், கன்னன், நாரதன் தத்தியன்.

ஆதித்தன்தேவிமார் = (2) உஷாதேவி, சாயாதேவி.

ஆழ்வார்கள் (12) = பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், திருப்பாணாழ்வார், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார், ஆண்டாள்.

ஆன்மதத்துவம் (24) = பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், மெய், வாய், கண், மூக்கு, செவி, சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், வாக்கு, பாதம், பாணி பாயு, உபத்தம்.

ஆன்மா = (2) சீவான்மா, பரமான்மா.

ஆன்மாவகை (3) = விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர்.

## இ

இசை (7) = குரல் (மிடறு) துத்தம் (நா) கிளை (அண்ணம்) உழை (சிரம்) இளி (நெற்றி) விளரி, (நெஞ்சு) தாரம் (நாசி) இவற்றிற்கு உரிய ஓசை முறையே மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை—சுவை முறையே பால், தேன், கிழான, நெய், ஏலம், வாழை, மாதுளம்-வாசனை முறையே, மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், பொன்னுவிரை, புன்னை, தேவர் முறையே, விசுவாமித்திரர், அக்கினி, சந்திரன், யமன், சூரியன், கௌதமன், காசிபன்.

இசைக்கரணம் = (8) பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு.

இசைக்கருவி (5) = தோற்கருவி, (முரசு) துளைக்கருவி, (புல்லாங்குழல்)

நரம்புக்கருவி, (வீணை) கஞ்சக்கருவி, (தாளம்) மிடற்றுக்கருவி, (வாய்ப்பாட்டு)

இசைக்கிரியை = (8) எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், எலி, உருட்டு, தாக்கு.

இசைக்குரியவகை = (8) வார்தல், வடித்தல், உந்தல், உறழ்த்தல், உருட்டல், தெருட்டல், அள்ளல், பட்டை.

இசைக்குழற்குரியமரம் = (5) கருங்காலி, சந்தனம், செங்காலி, மூங்கில், வெண்கலம்.

இடைவள்ளல் (7) = அக்குரன், அந்திமான், கன்னன், சந்தன், சந்திமான், சிசுபாலன், வக்கிரன்.

இதிகாசம் (3) சிவரகசியம், பாரதம், இராமாயணம்.

இந்திரபோகம் = (10) அமுதம், உச்சைச்சரவம், (குதிரை) இடி, காமதேனு, நவநிதி, இந்திராணி, அமராவதி, ஐராவதம், வச்சிராயுதம், சுதன்மம், கற்பகமலர், சயந்த மண்டபம், சயந்த குமாரன், வசந்த மாளிகை, மேகவாகனம், மருத நிலம்

இந்திரன்மேகம் (7) = ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சம்காரித்தம், சம்வர்த்தம், காளமுகி, துரோணம், நீலவருணம்.

இந்திரியங்கள் = (10) வாக்கு பாதம், பாணி, பாயு, உபத்தம், சுரோத்திரம், தொக்கு, சக்கு, சிங்குவை, ஆக்கிராணம்.

இந்திரியவகை (2) = ஞானேந்திரியம், கன்மேந்திரியம்.

இயமம் (10) = கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிறர் மனைவியரையும் பொது மகளிரையும் விரும்பாமை, இரக்கம், வஞ்சமில்லாமை, பொறையுடைமை, மனங்கலங்காமை, அற்பாகாரம், சுசியுடைமை.

இரசம் (9) = சிருங்காரம், வீரியம், நகை, கருணை, சாந்தம், குற்சை, அற்புதம், பயம், கோபம்.

இரசோகுணவிருத்தி (8) = யான் எனதென்னும் செருக்கு, வீரம், கொடுமை, பெருமுயற்சி, வஞ்சனை, திடமுடைமை, இரக்கம் இன்மை, போகமுடைமை, இடம்பம்.

இராகம் (32) = பைரவி, தேவக்கிரியை, மேகரஞ்சி,

குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, சிராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, இல்லிதை, தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, வைசிகம், மாளவி, நாராயணி, குண்டக் கிரியை, கூர்ச்சரி, பங்காளம், தங்கியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்கரி, சாரங்கம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், சம்வர்த்தம், காளமுகி, துரோணம், நிலவருணம்.

இராசி (12) = மேடம், (ஆடு) இடபம், (எருது) மிதுனம் (இரட்டை) கர்க்கடகம் (நண்டு) சிங்கம், (சிம்மம்) கன்னி, (இளம்பெண்) துலாம், (தராசு) விருச்சிகம், (தேள்) தனுசு, (வில்) மகரம், (சுறா) கும்பம், (குடம்) மீனம், (மீன்.)

இராமன்பூசித்தஇடம் (5) = சித்தாசிரமம், இராமேஸ்வரம், கதிர்காமம், திருமால்பேறு வாரணவதம்.

இருமை (2) = இம்மை, மறுமை.

இலக்கணவகை (5) = எழுத்து, சொல், பொருள் யாப்பு, அணி.

இலிங்கம் (5) = பிருதிவி, (காஞ்சி) அப்பு, (திருவானைக்கா) தேயு, (திருவண்ணாமலை) வாயு, (சிகாளத்தி) ஆகாயம், (சிதம்பரம்.) (பஞ்சபூதத்தலம்)

இலிங்கவகை (7) = பரார்த்தலிங்கம், (மகாசங்கார காலவரை சான்னித்தியமாய் இருந்து ஆன்மாக்களுக்கு அருளுவது) சுயம்புலிங்கம், (தானே தோன்றியது) காணலிங்கம், (விநாயகர், முருகன் முதலானவர் பூசித்த லிங்கம்) தைவிகலிங்கம், (விஷ்ணு முதலான தேவர் பூசித்தது) ஆரிடலிங்கம், (முனிவர் அசுரர் தாபித்துப் பூசித்தது) மானுடலிங்கம், (மனிதர் தாபித்துப் பூசித்தது) க்ஷணிகலிங்கம், (பூசித்தவுடன் விடப்படுவது.)

இல்லறத்தார்சீலம் (5) = கொல்லாமை, திருடாமை, பிறர்மனை நயவாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை, (பஞ்சசீலம்.)

இழிசொல் (4) = குறளை, பொய், கடுஞ்சொல், பயனில்சொல்.

குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, சீராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, இல்லிதை, தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, வைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, பங்காளம், தம்பியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்கரி, சாரங்கம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சம்காரித்தம், சம்வர்த்தம், காளமுகி, துரோணம், நீலவருணம்.

இராசி (12) = மேடம், (ஆடு) இடபம், (எருது) மிதுனம் (இரட்டை) கர்க்கடகம் (நண்டு) சிங்கம், (சிம்மம்) கன்னி, (இளம்பெண்) துலாம், (தராசு) விருச்சிகம், (தேள்) தனுசு, (வில்) மகரம், (சுறு) கும்பம், (குடம்) மீனம், (மீன்.)

இராமன்பூசித்தஇடம் (5) = சித்தாசிரமம், இராமேஸ்வரம், கதிர்காமம், திருமால்பேறு வாரணவதம்.

இருமை (2) = இம்மை, மறுமை.

இலக்கணவகை (5) = எழுத்து, சொல், பொருள் யாப்பு, அணி.

இலிங்கம் (5) = பிருதிவி (காஞ்சி) அப்பு, (திருவானைக்கா) தேயு, (திருவண்ணாமலை) வாயு, (சீகாளத்தி) ஆகாயம், (சிதம்பரம்.) (பஞ்சபூதத்தலம்)

இலிங்கவகை (7) = பரார்த்தலிங்கம், (மகாசங்கார காலவரை சான்னித்தியமாய் இருந்து ஆன்மாக்களுக்கு அருளுவது) சுயம்புலிங்கம், (தானே தோன்றியது) காணலிங்கம், (விநாயகர், முருகன் முதலானவர் பூசித்தலிங்கம்) தைவிகலிங்கம், (விஷ்ணு முதலான தேவர் பூசித்தது) ஆரிடலிங்கம், (முனிவர் அசுரர் தாபித்துப் பூசித்தது) மானுடலிங்கம், (மனிதர் தாபித்துப் பூசித்தது) க்ஷணிகலிங்கம், (பூசித்தவுடன் விடப்படுவது.)

இல்லறத்தார்சீலம் (5) கொல்லாமை, திருடாமை, பிறர்மனை நயவாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை, (பஞ்சசீலம்.)

இழிசொல் (4) = குறளை, பொய், கடுஞ்சொல், பயனில்சொல்.

இறைவன் இலக்கணம் (2) = சொரூபலக்கணம், தடத்தலக்கணம்,

இறைவன் தேவியர் (4) = உமை, விஷ்ணு, காளி, துர்க்கை.

இறைவன் தொழில் (5) = படைப்பு, காப்பு, அழிப்பு, மறைப்பு, அருளல், (ஸ்ருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகம்) (பஞ்சகிருத்தியம்.)

ஈ

ஈசன் வில் (2) = பினாகம், மேரு.

ஈசன்வீரம் நிகழ்ந்த இடம் (8) = திருக்கண்டியூர், (பிரமன் தலையைக் கிள்ளியது) திருக்கடவூர், (யமனை உதைத்தது) திருவதிகை) (திரிபுரம் எரித்தது) திருப்பறியல், (தட்சனை அழித்தது) திருவிற்குடி, (சலந்தரனைக் கொன்றது) திருவழுவூர், (கயாசூரனைக் கொன்றது) திருக்குறுக்கை, (காமனை எரித்தது) திருக்கோவல், (அந்தகாசூரனை அழித்தது.)

ஈச்சுரன் குணம் (8) = தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, (அல்லது) வரம்பில்ஞானம், வரம்பில் காட்சி, வரம்பில் இன்பம், வரம்பில் ஆற்றல், நாமம் இன்மை, கோத்திரம் இன்மை, ஆயுவின்மை, இடையூறின்மை.

ஈச்வரன் சக்தி (5) = ஆதிசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, பராசத்தி, ஞானசத்தி

ஈச்சுரன்பேதம் (9) = சிவன், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேச்சுரன், உருத்திரன், விஷ்ணு, பிரமன்.

ஈச்சுரன் முகம் (5) = ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம்.

ஈச்சுரன் முக்கியகுணம் (6) = சர்வஞ்சத்துவம், சர்வேஸ்வரத்துவம், சர்வநிரந்திரத்துவம், சர்வாந்திரியாமித்துவம், சர்வகற்பிதத்துவம், சர்வசத்தித்துவம்.

ஈச்சுரன் மூர்த்தம் (25) = சந்திர சேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடணர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதாங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்த நாரீசுரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கரஹர், நீலகண்டர், சக்ரப்பிரதர், சகமுகாநுக்கிரஹர், சோமஸ்கந்தர், ஏகபாதர், சுகாதனர், தக்கிணாமூர்த்தி, இலிங்கோற்பவர்.

ஈச்சுவரன் வகை (3) = இலய சிவன், போக சிவன், அதிகார சிவன்

ஈதி (7) = விட்டில், கிளி, நாவாய், பன்றி, தொட்டியர், கள்வர், பெரும்புயல்.

## உ

உகம் (4) = கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம்.

உடல்வகை (3) = தூலம், சூக்குமம், காரணம்.

உடல்குறை (7) = குறள், (குட்டை) செவிடு, மூங்கை, (ஊமை) கூன், குருடு, மருள், உறுப்பிலாப் பிண்டம்.

உட்பகை (6) = காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம்.

உணவுவகை (5) = கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், மெல்லல்.

உண்டி (4) = உண்டல், தின்றல், நக்கல், பருகல்.

உண்மைப்பொருள் (3) = பதி, பசு, பாசம்.

உபசாரம் (16) = தவிசளித்தல், கைகழுவ நீர்தரல், கால்கழுவ நீர்தரல், முக்குடி நீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல் தரல், தேய்வைபூசல், மலர் சாத்தல், மஞ்சளரிசி தூவல், நறும்புகை காட்டல், விளக்கிடல், கற்பூர மேற்றல், அமுதமேந்தல், அடைக்காய்தரல், மந்திரமலரால ருச்சித்தல்,

உபபுராணஇலக்கணம் (5) = உலகத்தோற்றம், ஒடுக்கம், மனுவந்தரம், முனிவர் அரசர் மரபு, அவர்கள் சரிதம்.

உபவேதம் (4) = ஆயுர்வேதம், அர்த்தவேதம், தனுர்வேதம், கார்ந்தர்வ வேதம்.

உபாங்கம் (4) = மீமாஞ்சை, தருக்கம், புராணம், மிருதி.

உபாயம் (4) = சாம, பேத, தான, தண்டம்.

உயிர்த்தோற்றம் (4) = கருப்பை, முட்டை, நிலம், வியர்வை, (சராயுசம், அண்டசம், உற்பிசம், சுவேதசம்.)

உருத்திரர் (11) = மகாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், காபாலி, சௌமியன்.

உருத்திராக்கம் தரிக்கும் காலம் (11) = சிவமந்திர செபம், சந்தியாவந்தனம், சிவபூசை, சிவபுராண படனம், சிவத்தியானம், சிவாலய தரிசனம், திருமுறைபாராயணம் கேட்டல், தீர்த்தமாடல், விரதம் அனுட்டித்தல், சிரார்த்தம் செய்தல்.

உருத்திராக்கம் தரிக்கலாகாத காலம் (6) = சயனம், மலசலமோசனம், புணர்ச்சி, நோய், சனனசௌசம், மரணசௌசம்.

உரை (4) = கருத்துரை, பதவுரை, பொழிப்புரை, அகலவுரை.

உரையிலக்கணம் (5) = பதச்சேதம், பதவுரை, உதாரணம், வினா, விடை.

உலகம் (3) = பூமி, அந்தரம் சுவர்க்கம், பூலோகம், பரலோகம், அல்லது பாதாளலோகம்.

உலகம் (7) = (மேல்) பூலோகம், சுவர்லோகம், அயர்லோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம், (கீழ்) அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இராசாதலம், பாதாலம்.

உலோகம் (5) = பொன் வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், (பஞ்சலோகம்.)

உலோகம் = (9) தமணியம், இரும்பு, தாமிரம், ஈயம், வெள்ளி, பதுகம், இந்திரநாகம், கஞ்சம்.

உலோகம் = (7) செம்பொன், வெண்பொன், கரும்பொன், செம்பு, ஈயம், வெண்கலம், தரா.

உவா = (2) அமாவாசை, பௌர்ணமி,

## ஊ

ஊழ்வகை (3) = பிராரப்தம், ஸஞ்சிதம், ஆகாமியம்.

எ

எட்டுத்தொகைநூல்கள் (8) = நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு.

எழினி = (3) ஒருமுக எழினி பலமுக எழினி, கரந்துவரல் எழினி

ஏ

ஏறு = (3) அதிகாரநந்தி, திருமால்நந்தி, தருமநந்தி.

ஐ

ஐங்கணை (5) = தாமரை, அசோகு, மா, முல்லை, கருங்குவளை, (பஞ்சபாணம்).

ஐசுவரியம் (8) = இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை. (அஷ்டஸ்வரியம்

ஓ

ஓடம் = (4) கரிமுக அம்பி, பரிமுக அம்பி, தோணி, கப்பல்.

க

கடல் (7) = உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்.

கடல்படுதிரவியம் (5) = பவளம், முத்து, சங்கு, உப்பு, ஒக்கோலை.

கடன் (3) = தேவர் கடன், பிதிரர் கடன், முனிவர் கடன்.

கடுகம் (3) = சுக்கு, மிளகு, திப்பிலி.

கடைவள்ளல் (7) = பாரி, ஆய், எழினி, நள்ளி, மலயன், பேகன், ஓரி.

கணம் (18) = அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள், போகபூமியர்.

கணம் = (8) மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சந்திரன், சூரியன், இயமானன்

கண்டம் (9) = பரதகண்டம், குருகண்டம், கிம்புருடகண்டம், இளாவிருதகண்டம், அருவருட கண்டம், கேதுமால கண்டம், இரமிய கண்டம், பத்திராசுவ கண்டம், இரணிய கண்டம், (நவகண்டம்).

கண்ணன்மனைவியர் = (8) உருக்குமணி, இலக்குமணை, சத்தியபாமை, சாம்பவதி, நிளாதேவி, காளிந்தி, மித்திரவிந்தை, பத்திரை

கணிகையர் = (4) தலைக்கோலரிவை, தோரியமடந்தை, தலைப்பாட்டுக் கூத்தி, இடைப்பாட்டுக் கூத்தி,

கதி (4) = தேவகதி, மக்கட்கதி, விலங்கின்கதி, நரகதி.

கந்தபுராணசங்கிதை = (6) பிரம்மசங்கிதை, விட்டுணு சங்கிதை, சநற்குமார சங்கிதை, சூரசங்கிதை, சங்கர சங்கிதை, சூத சங்கிதை.

கரணம் (3) = மனம், வாக்கு, காயம், (திரிகரணம்).

கரணம் (4) = மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

கருமபூமிக்குரியவை = (6) வரைவு, தொழில், வித்தை, வாணிபம், உழவு, சிற்பம்.

கருமேந்திரியம் (5) = வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம்.

கலம்பக உறுப்பு = (18) புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம் மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல்.

கவி (4) = ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்.

கன்னிகை (5) = அகலிகை, திரௌபதி, சீதை, தாரை, மண்டோதரி.

## கா

காடுபடுதிரவியம் (5) = அரக்கு, இருல், தேன், மயிற்பீலி, நாவி.

காவியம் (5) = சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி, (ஐம்பெருங்காப்பியம்.)

## கி

கிரகம் (9) = சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது, ஷை கிரகங்கட்கு முறையே கோதுமை, பச்சையரிசி, துவரை, பச்சைப்பயறு, கடலை, மொச்சை, எள், உளுந்து, கொள்ளு, உரியவை.

கிரகசமித்து = (9) எருக்கு, முருக்கு, கருங்காலி, நாயுருவி, அரசு, அத்தி, வன்னி, அறுகு, தருப்பை.

கிரகபுட்பம் = (9) செந்தாமரை, வெள்ளாம்பல், சண்பகம், வெண்காந்தள் முல்லை, வெண்தாமரை, கருங்குவளை, மந்தாரை, செவ்வாம்பல்.

கிரகரத்தினம் (9) = மாணிக்கம், பவளம், புட்பராகம், நீலரத்தினம், வைடூரியம், முத்து, பச்சை, வைரம், கோமேதகம்.

கிரகவாகனம் (9) = மயில், முத்துவிமானம், அன்னம், குதிரை, யானை, கருடன், காகம், ஆடு, சிங்கம்.

கிரகாங்கம் = (9) செவ்வாய், (தலை) சுக்கிரன், (முகம்) புதன், (கழுத்து) சந்திரன், (தோள்) சூரியன், (மார்பு) குரு, (வயிறு) சனி, (தொடை) இராகு, (முழங்கால்) கேது, (உள்ளங்கால்)

கிருத்தியம் (5) = இறைவன் தொழில் என்ற இடத்துக்காண்க.

## கீ

கீழுலகம் (7) = அதலம், விதலம், சுதலம், தராதலம், இராசதலம், மகாதலம், பாதலம்.

கீழ்க்கணக்குநூற்கள் (18) = நாலடியார், நான்மணிக்கடிகை, கார் நாற்பது, களவழி நாற்பது, இன்னா நாற்பது, இனிது நாற்பது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திருக்குறள், திணைமாலை நூற்றைம்பது, திரிகடுகம், ஆசாரக் கோவை, பழமொழி நானூறு, சிறுபஞ்சமூலம், இன்னிலை, முதுமொழிக்காஞ்சி, ஏலாதி, கைந்நிலை.

## கு

குணம் (3) = சத்துவம், (ஞானம், அருள், தவம், பொறை, மேன்மை, வாய்மை, மோனம், ஐம்பொறி அடக்கல்) இராசதம், (மனஊக்கம், ஞான, வீரம், தவம், தருமம், தானம், கல்வி, கேள்வி.) தாமதம், (பேருண்டி, பெருந்தூக்கம், சோம்பல், நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை.)

குணம் (8) = அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, (ஆண்பாற்குரியவை) அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு, (பெண்பாற் குரியவை.)

குரவர் (5) = அரசன், உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன், (ஐம்பெருங் குரவர்.)

றூற்றம் (3) = காமம், வெகுளி, மயக்கம் (அல்லது) ஐயம், திரிபு, அறியாமை.

றூற்றம் (10) = குன்றக் கூறல், மிகைபடக் கூறல், கூறியது கூறல், மாறுகொளக் கூறல், வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல், வழூஉச் சொல், புணர்த்தல், மயங்கவைத்தல், சென்றுதேய்ந்திறுதல், நின்றுபயனின்மை.

## கூ

கூலம் (8) = நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, மூங்கில்.

கூலம் (16) = நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு, தோரை, இராகி, எள், கொள், பயறு, உளுந்து, அவரை, கடலை, துவரை, மொச்சை.

## கொ

கொடுந் தமிழ்நாடு (12) = தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேழி, பூழி, பன்றி, அருவா, அருவா வடதலை, சீதம், மலாடு, புனனாடு.

கொடை (3) = வரைவின்றிக் கொடுத்தல், புகழ்வோர்க்குக் கொடுத்தல், இரப்போர்க்குக் கொடுத்தல்.

## கோ

கோசம் (5) = அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம்.

## கௌ

கௌவியம் (5) = பால், தயிர், நெய், கோசலம், கோமயம், (பஞ்சகவ்வியம்.)

## ச

சக்கிரவர்த்திகள் (6) = அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுற்சன், புரூரவன், கார்த்தவீரியன்,

சங்கு (4) = வலம்புரி, இடம்புரி, சலஞ்சலம், பாஞ்சசன்யம்

சத்திகள் (5) = இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசக்தி, ஆதிசத்தி, பராசத்தி

சந்தானச்சாரியார் (4) = மெய்கண்டதேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார்.

**சபை** (5) = (திருவாலங்காடு) இரத்தினசபை, (சிதம்பரம்) கனகசபை, (மதுரை) வெள்ளிச்சபை, (திருநெல்வேலி) தாமிரசபை, (திருக்குற்றாலம்) சித்திரசபை

**சமயகுரவர்** (4) = திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசக சுவாமிகள்

**சமயம்** (6) = கபிலமதம், கணாதமதம், பதஞ்சலிமதம், அக்ஷபாத மதம், வியாசமதம், ஜைமினி மதம், (வேதாந்த மதம்.)

**சமயம்** (6) = சைவம், (சிவன்) வைஷ்ணவம், (விஷ்ணு) சாக்தம், (சக்தி) சௌரம், (சூரியன்) காணபத்தியம், (கணபதி) கௌமாரம், (முருகன்) வைதிகமதம்.

**சயனம்** (5) = இலவம் பஞ்சு, வெண் பஞ்சு, செம் பஞ்சு, இறகு, அன்னத்தூவி

**சரீரம்** (3) = தூலம், சூக்குமம், காரணம்

## சா

**சாதி** (4) = திராவிடர், ஆந்திரர், கன்னடர், மராட்டியர், (பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன்), இவை ஆரியர்முறை.

**சாத்திரம்** (6) = வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை

**சாத்விக குணலட்சணம்** (16) = அசையாமை மனஉறுதி, சாமர்த்தியம், மென்மை, நொய்மை, மகிழ்ச்சி, நேர்மை, சுத்தி, புண்ணிய முயற்சி, பொறுமை, மறவாமை, திருப்தி, முத்தியடையும் இச்சை, பெருங்கருணை, அந்தக்கரண அடக்கம், புறக்கரண அடக்கம்

## சி

**சித்தர்** (9) = சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர்

சித்தாந்தசாத்திரம் (14) = திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபாவிருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடுதூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்

சித்தி (8) = அணிமா, (தேகம் அணுபோலாதல்) மகிமா, (பெரியாதல்) கரிமா, (மலைபோல் கனத்திருத்தல்) இலகிமா, (கனமின்றி இருத்தல்) பிராத்தி, (வேண்டுவன அடைதல்) பிராகாமியம், (பரகாயம் புகுதல்) ஈசத்துவம், (மேம்பட்டிருத்தல்) வசித்துவம், (தன்வசமாக்கல்).

சிரஞ்சீவியர் (7) = அசுவத்தாமன், மாபலி, வியாசன், அனுமான், விபீடணன், கிருபாசாரியன், பரசுராமன்.

சிவசின்னம் (2) = உருத்திராக்கம், விபூதி.

சிவதத்துவம் (5) = சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம்.

சிவன்வகை (3) = அதிகார சிவன், போக சிவன், இலயசிவன்.

சிவாகமபாதம் (4) = சரியாபாதம், (சமயாசாரம், சமய விசேட நிருவாண ஆசாரியாபிடேக விதிகள்) கிரியாபாதம் (மந்திரங்களின் உத்தாரம், சந்தியாவந்தனம், பூசை, செபம், ஓமம், முதலியவைகள்) யோகபாதம் (பிராணாயாமம் முதலான யோகமுறைகள்) ஞானபாதம் (பதிபசுபாச இலக்கணம் பேசப்படும்.)

சிவாகமம் (28) = காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம், ஆக்கிநேயம், வீரம், ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கிதம், லளிதம், சித்தம், சந்தானம், சர்வோத்தம், பாரமேச்சுரம், கிரணம், வாதுளம், (இவை மந்திரம் எனவும், தந்திரம்எனவும், சித்தாந்தம்எனவும்பெயர்பெறும். இவ்வாகமங்கள் 2800000 கிரந்தங்களைக் கொண்டவை. இவைசிவபெருமான் வடிவமாக உள்ளவை.

சிறுபஞ்சகாவியம் (5) = சூளாமணி, நீலகேசித் தெருட்டு, உதயணன் கதை, யசோதரகாவியம், நாக்குமார் காவியம்.

## சே

சேவாவத்தை (3) = சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி.

## சு

சுடர் (3) = சந்திரன், சூரியன், அக்னி.

சுவை (6) = கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு.

## சூ

சூரியர் (12) = தாத்துரு, சர்க்கரன், அரியமான், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்துரு, துவட்டா (துவாதசாதித்தர்)

சூரியன் குதிரைகள் (7) = காயத்திரி, பிருகதி, உட்டிணிக்கு, சகதி, திருட்டிப்பு, அநுட்டிப்பு பந்தி, (சப்த குதிரைகள்.)

## ஞா

ஞானம் (2) = அபரஞானம், பரஞானம்.

ஞானவகை (4) = கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல்.

## த

தத்துவம் (96) = ஆன்மதுவம் 24, நாடி 10, அவத்தை 5, மலம் 3, குணம் 3, மண்டலம் 3, பிணி 3, விகாரம் 8, ஆதாயம் 6, தாது 7, வாயு 10, கோசம் 5, வாயில் 9.

தந்தையர் (5) = பிறப்பித்தோன், கற்பித்தோன், மணமுடிப்பித்தோன், அன்னந்தந்தோன், ஆபத்துக்குதவினோன்.

தமிழ் (3) = இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ்.

தரு (5) = அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம், பஞ்சதரு.

தலைவள்ளல் (7) = சகரன், காரி, நளன், துந்துமாரி, நிருதி, செம்பியன், விராடன். (முதல் எழுவள்ளல்கள்)

## தா

தாது (7) = இரதம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல், சப்ததாதுக்கள்.

தாமதகுணலட்சணம் (9) = பிரியமின்மை, சோம்பல், உலோபம், கோள்கூறல், தன்னைப் பெரிதாக மதித்தல், உறக்க மிகுதி, கர்வத்தால்வரும் சோம்பல், கேடு செய்தல், மூடத்தனம்

தாயர் (5) = பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய், முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய்,(அல்லது) தன்னையீன்றாள், அரசன் தேவி, குருவின் தேவி, அண்ணன் தேவி, தன் தேவியையீன்றாள்,

தானியம் (9) = கோதுமை, நெல், துவரை, பச்சைப் பயிறு, கடலை, மொச்சை, எள், உளுந்து, கொள்.

## தி

திக்கு (8) = கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு, தென் மேற்கு, மேற்கு, வட மேற்கு, வடக்கு, வட கிழக்கு.

திக்கு (10) = மேற்சொன்னவைற்றோடு, மேலுங்கீழுங் கூட்டித்திசை பத்தென்பர்.

திக்குநாகம் (8) = அநந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன்.

திக்குப்பாலகர் (8) = எட்டெனத் திசைகள் குறிப்பிட்ட திசைகட்குரிய பாலகர் முறையே, இந்திரன், அக்னி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

திக்குயானைகள் (8) = கிழக்காதி முறையே, ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பந்தம், சாரு, வபூமம், சுப்பிரதீபம்(திக்கயங்கள் இவை ஆண் யானைகள்) அப்பிரமை, கபிலை, பிங்களை, அநுபமை, தாமிரபருணி, சுதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி. (பெண் யானைகள்)

திணை (5) = குறிஞ்சி, (மலைநாடு) பாலை, (மணல்நாடு) முல்லை, (காட்டுநாடு) மருதம்,(வயல்நாடு) நெய்தல், கடல்நாடு)

திதி (15) = பிரதமை, துவிதியை, திருதியை, சதுர்த்தி, பஞ்சமி, சட்டி, சத்தமி, அட்டமி, நவமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி, சதுர்த்தசி, பௌர்ணமி, அல்லது அம்மாவாசியை,

திரவிடம் (5) = திராவிடம், ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம்

திரவியம் (5) = மலைபடு திரவியம், (மிளகு, அகில், குங்குமம்) காடுபடு திரவியம், (தேன் அரக்கு, மயில்பீலி) நாடுபடு திரவியம், (அரசன், பித்தன், யானை) நகர்படு திரவியம், (நெல், பயறு, கரும்பு, வாழை) கடல்படு திரவியம், (உப்பு, பவழம், சங்கு)

திருக்குறள் உரையாசிரியர் (10) = தருமர், நச்சர், மணக்குடவர், தாமத்தர், பரிதி, திருமலையர், பரிமேலழகர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர்.

திருமாலவதாரம் (10) = மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி.

திருமாலவதாரம் (15) = அரிபிறப்பு என்ற இடத்துக் காண்க

திருமாலாடல் = (4) அல்லியம், குடம், மல், மரக்கால்

திருமாலாயுதம் (5) = சக்ரம், தனுசு, வாள், தண்டு, சங்கம், (பஞ்சாயுதம்.)

## தீ

தீவு (7) = நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு, (சப்த தீவு.)

## து

துரகக்கதி (5) = மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதி.

## தொ

தொழில் = சிருஷ்டி திதி, சம்மாரம், (முத்தொழில்)

தொகைநிலை = (8) இயமம், நியமம், ஆசனம், வளிநிலை தொகை நிலை, பொறை நிலை, நினைதல், சமாதி.

தொழில் (5) = படைத்தல் காத்தல், அழித்தல் மறைத்தல், அருளல்.

தொழில் (6) = உழவு, தொழில், வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம்.

தேவராடல் = (11) கொடுகொட்டி, (திரிபுர தகனத்தின்போது ஆடப்பட்டது) பாண்டரங்கம் (இறைவன், திரிபுர தகனத்தின்போது ஆடியது) குடை, (முருகன் சூர சம்மாரத்தின்போது ஆடியது) துடி, (சூரபதுமர் சம்மாரத்தின் போது ஆடியது) அல்லியம்.

(கிருஷ்ணன் குவலயாபீடம் என்னும் யானையை அழிக்கும் போது ஆடியது) மல் (வாணாசுரனைக் கொன்றபோது கிருஷ்ணன் ஆடியது) குடம், (கிருஷ்ணன் அநிருத்தனை மீட்க ஆடியது) பாவை, (அவுணர் மயங்கத் திருமகள் ஆடியது) மரக்கால், (துர்க்கை அரக்கர்மயங்க ஆடியது) பேடி, (மன்மதன் தன் மகனை மீட்க ஆடியது) கடை (இந்திராணிவாணன் நகரில் ஆடியது).

தேவர் = (33) சூரியர் 12, உருத்திரர் 11, வசுக்கள் 8, அச்சுவனிதேவர் 2, (முப்பத்து முக்கோடி தேவர்கள் இவரே).

## தோ

தோற்றம் (4) = பை, முட்டை, நிலம், வியர்வை.

தோற்றம் = (2) சரம், அசரம்.

## ந

நகர்படுதிரவியம் (5) = கண்ணடி, பித்தன், கருங்குரங்கு, யானை, வேந்தன்.

நட்சத்திரம் (27) = அசுவினி, பரணி, கார்த்திகை, உரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, புநர்பூசம், பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, இரேவதி.

நதி (7) = கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி.

நரகம் (7) = அள்ளல், இரௌரவம், கும்பீபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி.

## நா

நாகம் (8) = வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன்.

நாடி (10) = இடை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, அத்தி, சிங்குவை, அலம்புடை, புருடன், சங்கினி, குரு. (தசநாடி)

**நாடுபடுதிரவியம் (5)** = செந்நெல், செவ்விளநீர், சிறுபயிறு, கரும்பு, வாழை.

**நாட்டில் குற்றம் (7)** = தோட்டியர், கள்வர்; யானை பன்றி, விட்டில், கிளி, பெருமழை.

**நாட்டில் குற்றம் (8)** = ஈதி என்ற இடத்துக்காண்க.

**நாற்பொன் (4)** = ஆடகம், கிளிச் சிறை, சாதரூபம், சாம்பூநதம்.

## நி

**நியமம் (10)** = தவம், மனமகிழ்ச்சி, கடவுள் நம்பிக்கை, ஈட்டிய பொருளை ஈதல், மூத்தோர்வழிபாடு, உண்மை, நூற்பொருளைக் கேட்டல், கருவமின்மை, பகுத்தறிவு, செபம், விரதம்.

**நிலம் (4)** = குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்.

## நூ

**நூல் (3)** = முதனூல், வழிநூல், சார்புநூல்

**நூற்பயன் (4)** = அறம், பொருள், இன்பம், வீடு.

## ப

**பசு (5)** = நந்தை, பத்திரை சுரபி, சுசீலை, சுமனை.

**பஞ்சபூதம் (5)** = பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் (மண், நீர், தீ, காற்று, ஆகாயம்)

**பஞ்சவாசம் (5)** = இலவங்கம், ஏலம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம்.

**பஞ்சமூலம் (5)** = செவ்வியம், சித்திரமூலம், கண்டு பாரங்கி, பேரரத்தை, சுக்கு.

**பஞ்சமாபாதகம் (5)** = கொலை, களவு, பொய், கள்ளுண்ணல், குருநிந்தை.

**படைவகுப்பு (4)** = அணி, உண்டை, ஒட்டு, யூகம்

**பட்சி (5)** = வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில்.

**பண் (4)** = பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி.

**பதவி (4)** = சாலோகம், (கடவுள் உலகில்வாழ்தல்) சாமீபம், (அருகில் இருத்தல்) சாரூபம், (உருவு பெறுதல்) சாயுச்சியம், (இரண்டற இருத்தல்).

**பதினெண்சித்தர் (18)** திருமூலர், இராமதேவர், கும்பமுனி, இடைக்காடர்,

சட்டைமுனி, குதம்பைச் சித்தர், கோரக்கர், வால் மீகி, சுந்தரானந்ததேவர், தன்வந்திரி, காலமுனி, போகநாதர், மச்சமுனி, கொங்கணர், பதஞ்சலி, நந்திதேவர், போதகுரு, பாம்பாட்டி.

பத்துப்பாட்டு (10) = திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம்.

பருவகாலம் (6) = கார், கூதிர், முன்பனி, பின் பனி, இளவேனில், முதிர் வேனில்.

பருவம் (7) = பேதை (5-7) பெதும்பை (8–11) மங்கை, (12-13) மடந்தை, (14-19) அரிவை, (20-25) தெரிவை, (26-31) பேரிளம் பெண், (32-40).

பலை (3) = கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், (திரிபலை.)

பழம் (3) = வாழை, மா, பலா. (முப்பழம்)

## பா

பா (4) வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா.

பா (6) = வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா மருட்பா, பரிபாடல்.

பாதகம் (5) = கொலை, பொய், களவு, கள்ளுருந்தல், குருநிந்தை, (பஞ்சமகாபாதகம்)

பாயிரம் (2) = பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம்.

பாவினம் (3) = தாழிசை, துறை, விருத்தம்.

பாஷைநிலம் (18) = திராவிடம், சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசலம் (பதினெண் பாஷைநிலம்).

## பி

பிணி (3) = வாதம், பித்தம், சிலேட்டுமம்.

பிறப்பு (7) = தேவர், (14 லட்சம்) மக்கள், (9லட்சம்) விலங்கு, (10லட்சம்) புள்,

(10 லட்சம்) ஊர்வன, (11 லட்சம்) நீர்வாழ்வன, (10 லட்சம்) தாவரம், (20 லட்சம்) (இவையே 84 லட்ச யோனி பேதம்.)

## பு

**புண்ணியத்தோற்றம்** (4) = தவம், ஒழுக்கம், கொடை. கல்வி.

**புண்ணியம்** (9) = எதிர் கொளல், பணிதல், பீடத்தில் அமர்த்தல், பாதம் அலம்பல், அருச்சித்தல், தூபம் கொடுத்தல், தீபம் காட்டல், புகழ்தல், அமுத மேந்தல்.

**புரம்** (3) = இருப்பு மதில். வெள்ளி மதில், பொன் மதில், (முப்புரம்.)

**புராணம்** (18) = பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவிஷ்யம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரம்மகைவர்த்தம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மச்சம், காருடம், வ்ாயவியம், (பதிணெண்புராணம்) (மார்க்கண்டேயம், சைவம், பவிடியம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், கூர்மம், மற்சம், வாயவியம், சிவபரத்துவம்கூறும்) (வைணவம், பாகவதம், நாரதீயம், காருடம், விஷ்ணுபரத்துவம்கூறும்) (பதுமம், பிரமம், பிரமவரத்துவம்கூறும்)(ஆக்கினேயம் அக்கினியின் சிறப்புக்கூறும்) (பிரம்மகைவர்த்தம் சூரியன் பெருமை கூறும்).

**புராணலட்சணம்** (5) = உலகத்தோற்றம், ஒடுக்கம், முனிவர், அரசர் மரபு, அவர் சரிதம், மனுவந்தரம்.

**புரி** (7) = அயோத்தி, மதுரை, மாயா, காஞ்சி, காசி, அவந்தி, துவாரகை, (சப்தபுரி)

**புருடார்த்தம்** (4) = அறம், பொருள், இன்பம், வீடு. (தருமார்த்தகாமமோட்சம்)

**புலமையோர்** (4) = கவி (ஆசு மதுரம், சித்திரம், விஸ்தாரம் ஆகிய கவிகளைப் பாடுபவர்) கமகன் (அறம்பொருளைச் செம்மையாக விவகரிப்பவர்) வாதி (தக்க உதாரணம் காட்டிப் பிறமதம் மறுத்துத் தம்மதம் நிறுத்துவோர்) வாக்கி அறம் பொருள் இன்பம், வீடு இவற்றை விரித்துணர்ப்போர்).

புலன் (5) = சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

புறச்சமயம் (6) தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம்.

புறத்திணை (8) = வெட்சி (பசுகவர்தல்) கரந்தை (பசுவைமீட்டல்) வஞ்சி (பகைவர் மேல்செல்லல்) காஞ்சி (எதிர்த்தல்) நொச்சி (மதிலைக்காத்தல்) உழிஞை (மதிலை வளைத்தல்) தும்பை (அஞ்சுமாறு போரிடல்) வாகை (வெற்றி).

புறப்புறச்சமயம் (6) = உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்திமிகம், வைபாடிகம், ஆருகதம்.

## பூ

பூ (4) = கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ.

பூதகாரியம் (25) = (பிருதிவி) தோல், எலும்பு, நரம்பு, தசை, மயிர், (அப்பு) நீர் உதிரம், மச்சை, மூளை, சுக்கிலம், (தேயு) ஆகாரம், நித்திரை, பயம், மைதுனம், சோம்பல், (வாயு) ஓடல், நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல், (ஆகாசம்) குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம்.

பூதம் (5) = நிலம், நீர், தீ, காற்று விசும்பு(ஐம்பெரும் பூதம்)

## பெ

பெண்பாற் பிள்ளைத் தமிழ்ப் பருவம் (10) = காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, அம்மனை, நீராடல், ஊசல்.

பெண்வகை (4) = பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி.

பெரியோர் இயல்பு (7) = அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, பொறுமை.

## பே

பேறு (16) = புகழ், கல்வி, வலி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்லூழ், நுகர்ச்சி, அறிவு, அழகு, பொறுமை, இளமை, துணிவு, நோயின்மை, வாழ்நாள், (பதினாறு பேறு).

## பொ

பொருள் (4) = அறம், பொருள், இன்பம், வீடு (நாற்பொருள்).

பொருள் (3) = கல்விப் பொருள், செல்வப் பொருள், புத்திரப் பொருள். (முச்செல்வம்).

பொருள்கோள் (8) = ஆற்றுநீர், மொழிமாற்று, நிரல்நிறை, விற்பூட்டு, தாப்பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு, அடிமறிமாற்று.

பொழுது (6) = மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு (சிறுபொழுது), கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில், (பெரும்பொழுது).

பொறி (5) = மெய், வாய், கண், மூக்கு, செவி (ஐம்பொறி).

பொன் (4) = ஆடகம், கிளிச்சிறை, சாதருபம், சாம்பூநதம்.

## போ

போகம் (8) = பெண், ஆடை, அணிகலன், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூம்படுக்கை

## ம

மங்கலம் (8) = சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, விளக்கு, கொடி, இணைக்கயல். (அட்டமங்கலம்)

மணம் (8) = பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம், (எண்வகைமணம்).

மணி (9) = கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம், (நவமணி).

மண்டலம் (3) = சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண்டலம்.

மண்டலம் (7) = வாயு, வருணன், சந்திரன், சூரியன், நட்சத்திரம், அக்னி, திரிசங்கு.

மண்டலம் (7) = வாயுமண்டலம், வருணமண்டலம், சந்திரமண்டலம், சூரியமண்டலம், நட்சத்திரமண்டலம், அக்கினி மண்டலம், திரிசங்குமண்டலம்.

மதம் (7) = (கொள்கை) உடன்படல், மறுத்தல், தானாட்டித் தனாது நிறுத்தல், பிறர்தம் மதமேற்கொண்டு களைதல், இருவர் மாறுகோள ஒருதலைத் துணிதல் பிறர் நூல் குற்றம் காட்டல், பிறிதொடுபடாஅன் தம் மதம் கொளல் (எழுவகை மதம்),

மலம் (3) = ஆணவம், கன்மம், மாயை.

மலை (8) = கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் (அட்டகுல பர்வதம்).

மலைபடுதிரவியம் (5) = அகில், குங்குமம், கோட்டம், தக்கோலம், மிளகு.

மன்மதன் கணை (5) = வனசம், சூதம், அசோகு, முல்லை, நீலம், (பஞ்சபாணம்).

## மா

மாதர்கள் (7) = அபிராமி, மகேஸ்வரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி, (சப்தமாதர்).

மாயை (3) = சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை.

மார்க்கம் (4) = சன்மார்க்கம் (ஞானவழி), தாசமார்க்கம் (தொண்டுவழி) சகமார்க்கம் (நட்புவழி), சத்புத்ரமார்க்கம் (புத்திரர்வழி).

## மு

முக்கனி (3) = வாழை, மா, பலா. (முப்பழம்).

முத்துப்பிறக்குமிடம் (20) = சந்திரன், மேகம், சங்கு, சிப்பி, மீன், நத்தை, முதலை, உடும்பு, தாமரை வாழை, கமுகு, கரும்பு, செந்நெல், மூங்கில், யானைக்கொம்பு, பன்றிக்கொம்பு, பசுவின்பல், நாகம், கொக்கு, மாதர் கழுத்து.

முப்பொருள் (3) = பதி, பசு, பாசம்.

மும்மை (3) = இம்மை, மறுமை, உம்மை.

முரசு (3) = வீரமுரசு, கொடைமுரசு, மணமுரசு, (மும்முரசு).

முனிவர் (7) = அத்திரி, ஆங்கிரசன், கௌதமன், சமதக்கினி, பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன். (சப்தமுனிவர்) (அல்லது) அகத்தியன், ஆங்கிரசன் கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன்.

## மூ

மூர்த்தம் (8) = பூமி, நீர், தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா.(அட்டமூர்த்தம்)

மூலம் (5) = கண்டங்கத்திரி வேர், சிறுமல்லி வேர், பெருமல்லிவேர், சிறு வழுதுணைவேர், நெருஞ்சி வேர், (சிறுபஞ்சமூலம்), பெருங்குமிழம் வேர், தழுதாழைவேர், பாதிரிவேர், வில்வவேர், வாகைவேர் (பெருபஞ்சமூலம்)

மேகம் (7) = சம்வர்த்தம் (மணி), ஆவர்த்தம் (நீர்), புட்கலாவர்த்தம் (பொன்) சங்காரித்தம் (பூ), துரோணம் (மண்), காளமுகி (கல்), நீலவருணம் (தீ). (சப்த மேகம்).

## யா

யாகம் (5) = பிரம்மம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம்.

யாக்கைக்குறுகுற்றம் (18) = பசி, நீர் வேட்கை, பயம், கோபம், மகிழ்வு, வேண்டல், நினைப்பு, தூக்கம், நரை, நோய், சாவு, பிறப்பு மதம், இன்பம், அதிசயம், வியர்வு, கையறவு, துன்பம்.

யாழ்வகை (4) = பேரியாழ், (47 நரம்பு) சகோடயாழ், (16 நரம்பு) மகரயாழ், (17 நரம்பு) செங்கோட்டியாழ், (21 நரம்பு).

## யு

யுகம் (4) = கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம், சதுர்யுகம்.

## யோ

யோகாங்கம் (8) = இயமம், நியமம், ஆதனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி (அட்டாங்கயோகம்) கொல்லாமை முதலியன இயமம், தவம் முதலியன நியமம், இருத்தல் முதலியன ஆசனம், மூச்சை விட்டு இழுத்து அடக்கல் முதலியன பிராணயாமம், இந்திரிய அடக்கம் பிரத்தியாகாரம், அந்தக்கரணம் ஒருவகைப்பட்டிருத்தல் தாரணை, அந்தக்கரணம் ஒருமுகமாய்ப் பரிணமித்திருத்தல் சமாதி.

## ரு

ருது (6) வசந்தருது, கிரீஷ்மருது, வர்ஷருது, சரருது, ஏமந்தருது சிசிரருது.

## வ

வசுக்கள் (8) = அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன். (அட்டவசுக்கள்).

புலனறி (5) = வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம்.

வணிகர்க்குரிய குணம் (8) = தனியாக எதையும் செய்தல், கோபம் கொள்ளாமை, இடந்தெரிந்து நடத்தல் பொழுதோடு சேர்தல், உறுவது தெரிதல், இறுவது அஞ்சாமை, சம்பாதித்தல், பகுத்தல்.

வண்டு (4) = கரும்பு, தேன், ஞிமிறு, வண்டு.

வண்ணம் (5) = வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை

வருணம் (4) = பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர்.

வழக்கு (2) = செய்யுள் வழக்கு, உலக வழக்கு.

வாசம் (5) = இலவங்கம், ஏலம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம். (பஞ்சவாசம்).

வாயில் (9) = கண் 2, காது 2, மூக்குத்துளை 2, வாய், குதம், (நீர்கழிவாயில்) குய்யம், (மலங்கழிவாயில்) (நவத்துவாரம்).

வாயு (10) = பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் (தசவாயுக்கள்).

## வி

விட்டுணுவின் குரு (4) = சிவபெருமான், நந்திதேவர், உபமன்யு முனிவர், வசிட்டர்.

வித்தியாதத்துவம் (7) = காலம், நியதி, கலை, வித்தை, இராகம், மாயை, புருடன்.

வித்தைகள் (14) = வேதம் 4, வேதாங்கம் 6, உபாங்கம் 4.

விநாயகர் சத்திகள் (3) = சித்தி, புத்தி, வல்லபை.

விரை (5) = கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம். (பஞ்சவாசம்)

வினை (2) = நல்வினை, தீவினை.

## வே

வேதம் (4) = இருக்கு, யசுர் சாமம், அதர்வணம். (வேறுவகை) ஆயுர்வேதம், அருத்த வேதம், தனுர்வேதம், காந்தருவ வேதம்.

வேதாக்கினி (3) = ஆகவநீயம், தக்கிணாக்கினியம், காருகபத்தியம்.

வேதாங்கம் (6) = சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், சோதிடம், கற்பம், சந்தசு

வேளாண்மாந்தர் இயல்பு (14) ஆணைவழி நிற்றல், அழிந்தோர் நிறுத்தல், கைக்கடன் ஆற்றல், குழந்தையுள்ளத் துண்ணமை, சுற்றம் போற்றல், இடைவிடா முயற்சி, மைத்தருதல், ஒற்றுமை கொள்ளல், விருந்து உபசரிப்பு, நல்லொழுக்கம்.

## வை

வைசியர் (3) = தனவைசியர் (செட்டியார்) பூவைசியர், (வேளாளர்) கோவைசியர், (இடையர்).

வைணவாகமம் (2) = பாஞ்சராத்திரியம், வைகாநசம்

## அ

**அகப் பொருட் கோவை** = கோவை என்பது கோக்கப்பட்ட மாலையாகும். இங்கு இன்பப் பொருள்களை ஒழுங்காகக்கோவைப் படுத்திக்கூறுவதால்இது அகப்பொருட் கோவை எனப்பட்டது. இது நானூறு கட்டளைக் கலித்துறைகளால் தலைவன் தலைவியர் கூடிக் களவு மணத்தின் பின் கற்பு மணத்தால் மணந்து இன்புற்று இல்லறம் நடத்துதல் முதலான பல துறைகளைக் கொண்டு விளங்குவது. நானூறு துறைகளுக்கு மேலும் பாடப்பட்டகோவை நூல்களும் தமிழில் உண்டு. (உ-ம்) திருக்கோவையார். அம்பிகாபதி கோவை.

**அங்கமாலை** = ஆண்மகன் பெண்மகன் உறுப்புக்களை வெண்பாவாலேனும் வெளி விருத்தத்தாலேனும் பாதம் முதல் முடிவரையிலேனும், முடி முதல் பாதம் வரையிலேனும் முறை கெடாது, தொடர்புறப் பாடுவது, அங்கங்களை வரிசைப் படுத்திப் பாடப்படுதலின் இப்பெயர்பெற்றது (உ-ம்) அப்பர் பாடியுள்ள திருவங்கமாலை.

**அட்டமங்கலம்** = கடவுள் மீது பாடலைப்பாடி, அக்கடவுளை காப்பாற்றுவாராக என ஆசிரியவிருத்தம் எட்டு அமைய அந்தாதித் தொடையில் பாடப்பெறுவது.

**அநுராகமாலை** = தலைவன் ஒருவன் தான்கண்ட கனவில் ஓர் அழகியமாதுடன் ஐம்புலன்களும் இன்புறப் புணர்ந்து மகிழ்ந்ததைத் தன் பாங்கனுக்குக் கூறுவதுபோல நேரிசைக் கலி வெண்பாவினால் பாடப்படுவது.

**அரசன் விருத்தம்** = பத்துக் கலித்துறையும் முப்பது விருத்தமும் கலித்தாழிசையும் ஆகிய இவற்றால் மலை, கடல், நிலம் இவற்றின் வருணனையும், வாள் மங்கலம் தோள் மங்கலத்தையும்பாடிமுடிப்பதாகும்.

**அலங்கார பஞ்சகம்** வெண்பா, கலித்துறை, அகவல், ஆசிரியவிருத்தம் ஆகிய இவை மாறி

மாறி அமைய நூறு பாடல்களாக அமையும்படி அந்தாதித் தொடையில் பாடுவது.

## ஆ

ஆற்றுப்படை = பரிசுபெற்ற ஒருபுலவனோ, விறலியோ கூத்தரோ, பொருநரோ, பாணனோ, பரிசுபெறாதவனை வழியில் கண்டு, தனக்குப் பொருள் ஈந்து உதவிய வள்ளலுடைய கொடைக்குணம் வீரம், பண்பு முதலானவற்றை எடுத்துக்கூறி, இப்பண்புகளுடையவனை அடைதற்குரிய வழிகளையும் விளக்கி இத்தகையவன்பால் செல்க என்று வழிகாட்டி அனுப்புவது. இதனை அகவல் பாவால் பாடுவர் (உ-ம்) திருமுருகாற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை.

## இ

இணைமணிமாலை = வெண்பாவும் அகவலும், வெண்பாவும் கட்டளைக்கலித்துறையும் இரண்டிரண்டாக இணைந்துவர மாலைபோலக் கோத்துப் பாடப்படுவது. வெண்பா அகவல் இணைந்து அந்தாதித் தொடைப் பாடல்களால் பாடப்படுவது வெண்பா அகவல் இணைமணிமாலை என்றும், வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் இணைந்த பாடல்கள் அந்தாதித் தொடையுடன் நூறு கொண்டு வருமானால் வெண்பாக் கலித்துறை இணைமணிமாலை என்றும் கூறப்படும்.

இயல் மொழி வாழ்த்து = இந்திந்தக்குடியில் பிறந்தவர்கட்கு இந்திந்த இயல்புண்டு என்றுகூறி, இந்த இயல்பு உன்னிடம் இருப்பதனால், அன்னார் இந்தப் பொருளைத் தந்தனர் அவர்களைப்போல் நீயும் தருக என உயர்ந்தோர் வாழ்த்திக் கூறல். (உ-ம்) புறநானூற்றில் உள்ள பாடல்கள்.

இரட்டைமணிமாலை = இரண்டிரண்டு மணிகளை இணைத்துக் கட்டப்பட்ட மாலைபோல் வெண்பாவும், கலித்துறையும் முறையே அமைய இருபது பாடல்கள் பொருந்த அந்தாதித் தொடையில் பாடப்படுவது (உ-ம்) மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை.

**இரட்டைமணிமாலை** = நேரிசைவெண்பா பத்தும் ஆசிரியவிருத்தம் பத்தும் அந்தாதித் தொடையில் அமைவது மற்றொரு வகையான இரட்டை மணிமாலை.

**இருபாஇருபஃது** = பத்து வெண்பாவும் பத்து அகவல்பாவும் அந்தாதித் தொடையாக அமைய இருபது பாடல்களால் பாடி முடிப்பது (உ-ம்) அருணந்தி சிவாசாரியார் பாடிய இருபா இருபஃது.

## உ

**உலா** = இளமையும் அழகும் வாய்ந்த தலைமகன் வீதி வழியே பவனிபோம் போது, பேதை முதலிய எழுவகைப் பருவமங்கையர் கண்டு மயங்கிக் காமுற்றவகைகளைக் கலிவெண்பாவால் பாடுவது. (உ-ம்) திருக்கைலாய ஞான உலா.

**உலாமடல்** = கனவின்கண் ஒருபெண்ணைக் கூடி இன்புற்ற ஒரு தலைமகன் விழித்தெழுந்து அத்தகையவளை மணக்க மடல் ஊர்வேன் என்று முயன்றதைக் கலிவெண்பாவால் பாடியமைப்பது.

**உழத்திப்பாட்டு** = கடவுள் வணக்கம் அமைய மூத்த பள்ளி, இளைய பள்ளி ஆகிய இவ்விருவர்களின் வரவு, அவர்கள் பெருமை நாட்டுவளம், மழை வேண்டித் தெய்வம் வேண்டல், மழைக்குறி கவனித்தல், ஆற்றின் வரவு, பண்ணைத் தலைவன் வரவு, அவனிடம் முறையிடு, பள்ளன் வரவு, ஆயரை வருவித்தல், மூத்தபள்ளி உணவு கொண்டுவரல், காளை வெருளல், நாற்றுநடல், ஏசல், முதலான மற்றும் பல உறுப்புக்கள் அமையப் பாட்டுடைத்தலைவன் புகழ் விளங்கச் சிந்தும் விருத்தமும் கலந்துவரப் பாடப்படுவது, (உ-ம்) முக்கூடற்பள்ளு.

**உழிஞைமாலை** = பகையரசனது ஊரின் வெளிப்புறத்தைச் சூழ உழிஞை மலரைச் சூடிப் பகைவரது மதில்புறத்தைப் படைஞன் வளைத்துக்கொண்ட சிறப்பினைச் சிறப்பித்துப் பாடுவது.

**உற்பவமாலை** = மகாவிஷ்ணுவின் அவதாரம் பத்தினையும் ஆசிரிய விருத்தத்தால் பாடுவது.

## ஊ

**ஊசல்** = ஆசிரியவிருத்தத்தாலேனும் கலித்தாழிசையாலேனும் சுற்றத்துடன் பொலிக என ஆடீர் ஊசல், ஆடாமோ ஊசல் எனப் பாடப்படுவது (உ-ம்) திருப்பொன்னூசல் (திருவாசகத்திலுள்ளது).

**ஊரின்னிசை** = பாட்டுடைத்தலைவனது ஊரைச்சார இன்னிசைவெண்பாவால் தொண்ணூறேனும், எழுபதேனும் ஐம்பதேனும் அமையப் பாடப்படுவது.

**ஊர்நேரிசை** = பாட்டுடைத்தலைவன் ஊரைச்சார்ந்து நேரிசை வெண்பாக்கள் தொண்ணூறேனும், எழுபதேனும் ஐம்பதேனும் பாடப்படுவது.

**ஊர்வெண்பா** = வெண்பாவால் ஊரைப் புகழ்ந்து பத்துச் செய்யுள் பாடுவது.

## எ

**எண்செய்யுள்** = பாட்டுடைத்தலைவனது ஊரையும் பெயரையும் பத்து முதல் ஆயிரம் அளவு பாடி முடிப்பது.

**எழுகூற்றிருக்கை** = ஏழறையாகக் குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் தன்மையில் ஒன்று முதலாக ஏழ் இறுதியாக முறையானே பாடுவது. (உ-ம்) திருஞானசம்பந்தர் பாடிய திருஎழுக்கூற்றிருக்கை.

## ஐ

**ஐந்திணைச்செய்யுள்** = புணர்தல், பிரிதல், ஊடல், இரங்கல், இருத்தல் என்னும் ஐந்து உரிப்பொருள் தோன்றக்குறிஞ்சி. பாலை, மருதம், நெய்தல், முல்லை ஆகிய ஐந்து திணைகளின் உரிப்பொருள்களைப் பொருத்திப் பாடப்படுவது.

## ஒ

**ஒருபாவொருபஃது** = அகவல்பாவாலேனும் வெண்பாவாலேனும், கட்டளைக் கலித்துறையாலேனும் தனித்தனிப் பாடல்கள் பத்து அந்தாதித்தொடையயைப்பாடுவது. (உ-ம்) பட்டினத்தார் பாடிய ஒருபாவொருபஃது.

**ஒலியலந்தாதி** = வெண்பா, அகவல், கட்டளைக் கலித்துறை முறையே பத்துப்

பத்தாக அமைய அந்தாதித் தொடை பொருந்த முப்பது பாடல்களைக் கொண்டு விளங்குவது.

கடி

கடிகைவெண்பா = தேவரிடத்தும் அரசரிடத்தும் நடக்கும் காரியம் கடிகை அளவில் தோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு நேரிசை வெண்பாவால் பாடப்படுவது.

கடைநிலை = வாயில் காவலனிடம் தன் வருகையைக் கூறுமாறு வாயிற்கடைக்கண் கூறும் முறையில் பாடப்படுவது.

கண்படைநிலை = அரசரும், அரசரைப் போன்றவரும், சபையில் நீண்ட நேரம் தங்கி இருப்பதை அறிந்த அமைச்சரும் மருத்துவரும் அரசரும் ஏனையோரும் உறங்கவழிவகுத்துக் கூறுவதைப் பாடுவது.

கலம்பகம் = ஒரு போகும் வெண்பாவும், கலித்துறையும் முதற்கவி உறுப்பாக முன் கூறப்பெற்று, புயவகுப்பு, மதங்கம், அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் ஆகிய பதினெட்டு உறுப்புக்களுடன் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா விருத்தம், துறை ஆகிய பாடல்களைப்பெற்று அந்தாதித் தொடையில் அமையப் பெறுவது தேவர்மீது பாடப்படின் நூறும் அந்தணர்மீது பாடப்படின் தொண்ணூற்றைந்தும், அரசர்மீது பாடப்படின் தொண்ணூறும், வைசியர் மீதுபாடபபடின் ஐம்பதும் சூத்திரர்மீது பாடப்படின் முப்பதும் ஆகப் பாடப்படுவதும் (உ-ம்) அருணைக் கலம்பகம், திருவரங்கக் கலம்பகம்,

கா

காஞ்சிமாலை = பகைவரது ஊர்க்கு வேளியே இருந்து காஞ்சிமலரைச் சூடித் தாக்குதலைக் கூறுவது.

காப்புமாலை = தெய்வம் காப்பதாக என்றுமூன்று அல்லது ஐந்து அல்லது ஏழு, செய்யுள்களில் பாடுவது.

## கு

**குழமகன்** = மாதர்கள் தம் கையில் கண்ட குழமகனை (இளங்குழந்தையை) புகழ்ந்து கலிவெண்பாவால்பாடுவது.

**குறத்திப்பாட்டு** = தலைவன் பவனிவருதல், மகளிர் காமுறுதல், மோகினி வரவு, பாங்கிவினவல், தலைவிகூறல், தென்றல், மதி இவற்றை வெறுத்தல், பாங்கிபழித்தல், தலைவி புகழ்தல், தூது வேண்டல், குறத்திவரல், குறத்தி மலைவளம் கூறல் குறிகூறல், பரிசுதரல், குறவன் வரவு, குறத்தையைக் காமுற்றுத் தேடல், முதலானமற்றும் பல துறைகள் அமைய அகவல் வெண்பா, தரவு, கொச்சகம் கலித்துறை, கழிநெடிலடி விருத்தம கலிவிருத்தம், முதலியன அமையப் பாடப்படுவது. இது குறம் என்றும் பெயர் பெறும் (உ-ம்) மீனாட்சியம்மை குறம், குற்றாலக் குறவஞ்சி.

## கே

**கேசாதிபாதம்** = முடி முதல் பாதம் வரையில் உள்ள உறுப்புக்களைச் சிறப்பித்துக் கலிவெண்பாவால் பாடப்படுவது.

## கை

**கைக்கிளை** = ஒரு தலைக் காமத்தினை ஐந்து விருத்தத்தாலேனும் முப்பத்திரண்டு வெண்பாவாலேனும் பாடுவது.

**கையறுநிலை** = கணவனும் மனைவியும் ஏனையரும் இறந்துபட்டபோது, தாயத்தாரும் விறலியரும் மற்றோரும் துன்புற்று வருந்திச் செயலற்று வருந்தும் நிலையைக் கூறுவது. (உ-ம்) புறத்தில் சில செய்யுட்கள்.

## ச

**சதகம்** = ஒரு பொருளைப் பற்றியோ பல பொருள்களைப்பற்றியோ நூறுசெய்யுட்கள் அமையப் பாடப்பெறுவது.(உ-ம்) குமரேச சதகம், வைராக்கிய சதகம், திருச்சதகம்.

## சி

**சிறுகாப்பியம்** = பெருங்காப்பியத்தில்கூறப்பட்ட உறுப்புக்களுள் சில குறைந்து, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருளினும் ஒன்றிரண்டு

குறைந்து வரப்பாடப் படுவது. (உ-ம்) சூளாமணி.

சின்னப்பூ = நேரிசை வெண்பாவால் அரசனது சின்னமாகிய தசாங்கத்தினைச் சிறப்பித்து விரித்து நூறு, தொண்ணூறு, எழுபது ஐம்பது முப்பது என்னும் எண் படப்பாடுவது. (உ-ம்) தத்துவராயர் பாடிய சின்னப்பூ வெண்பா.

## செ

செருக்களவஞ்சி = போர்க்களத்தில் வீரரும், யானையும், குதிரையும் பட்டுக்கிடக்க அவ்வுடலங்களை நாயும், பேயும், கழுகும், காகமும் உண்டு ஆரவரிக்க, பூதபைசாசங்கள் பாடியாடும் சிறப்பைப் பாடுவது. இதனைப் பறந்தலைச் சிறப்புப்பாட்டு என்பர்.

செவியறிவுறூஉ = பெரியோர் தம் அனுபவத்தில் உண்மையெனக் கண்டவற்றை உபதேசமுறையில் மருட்பாவால் பாடுவது.

## த

தசாங்கத்தயல் = அரசனது தசாங்கத்தினை ஆசிரிய விருத்தம் பத்து அமையப் பாடப்படுவது.

தசாங்கப்பத்து = நேரிசை வெண்பாவால் அரசன் படைத்த தசாங்கத்தினைப்பத்துச் செய்யுளால் கூறுவது.

தண்டகமாலை = இதுவெண் புணர்சிமாலை என்றும் கூறப்படும் இதுவெண்பா முந்நூறு அமையப் பாடப்படுவது (உ-ம்) திருவாசகத்தில் உள்ள திருத்தசாங்கம்.

## தா

தாண்டகம் = இருபத்தேழு எழுத்து முதலாக உயர்ந்த எழுத்துக்களையுடைய அடியினைக் கொண்டுவருவது. இவ்வாறு வருவதை அளவியல் தாண்டகம் என்பர். எழுத்துக்கள்குறைந்தோ அதிகப்பட்டோ வரும் அடியினைக் கொண்டுவருவதை அளவழித்தாண்டகம் என்பர். (உ-ம்) அப்பர் பாடியுள்ள திருத்தாண்டகங்கள்.

தாரகைமாலை = அருந்ததி போன்ற கற்புடைய

குணங்களை வகுப்பு என்னும் பாடல் அமையப் பாடப்படுவது.

தானைமாலை = ஆசிரியப்பாவால் முன்னர் செல்லும் கொடிப்படையைப் புகழ்ந்து பாடப்படுவது.

## து

தும்பைமாலை = தும்பை மலரைச் சூடிப் பகைவரோடு போரிடலைக் கூறுவது.

துயிலெடைநிலை = பாசறையில் எந்தவித் தக்கவலையும் இன்றி உறங்கிய மன்னருக்கு நற்புகழ் உண்டாக எண்ணிய சூதர் அம்மன்னரைத் தூக்கத்திலிருந்து எழுப்புவதைப் பாடுதல்.

## தூ

தூது = காதல் கொண்ட தலைவனும் தலைவியும் தம் தம் காதற் குறிப்பையும் அவத்தைதையையும் கூறுமாறு பாணர் கிளி முதலானவர்களைத் தூதாக அனுப்புவது போல் கலிவெண்பாவால் பாடுவது (உ-ம்) கச்சி ஆநந்தருத்ரேசர் வண்டுவிடு தூது, தமிழ்விடு தூது.

## தொ

தொகைநிலைச் செய்யுள் = ஒரேவகையான பாவால் தொடுக்கப்பட்ட பாடல்களையுடையது, (உ-ம்) கலித்தொகை.

## ந

நயனப்பத்து = கண்ணினைக் குறித்துப் பத்துப் பாடலில் பாடுவது.

நவமணிமாலை = ஒன்பது மணிகள் கோக்கப்பட்ட மாலைபோல வெண்பா முதலில் அமைய, பின்னர் வேறுபட்டபாவும், பாஇனமும் ஆக ஒன்பது செய்யுள் அந்தாதித் தொடை பொருந்தப் பாடப்படுவது கட்டளைக் கலித்துறையாலும் பாடப்படும். (உ-ம்) பிட்சாடர் நவமணிமாலை.

## நா

நாமமாலை = அகவலடியும் கலிப்பாவடியும் வரப்பெற்ற வஞ்சிப்பாவால், மகனைப் புகழ்ந்து பாடப்படுவது.

நாற்பது = காலத்தைப் பற்றியேனும் இடத்தைப் பற்றியேனும், பொருள் பற்றியேனும் நாற்பது வெண்பாக்களால் பாடப்படுவது, ( உ-ம் ) கார்

நாற்பது, களவழி நாற்பது, இன்னா நாற்பது, இனியவை நாற்பது.

**நான்மணிமாலை** = நான்கு மணிகளைத் தேர்ந்தெடுத்து ஒன்றன்பின்ஒன்றாகத்தொடுத்து மலர்களை இணைத்து மாலையாகக் கட்டுவதுபோலவெண்பா கட்டளைக் கலித்துறை விருத்தம் அகவல் ஆகிய நான்கு பாடல்கள் கொண்டு, அந்தாதித் தொடையில் பாடப்படுவது. (உ-ம்) நால்வர் நான்மணிமாலை, திருவாரூர் நான்மணிமாலை.

## நூ

**நூற்றந்தாதி** = வெண்பா நூறு கொண்டேனும், கட்டளைக் கலித்துறை நூறு கொண்டேனும், அந்தாதித் தொடை அமையப் பாடப்பட்டு வருவது. அந்தாதி என்பது ஒருபாட்டின் ஈற்றுச் சீரோ, அசையோ, எழுத்தோ அடுத்த பாட்டின் முதலாகத் தொடங்கப் பெறுவது (உ-ம்) கந்தரந்தாதி, அற்புதத் திருவந்தாதி.

## நொ

**நொச்சிமாலை** = நொச்சிமலர் சூடிப்பகைவர் தம் நாட்டு மதிலைக் கவராதிருக்க அதனைக்காக்கும் சிறப்பைக் கூறுவது.

## ப

**பாதாதிகேசம்** = பாதம் முதல் முடிவரை சிறப்பித்துக் கலிவெண்பாவால் பாடுவது.

**பதிகம்** = ஒரு பொருளைக் குறித்துப்பத்துப்பாடலால் பாடப்படுவது. (உ-ம்) தேவாரப் பதிகங்கள்.

**பதிற்றந்தாதி** = பத்துவெண்பாக்களாலேனும், பத்துக் கட்டளைக் கலித்துறைப் பாடல்களாலேனும் அந்தாதித் தொடை அமையப் பாடப்படுவது.

**பயோதரப்பத்து** = முலையினைக் குறித்துப் பத்துப் பாடல் பாடுவது,

**பரணி** = போரில் ஆயிரம் யானைகளைக்கொன்றுதன் வெற்றியை நிலைநாட்டிய வீரனது புகழ் தோன்று ஈரடித் தாழிசைகளால் பாடப்படுவது. இதில் கடவுள் வாழ்த்து, கடை திறப்பு, பல வர்ணனை கூளி காளிக்குக் கூறுவதும், காளி கூளிக்குக் கூறுவது, போர்க்கள

வர்ணனையும், காளி கோவில் வர்ணனையும் இராச பாரம்பரியம் தலைவன் சிறப்பு, இயல்பு, வெற்றி முதலியன விளக்கமாகக்கூறப்படும். பாடும் புலவன் மனப்போக்கிற்கேற்ப இந்நூல் தன்னகத்துப் பல பிரிவுகளைக் கொண்டிருக்கும். காளிக்குரிய நட்சத்திரம் பரணி. அந்நட்சத்திரத்தில் பேய்கள் கூழ் சமைத்து அக்காளியைவழிபட்டுஉண்டு மகிழும் ஆதலின் பரணி எனப்பட்டது என்றும், இப் பிரபந்தம் பாடும் புலவன் வேலாலும் வளாலும் அமைந்த பரணி மீது இருந்து பாடுதலின் இப்பெயர் பெற்றது, என்றும் கூறுவர். (உ-ம்) கலிங்கத்துப் பரணி, தட்சயாக பரணி.

**பலசந்தமாலை** = பத்துப் பத்துப் பாடல்கள் ஒவ்வொரு சந்தமாக நூறு பாடல்களைக் கொண்டு வருவது.

**பவனிக்காதல்** = மாதர்கள் கட்டழகன் ஒருவன் தெருவில் உலாவந்த போது காதற்கொண்டு அதனைத்தம்தோழியருடனும், தம்மைச் சார்ந்தவருடனும் உரைத்துக் காதலைஉணர்த்தும்முறையில் பாடப்படுவது.

**பன்மணிமாலை** = ஒருபோகும் அம்மனையும், ஊசலும் இன்றி மற்றைய கலம்பக உறுப்புக்களைப் பெற்றுப் பாடப்படுவது. இதனால் இதனைக் கலம்பகமாலை என்றும் கூறுவர்.

## பி

**பிள்ளைத்தமிழ்** = இது பிள்ளைக்கவி என்றும் பெயர் பெறும். இதன் வகை இரண்டு. ஒன்று ஆண்பால் பிள்ளைத் தமிழ். மற்றொன்று பெண்பால் பிள்ளைத் தமிழ். புலவன் தான் வழிபடும் தெய்வத்தினையோ, அன்றித் தன் மதிப்புக்குரிய பெரியோர்களையோ குழந்தையாகப் பாவித்துப் பத்துப் பருவங்களில் நூறு விருத்தப்பாவால்பாடப்படுவது. ஆண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பத்துப் பருவங்கள், 1. காப்பு, (தெய்வங்கள் குழந்தையைக் காக்க வேண்டுமென்று துதித்தல். 3, இரண்டாம் மாதத்தில்பாடப்படுவது) 2. செங்கீரை, (செம்மையான சொற்களைப் பேசு

மாறு குழந்தையைக் கேட்டல். அல்லது இரு கைகளை நிலத்தில் ஊன்றி ஒருகாலின் முட்டியையும் பூமியில்ஊன்றி, ஒருகாலைப் பின்னீட்டித் தலையைத் தூக்கி அசைந்து அசைந்து ஆடுமாறு வேண்டல். இது ஐந்தாம் மாதத்தில் நிகழ்வது) 3. தால், (குழந்தையைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுதல். இது எட்டாம் மாத நிகழ்ச்சி) 4. சப்பாணி (குழந்தையை இருகைகளைச் சேர்த்துத் தட்டுமாறு வேண்டல். ஒன்பதாம் மாத நிகழ்ச்சி) 5. முத்தம் (குழந்தையை முத்தம் கொடுக்குமாறு வேண்டல், பதினோராம் மாதநிகழ்ச்சி.(6) வாரானை குழந்தையை அருகே வருகஎன்று அழைத்தல். இது பன்னிரண்டாம்மாத நிகழ்ச்சி (7) அம்புலி (சந்திரனை நோக்கிக் குழந்தையுடன் விளையாடவருமாறு வேண்டல். இந்தப் பருவத்தில் சந்திரனைச் சாம பேத தான தண்டம் என்னும் சதுர்வித உபாயங்களாலும் திறம்பட அழைக்கும் முறையில் புலவன் பாடலைப் பாடுவன். சாமமுறையில் அழைத்தலாவது சமாதானமுறைப்படி சந்திரனை அழைத்தல், பேதமுறையாவது, சந்திரனுக்குப் பாட்டுடைத்தலைவனது சிறப்பினை உணர்த்திச்சந்திரன் அச்சங் கொள்ளும் வகையில் பேதித்து அழைத்தல். தானமுறையாவது, பாட்டுடைத் தலைவனுடன் விளையாட வந்தால் அவனால் இந்திந்தப் பேறு கிடைக்கும் எனக்கூறி அழைத்தல். தண்டமுறையாவது சந்திரன் பாட்டுடைத் தலைவனுடன் வந்து விளையாட மறுத்தால், தண்டனை கிடைக்கும் எனக் கூறல். இது பதினெட்டாம் மாத நிகழ்ச்சி), 8. சிறுபறை (குழந்தையிடம் சிறிய பறை என்னும் வாத்தியத்தைக் கொடுத்து வாசிக்கும்படி வேண்டல். இது இரண்டாம் ஆண்டில் நிகழ்வது.) 9. சிற்றில் சிதைத்தல் (பெண்பால் குழந்தைகள் தெருவில் மணல் வீடுகட்டி விளையாடும்போது, அதனைக் கலைத்துவிடுதல். இது மூன்றாம் ஆண்டில் நிகழ்வது). 10. சிறுதேர் உருட்டல் (குழந்தை மர

தால் செய்யப்பட்ட சிறிய தேரை உருட்டி விளையாடுதல் இது நான்காம் ஆண்டில் நிகழ்வது (உ-ம்) முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ், சேக்கிழார் பிள்ளைத் தமிழ்.

பெண்பால் பிள்ளைத் தமிழ்க்குரிய பருவங்கள் மேலே குறிப்பிடப்பட்ட முதல் ஏழு பருவங்களுடன் அம்மனை, நீராடல், ஊசல் என்ற பருவங்களைக் கூட்டிப் பத்தாகக் கொள்ளவேண்டும். அம்மனையாவது அம்மனை என்னும் காய்களைக் கொண்டு மேலே விசி எறிந்து பிடித்து ஆடும் ஆட்டம், நீராடல் என்பது குளித்து விளையாடுதல், ஊஞ்சல் ஆடுதல் ஊசல். (உ-ம்) மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்.

## பு

**புகழ்ச்சிமாலை** = மாதர்களின் சிறப்பை எடுத்துப் பாடப்படும் முறையில் அமைவது. அகவலடியும் கலியடியும், கலந்துவரும் வஞ்சிப்பாவால் பாடப்படுவது.

**புறநிலை** = வழிபடு தெய்வம் காப்ப, வழி வழி சிறக்க என வாழ்த்திக்கூறுவது.

**புறநிலைவாழ்த்து** = வழிபடு தெய்வம் காக்க எனவும், செல்வம் நாளும் நாளும் சிறக்க வாழ்க எனவும், வாழ்த்தி மருட்பாவால் பாடப்படுவது ஒருவெண்பாவாகி வருதலின்றிப் பல உறுப்புக்களோடு தொடர்ந்து ஒருபாட்டாகி முடிவது மருட்பா.

## பெ

**பெயரின்னிசை** = பாட்டுடைத்தலைவன் பெயரினைச் சார இன்னிசை வெண்பாவால் தொண்ணூறேனும் எழுபதேனும் ஐம்பதேனும் பாடல்கள் அமையப் பாடப்பெறுவது.

**பெயர்நேரிசை** = பாட்டுடைத்தலைவன் பெயரினைச் சார நேரிசை வெண்பாவால் தொண்ணூறேனும், எழுபதேனும், ஐம்பதேனும் அமையப் பாடப்படுவது.

**பெருங்காப்பியம்** = தெய்வ வணக்கம் செய்யப்படு பொருள், அவையடக்கம், அறம் பொருள், இன்பம் வீடு ஆகிய இவற்றின் பயனை அறிவிப்பனவாய்த் தன்னேர் இல்லாத் தலைவனைக்கொண்டு, போர், முடிசூட்டுவிழா, மகப்பேறு, பலவித வர்ணனைகள் முத

லான மற்றும்பல அமைப்புக்கள் அமைய இலம்பகம் பரிச்சேதம், சருக்கம் என்னும் பிரிவுடன் ஒன்பான் சுவையும் பொருந்தப்பாடப்படுவது. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்குபொருளை நிச்சயமாகப் பயப்பதாய் அமைதல் வேண்டும். (உ-ம்) சீவக சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம்.

பெருமகிழ்ச்சிமாலை = தலைமகளுடைய அழகு, குணம், ஆக்கம், சிறப்பு இவற்றைக் கூறிப் பாடப்படுவது.

பெருமங்கலம் = இனமும் மேற்கொள்ளும் சிறையிடு செய்தல், நீக்கல், பிறந்த நாள் சிறப்பு முதலானவற்றைக் கூறல்.

## போ

போர்க்கெழுவஞ்சி = பகைவர் மேல் செல்லும் மன்னன் வஞ்சிப்பூவைச் சூடிப் புறப்படுகையில், படை எழுச்சி செல்லும் சிறப்பை ஆசிரியப்பாவால் பாடுவது.

## ம

மங்கலவெள்ளை = உயர்குலத்துப் பிறந்த மாதினை ஒன்பது வெண்பாவாலே னும், ஒன்பது வகுப்பாலேனும் புகழ்ந்து பாடுவது.

மணிமாலை = எந்தப் பொருளைப் பற்றியாவது இருபது வெண்பாக்களைக் கொண்டும், நாற்பது கட்டளைக் கலித்துறைகளைக் கொண்டும் பாடப்பட்டு வருவது.

## மு

முதுகாஞ்சி = இளமை கழிந்து அறிவில் மிக்க பெரியோர்கள் இளமை கழியாது அறிவின்றி இருக்கும் மக்கட்கு நல் லுபதேசங்கள் கூறும் முறையில் பாடப்படுவது. (உ-ம்) முதுமொழிக் காஞ்சி.

மும்மணிமாலை = மூன்று மணிகள் ஒன்றன்பின் ஒன்றாக இணைத்து மாலை கோப்பது போல, வெண்பா, கட்டளைக்கலித்துறை, அகவல் பாடல்கள் ஒன்றன்பின் ஒன்றாக அமைய, அந்தாதித்தொடையில் முப்பது பாடல்களால் பாடப்படுவது.

மும்மணிக்கோவை = மூன்று மணிகளைத் தேர்ந்தெடுத்து ஒன்றன்பின் ஒன்றாக வைத்துக் கோத்துக் கோவைப்படுத்துவது போல ஆசிரியப்

பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகியபாடல்கள் ஒன்றன்பின் ஒன்றாக அந்தாதி முறைப்படி முப்பதுபாடலால் அமைவது. (உ-ம்) சிதம்பரமும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக் கோவை.

### மெ

மெய்க்கீர்த்திமாலை = சொற்சீரடி என்னும் கட்டுரைச் செய்யுளில் குலமுறையில் விளங்கியவர்களின் சிறப்பை எடுத்து மொழிவது. (உ-ம்) கல்வெட்டு.

### வ

வசந்தமாலை = தென்றல் காற்றைப் புகழ்ந்து பாடுவது

வரலாற்றுவஞ்சி = குலமுறை பிறப்பு முதலிய சிறப்பியல்புகளை வஞ்சிப்பாவால் பாடுவது.

வருக்கக்கோவை = அகர முதலாகிய எழுத்துக்கள் முதலில் அமையக் கட்டளைக் கலித்துறையில் பாடப்படுவது. (உ-ம்) நெல்லை வருக்கக்கோவை.

வருக்கமாலை = மொழிக்கு முதலாகும் வருக்க எழுத்துக்கள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு செய்யுள் பாடப்பட்டு வருவது. (வருக்கக் கோவையில் அமையும் செய்யுட்கள் கட்டளைக்கலித்துறையில் இருத்தல்வேண்டும்).

வளமடல் = அறம் பொருள் இன்பம் ஆகிய இவற்றின் பயனையும் வெறுத்து, மங்கையரால் பெறும் காம இன்பமே பெரிதெனவும் பயனுடையதெனவும் கொண்டு பாட்டுடைத் தலைவனது இயற்பெயர்க்குப் பொருந்தானதை எதுகையாக அமைத்துத் தனிச்சொல் இன்றி இன்னிசை வெண்பாவால் தலைமகன் கெஞ்சிக் கேட்டல், தன் எண்ணம் நிறைவேறாது கண்டு அவன் மடல் ஏறுவதாக ஈரடி எதுகை வரப் பாடப்படுவது (மடலேறுதலாவது தலைமகன், தான் காதலித்த தலைமகளைப் பெற அவளது உருவத்தை ஒரு கிழியில் எழுதி வைத்துக்கொண்டு உடல் முழுவதும் திருநீற்றை அணிந்து கொண்டு, மானத்தை மறைக்கச் சிறு ஆடையை மட்டும் அணிந்துகொண்டு, பனங்கருக்கால் செய்த குதிரையில் ஏறிக்கொண்டோ, அதனை இழுத்துக்

கொண்டோர் அத்தலைமகள் வசிக்குமூர் வழியே வருவதாம். இவ்வாறு மடல் ஊர்ந்து வரும்போது, உடலில் செந்நீர்க் குப்பிலாக வீரியம் வரக் கண்டால், அங்குள்ளார் அத்தலைமகன் தலைமகள் மீது உண்மையான காதல் கொண்டுள்ளான் என்று அறிந்து அவன் காதலித்த பெண்ணை மணமுடித்து வைப்பார்.

## வா

வாகைமாலை = பகைவரை வென்று வெற்றி கண்டதை ஆசிரியப்பாவால் பாடுவது.

வாதோரணமஞ்சரி = மதயானையை அடக்கினவனது வீரத்தைப்பற்றியும், எதிர்த்த யானையை அடக்கினவனது வீரத்தைப்பற்றியும், யானையை பற்றிப் பிடித்த வந்த வீரனது வெற்றியைப் பற்றியும் வஞ்சிப்பாவால் பாடுவது.

வாயுறைவாழ்த்து = பயன் தரும் மெய்ப்பொருளை வெண்பா முதலும் ஆசிரியம் பின்னும் அமைந்த மருட்பாவால் பாடப்படுவது.

## வி

விளக்குநிலை = வேலோடு விளக்கு ஒன்று பட்டு ஓங்குமாறு பாடுவது.

விருத்தவிலக்கணம் = வில், வாள், வேல், செங்கோல், யானை, குதிரை, நாடு ஊர், கொடை இவற்றைத் தனித்தனிப் பத்துவிருத்தப்பாவால் பாடுவது. (உ-ம்) திருத்தணிகைக் கந்தப் பையர் பாடிய வேல் விருத்தம்

## வீ

வீரவெட்சிமாலை = சுத்த வீரன் வெட்சிமலர் சூடிப் பகைவர் நாடு புகுந்து பசுக் கூட்டங்களைக் கவர்ந்து வந்த போது அவன்முன் தசாங்கங்களையும் வைத்துப் போற்றி அவன் மீண்டுவந்த வெற்றியைப் பாடுவது.

## வெ

வெற்றிக் கரந்தை மஞ்சரி = பகைவர் கொண்ட பசுக் கூட்டங்களை மீட்க வீரன் கரந்தை மலரைச் சூடிச் சென்று அப்பசுக்கூட்டங்களை மீட்டு வந்ததைப் பாடுவது.

## வே

வேனில்மாலை = இளவேனில் முதுவேனில் சிறப்பைப் பாடுவது;

அகத்தியம் = இது அகத்திய முனிவரால் எழுதப் பட்டது. தமிழ் இலக்கண முறைகளைப் பற்றிக் கூறுவது. ஆனால், இந் நூல் முற்றமுடிய கிடைத் திலது. அங்கங்கே உரை ஆசிரியர்களால் மேற் கோளாக எடுத்துக் காட் டப்பட்ட சூத்திரங்களே அறியப் படுகின்றன. இவரது காலம் முதற் சங்க காலமும், இடைச் சங்க காலமும் ஆகும்.

அகத்தியர் தேவாரத் திரட்டு = இது அகத்திய முனிவரால் அப்பர், சுந் தரர், சம்பந்தர் ஆகிய மூவர் பாடிய தேவாரங் களினின்றும் சிவாலய முனிவர் பொருட்டுத் திரட்டிக் கொடுக்கப்பட்ட நூல். இத் திரட்டினுள் 25 பதிகங்கள் உள் ளன. அப் பதிகங்கள் குருவருள், பரையின் (திருநீற்றின்) வரலாறு; அஞ்செழுத்து உண்மை, கோயில் திறம், சிவனுரு வம், திருவடி, அருச்சனை, அடிமை என எட்டுப் பிரி வினைக்கொண்டு திகழ் வன, இதில் சம்பந்தர் பதிகம், 10. அப்பர் பதி கம், 8. சுந்தரர் பதிகம், 7 உள்ளன. அகத்தியர் இருந்த காலத்திற்கும் மூவர் முதலிகள் இருந்த காலத்திற்கும் எத்த னையோ நூற்றாண்டுகள் இடைவெளி இருப்பினும், தேவாரப் பதிகங்களுள் சிலவற்றைத் தொகுத்து அகத்தியர் தேவாரத் திரட்டு என்று கூறப் பட்டு வருதலின் குறிப்பு, அகத்தியர் என்ற பெய ருடன் தேவார காலத் துக்குப் பின் இருந்த ஒரு வரால் திரட்டப்பட்டுக் கொடுத்திருக்க வேண்டு மெனக்கொள்ளல் வேண் டும். அகத்தியச் சித்தர் ஆதலின் பன்னெடுங் காலம் வாழ்ந்த காரணத் தால் இங்ஙனம் திரட்டிக் கொடுத்தார் என்று கூறினும் அமையும். காலம் குறிப்பிடற்கில்லை.

அகத்தீசர் சதகம் = இந் நூல் 19-ஆம் நூற்றாண் டில் திகழ்ந்த குணங்குடி மஸ்தான் சாகிப்பு அவர் களால் பாடப்பட்டது. நூறு பாடல்களைக் கொண்டது.

**அகநானூறு** = சங்க இலக்கிய நூல்கள் எட்டுத் தொகை நூற்களுள் இதுவும் ஒன்று. இன்பத்தைப் பற்றிக் கூறும் 400 அகவற் பாக்களையும், கடவுள் வாழ்த்துப்பாடல் ஒன்றையும் கொண்டது. இப்பாடல்கள் ஒரு புலவரால் பாடப்பட்டவை அல்ல. 145 புலவர்களால் அவ்வப்போது பாடப்பட்டுப் பின்னர்த் தொகுக்கப்பட்ட பாடல்களின் தொகுதியே இந்நூலாகும். பெண்பாற்புலவர்கள் பாடிய பாடல்களும் இதில் உண்டு. இதற்கு நெடுந்தொகை என்றபெயரும் உண்டு. இதனைத் தொகுக்குமாறு வேண்டியவர் உக்கிரப் பெருவழுதிப் பாண்டியராவர். தொகுத்துத் தந்தவர் மதுரை உப்பூரிகுடி கிழார் மகனார் உருத்திரசன்மனார். இந்நூல் மூன்று பிரிவுகளையுடையது. அவை, களிற்றுயானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்பன. செய்யுட்களில் அமைந்துள்ள நடையைக் கருதி இவ்வாறு பாகுபடுத்தினர். ஒன்று முதல் நூற்றிரு பாடல்கள் களிற்றியானை நிரையைச் சார்ந்தவை. 121 முதல் 300 பாடல்கள் மணிமிடை பவளத்தைச் சார்ந்தவை. முந்நூற்றொன்று முதல் நானூறு வரையில் உள்ளவை, நித்திலக்கோவையைச் சார்ந்தவை. இவையனைத்தும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளைப் பற்றிய இன்பப் பகுதிகளை அறிவிக்கும் இன்ப நூல். கடைச் சங்க காலம்.

**அகப்பொருள் விளக்கம்** = நாற்கவி ராசநம்பி என்பவரால் இயற்றப்பட்டது. தமிழ் மொழியில் உள்ள எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இலக்கணங்களுள் அகப்பொருள் இலக்கணங்களைப் பற்றி அறிதற்குப் பெருந்துணை செய்யவல்லது. இதன் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு. இது அகத்திணை இயல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்ற ஐந்து பிரிவுடையது. 252 சூத்திரங்களைக் கொண்டது. இந்நூல் வாயிலாக ஐந்திணை

களின் விளக்கங்களையும், மக்களது ஒழுகலாற்றையும், காதல்மணம், கற்பு மணங்களைப் பற்றிய செய்திகளையும் உணரலாம்.

அசதிக்கோவை = இது ஔவை மூதாட்டியாரால் எழுதப்பட்டது. ஔவைப் பிராட்டியார் ஒரு காட்டு வழியே போய்க்கொண்டிருக்கையில் களைப்பு மேலிட, அதுபோது, அங்கு ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த இடையன் இவ்வம்மையாருக்கு தான் வைத்திருந்த கூழைக் கொடுத்துப் பருகுமாறு செய்தான். அந் நன்றியைப்பாராட்டிப்பாட ஔவையார் அவனது பெயரைக் கேட்டனர். அவனுக்குத் தன் பெயர் நினைவுவரவில்லை. அவன் அசதி என்று கூறி விட்டான். ஔவையார், அசதி என்ற பெயரையே பெயராகக் கொண்டு, அசதிக்கோவை என்னும் இந்நூலைப் பாடினர். ஔவையார் பலர் ஆதலின் எவ்வையார் இதனைப் பாடினர் எனத்திட்டமாகக் கூறுவதற்கு இன்மையின் காலமும் குறிப்பிடற்கு இல்லை.

அஞ்ஞான வதைப் பரணி = இதன் ஆசிரியர், தத்துவராய சுவாமிகள். இது ஒரு வேதாந்த நூல். பரணி நூல் போர்க்களத்தையும், அப் போர்க்களத்தில் வெற்றி பெற்றவர்களையும் வர்ணிப்பது. இங்கு அஞ்ஞானத்தை அரசனாக்கி அகங்கார முதலியவற்றை நால் வகைப் படைகளாக்கி அவற்றை ஞானமாகிய வாள் அழிப்பதாக உருவகப்படுத்திக் கூறப்பட்டுள்ளது. இதன்மூலம் சொரூபானந்தர் சிறப்பையும் கீர்த்தியையும் நன்கு உணரலாம். காலம் கி.பி. 15 - ஆம் நூற்றாண்டு.

அடங்கன்முறை = சம்பந்தர், அப்பர், சுந்தரர், பாடிய தேவாரங்கள் ஆகிய முதல் ஏழு திருமுறைகள் அடங்கிய நூல். முதல் மூன்று திருமுறைகள் சம்பந்தருடையவை. நான்கு, ஐந்து, ஆறு திருமுறைகள், திருநாவுக்கரசருடையவை, ஏழாம் திருமுறை சுந்தருடையது. இம் முறைப்படி தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பிகள். ஆகவே, இதுதொகுக்கப் பட்ட காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டு.

ஷ்ட பிரபந்தம் = இது அழகிய மணவாளதாசர் என்னும் பிள்ளைப் பெருமாள், ஐயங்காரால் இயற்றப்பட்டது. இதில் எட்டு நூல்கள் அடங்கியுள்ளன. அவையே திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்தந்தாதி ஸ்ரீ ரங்கநாயகர் ஊசல், திருவரங்க மாலை, திருவேங்கடத்தந்தாதி, திருவேங்கடமாலை, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி, அழகர் அந்தாதி, என்பன. "அஷ்டபிரபந்தம் படித்தால் அரைப்பண்டிதர்" என்னும் பழமொழி இந்நூற் பெருமையை உணர்த்தும். இத்தொகுப்பு நூலால் திருமாலின் சிறப்பு, வைணவத்தின் மேன்மை முதலியவற்றை அறியலாம். இதற்குச் சிறந்த முறையில் திருவல்லிக்கேணி சடகோப ராமானுஜாச்சாரியார் உரை எழுதியுள்ளார். இதன் காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

அபிதான சிந்தாமணி = இந்நூல் சிங்காரவேலு முதலியாரால் எழுதப்பட்டது. இந்நூலில் தமிழ் நூல்களைப்பற்றிய குறிப்புக்களையும், புலவர்களின் வரலாற்றுக் குறிப்பையும் நன்கு உணரலாம். ஆங்கிலத்தில்உள்ள என்ஸைக்லோபிடியாவைப் போன்று தமிழ் என்ஸைக்லோபிடியா என்றும் இதனைக் கூறலாம். ஆனால் இது சுருங்கிய அளவில் உள்ளது. இது கி. பி. 20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொகுக்கப்பட்டது.

அபிராமி அந்தாதி = அபிராமிபட்டரால் இயற்றப்பட்ட நூல். இது திருக்கடவூர் தேவியாம், அபிராமி அம்மையார் மீது பாடப்பட்டது. தேவியின் திருவருள் பெறுதற்குப் பெருந்துணை செய்ய வல்லது. இதன் காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு. இது 102 செய்யுட்களை உடையது. இந்நூலைப்பாடி அமாவாசைத் தினத்தன்று பூரணசந்திரனை இந்நூல் ஆசிரியர் காட்டியுள்ளார்.

அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ் = இது குளத்தூர் அமுதாம்பிகை அம்மையார் மீது பாடப்பட்ட நூல். சிவஞான முனிவரால் இயற்றப்பட்டது.

காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு. இதில் திருஞான சம்பந்தருக்குத் தேவியார் பாலை வள்ளத்தில்பெய்துகொடுத்த தமைக்குக் கூறப்பட்டுள்ள காரணம் மிகவும் சுவை பயப்பதாகும்.

**அம்பிகாபதி கோவை** = கம்பருடைய மகனான அம்பிகாபதி என்பவனால் பாடப்பட்டது. ஏனைய கோவை நூற்களுக்கும் இதற்கும் பெரிதும்வேறு பாடு உண்டு. மற்றைய கோவைகள் நானூறு பாடல்களைக் கொண்டும், யார்மீது பாடப்பட்டதோ, அவர்களின் சிறப்பையும் தலத்தின் மாண்பையும் அறிவிக்கும் முறையில் அமைந்திருக்கும். ஆனால், இக்கோவை நானூற்றிற்கு மேற்பட்ட பாடல்களையும், பல புதிய துறைகளையும் கொண்டு, பாட்டுடைத் தலைவன் இல்லாத காரணத்தால் முழுப் பாடலும் அகப்பொருளே அமையப் பாடப் பட்டது. காலம் 12-ஆம் நூற்றாண்டு.

**அரிச்சந்திர புராணம்** = அரிச்சந்திரனுடைய வரலாற்றைக் கூறுவது. வீர கவிராயர் இதனை இயற்றினார். இதில் உள்ள சந்திரமதி புலம்பல் கன்னெஞ்சையும் கரையும்படி செய்யும். காலம் 16-ஆம் நூற்றாண்டு.

**அருட்பா** = இதுவே 'திருவருட்பா' எனப்படும். இது ஆறு திருமுறைகளாகத் திருவருட்பாவின் அன்பர்கள் பிரித்துள்ளனர். இராமலிங்க சுவாமிகள் இதனைப் பாடியவர். கடவுள் திருவருளைப் பெறுதற்கு உரிய நூல். இதில் சிவபெருமான், உமாதேவியார், விநாயகர், சுப்பிரமணியர், திருமால் மாரியம்மன், சரஸ்வதி, இலட்சுமி முதலானவர்கள் மீது பாடப்பட்ட பாடல்கள் உள்ளன. பெரிதும் சிவபெருமானையும், சுப்ரமணியரையும் பாடிய பாடல்களே உள்ளன. நாமாவளிகளும், கீர்த்தனைகளும், நங்கைமார் பாடுதற்குரிய பாடல்களும், பலவசனங்களும் இதில் அடங்கி யுள்ளன. காலம் 19-ஆம் நூற்றாண்டு.

**அருணாசல புராணம்** = இது திருவண்ணாமலையைப் பற்றிக் கூறுவது.

இதனைச் சைவ எல்லப்ப நாவலர் பாடியுள்ளார். வல்லாள மகா ராசன் சரித்திரம் இந் நூலில் தான் காணப்படுகிறது. கி. பி. 17-ஆம் நூற்றாண்டு. இதன் கண் கார்த்திகை தீப வரலாற்றைக் காணலாம். இதற்கு மழவை மகாலிங்கையர் உரை எழுதியுள்ளார்.

**அருணைக் கலம்பகம்** = அண்ணாமலையார் பெயரால் பாடப்பட்ட பிரபந்தம். பல சுவைகளும் பொருந்தப் பெற்றது. சிவபரத்துவம் மிகுதியும் பேசப்படுவது. இதன் ஆசிரியர் சைவ எல்லப்ப நாவலர். காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

**அவிரோத உந்தியார்** = இது சாந்தலிங்க சுவாமிகளால் இயற்றப்பட்டது. இந் நூலில் உள்ள பாடல் ஒவ்வொன்றும் உந்தீபற என்று முடிதலின் இப் பெயர் பெற்றது. ஆர் விகுதி கொடுத்திருப்பதால் உந்தியார் எனப் பட்டது. ஞான பரமான நூல். எவர்க்கும் விரோதமற்ற முறையில் மெய்ஞ் ஞானத்தை உணர்த்துவது. 100 பாடல்களைக் கொண்டது. காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு. இதற்குச் சிதம்பர சுவாமிகள் எழுதிய உரை உண்டு.

**அழகர் அந்தாதி** = மதுரையை அடுத்த கல்லழகர் பெருமான் மீது பாடப்பட்ட நூல். இதன் ஆசிரியர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். வில்லிபுத்தூராரும் இப்பெயரால் ஓர் அந்தாதி பாடியுள்ளார். காலம் முறையே கி.பி. 17-ஆம் நூற்றாண்டு. 15-ஆம் நூற்றாண்டு.

**அறநெறிச் சாரம்** = தருமமார்க்கங்களில் சாரமானவற்றைக் கூறும் நீதி நூல். இந் நூலாசிரியர் முனைப்பாடியார். இதில் 222 வெண்பாக்கள் உள்ளன. இதில் காட்சி, ஒழுக்கம், ஞானம் என்னும் மூன்று பிரிவுகள் உள்ளன. அருகதேவன் சிவபெருமான் என்று கூறப் பட்டுள்ளது நோக்கத் தக்கது. காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு.

**அறப்பளீசுரர் சதகம்** = சதகம் என்பது நூறு பாடல்கள் அடங்கிய நூல். இந் நூலில் உள்ள பாடல்கள் அறப் பளீசுர தேவனே என்று

முடிதலின், இப் பெயர் பெற்றது. இதன் ஆசிரியர் அம்பலவாணக் கவிராயர். காலம் கி.பி.18-ஆம் நூற்றாண்டு. இது நீதி நூல். ஆதலின், மக்கள் மேற்கொண்டொழுகவேண்டிய நீதிகள் பலவற்றை இதன் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.

அற்புதத் திருவந்தாதி = இது காரைக்கால் அம்மையாரால் சிவபெருமான் மீது பாடப்பட்டதோத்திர நூல். முற்றிலும் வெண்பாவால் ஆனது. பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டது. காலம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு. அம்மையார் இறைவனைப் பேய் வடிவு வேண்டுமெனக் கேட்டு, அவ்வாறே பெற்று, அதன் பின் இந் நூலைப் பாடியுள்ளார்.

அனுமார் பிள்ளைத்தமிழ் = ராம தூதனான அனுமார் மீது அருணாசலக் கவிராயர் பாடியுள்ள பிரபந்தம். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

## ஆ

ஆசாரக் கோவை = மக்கள் ஒழுக்க முறைகளைக் கோவைப்படுத்திக் கூறும் நீதி நூல். பதினெண் கீழ்க்கணக்கு நூற்களில் ஒன்று. இந்நூலாசிரியர் பெருவாயின் முள்ளியார். நீராடல், உண்ணல், துயிலல், வழிபடல் முதலானவைகள் எம்முறையில் செய்தல் வேண்டும் என்பனவற்றை விளக்கமாக இந் நூலில் காணலாம். காலம் கடைச் சங்க காலம்.

ஆசிரிய நிகண்டு = சொற்களுக்குரிய பொருளை அறிய ஆசிரியப்பாவால் பாடப்பட்ட நூல். ஆசிரியர் ஆண்டிப் புலவர். காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

ஆண்டவர் பிள்ளைத்தமிழ் = இந்நூல் மொய்தீன் ஆண்டவர் மீது பாடப்பட்ட முஸ்லிம் சமய நூல். சவ்வாது புலவரால் இயற்றப்பட்டது. காலம் 17-ஆம் நூற்றாண்டு.

ஆத்திசூடி = ஔவையாரால் பாடப்பட்டது. அருமையான நீதிகளைச் சிறு சிறு வாக்கியங்களில் கூறும் நீதிநூல். இளமையில் இளைஞர்கள் உள்ளத்தில் பதியுமாறு செய்யப்பட்டது. இது சங்க கால ஔவையாரால் பாடப்பட்டதோ, அன்றிப்

பிற்பட்ட காலத்து ஔவையாரால் பாடப்பட்டதோ என்பதை உறுதியாகக் கூறுதற்கு இன்மையின், காலமும் உறுதியாகக் குறிப்பிட இயலவில்லை. ஆத்திசூடி என்று முதற்கண் அமைந்த செய்யுள் பாடப்பட்டிருத்தலால் இப்பெயர் பெற்றது.

**ஆத்திசூடி வெண்பா** = இது வெண்பாவால் இயன்ற நூல். ஒவ்வொரு வெண்பாவிலும் ஆத்திசூடியின் வாக்கியங்கள் அமைந்து காணப்படும். அவ்வாக்கியத்தின் கருத்துக்கு ஏற்ற உதாரணக் கதைக் குறிப்புக்களையும் கொண்டு திகழ்வது. இராமபாரதி என்ற புலவரால் பாடப்பட்டது. காலம் கி.பி.19-ஆம் நூற்றுண்டு.

**ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்** = இது ஓர் உரை நூல். இந் நூலாசிரியர் கனகசபைப் பிள்ளையாவார். இந்நூலால் புலவர்களின் பெருமையும், தமிழ் நூல்களின் பரப்பும, தமிழ் நாட்டின் பெருமையும் பலர் அறிய நேர்ந்தது. முதலில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டு மெட்ராஸ் ரெவ்யூ, என்னும் பத்திரிகையில் பல கட்டுரைகளாக வெளி வந்தது. காலம் 19-ஆம் நூற்றுண்டு.

**ஆழ்வார்கள் காலம்** = இது மு. ராகவையங்காரால் எழுதப்பட்ட ஆராய்ச்சி நூல். இந்நூலில் ஆழ்வார்கள் திகழ்ந்த காலத்தை அறிந்து கொள்ளலாம். காலம் கி.பி.20-ஆம் நூற்றுண்டு.

## இ

**இசை நுணுக்கம்** = இது முத்தமிழ் இலக்கண நூல்களுள் இசைத்தமிழ் இலக்கண நூலாகும். இதன் ஆசிரியர் சிகண்டி என்பவர். அடியார்க்கு நல்லாரால் மேற்கோள் காட்டப்பட்டிருத்தலின் அவர் காலத்துக்கு முற்பட்ட நூலாகத் தெரிகிறது. அடியார்க்கு நல்லார் காலம் கி. பி. 13-ஆம் நூற்றுண்டு. ஆகவே, இசை நுணுக்கம் அதற்கு முற்பட்டது என்று மட்டும் அறிதல் வேண்டும்.

**இயற்பா** = இது வைணவ சமயத் தோத்திர நூலான நாலாயிரப் பிர

பந்தத்தில் ஒரு பிரிவு. இதில் பொய்கையார் பாடிய முதல் திருவந்தாதி நூறு பாடல்களும், பூதத்தார் பாடிய இரண்டாம் திருவந்தாதி நூறு பாடல்களும், பேயார் பாடிய மூன்றாம் திருவந்தாதி நூறு பாடல்களும், திருமழிசைப் பிரான் பாடிய நான்முகன் திருவந்தாதி தொண்ணூற்றாறு பாடல்களும், நம்மாழ்வார் பாடிய திருவிருத்தம் நூறு பாடல்களும், திருவாசிரியம் ஒன்றும், பெரிய திருவந்தாதி எண்பத்தேழு பாடல்களும், திருமங்கையாழ்வார் பாடிய திருவெழுகூற்றிருக்கையும், சிறிய திருமடல் எழுபத்தேழு பாடல்களும், பெரிய திருமடல் நூற்று நாற்பத்தெட்டுப் பாடல்களும் அடங்கிய தொகுப்பு நூல். இது வெவ்வேறு காலத்து ஆழ்வார்கள் பாடிய தொகுப்பு நூல் ஆதலின் காலம் குறித்தற்கு இல்லை.

**இரட்சணிய யாத்ரீகம்** = இது ஆங்கிலத்தில் உள்ள பில்கிரிம்ஸ்ப்ராக்ரஸ் என்னும் நூலைத் தழுவி எழுதப் பட்டது. கிறிஸ்துவர் சமய நூல். ஆசிரியர் கிருஷ்ண பிள்ளை. கிறிஸ்தவ விவிலிய நூல் கருத்துக்கள் இதில் அமைந்துள்ளன. சிறு வருணனைகள் அற்றது. எளியநடையில் உள்ளது. வடமொழிச் சொற்கள் பெரிதும் உபயோகிக்கப்பட்ட நூல். நாற்பத்தேழு காண்டங்களையும் நாலாயிரம் பாடல்களையும் உடையது. காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு.

**இரண்டாம் திருவந்தாதி** = இது நாலாயிரப் பிரபந்தத்தில் இயற்பா என்ற பிரிவில் இரண்டாவதாக உள்ளது. 100 பாடல்களைக் கொண்டது. திருமால் புகழைப் புகழ்வது. பூதத்தாழ்வாரால் பாடப் பட்டது. முற்றிலும் வெண்பாவால் ஆனது. பொய்கையார் பாடிய முதல் திருவந்தாதிக்குப் பின்னர் இது அமைந்திருத்தலின், இரண்டாம் திருவந்தாதி என்ற பெயரைப் பெற்றது. இதன் சிறப்பு நோக்கித் திரு என்னும் அடை கொடுக்கப்பட்டது. காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டு.

**இரங்கேசர் வெண்பா** = இது ஒரு நீதி நூல். ஒவ்வொரு வெண்பாவின் ஈற்றிலும் ஒவ்வொரு திருக்குறள் அமைந்து விளங்குவது. அத்திருக்குறட்கு விளக்கம் தந்து விளங்குவது. கதைக் குறிப்பும் கொண்டது. இதனைப் பாடியவர் சாந்த கவிராயர். காலம் 18-ஆம் நூற்றாண்டு.

**இரத்தினச் சுருக்கம்** = இது புகழேந்திப் புலவர்பாடிய நூலாகக் கூறப்படுகிறது. வெண்பாவால் அமைந்தது. உறுப்புக்களுக்கு இன்னின்ன உவமைகளாகக் கூறக் கூடியவை என்பதை விளக்கும் நூல். காலம் 13-ஆம் நூற்றாண்டு.

**இராம நாடகம்** = இராமாயணக் கதையை நாடக அமைப்பில் எழுதப்பட்ட நூல். இதன் ஆசிரியர் அருணாசலக் கவிராயர். கீர்த்தனைகள் சுவைமிக்குக் காணப்படும். காலம் 18-ஆம் நூற்றாண்டு. வாத்தியம் "தும் தம் திந்தோம்" என ஒலித்தது என்பது துன்பம் தீர்ந்தோம் என்ற குறிப்பைக் காட்டியது என்னும் கீர்த்தனையும் இதில் உண்டு.

**இராமாயணம்** = தமிழில் கம்பரால் பாடப்பட்ட நூல். இதில், பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்ற ஆறு காண்டங்கள் உண்டு. இந்நூல் வடமொழிக் கதையைத் தழுவி எழுதப்பட்டதேனும், தமிழ் நாட்டின் நாகரிகத்தைச் சமயம் வந்தபோது இடையிடையே புகுத்தி எழுதப்பட்டதாகும். இதன் இறுதிக் காண்டமாகிய உத்தர காண்டம் ஒட்டக்கூத்தரால் பாடப்பட்டது. காலம் 12-ஆம் நூற்றாண்டு.

**இராமாநுச நூற்றந்தாதி** = இது திருவரங்கத் தமுதனாரால் எழுதப்பட்டது. இராமாநுசாச்சாரியார் மீது பாடப்பட்டது. 108 கட்டளைக் கலித்துறையால் அமைந்தது. காலம் 13 - ஆம் நூற்றாண்டு. இந்நூலுக்குப் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார், அப்பாவு முதலியார் செய்த உரைகள் உண்டு.

**இரிபுகீதை** = இது சிவபரத்துவம் கூறும் நூல். வேதாந்த பரமானது. இரிபு முனிவரால் நிதாகர் என்னும் முனிவருக்கு உபதேசிக்கப்பட்ட நூல். இதனை வடமொழியினின்று தமிழில் மொழிபெயர்த்தவர். திருவிடைமருதூர் உலோகநாத கவியாவார். காலம் 19-ஆம் நூற்றாண்டு.

**இருபா இருபஃது** = சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கினுள் ஒன்று. வெண்பாவும், ஆசிரியப்பாவும், ஒன்றன்பின் ஒன்று தனித்தனி அமைய 20 பாடல்கள் தொடர்ந்து பாடப்பட்டிருத்தலின், இப்பெயர் பெற்றது. இது திருத்துறைப்பூர் அருள் நந்தி சிவாசாரியரால் பாடப்பட்டது. இது தமக்குச் சித்தாந்த அறிவினைத் தெளிவுபடுத்திய ஆசிரியர் மெய்கண்டாரை முன்னிலைப் படுத்தி வினவுதலும், அவ்வினைக்கு அவர் விடை கூறுதலும் ஆனமுறையில் அமைந்து காணப்படுவது. காலம் 13-ஆம் நூற்றாண்டு. இதற்குத் திருவாவடுதுறைமடத்து நமச்சிவாயத் தம்பிரான் உரை எழுதியுள்ளார்.

**இலக்கணக்கொத்து** = இதன் ஆசிரியர் சுவாமிநாத தேசிகர். இவரை ஈசான தேசிகர் என்றும் கூறுவர். இந்நூல் அரிய இலக்கணக் குறிப்புக்களையும் நுட்பங்களையும் அறிவிப்பது. 151 சூத்திரங்களைக் கொண்டது. வேற்றுமை, வினை, ஒழிபு என்ற முப்பெரும் பிரிவுடையது, காலம் 17-ஆம் நூற்றாண்டு. இது தொல்காப்பிய இலக்கண நூலினும் அருகிக் கிடந்த இலக்கண விதிகளைக் கூறுவது. வடமொழி இலக்கணங்களும் சில கூறப்பட்டுள்ளன. இதில் சொல்லிலக்கண நுட்பமும் காணப்படும்

**இலக்கணவிளக்கச் சூறாவளி** = இது சிவஞான முனிவரால் எழுதப்பட்ட உரை வடிவமான நூல். இது வைத்திய நாதர் தேசிகர் எழுதிய இலக்கண விளக்கத்திற்கு மறுப்புநூலாக எழுதப்பட்ட நூல். காலம் 18-ஆம் நூற்றாண்டு.

**இலக்கண விளக்கம்** = இதனைக் குட்டித் தொல்காப்பியம் என்றும் கூறுவர். இதில் ஐந்திலக்கணங்களும் தெளிவுறக் கூறப்பட் டிருக்கின்றன,

இது தொல்காப்பியம் நன்னூல், தண்டி அலங்காரம் அகப்பொருள், வெண்பாமாலை முதலானவற்றிலிருந்து பல இலக்கணப்பகுதிகளைத் தழுவி நூலாசிரியர் எழுதிய சூத்திரங்களுடன் விளங்குவது. இது ஐந்து இலக்கணங்களைக் கூறுவதாயினும், எழுத்து, சொல், பொருள் என்ற முப்பிரிவினை கொண்டு விளங்குவது. பொருளதிகாரத்தில் அணி, இலக்கணம், யாப்பிலக்கணம், பாட்டியல் பகுதிகள் அடங்கியுள்ளன. இந்நூலுக்கு நூலாசிரியரே உரையும் எழுதியுள்ளார். ஆகவே, இவ்விலக்கண நூல் புதுமையும் பழமையும் கலந்த இலக்கண நூல். இதன் ஆசிரியர் திருவாரூர் வைத்தியநாத தேசிகர் 17-ஆம் நூற்றுண்டு.

**இலக்கிய வரலாறு** = இது ஒரு சிறந்த உரை நடை நூல். இதில் ஆசிரியர் வரலாற்றையும், தமிழ்வரலாற்றையும் காணலாம். நூல்களின் வரலாற்றையும் 20-ஆம் நூற்றுண்டு வரை உள்ள புலவர்களைப்பற்றிய குறிப்பையும் காணலாம். தமிழ் நாட்டின் தொன்மை, பெருமைகளை அறிதற்குத் துணைசெய்யும் நூல். இதன் ஆசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ. எம். எல், காலம் 20 - ஆம் நூற்றுண்டு. இது ஆறு அதிகாரங்களை உடையது.

**இளம்பூரணம்** = இளம்பூரணரால் எழுதப்பட்ட உரை நூல். இளம்பூரணம் எனத் தொல்காப்பியத்திற்கு எழுதப்பட்ட முதல் உரை நூலாகிய இதனையே கூறுவர். இவ்வுரையாசிரியர் தாம் உரையாசிரியர் என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டவர். காலம் கி.பி. 12-ஆம் நூற்றுண்டு.

**இறையனார் அகப்பொருள்** = தமிழ் மக்களின் இன்ப வாழ்வு பற்றிக் கூறுவது அகப்பொருளாகும். பாண்டிய நாட்டில் பன்னிரண்டு யாண்டுகள் பஞ்சம் துன்புறுத்தியதால், மக்கள் பல இடங்களுக்குச் சென்றனர். அப்படிச் சென்றவர்களுள் புலவர்களும் அடங்குவர். மீண்டும் நாடு செழிப்புற்றபோது சென்றவர்கள் மீண்டனர். அப்படி மீண்ட புல

வர் இனத்தில் எழுத்தும், சொல்லும் அறிந்த புலவர்களாக இருந்தனரே அன்றிப் பொருள் இலக்கணம் அறிந்த புலவர்கள் இருந்திலர். இதன் பொருட்டுப் பாண்டியன் வருந்தினான். அவனது வருத்தம் நீங்க மதுரை ஆலவாய்ப் பெருமானார் அறுபது சூத்திரங்களைச் செப்புப் பட்டயத்தில் எழுதித் தம்பீடத்தின் கீழ் வைத்திருந்தனர். கோயில் அர்ச்சகர் அதனை எடுத்துச் சென்று, மன்னன் கையில் கொடுத்து அது கிடைத்த விதத்தைகூறினார். மன்னன் அதனைப் பெற்று மகிழ்ந்தான். அதுவே இறையனார் அகப்பொருள் என்றும், களவியல் என்றும் அன்பின் ஐந்திணை என்றும் கூறப்படுவது. இதற்கு உரை கண்டார் கடைச் சங்கப் புலவர் நாற்பதின்மரும் ஆவர். மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரர் கண்ட உரையே சாலச் சிறந்தது. கடைச் சங்க காலம்.

**இறையனார் அகப்பொருள் உரை** = இஃது ஆலவாய்ச் சொக்கலிங்கப் பெருமானார் இயற்றித்தந்த களவியல் நூலுக்குப்பலர்உரை கண்டனர். அவர்களுள் கணக்காயனார் மகனார் நக்கீரர் உரையே இந்நூலாகும். இதன் கண் புச்சங்கங்களின்வரலாறுகளைக் காணலாம். தூய செந்தமிழ் நடைக்கு இவ்வுரைநூல் ஓர் எடுத்துக் காட்டாகும். இது கடைச்சங்ககால நூல். நக்கீரர் இந் நூலுக்கு உரை கூறி வந்தபோது ஊமையாய் இருந்த உருத்திர சர்மர் கேட்டுத் தம் உணர்ச்சியினை மயிர் சிலிர்த்தல் மூலமும், கண்ணீர் சொரிதல் மூலமும் காட்டினர்.

**இனியது நாற்பது** = இது சங்கம் மருவிய பதினெண் கீழ்க் கணக்கு நூற்களுள் ஒன்று. இன்னின்னது இனிது இனிது என்று பாடப்பட்டிருத்தலின் இப் பெயர் பெற்றது. 40 இன்னிசை வெண்பாக்களை யுடையது. இதனை இனியவை நாற்பது என்றும் கூறுவர். இதனை மதுரைத் தமிழ் ஆசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் இயற்றினார். கடைச்சங்க காலம்.

**இன்னா நாற்பது** = இது ஒரு நீதி நூல். இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. கபிலர் இயற்றியது. இந்த இந்தச் செயல்கள் இன்னா தருவன என்று கூறும் முறையில் அமைந்த வெண்பாவைப் பெற்றது. கடவுள் வாழ்த்துப் பாடலும் சேர்ந்து 41 இன்னிசைவெண்பாக்கள் இதில் காணப்படும். கடைச்சங்க காலம்.

**இன்னிலை** = இந்நூலைச் சங்க காலப் பொய்கையார் என்ற பெயருடையார் பாடிய நூல் என்பர். இஃது அறத்துப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டிலக்கப்பால் என நான்கு பிரிவுடையது. இந் நூலாசிரியர் சைவர். இந் நூலைத் தொகுத்தவர் மதுரை ஆசிரியர் பூதனார் என்பவர். இந்நூலில் பாரதம் பாடிய பெருந் தேவனார் பாடிச் சேர்த்த கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்று உண்டு. அறத்துப் பாலில் பத்தும், பொருட் பாலில் ஒன்பதும், இன்பத்துப் பாலில் பன்னிரண்டும் வீட்டிலக்கப்பாலில் பதினொன்றும் ஆக, 45 வெண்பாக்கள் உண்டு. வீட்டிலக்கணப் பாலில் இல்லற இயல், துறவற இயல் என்ற இரண்டு பிரிவு உண்டு. இது நீதி நூல் வகையைச் சார்ந்த கடைச்சங்க காலத்தது.

## ஈ

**ஈசுரகீதை** = இது ஒரு மொழி பெயர்ப்பு நூல். இந் நூலைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்தவர் தத்துவராயர் என்னும் சைவ முனிவர். இது பரசிவ மூர்த்தி சனத்குமாரர் முதலிய முனிவர்கட்கு உபதேசம் செய்யப்பட்டது. இதன் கண், சாங்கிய யோகம், பரபத்தி, விசுவ ரூபம், சிவசத்தி, தத்துவநிசம், விபூதி. பிரபஞ்சம், தத்துவ தரிசனம், யோகம் ஆகிய இவற்றைப்பற்றிய அரிய செய்திகள் காணப்படும். காலம் 15-ஆம் நூற்றுண்டு.

**ஈட்டி எழுபது** = இந்நூல் ஒட்டக்கூத்தரால் பாடப் பட்டது. இந்நூல் செங்குந்த மரபின் பெருமையை உரைப்பது. எழுபது வெண்பாவால் அமைந்தது. ஒட்டக்கூத்தர் இந் நூலைப் பாடி

வெட்டுண்ட மக்களை எழுப்பியதாகக் கூறுவர். இந்நூலின் ஈற்றுப் பாடல் கலைமகளை வேண்டும் முறையில் பாடப்பட்டபோதுதான் வெட்டுண்டவர் எழுந்தனர் என்பர். 12 - ஆம் நூற்றுண்டு. செங்குந்தர்கள் தம் மரபின் மாண்பைப் பாடுமாறு கேட்டனர். அதுபோது ஒட்டக்கூத்தர் அவர்களின் குலத்தில் எழுபது தலைப் பிள்ளைகளின் தலைகளைப் பரிசாகக் கேட்டனர். அவர்கள் அவ்வாறே எழுபது தலைகளை வெட்டிக் கொணர்ந்தனர். அத்தலைகளைக் கண்ட சோழ ராசன் "இது என்ன கூத்து?" என்றனன். பின் புலவர் காரணம் கூறி அத்தலைகளையே சிங்காதனம் ஆக்கி அதன் மீது அமர்ந்து பாடிக் கலைமகளை வேண்டி வெட்டுண்ட தலைகளும் உடலும் ஒட்டிக் கொள்ளுமாறு செய்தார். இதனால் தான் இவர் ஒட்டக்கூத்தர் என்ற பெயரையும் பெற்ருர். இதுவே இந்நூல் எழக் காரணம்.

## உ

**உண்மை நெறி விளக்கம்** = இது மெய்கண்ட சாத்திரம் எனப்படும் சைவ சித்தாந்த நூல்கள் பதினன்குனுள் ஒன்று. ஆறு திரு விருத்தங்களையுடையது. உமாபதி சிவாசாரியரால் எழுதப்பட்டது. இந்நூலில் தத்துவ ரூபம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்மதரிசனம், தத்துவ சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், தத்துவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்னும் தசகாரியங்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. 14-ஆம் நூற்றுண்டு. உண்மை மார்க்கம் இன்னது என்று நன்கு விளங்கும் ஞான நூலாதலின் இப்பெயர் பெற்றது.

**உண்மை விளக்கம்** = இது சித்தாந்த சாத்திர நூல்கள் 14-களுள் ஒன்று. சிவஞான போதம், சிவஞான சித்தியார் என்னும் நூகு பெரு நூல்களின் உண்மைப் பொருளைச் சுருக்கமாக அறிவிப்பது. இதன் ஆசிரியர் திருவதிகை மனவாசகம்கடந்தார் ஆவார். இவ்ஆசிரியர் இதில் தம் ஞானசிரிய

ாகிய மெய்கண்ட சிவா சாரியாரை முன்னிலையாக் கிச் சித்தாந்தம் கூறும் தத்துவ ரூபம் முதலிய வற்றைத் தெளிவுற எடுத்துவிளக்கியுள்ளார். பாயிரம் உட்பட ஐம்பத் தைந்து வெண்பாக்களை யுடையது. 12-ஆம் நூற் றுண்டு.

**உதயணகுமார காவியம்** = இது உதயணன் கதை என்றும் கூறப் படும். வச்ச தேசத்து மன்னனுன உதயணனது வரலாற்றைக் கூறும் நூல். 367 பாடல்களைக் கொண்டது. கி. பி. பதி ஞேராம் நூற்றுண்டு.

**உத்தர கோச மங்கை புரா ணம்** = இது மாசிலாமணி தேசிகர் என்பவரால் இயற்றப்பட்டது. இவர் மாசிலாமணிச் சம்பந்தர் என்றும் கூறப்படுவர். இத்தலம் மாணிக்க வாச கரால் பாடப்பட்டது. கி. பி. 16 - ஆம் நூற் றுண்டு.

**உபதேசகாண்டம்** = ஒட்டக் கூத்தரால் பாடப்பட்ட உத்தரகாண்டம் எப்ப டிக் கம்ப ராமாயணத் தோடு இயைந்துக் கூறப் பட்டுவருகின்றதோ, அது போலக் கந்தபுராணத் தோடு ஏழாவது கண்ட மாக இணைத்துக் கூறப் படும்நூல். இது கோனே ரியப்ப முதலியாரால் இயற் றப்பட்டது. இது 41சருக் கங்களையும் 4360 பாடல் களையும் கொண்டது. கி. பி. பன்னிரண்டாம் நூற் றுண்டு. இதில் சைவ மக் கள் அறிந்து ஒழுகவேண் டிய பலசெய்திகள் கூறப் பட்டுள்ளன.

**உரிச்சொல்நிகண்டு** = காங்கே யர் என்பவரால் இயற்றப் பட்டது. இது 12-ஆம் நூற்றுண்டில் இயற்றப் பட்ட சூளாமணி நிகண் டிற்கு முன்னர் எழுந்த நூல். உரிச் சொல்லுக் குரிய பொருள்களை எடுத் துக் கூறும் நூல்.

**உறையூர்ப் புராணம்** = இதுவே முக்கீச்சுரம் எனப்படும். சோழனது யானையை இவ்வூர்ச்சேவல் வென்ற காரணத்தால் இது கோழியூர் என்றும் கூறப்படும். இந்த வரலா றும் இந்நூலில் உண்டு. மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை யவர்க ளால் எழுதப்பட்டது. கி. பி. 19 - ஆம் நூற் றுண்டு.

## ஊ

**ஊசிமுறி** = இடைக்காடரால் இயற்றப்பட்டது. கடைச் சங்க காலம். இந்நூல் சங்கப் புலவர்களின் சிலரின் பொருட்டு ஆத்திரங் கொண்ட இடைச்சங்கம் அழியப்பாடிய நூல் என்பது சிலர்கொள்கை.

## எ

**எடுத்துயென்னும் சொல்லுக்கிட்டவைரக்குப்பாயம்** = இது ஒரு வசன நூல். சிவஞான முனிவரால் எழுதப்பட்டது. இது சிவஞான சித்தியார் சுபக்கத்தில் வரும், 'என்னை இப்பவத்தில் சேரா வகை', என்று தொடங்கும் செய்யுளில் உள்ள எடுத்து என்னும் சொல்லின் சிறப்பை விளக்கிக் கூறும் உரை நடை நூல். சித்தாந்தக் கருத்துக்களைக் கொண்ட கருவூலம். காலம் கி. பி. 18-ஆம் நூற்றுண்டு.

## ஏ

**ஏகபாதநூற்றந்தாதி** = இதனைப் பாடியவர் சிறந்த இலக்கண இலக்கியப் புலவர் அரசஞ் சண்முகனார் என்பவர். காலம் கி. பி. 20-ஆம் நூற்றுண்டு. நூறு பாடல்களைக் கொண்டது. ஒவ்வொரு பாடலிலும் அமைந்த நான்கடிகளும் ஒரே மாதிரியாக இருக்கும். அதன் பொருட்டே இது ஏகபாதம் எனப்பட்டது. மடக்கு, திரிபு அணி அமைய பாடப்பட்ட நூல்.

**ஏரெழுபது** = கம்பரால் பாடப்பட்டது. வேளாளர் மாண்பைக் கூறும் நூல். உழவுத் தொழிலின் சிறப்பையும் கூறுவது. காலம் கி. பி. 12-ஆம் நூற்றுண்டு.

**ஏலாதி** = இது பதினெண்கீழ்க்கணக்கு நூற்களுள் ஒன்று. இந்நூல் ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு என்னும் ஆறு மருந்துச் சரக்குகளில் செய்த சூரணம் நன்மை தருதல் போல, இந்நூலும் மேற்சொன்ன மருந்து போலும் கருத்துக்களை மக்களுக்குப் புகட்டி நன்மை செய்வது என்ற காரணத்தால் ஏலாதி என்ற பெயருடன் விளங்குகிறது. இதன் ஆசிரியர் மாக்காயனார் மகனார் கணிமேதாவியார். மாக்காயனார் இவரது ஆசிரியர் என்றும் கூறுவர். 83 பாடல்களைக் கொண்டது. கடைச்சங்க காலம்.

ஏழாம் திருமுறை = சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பட்டது. இது சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஏழாம் திருமுறையாக அமைந்திருத்தலால் இப்பெயர்பெற்றது. இது தோத்திர நூல். காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டு. சிறந்த இலக்கியச் சுவை மிகுந்தது. 100 பதிகங்கள் இதில் உண்டு. 63 நாயன்மார்களைப் பற்றிய குறிப்புக்களை முதல்முதல் அறிதற்கு இத்திருமுறையில் உள்ள பதிகம் ஒன்றே துணையாய் உள்ளது.

## ஐ

ஐங்குறுநூறு = சங்கம் மருவிய எட்டுத் தொகை நூற்களுள் ஒன்று. ஐந்நூறு அகவற்பாக்களால் ஆன நூல். ஐந்திணைகளைப்பற்றி அகப்பொருள் சுவை ததும்பப் பாடப்பட்டது. மருதத்திணையினை ஓரம்போகியாரும், நெய்தல் திணையினை அம்மூவனாரும், குறிஞ்சித் திணையினைக் கபிலரும், நெய்தல் திணையினை ஓதல் ஆந்தையாரும், முல்லைத் திணையினைப் பேயன் என்பாரும் தனித்தனி 100 பாடல்களால் பாடியுள்ளனர். இந்நூலைத்தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார். இந்நூலைத் தொகுக்குமாறு செய்தவர் யானைக்கண் சேய்மாந்தரஞ்சேரல் இரும்பொறை. காலம் கடைச் சங்க காலம். இதற்குப் பழைய உரை உண்டு.

ஐந்திணை எழுபது = இது பதினெண் கீழ்க்கணக்கு நூற்களுள் அகப்பொருளைத் தழுவிய நூல் இது ஒவ்வொரு திணைக்கும் பதினான்கு வெண்பாக்களைக் கொண்டு திகழும் நூல். இதன் ஆசிரியர் மூவாதியார் என்பவர். கடைச்சங்க காலம்.

ஐந்திணை ஐம்பது = இது முல்லை, குறிஞ்சி, மருதம், பாலை நெய்தல் என்ற முறை வைப்பில் ஒவ்வொரு திணைக்கும் தனித்தனி பத்து வெண்பாக்களைக்கொண்ட நூல். சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும் உண்டு. அகப் பொருட் சுவையுடையது. இது பதினெண் கீழ்க்கணக்கு நூலைச் சார்ந்தது. இதன் ஆசிரியர் மாறன் பொறையனார். கடைச்சங்க காலத்தது

## ஒ

**ஒருதுறைக்கோவை** = கோவை என்பது 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்று. இதில் பல அகப் பொருள் துறைகள் உண்டு. அவற்றுள் ஒன்று நாணிக்கண் புதைத்தல் என்பது. இவ்வொரு துறையின் கருத்தையே நூறு பாடல்களில் சுவைபட அமிர்த கவிராயர் பாடியுள்ள நூலே இந்நூலாகும். காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு.

**ஒழிவிலொடுக்கம்** = இது வேதாந்த சித்தாந்தச் சார்புடைய நூல். கண்ணுடைய வள்ளலாரால் பாடப்பட்டது. பத்து இயல்களுடன் 253 வெண்பாக்களை உடையது. காலம் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு. இந்நூலின் சிறப்புப்பாயிரச் செய்யுட்கு திருவருட்பா ராமலிங்க சுவாமிகள் சிறந்த விரிந்த உரையினை எழுதியுள்ளார்.

## ஓ

**ஓங்கார உண்மை** = இது பிரணவத்தின் உண்மைப் பொருளை விளக்கும் நூல். இதில் ஓம் என்னும் ஓர் எழுத்து ஒருமொழி தமிழில் அமைந்த மொழி என்ற உண்மை தெற்றத் தெளியக் கூறப்பட்டுள்ளது. இது உரை நடை நூல். இதன் ஆசிரியர் சுவாமி வேதாசலம் என்னும் மறைமலையடிகள். காலம் கி.பி. 20-ஆம் நூற்றாண்டு.

## க

**கச்சிக்கலம்பகம்** = காஞ்சி ஏகாம்பரநாதர்மீது பாடப்பட்ட பிரபந்தம். இப்பெயரால் இருவர் பாடியுள்ளார். ஒருவர் காஞ்சி ஞானப்பிரகாசர், கி.பி. 16-ஆம் நூற்றாண்டினர். மற்றொருவர் பூண்டி ரங்கநாத முதலியார் எம். ஏ. கி.பி. 19-ஆம் நூற்றாண்டினர்.

**கச்சிப்பதிற்றுப் பத்தந்தாதி** = காஞ்சிபுர ஏகாம்பரநாதர் மீது பாடப்பட்ட நூறு பாடல்களைக் கொண்ட பிரபந்த நூல். இதனை இயற்றியவர் கச்சியப்ப முனிவர். காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

**கச்சியானந்தருத்திரேசர் பதிகம்** = இதன் ஆசிரியர் சிவஞான முனிவர். பத்துப் பாடல்களைக் கொண்டது. காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

ஶ்ரீ யானந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது = ருத்திரேசரிடம் வண்டைத் தூதாக அனுப்பும் முறையில் பாடப்பட்ட நூல். பாடியவர் கச்சியப்ப முனிவர். இதில் வண்டுக்குரிய பல வேறு பெயர்களும் அழகுறக் கூறப்பட்டுள்ளன. தூது செல்வதற்கு வண்டே தகுதியுடையது என்பதற்குரிய காரணமும் இதில் இருக்கும். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

கடம்பவன புராணம் = மதுரைமா நகரைப்பற்றிய தல புராணம். இதனை வீமநாத பண்டிதர் என்பவர் பாடியுள்ளார். இதன் காலம் கி. பி. 20-ஆம் நூற்றாண்டு. முன்னர்க் கடம்பக் காடாய் இருந்து பின் மதுரைஎன்ற பெயர் பெற்றமைக்குரிய காரணங்களை இதன் மூலம் அறியலாம்.

கந்தபுராணக் கீர்த்தனை = இராமாயணக் கீர்த்தனை போலக் கந்தபுராணத்தில் அடங்கிய கதைகள் கீர்த்தனை முறையில் அமைந்த நூல். இதனைப் பாடியவர் கவிக்குஞ்சர பாரதியார் என்பவர். காலம் கி. பி. 20-ஆம் நூற்றாண்டு.

கந்த புராணச் சுருக்கம் = கந்தபுராணம் பத்தாயிரத்திற்கு மேற்பட்ட கவிகளையுடையது. அங்ஙனம் பரந்துபட்ட நூலை ஒருசிலரே படித்து வருகின்ற காரணம் பற்றிப் பலரும் படிக்க வேண்டுமெனச் சுருங்கிய முறையில் 1049 செய்யுட்களில் சம்பந்த சரணலையர் என்பவர் அப்பரந்த நூலின் கதைத் தொடர்பு சிறிதும் வழுவா வண்ணம் இந்நூலைப் பாடியுள்ளார். கந்த புராணத்தில் காண்டங்களும், அக்காண்டங்கட்குப் பல படலங்களும் அமைந்துள்ளன. இந்நூலில் காண்டங்கள் மட்டும் அடங்கியுள்ளன. கி.பி.16-ஆம் நூற்றாண்டு.

கந்த புராணம் = இது கச்சியப்ப சிவாசாரியாரால் பாடப்பட்டது. முருகப் பெருமான், 'திகடச் சக்கரம்' என்று தொடங்கிக் கொடுக்க அதனையே முதலாகக் கொண்டு இந்நூல் பாடப்பட்டுள்ளது. இது 1. உற்பத்தி காண்டம், 2. அசுர காண்டம் 3. மகேந்திர காண்டம்,

4. யுத்த காண்டம், 5. தேவகாண்டம், 6. தட்ச காண்டம் என்ற ஆறு காண்டங்களைக் கொண்டது. இதில் 10346 செய்யுட்கள் உண்டு. கந்தப் பெருமானது வரலாற்றை அறிவிக்கும் பரந்த நூல். இது சைவ சமயச் சிறப்பினையும் சிவபரத்துவத்தையும் பல நீதிகளையும் கொண்டு இலங்குவது. காம லீலைகளைப் பற்றிய சில குறிப்புக்களும் இதில் உள்ளன. இதன் நடையும் சுவையும் கதலி பாகம் போன்றது. காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு. கச்சியப்ப சிவாசாரியார் தினம் தினம் பாடல்களைப்பாடிக் குமரப் பெருமான் திருவடிகளில் வைத்துத் திருக்கோயிலைத் தாளிட்டுச் சென்று மறுநாள் கோவிலைத்திறந்து அப்பாடல்களைப் பார்க்கும் போது அப்பாடல்கள் முருகப் பெருமானால் திருத்தப் பட்டிருக்கும்என்று கூறப் படுவதால் இந்நூலின் பெருமையினை மேலும் கூறவேண்டா அன்றே ?

**கந்தரந்தாதி** = இந்நூல் வில்லிபுத்தூர் ஆழ்வாருக்கும், அருணகிரிநாதருக்கும் கல்வி சம்பந்தமானவாதம் நடந்தபோது அருணகிரிநாதரால் பாடப்பட்டநூல் என்பர். இதில் உள்ள பாடல்கள் மடக்கு என்னும் அணியால் அமைந்தவை. இவற்றிற்கு வில்லிபுத்தூரார் உரை கூறிக்கொண்டு வந்தும், 'திதத்தத்த' என்று தொடங்கும் திருப்பாட்டுக்குப் பொருள் கூற இயலாதுவிழித்தனர்என்பர். இதன் காலம் 15-ஆம் நூற்றாண்டு. இதில் 100 பாடல்கள் உள்ளன. இந்நூலுக்குரிய உரை வில்லிபுத்தூராருடையது என்பது ஆன்றோர் துணிபு.

**கந்தரலங்காரம்** = அருணகிரிநாதரால் பாடப்பட்டது. காலம் கி. பி. 15-ஆம் நூற்றாண்டு. முருகனது பெருமை, வேலின் மாண்பு மயிலின் சிறப்பு முதலியன இதில் பாடப்பட்டுள்ளன. செந்தமிழில் தன்னை வைதவர்களையும் முருகன் வாழ வைப்பவன் என்னும் குறிப்பு இந்நூலில் தான் உண்டு. முருகன் திருவருளைப் பெறுதற்கு இது உகந்த நூல்.

**கந்தரனுபூதி** = இது அருணகிரிநாதரால் பாடப்பட்டது. 51 பாடல்களையுடை

யது. பின்னுல் சில பாடல்கள் எவராலோ பாடப்பட்டு இவற்றுடன் இணைக்கப்பட்டன. அவை அருணகிரியார்பாடல்கள் அல்ல என்பது அறிஞர் துணிபு. இந்நூல் நித்தம் பாராயணத்திற் குரியது. இதன் காலம் கி. பி. 15-ஆம் நூற்றுண்டு. கந்தன் அனுபூதிபெறத் துணை செய்ய வல்லது.

**கந்தர் கலிவெண்பா** = குமர குருபர சுவாமிகளால் பாடப்பட்டது. குமரகுருபரர் ஐந்து வயதுவரை ஊமையாக இருந்தனர். இதனைக் கண்ட பெற்ருேர் திருச்செந்தூரை அடைந்து முருகனை வேண்ட முருகன் அருளால் குழந்தை பேசத் தொடங்கியது. அத்தருணம் இந்த நூலைப்பாடியருளினுர் குமரகுருபரர். முருகனது பிறப்புவளர்ப்பு பெருமை முதலியவற்றை இந்நூல் அழகு படக் கூறுகிறது. தினசரிபாராயணத்திற்குரியது. சைவ சித்தாந்தக் குறிப்புக்கள் பலவற்றைக்கொண்டது. காலம் கி. பி. 17-ஆம் நூற்றுண்டு.

**கந்தர் சஷ்டி கவசம்** = இது தேவ்ராய சுவாமிகளால் பாடப்பட்டது. இதனை நித்தரும் நியமத்தோடு பாராயணம் செய்து வரின், பேய் பிசாசு அண்டா. வினைகள் தீமை செய்யா. மற்றும் எந்த விதமான இடுக்கண்களிலிருந்தும் விடுபடலாம். இதில் பல மந்திர எழுத்துக்களும் அடங்கியுள்ளன. காலம் 19-ஆம் நூற்றுண்டு.

**கந்தர் நாடகம்** = இராமாயணத்திற்கு ஒரு நாடகம் அமைந்ததுபோலவே கந்தன் வரலாற்றிற்கும் ஒரு நாடக நூலாக அமைந்தது. இது பால சுப்பிரமணிய கவி என்பரால் பாடப்பட்ட நூல். காலம் கி.பி.20-ஆம் நூற்றுண்டு.

**கபிலரகவல்** = இது கபிலர் என்பவரால் பாடப்பட்டது. ஆனுல் இவர் சங்ககாலக் கபிலர் அல்லர் என்பது இந்நூலின் நடை கண்டு அறியலாம். இதில் வள்ளுவருடன் பிறந்தவர் யார் யார் என்ற குறிப்பை அறியலாம். இது நல்லஉபதேசமொழிகளை உலகத்தார்க்கு உணர்த்துகிறது. மக்கள் வாழ்க்கை நிலையற்றது என்று கூறி உடனே நல்லது செய்ய வேண்டும்

என இது தூண்டுகிறது. காலத்தினைத் திட்டமாகக் கூறுதற்கு இல்லை.

**கப்பற் கோவை** = புதுக்கோட்டைக் கப்பலூர் என்னும் ஊரின் தலைவனான கருமாணிக்கன் என்பவன் மீது பாடப்பட்ட அகப் பொருட் சுவை அமைந்த நூல். இந்நூலாசிரியர் பெயர் தெரிந்திலது. இந்நூலில் உள்ள பாடல்களில் சில இலக்கண விளக்க உரையில் உதாரணமாக எடுத்தாளப் பட்டுள்ளன.

**கம்பராமாயண முதற் செய்யுள் சங்கோத்தரவிருத்தி** = இது ஒரு வசன நூல். காஞ்சிபுர வாசிகள் சிவஞான முனிவரிடம் கம்பராமாயணக் கவிகளின் சிரேஷ்டத்தைச் சிறப்பித்துப் பேசினர். அது கேட்ட சிவஞான முனிவர் அவர்களின் கொட்டத்தை அடக்கக் கம்பராமாயணத்திலுள்ள 'நாடிய பொருள் கைகூடும்' என்னும் செய்யுட்கு உரை கூறப்புகுந்து, அச்செய்யுளில் அமைந்த பொருள் முற்றிலும் தவறானது. என எடுத்துக் காட்டியுள்ளார். பின்னர்க் கம்பராமாயண அன்பர்கள் தாம் கம்பராமாயணக் கவியினைச் சிறப்பித்துக் கூறியது தவறு என்று கூறி மன்னிக்குமாறு சிவஞான முனிவரை வேண்டினர். அதன்பின் அவரே அச்செய்யுளுக்கே சிறப்புடைய பொருள் உண்டு என்பதையும் இந்நூலில் எடுத்துக் காட்டி இனியாகிலும் அவ்வாறு கம்பராமாயணக் கவிதான் சிறப்புடையது என்றுகூறுதிருக்க அறிவு தொளுத்தினர். இத்தகைய சந்தர்ப்பத்தில் எழுதப்பட்ட நூலே இது. இதன் காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

**கம்பராமாயணம்** = கம்பரால் பாடப்பட்ட நூல். ராமனது வரலாற்றை அறிவிப்பது. பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிஷ்கிந்தா காண்டம் சுந்தர காண்டம், யுத்த காண்டம் என்னும் ஆறு காண்டங்களை யுடையது. பத்தாயிரத்துக்கு மேற்பட்ட கவிகளையுடையது. இராமாவதாரம் என்னும் பெயரும் இந்நூலுக்கு உண்டு. காலம் கி.பி.12 ஆம் நூற்றாண்டு. இதுகற்றோர் இதயத்தைக் களிக்கச்

செய்யும்நூல். இந்நூலில் நாலாயிரப்பிரந்தக் கருத்துக்கள், சைவத் திருமுறைகருத்துக்கள், பஞ்சகாவிய கருத்துக்கள், திருக்குறட் கருத்துக்கள் அடங்கியுள்ளன. அதனுல்தான் இந்நூல் கற்றவர்க்குச் சுவை தருகிறது. அது அதில் ஓர் அகப்பை முகந்து கொண்டேன் என்று கம்பரே கூறியுள்ளார்.

**கயாகரர் நிகண்டு** = இது பழைய நிகண்டுகளில் ஒன்று. நிகண்டு என்பது சொற்களுக்குப் பொருள் உணர்த்தும் நூல். இது இக்காலத்திலுள்ள அகராதி போன்றது. ஆனல் இதுசெய்யுள் அமைப்பில் பொருளை அறிவிக்கும் முறையில் அமைந்தது. கயாகரரால் இயற்றப்பட்டது. காலம்தெரிந்திலது.

**கயிலைபாதி காளத்திபாதி வெண்பா** = இது நக்கீரரால் பாடப்பட்டது. நக்கீரர் இறைவனோடு வாதம் இட்டுக் குட்ட நோய் கொண்டு அது நீங்க கயிலைக்குச் சென்றபோது இடையில் திருக்காளத்தி மலையில் தங்கி, இந்நூலைப் பாடினர். இது சைவத் திருமுறை 12 இல் 11-ஆம் திருமுறையில் இணைக்கப் பட்டுள்ளது. இதன் காலம் கடைச் சங்க காலம். ஆனல் இதில் கருத்து வேறுபாடு உண்டு. அதாவது இந்நூல் சங்கநக்கீரரால் எழுதப்பட்டதன்று என்பது.

**கருணீகர் புராணம்** = கணக்கர் மரபினர்களின் பூர்வ வரலாற்றை உணர்த்தும் நூல். இதனை அங்கு சாமிப்பிள்ளை என்பார் பாடியுள்ளார். காலம் கி.பி. 19-ஆம் நூற்றுண்டு.

**கலிங்கத்துப்பரணி** = இது சயங்கொண்டார் என்பவரால் பாடப் பட்டது. பரணி என்பது போரில் 1000யானைகளைக்கொன்ற வீரனைப் பற்றிப் பாடப் படும் நூல். முதற் குலோத்துங்கன் கலிங்கத்தைவென்ற வெற்றிச் சிறப்பைக் கூறும் நூல். இதில் பதின் மூன்று பகுதிகள் உள்ளன. உண்மையில் படை திரட்டிச் சென்று போர் செய்து வெற்றி கண்டவன் கருணாகரத் தொண்டைமான் என்னும் வீரனை முதல் அமைச்சனுவான். மந்திரியின் வெற்றியினை மன்னன் வெற்றியாக இந்

நூல்சிறப்பித்துக் கூறும். இதன் மூலம் சோழர் பரம்பரையினர் வரலாற்றுக் குறிப்பைக் காணலாம். போர்க்கள வர்ணனை பாலைநில வர்ணனை பேய்களின் தோற்றம், அவற்றின் சேஷ்டைகள் காளிகோயில் சிறப்பு, முதலானவற்றைக்காணலாம் இது பரணி நூற்களில் சிறந்தது. காலம் கி. பி. 11 - ஆம் நூற்றாண்டு. இதில் கடை திறப்பு, காளிக்குக் கூளி கூறியது, கூளிக்குக் காளி கூறியது, களம் பாடியது முதலான தலைப்புக்கள் உண்டு. இதில் 596 தாழிசைகள் உள்ளன. ஒவ்வொரு தாழிசையையும்புலவர் பாடிப்பொருள் விரித்தபோது கேட்ட குலோத்துங்க சோழன் ஒவ்வொரு பொன் தேங்காயை உருட்டி புலவரைச் சிறப்பித்தான் என்பர்.

**கலித்துறையந்தாதி** = இது சுந்தரர் பாடியுள்ள திருத்தொண்டத் தொகையில் குறிப்பிடப்பட்ட சிவனடியார்களைப் பற்றித் தனித் தனிக் கலித்துறையாப்பில் பாடித் துதிசெய்த நூலாகும். இந்நூல் சேக்கிழார் பெரிய புராணம் பாடுதற்குப் பெருந்துணை செய்தது. இதனால் இந்நூல் பெரிய புராணத்திற்கு வழிநூல் என்று கூடக் கூறப்படுகிறது. பெரிய புராணத்தைநோக்க இது வகை நூலாகவும் உள்ளது. இதனைப் பாடியவர் நம்பியாண்டார் நம்பிகள். இந்நூல் சைவத் திருமுறை 12 னுள் 11 வதாகத் திகழும் பெருமை 10-யுடையது. காலம் கி.பி. ஆம் நூற்றாண்டு.

**கலித்தொகை** = 'கற்றார் ஏத்தும் கலி' என்னும் சிறப்புப்பெற்ற நூல். இது சங்கம் மருவிய எட்டுத் தொகைகளுள் ஒன்று. 150 கலிப்பாவால் இயன்றது. அகப் பொருள் சுவைமிக்க ஐந்திணைகளைப்பற்றிய செய்திகளை அறிவிப்பது. பாலைக் கலியினைப் பெருங் கடுங்கோனும், குறிஞ்சிக் கலியினைக் கபிலரும், மருதக் கலியினை மருதன் இளநாகனும், முல்லைக் கலியினைச் சோழன் நல்லுருத்திரனும், நெய்தல் கலியினை நல்லந்துவனும் பாடியுள்ளார். இந்நூலுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர் நல்லந்துவனார்.

உரை எழுதியவர் நச்சினார்க்கினியர். கடைச்சங்க காலம். இதில் கூறும் குறளும் கூடிப்பேசும்பேச்சும், பட்டிமகன ஆறும்படும், மற்றும் பல குறிப்புக்களும் படிக்கப் படிக்கச் சுவை தருவனவாகும்.

**கலைக்கோட்டுத்தண்டு** = இது நிகண்டு நூல். இதில் சொற்பொருள் விளக்கம் காணப்படும். இது இப்போது கிடைத்திலது. இறந்து பட்ட நூற்களுள் ஒன்று. இலக்கண உரை நூற்களில் பெயர் அளவில் மேற்கோளாக எடுத்துக்கூறப் பட்ட நூல். காலம் அறிதற்கு இல்லை.

**கலைசைச் சிலேடை வெண்பா** = இது சுப்பிரமணிய முனிவரால் பாடப் பட்டது. இதில் உள்ள சிலேடைந் தொடை அமைந்த சொற்றொடர்கள் தமிழ் அறிவைப் பெருக்கிக் கொள்ளுதற்குத் துணைசெய்ய வல்லன. இதில் வரும் சிலேடைத் தொடர்களில் "கண்டகாச் சாடும் கலைசையே" என்பது ஒன்று. அத்தொடர் கண்டகர் அச்சு ஆடும் கலைசையே என்றும், கண் தகரச்சாடும் கலைசையே என்றும் பிரிந்து பொருள் தருதலைக்காண்க. காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

**கலைசைப் பதிற்றுப் பத்தந்தாதி** = சிவஞான முனிவரால் பாடப்பட்டது. 100 பாடல்களைக் கொண்டது. காலம் கி.பி.18-ஆம் நூற்றாண்டு.

**கல்லாடம்** = இது கல்லாடர் என்பவரால் இயற்றப் பட்டது. 'கல்லாடம்படித்தவரோடு மல்லாடாதே', என்ற பழமொழியினால் இதன் அருமை பெருமைகளை அறியலாம். இதில் 100 அகவல் பாக்கள்உள்ளன. ஒவ்வொரு பாடலையும் கேட்டபோது மதுரைச் சொக்கலிங்கப் பெருமானார் தலை யசைத்து அசைந்து இன்புற்றார் என்று கூறப்படுகிறது. மாணிக்கவாசகர் பாடிய திருக்கோவையார் பாடல்களில் 100 பாடல்களைத் தேர்ந்து எடுத்துக் கொண்டு, அப்பாடல்களுக்குரியவிளக்கம்போல் இந் நூலைப்பாடியுள்ளார். இதற்கு மயிலேறும் பெருமாள் பிள்ளை 30 பாடல்களுக்கு உரை எழுதியுள்ளார். மிகுதியான 63 பாடல்களுக்குப் புதுவை சுப்பராயமுதலியார் உரை

எழுதியுள்ளார். இந்நூலாசிரியர் சங்ககாலப் புலவரா, அன்றிவேறானவரா என்பது ஆராய்தற்குரியதாக இருக்கிறது. ஆகவே, காலத்தை வகுக்க இடமில்லை.

**கழுக்குன்றப்புராணம்** திருக்கழுக்குன்றத் தலத்தின் வரலாற்றைக் கூறுவது. அந்தகக் கவி வீரராகவ முதலியாரால் பாடப்பட்டது. இதன்மூலம் அங்கு வந்து தினமும்சர்க்கரைப் பொங்கலை உண்டு செல்லும் இருகழுகுகளின் வரலாற்றைஅறியலாம். மலையின்மாண்பையும், தீர்த்த விசேடத்தையும், தலத்தின் பெருமையையும் அறிய இந்நூல் துணைபுரியும்'

**கழுமல மும்மணிக்கோவை** = சீர்காழிப்பதியின்மீது பட்டினத்தடிகளால் பாடப்பட்டநூல். கழுமலம் என்பது சீர்காழிக்குரியபெயர்களில் ஒன்று. 30 பாடல்களைக் கொண்டது. பதினோராம் திருமுறையில் இணைக்கப்பட்டது. காலம் கி. பி. 10-ஆம் நூற்றுண்டு. இது தோத்திர நூல்.

**களவழி நாற்பது** = சோழன் செங்கணான், சேரமான் கணைக்கால் இரும்பொறையைச் சிறையிட்டனன். இச்சிறையினின்றும் விடுதலைசெய்யப் பொய்கையார் என்னும் புலவர் இந்நூலைப் பாடினார். இந்நூல் 41 வெண்பாக்களைக் கொண்டது. இதில் செங்கணான் வீரம், போர்க்கள இயல்பு முதலியன அழகுறப் பாடப்பட்டுள்ளன. காலம் கடைச்சங்க காலம்.

## கா

**காக்கை பாடினியம்** = இது யாப்பு இலக்கண நூல். காக்கை பாடினியார் என்பவர்ஆசிரியர். யாப்பருங்கல விருத்தியில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டநூல். காலம் கி. பி. 10 ஆம் நூற்றுண்டு.

**காசிக்காண்டம்** = இதுகாசியின் மான்மியத்தை அறிவிக்கும்நூல். அதிவீரராம பாண்டியர் இதனைப்பாடினுர். கங்கை யாற்றின் மாண்மை இதில் அறியலாம். ஆசாரம். கற்புமுதலானவற்றைப் பற்றிய குறிப்புக்கள் இதில் உண்டு. காலம் கி.பி. 16-ஆம்நூற்றுண்டு. புராண வகையைச்சார்ந்த நூல்.

**காசிக் கலம்பகம்** = குமரகுருபர சுவாமிகளால் பாடப்பட்டது. காலம் கி.பி. 17

ஆம் நூற்றாண்டு. இது தோத்திர நூல்.

**காசிரகசியம்** = மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்பாடப்பட்டது. காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு. சிதம்பர ரகசியம் போல் காசிரகசியம் அறிய இந்நூல் துணை செய்யும்.

**காஞ்சி புராணம்** = இதன் முற்பகுதி சிவஞான முனிவராலும் பிற்பகுதி அவர் மாணவர் கச்சியப்ப முனிவராலும் பாடப்பட்டது. இந்நூலில் பல சித்திரக் கவிகள் அமைந்துள்ளன. இந்நூலால் தொண்டை நாட்டுச் சிறப்பினை நன்கு தெளியலாம். திணைமயக்கச் செய்யுட்களின் பொருட் செறியும், ஐந்திணை வளங்களைப்பற்றிய செய்யுட்களின் பொருட் சிறப்பும், சுவை மிகவுடையனவாகக்காணப்படும். காலம் கி.பி.18-ஆம் நூற்றாண்டு. காஞ்சிபுரத்தின் மாண்பை அறிய இது துணைபுரியும் நூலாகும்.

**காரெட்டு** = மேகத்தைப் பற்றிய எட்டுப் பாடல்களைக் கொண்டநூல். இது பதினோராம் திருமுறையில் இணைக்கப் பட்டுள்ளது. பாடியவர் நக்கீரர். கடைச்சங்க காலம் என்பர்.

**கார்நாற்பது** = பதினெண் கீழ்க்கணக்கு நூற்களுள் ஒன்று. முல்லைத்திணைக்குரிய இருத்தல் என்னும் உரிப்பொருள் அமையப் பாடப்பட்டநூல். இதில் கார்கால வர்ணனை அழகுறப் பாடப்பட்டுள்ளது. நாற்பது பாடல்களைக் கொண்டது. இதனை மதுரைக் கண்ணங்கூத்தனார் என்பவர் இயற்றினார். கடைச்சங்க காலம்.

**காவடிச்சிந்து** = நல்ல இசையோடுகூடிய பாடல்களைக் கொண்டநூல். முருகப் பெருமான்மீது பாடப்பட்டது. இதனைப் பாடியவர் அண்ணாமலை ரெட்டியார். காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு. இவரேஅல்லாமல் துர்க்கை முத்துப் பிள்ளை என்பாரும் இவருக்குப்பின் ஒரு காவடிச்சிந்தைப்பாடியுள்ளார். ஆனால் ரெட்டியார் சிந்துக்குள்ள பெருமையினைப் புலவர் சிந்து பெறவில்லை. பூ என்பது எப்படித் தாமரையைக் குறிக்குமோ, அதுபோலக் காவடிச்சிந்து என்றால் ரெட்டியார் பாடலையே குறிக்கும்.

**காவேரி புராணம்** = திருச்சிற்றம்பல முனிவரால் பாடப்பட்டது. இதில்

காவிரியாறு உற்பத்தியான விதமும், இப்பெயருடன் அவ் ஆறு விளங்குதற்குரிய காரணமும் கூறப்பட்டுள்ளன. காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

**காழிக்கோவை** = இது சீர்க்காழித் தலத்தின் மீது பாடப்பட்டது. இதைப் பாடியவர் மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு. இது அகப்பொருள் நூல்.

**காளத்திநாதர்உலா** = சேறைக் கவிராசபிள்ளையால் பாடப்பட்டது. இதன் மூலம் ஸ்வர்ணமுகியாற்றின் மேன்மை, காளத்தி மலையின் மாண்பு முதலானவற்றை அறியலாம். காலம் கி. பி. 16-ஆம் நூற்றாண்டு.

**காளத்தி புராணம்** = இதனைக் கருணைப்பிரகாசர், சிவப்பிரகாசர், வேலையதேசிகர் ஆகியமூவரும் பாடிமுடித்துள்ளனர். கருணைப்பிரகாசர் பாயிரம் உட்பட முதல் ஐந்து சருக்கங்களையும், சிவப்பிரகாசர் கண்ணப்பர் சருக்கம், நக்கீரர் சருக்கம் ஆகிய இரண்டு சருக்கங்களையும், வேலையதேசிகர் இறுதியிலுள்ள சருக்கங்களையும் பாடியுள்ளனர். இதில் சிலந்தியும், யானையும் பாம்பும் இறைவனைத் துதித்த வரலாறும், நக்கீரர் வரலாறும், கண்ணப்பர் வரலாறும், வேசிப் பெண்கள் இருவர் பேறுபெற்ற வரலாறும் உண்டு. இதனைச் சீகாளத்தி புராணம் என்றுங்கூறுவர். காலம் கி.பி. 17-ஆம் நூற்றாண்டு.

## கு

**குசேலோபாக்கியானம்** = இதனை வல்லூர் தேவராசப் பிள்ளை என்பவர் பாடினர். வல்லூர் தேவராசப்பிள்ளை மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் மாணவர். ஆதலின், திரு. பிள்ளை அவர்களே இந் நூலைப் பாடித் தம் மாணாக்கர் வேண்டுகோளுக் கிணங்கித் தம் பெயரால் வெளியிடாது தம் மாணவர் பெயரால் வெளியிட்டதாகக் கூறுவர். குசேலரது வாழ்க்கை வரலாற்றைக் கூறும் நூல். இவ் வரலாறு பாகவதத்தில் ஒரு கிளைக் கதையாக இருத்தலின், குசேலோ உபாக்கியானம் எனப்பட்டது. உபாக்கியானம் கிளைக்கதை. காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

துட்டித் தொல்காப்பியம் = இதுவே இலக்கண விளக்கம் ஆகும். இதன் குறிப்பினை இலக்கண விளக்கம் என்ற இடத்துக் காண்க.

குண்டலகேசி = குண்டலகேசி என்பவள் ஒரு வணிகக் கன்னிகை. அவள் புத்த குருவின் உபதேசம் பெற்று அருக சமயத்தை வாதில் வென்றவள். புத்தமதத்தை மீண்டும் பரவச் செய்தவள். இத்தகைய குறிப்புக்களை எல்லாம் இந்நூல் அறிவிக்கும். பௌத்த மத நூல்களுள் ஒன்று. இது சீவக சிந்தாமணிக்கு முன்னர் எழுந்த நூல் எனக் கருதப்படுகிறது. ஆகவே, இது கி.பி. 10-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டது.

குமரேச சதகம் = நூறு அகவல் விருத்தத்தால் ஆன நூல். இதில் நீதி போதனைகள் கூறப்பட்டுள்ளன. இதில் காணப்படும் பாடல்களின் ஈறு மலைமேவு குமரேசனே என்று முடிதலின் இது குமரேச சதகம் என்ற பெயரினைப்பெற்றது. குமரேசன் ஆவான், முருகன் என்பதைக் கூறவேண்டா அன்றே? இதன் ஆசிரியர் குருபாததாசர். காலம் கி. பி. 18 ஆம் நூற்றாண்டு.

குமாரசாமியம் = சைவ சித்தாந்தசரபம் என்ற பெயர் பெற்ற பாம்பன் சுவாமிகளால் பாடப்பட்டது. குமாரப் பெருமானுடைய வரலாற்றைக் கூறுவது. இந்நூலில் அருணகிரிநாதரைப்பற்றி அடிக்கடி கூறப்பட்டிருத்தலைக் கொண்டு இந் நூலாசிரியர் அருணகிரி நாதர்மீது கொண்டிருந்த அன்பின் பெருக்கை அறிந்து கொள்ளலாம். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

குமாரதேவர் சாத்திரம் = இது ஒரு தொகுப்பு நூல். இதில் அத்துவித உண்மை. விஞ்ஞானசாரம். பிரமானுபூதி விளக்கம், மகாராசா துறவு, ஆகம நெறி யகவல், வேதநெறி அகவல், பிரமானுபவ அகவல், வேதாந்த தசா அவத்தைக் கட்டளை, வேதாந்ததச காரியக்கட்டளை. ஞான அம்மானை, பிரமசித்தி அகவல். உபதேச சித்தாந்த கட்டளை, சிவதரிசன அகவல், சமரச அகவல், சுத்தசாகம், சகசநிட்டை ஆகிய நூல்கள் உள்ளன. இவற்றுள் மகாராசா

துறவு என்னும் நூலே பலராலும் படிக்கப்படுவது. இவற்றின் ஆசிரியர் குமார தேவர் ஆவார். காலம் 18 ஆம் நூற்றாண்டு.

**கும்பகோணப் புராணம்** = ஒப்பிலாமணிப்புலவர். இதன் ஆசிரியர். கி. பி. 18 ஆம் நூற்றாண்டு. மகாமக தீர்த்த விசேடத்தை அறியலாம்

**குருபரம்பரை** = பின்பு அழகியபெருமாள்சீயர் இதன் ஆசிரியர் வைஷ்ணவப் பெருமக்களின் வரலாறு கூறும்நூல். காலம் கி.பி. 15 ஆம் நூற்றாண்டு.

**குருபூசை மான்மியம்** : சைவ சமயப் பெரியோர்கள் இறைவன் திருவடியடைந்த நாளே குருபூசை தினம் எனப்படும். அந்நாளில் அவர்களை நினைந்து வழிபடலும், அடியார்களுக்கு அன்னம் இடலும் குருபூசை நாளில் செய்ய வேண்டிய செயல்களாகும். இப்படிச் செய்வதனால் ஏற்படும் பயனையும் பெருமையையும். கூறுவதே இந்நூல். இந் நூலாசிரியர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை. காலம். கி.பி. 19ஆம் நூற்றாண்டு,

**குலால புராணம்** = மச்சமுனி என்பவரால் பாடப்பட்டது. மட்பாண்ட வகுப்பினர் மாண்பைக் கூறுவது. காலம் கி.பி. 15ஆம் நூற்றாண்டு.

**குலோத்துங்கசோழன் கோவை**

**குலோத்துங்கன் உலா**

**குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்**

= ஒட்டக் கூத்தரால் பாடப்பட்டது.காலம்கி.பி. 11-ஆம் நூற்றாண்டு.

**குறிஞ்சிப் பாட்டு** = சங்கம் மருவிய பத்துப் பாட்டு என்னும் தொகை நூல்களுள் ஒன்று. இதனைப் பெரிய குறிஞ்சி என்றும் கூறுவர். வடமொழி உணர்ந்த வடநாட்டு மன்னன் பிருகதத்தன் தமிழ்மொழியின்சுவையை உணரக்கபிலரால் பாடப்பட்ட நூல். இதனால் பல வகை மலர்களின் பெயரை அறியலாம் 261 அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால் ஆனது. இது கடைச்சங்க காலத்தது. மாலைக்காலத்தில் பறவைகளும் விலங்குகளும் தம் தம் இருப்பிடம் வந்து சேரும் நிகழ்ச்சிகளையும் அப்போதுமக்கள்செய்யும்

செயல்களையும் படிக்கும் போது இன்பம் ஊட்டுவனவாகக் காணப்படும். இதில் 99 வகை மலர்களின் பெயர்களைக் காணலாம்

நறுந்திரட்டு = இது ஒரு தொகுப்புநூல். இதனைத் திரட்டியவர் தத்துவராய சுவாமிகள். திரட்டிய காலம் கி.பி. 15 ஆம் நூற்றாண்டு. இதில் உள்ள பாடல்கள் வேதாந்த பரமான கருத்துக்களைக் கொண்டது. சிதம்பர சுவாமிகள் தாம் எழுதிய உரைகளில் பெரிதும் இந்நூலில் உள்ள பாடல்களை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

குறுந்தொகை = சங்கம் மருவிய எட்டுத்தொகை நூற்களில் ஒன்று. இதில் 400 பாடல்கள் உண்டு. இது அகப் பொருட் சுவையினைத் தழுவியது. இந்நூலில் 205 புலவர்கள் பாடிய பாடல்கள் உள்ளன. அனைத்தும் அகவற்பாவால் இயன்றவை. கடவுள் வாழ்த்துப்பாடல் பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பட்டது. இதுபூரிக்கோ என்பவனது வேண்டுகோளால் தொகுக்கப்பட்டது. இந்நூலிற்குப் பேராசிரியர் உரை உண்டு என்பர். அவ்வுரையுள்ளும் 20 பாடல்கட்கே அவர்உரை எழுதினர் என்பர். அவ்விருபது செய்யுட்களுக்குப்பின்னர் நச்சினார்க்கினியர் உரை எழுதினர் என்பர். இவ்வுரைகள் இதுபோது கிடைத்தில. ஆகவே, டாக்டர். சுவாமிநாத ஐயர் இதற்குச் சிறந்த உரை எழுதியுள்ளார். சௌரிப் பெருமாள் அரங்கசாமி ஐயங்காரும் இதற்கு உரை எழுதியுள்ளார். கலாநிலையம் என்னும் பத்திரிகையில் இரமரத்தின ஐயர் என்பவரும் உரை எழுதி முடித்துள்ளார். இந்நூல் கடைச்சங்ககாலத்தது. நாலடிச் சிறுமையும் எட்டடி பெருமையும் கொண்ட பாடல்களைப்பெற்றது. அதனால் தான் இது குறுந் தொகை எனப்பட்டது. இதில் தருமி என்பவனுக்குச் சிவபெருமான் பாடித்தந்த "கொங்கு தேர்" என்று தொடங்கும் பாடலும் உள்ளது. இயற்கையின் விநோதங்களை அறியப் பெருந்துணை செய்யும் நூல் இது.

**குற்றாலத்தலபுராணம்** = திரிகூட ராசப்பக் கவிராயரால் பாடப்பட்டது, காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு. இதன் வாயிலாக அங்குள்ள நீர்வீழ்ச்சிகளின் அருமை பெருமைகளையும், அந்நீர் வீழ்ச்சிகள் தோன்றும் மலைகளின் வளங்களையும் நன்குணரலாம். இந்நூலில் உள்ள நாட்டு வளனும் நகர வளனும் படித்து இன்புறுதற்குரியவை. இந் நூலில் கற்பனை மிகுதியும் உண்டு.

## கூ

**கூர்ம புராணம்** : அதிவீரராம பாண்டியர் என்பவரால் இயற்றப்பட்டது. இதன் காலம் கி. பி. 16 ஆம் நூற்றாண்டு. இதனை வரதுங்க பாண்டியர் இயற்றினார் என்றும் கூறுவதுண்டு. இது சைவ பரத்துவம் கூறும் நூல்களில் ஒன்று.

**கூவப் புராணம்** = கூவம் என்பது கூவரம் என்னும் சொல்லேயாகும். கூவரமாவது தேரின் ஏர்க்கால். சிவபெருமான் திரிபுரம் எரித்தபோது, அமர்ந்திருந்த தேரின் ஏர்க்கால் இத்தலத்தில் உடைந்த காரணத்தால் இப்பெயர்பெற்றது என்பர். இதுபோன்ற வரலாறுகள் பல இதில் கூறப்பட்டுள்ளன. துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளால் பாடப்பட்டது. காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

**கூளப்பநாயக்கன் காதல்** = இது ஒரு சிற்றின்ப நூல். இதில் தாசிகளின் சாகசம் இன்னின்ன என்பன விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளன. தாசிகளின் சேர்க்கையால் ஏற்படும் துன்பங்களும் இதில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. படிக்கச் சுவை தருவது. இதன் ஆசிரியர் அட்டாவதானி சுப்பிரதீபக் கவிராயர். காலம் கி. பி. 18 ஆம் நூற்றாண்டு.

## கை

**கைந்நிலை** = இதனைப் பதினெண் கீழ்க்கணக்கு நூற்களுள் ஒன்று என்பர். இந்நூலாசிரியர் மாறோக்கத்து முள்ளி நாட்டு நல்லூர் காவிதியார் மகனார் புல்லங் காடனார் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. நீதி நூல் வகையைச் சார்ந்தது. இது கடைச் சங்க காலத்து நூல்.

**கைலாசநாதர் சதகம்** = நூறு பாடல்களையுடைய ஒரு நீதி நூல். ஆசிரியர் சிதம்பரவாணர் என்பவர். கி. பி. 19 ஆம் நூற்றுண்டு.

**கைலைக்கலம்பகம்** = குமர குருபரசுவாமிகளால் எழுதப்பட்ட நூல். காலம் கி. பி. 18 ஆம் நூற்றுண்டு

**கைவல்லிய நவநீதம்** = இது ஒருவேதாந்த நூல். இதனை இயற்றியவர் தாண்டவராய சுவாமிகள். காலம் கி. பி. 17 ஆம் நூற்றுண்டு, உலகில் உள்ள பொருள்கள் நிலையுள்ளவை அல்ல என்பதை வெண்ணெய் போல எளிதாகப் புரியும் வகையில் எடுத்துக் கூறிப் பரம்பொருள் ஒன்றே நிலையுள்ளது என்ற கருத்தை நிலைநாட்டிச் செல்வதால் இது இப்பெயர்பெற்றது.

## கொ

**கொங்குமண்டல சதகம்** = இது விசயமங்கலம் கார்மேகக் கவிஞர் என்பவரால் பாடப்பட்டது. இச்சதகத்தால் கொங்கு நாட்டிற்குத் தொடர்புடைய புலவர்களைப் பற்றிய குறிப்பு முதலானவற்றை அறியலாம். காலம் அறிதற்கு இல்லை

**கொங்கு வேள்மாக்கதை** = இந்நூல் கொங்கு நாட்டில் வாழ்ந்த வேளாளர் தலைவருள் ஒருவரால் இயற்றப்பட்டநூல். இதனைப் பெருங்கதை என்றும் கூறுவர். இதன் முதன் நூல் குணாட்டியர் என்பவரால் பைசாச மொழியில் இயற்றப்பட்டது. கோசாம்பி நகரத்தரசன் உதயணன் என்பான் வரலாற்றைக் கூறுவது. காலம் கி. பி. ஏழாம் நூற்றுண்டு. இந்நூல் ஆசிரியர் பெயர் தெரிந்திலது. கொங்கு வேள் என்பது அவரது பெயராக இருக்கலாமோ என்று யூகிக்கப்படுகிறது. இவர் ஊர் விசயமங்கை.

**கொடிக்கவி** = இது சைவசித்தாந்த சாத்திர நூல்களில் பதினன்கனுள் ஒன்று. கொற்றவன் குடி உமாபதி சிவாசாரியரால் பாடப்பட்டது. சிதம்பரப் பெருவிழாவில் துஜஸ்தம்பத்தில் கொடியேற இந் நூலைப் பாடினர். காலம் கி. பி. 14-ஆம் நூற்றுண்டு.

**கொடுந்தமிழ்** = ரெவரெண்டு பெஸ்கி என்பார் வீரமா முனிவர் என்ற பெயருடன் தமிழ் நாட்டில் திகழ்ந்தபோது எழுதிய நூல். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

**கொலை மறுத்தல்** = சிவ காருண்யத்தை மேற்கொண்டு நற்கதிபெற விரும்பின், கொலை செய்தல் கூடாது என்பதை விளக்கமுற அறிவிக்கும் நூல் இதுவேயாகும். ஆசிரியர் சாந்தலிங்க சுவாமிகள். இந்நூலுக்குத் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் உரை எழுதியுள்ளார். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

**கொன்றை வேந்தன்** = நீதிகளை அறிவிக்கும் நூல். ஒளவையாரால் பாடப்பட்டது என்று கூறப்பட்டு வருகிறது. ஒளவையார் பலர் இருந்தவராகக் கருதப்படுதலின், எந்த ஒளவையார் இதனை எழுதியவர் என்பதைக் கூறமுடியவில்லை. இந்நூலின் கடவுள்வாழ்த்துக்'கொன்றை வேந்தன்' எனத்தொடங்கலின் இப்பெயர் பெற்றது.

## கோ

**கோகிலாம்பாள் கடிதங்கள்** = தூய செந்தமிழ நடையில் மறைமலையடிகளால் எழுதப்பட்ட உரை நடை நூல். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு. ஆங்கிலத்தில் பல கடிதங்கள் இலக்கியங்களாக உள்ளன. அம்முறையினைப் பின்பற்றி இந்நூல் எழுதப்பட்டது.

**கோமடசுரக் கோவை** = கும்பகோணத்திற்கு அருகேயுள்ள பாடல்பெற்ற தலமாகிய கொட்டையூர் மீது சிவக்கொழுந்து தேசிகரால் பாடப் பட்டது. காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு. அகப்பொருள் தழுவிய நூல்.

**கோயிலூர்ப் புராணம்** = மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையால் பாடப்பட்டது. காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

**கோயில் நான்மணி மாலை** = சிதம்பரத்தின்மீது பட்டினத்தடிகளால் பாடப்பட்டது. நாற்பது பாடல்களையுடையது. காலம் கி. பி. 10-ஆம் நூற்றாண்டு.

**கோயில் புராணம்** = சிதம்பரத்தைப் பற்றிய புராணம். கொற்றவங்குடி உமாபதி சிவாசாரியரால் பாடப்பட்டது. கி. பி. 14-ஆம் நூற்றாண்டு. நடனச் சிறப்பு. சிதம்பர மான்மியம் முதலானவற்றை அறிய இது துணை செய்யும்.

**கோயில் திருப்பண்ணியர் விருத்தம்** = சிதம்பர நடராஜர் மீது பாடப்பட்ட நூல். ஆசிரியர் நம்பியாண்டார் நம்பிகள். காலம் கி. பி. 11 ஆம் நூற்றாண்டு. 11-ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்ட நூற்களுள் ஒன்று. இது தோத்திர நூல்.

**கோபப் பிரசாதம்** = நக்கீரர் சொக்கலிங்கப் பெருமானுடன் வாதாடிய காரணத்தால் குட்டநோய் பெற்றபோது 'இறைவனுக்கு எழுந்த கோபம் தணிய இது பாடப்பட்ட நூல். ஆசிரியர் நக்கீரர். 11-ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்ட நூற்களுள் ஒன்று. சிவபெருமானது வீரச்செயல்களும், அவர் அன்பர்கட்குச் செய்த அருட் செயலும் இதில் பாடப்பட்டுள்ளன.

**கோவிந்த சதகம்** = இதனை நாராயணபாரதி என்பார் பாடினர். காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு. இது நீதி நூல்.

## ச

**சங்க இலக்கியம்** = இது ஒரு தொகுப்பு நூல். சங்க நூற்கள் அனைத்தையும் ஒன்று சேர்த்துப் பதிப்பித்து வெளியிடப்பட்ட நூல். இதனைச் சைவ சித்தாந்த சமாஜத்தார் வெளியிட்டனர். காலம் 20-ஆம் நூற்றாண்டு.

**சங்ககாலத்தமிழும் பிற்காலத் தமிழும்** = இது ஓர் உரை நடை நூல். தமிழ்ச் சங்க வரலாற்றுச் சுருக்கத்தையும் முத்தமிழ் இயல்புகளையும் மற்றும் பல தமிழ் மொழியினைப்பற்றிய சிறந்த குறிப்புக்களையும் கொண்டு திகழும் நூல். ஆராய்ச்சியாளர்களுக்குப் பெருந்துணை செய்யவல்லது. எழுதியவர் டாக்டர் சாமிநாதய்யர். காலம் கி.பி. 20-ம் நூற்றாண்டு.

**சங்கரசோழன் உலா** = இது ஒட்டக்கூத்தரால் பாடப்பட்டது. காலம் கி. பி. 12-ம் நூற்றாண்டு. அகப்பொருள் தழுவிய நூல்.

சங்கர நாராயணத் திரட்டு = சுயம்பிரகாச யோகியார் என்பவர் தேவாரம், திருவாய்மொழியாகிய இரு பெருந்தோத்திர நூல்களிலிருந்து திரட்டிய 1100 பாடல்களைக் கொண்டு 52 அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுத் தொகுக்கப்பட்ட நூல். சைவசமய பரமாகவும், வைஷ்ணவ சமய பரமாகவும் உள்ள பாடல்களின் தொகுப்பு இதில் காணப்படுதலினால் இப்பெயர் பெற்றது. தொகுக்கப்பட்ட காலம் அறிதற்கு இல்லை.

சங்கற்ப நிராகரணம் = இது சைவ சித்தாந்த சாத்திரம் 14 களுள் ஒரு நூல். இதனை எழுதியவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியர். இதற்குத் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் உரை எழுதியுள்ளார். காலம் கி. பி. 14-ஆம் நூற்றாண்டு. இந்நூலில் மாயாவாதி ஐக்கியவாதி முதலான வாதிகளைத் தர்க்க முறைப்படி மறுத்துச் சைவ சித்தாந்த மேன்மையை அறிவித்திருப்பதை அறியலாம். இப்பெயரால் கி. பி. 19-ஆம் நூற்றாண்டில் திகழ்ந்த இராமானந்த சுவாமிகளும் ஒரு நூலியற்றியுள்ளார்.

சசிவண்ணபோதம் = இது ஒரு வேதாந்தநூல். இதனைத் தத்துவராயர் என்பவர் பாடினர். காலம் கி.பி. 15-ஆம் நூற்றாண்டு. சசிவண்ணன் என்பவன் தீயவழியில் நடந்து பெருநோயுற்று வருந்த அவன் நல்வாழ்வு அடைய எழுதப்பட்ட நூல்.

சடகோபர் அந்தாதி = கம்பரால பாடப்பட்டது. கம்பர் தாம் எழுதிய இராமாயணத்தைத் திருவரங்கத்தில் அரங்கேற்றியபோது அரங்கர் "நம் சடகோபனைப் பாடினையோ?" என்று கேட்டபோது, இந்நூலைப் பாடினர். சடகோபர் என்பார் நம்மாழ்வார். காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு.

சதுர அகராதி = ரெவரண்ட் பெஸ்கி என்னும் வீரமாமுனிவர் எழுதிய நூல். இந்நூல், தமிழில் உள்ள பெயர் வினை, இடை, உரிச் சொற்களுக்குரிய சொற்பொருள் விளக்கம் தரும் நூல். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

இது ஆங்கில மொழியில் அமைந்த அகராதி போலத் தமிழ் மொழியிலும் அகராதி அமைய வேண்டும் என்ற எண்ணத்துடன் ஆசிரியரால் தொகுக்கப்பட்ட நூல் ஆகும். தமிழில் முதல் முதல் உண்டான அகராதி இதுவே ஆகும்.

**சந்திரவாணன் கோவை** = பிறவிக் குருடராக விளங்கிய அந்தககவி வீரராகவ முதலியார் என்பவர் பாடிய நூல். காலம் கி. பி. 17-ம நூற்றுண்டு. அகப்பொருள் தழுவிய நூல்.

**சம்பந்தர் பிள்ளைத்தமிழ்** = சைவ சமய குரவர்கள் நால்வருள் ஒருவரான திருஞான சம்பந்தர் மீது பாடப்பட்ட பிள்ளைத் தமிழ். இதனைப் பாடியவர் மாசிலாமணித் தேசிகர். காலம் கி. பி. 20-ஆம் நூற்றுண்டு.

**சரபோசிராஜன் குறவஞ்சி** = கொட்டையூர் சிவக்கொழுந்துதேசிகர் பாடிய நூல். இது தஞ்சை பெரிய கோவில் திருவிழாவின்போது, நாடகமாக நடிக்கப்பட்டு வந்தது. சரபோசி மகாராஜன் காலத்திலேயே இந்நூல் இயற்றப்பட்டது. காலம் கி. பி. 19-ஆம் நூற்றுண்டு. நாடக இலக்கிய வகையைச் சார்ந்தது. படிக்கச் சுவை தரும் நூல்.

## சா

**சாகுந்தல நாடகம்** = இது காளிதாசர் இயற்றிய வடமொழி சகுந்தல நாடகத்தைத தழுவித் தமிழில் எழுதப்பட்ட உரை நடை நூல். இதைத்தொடர்ந்து சாகுந்தல நாடக ஆராய்ச்சி என்னும நூலும் எழுதப்பட்டது. இவ்விரு நூற்களால் நாடகத் தோற்றம் காளிதாசர் காலம், மதம் முதலான அரிய குறிப்புக்கள் காணக் கிடைக்கும். இந்நூற்கள் ஆராய்ச்சியாளர்கட்குப் பெருந் துணையாகும். இவ்விரு நூற்களின் ஆசிரியர் மறைமலையடிகள் என்னும் சுவாமி வேதாசலம் என்பவர். காலம் கி. பி. 20-ம் நூற்றுண்டு

**சாதவாகனம்** = செய்வித் தோனல் பெயர்பெற்ற

நூற்களுக்கு இது மேற் கோளாகத் தரப்பட்ட நூல். இது இதுபோது கிடைத்திலது. மயிலை நாதர் இதனை நன்னூல் உரையில் குறிப்பிடுவதனல். இது அவருக்கும் முற்பட்டதாகும். மயிலைநாதர் காலம் கி. பி. 13-ஆம் நூற்றுண்டு.

சி

**சிதம்பர சபாநாதர்புராணம்** = சிதம்பரநடராஜரது மான்மியத்தைக் கூறும நூல். இதனைச் சபாபதிநாவலர் என்பார் எழுதியுள்ளார். சிதம்பரத்தையும், நடராசர் நடனத்தின தத்துவத்தையும் அறியத்துணை செய்யும் புராண நூல் இதன் காலம கி. பி. 19-ஆம் நூற்றுண்டு.

**சிதம்பரச்செய்யுட்கோவை** = யாப்பிலக்கண விதிக்கு மேற்கோளாக உள்ள பாடல்கள் பெரும்பாலும சைனசமயச் சார்புடையனவாக இருத்தலை அறிந்த குமரகுருபரசுவாமிகள், யாப்பிலக்கணத்திற்கு மேற்கோள் பாடல்கள் சைவசமயப் பரமாக இருத்தல் வேண்டும் என்ற குறிக்கோளுடன் இந்நூல் அவரால் பாடப்பட்டது. இலக்கியச்சுவையும், சைவசித்தாந்த கருத்துக்களும் நிறைந்த நூல். ஒருவர், எந்தாய் என்னும் சொற்களின் நயத்தை இந்நூலில் காணலாம்; காலம கி. பி. 18-ம் நூற்றுண்டு. இது தோத்திர நூல்.

**சிதம்பரப்பாட்டியல்** = பாட்டியல் என்பது 96 வகைப் பிரபந்தங்களை எப்படிப் பாடப்படுதல் வேண்டும் என்ற முறைகளையும், ஒரு நூலின் தொடக்கச் செய்யுளின் முதல் எழுத்து, சீர் முதலானவை எப்படி அமையவேண்டும் என்ற முறைகளையும் அறிவிக்கும நூல். இம்முறையில் பல நூல்கள் இருக்கின்றன. அவற்றுள் ஒன்று இது. இதனைப்பரஞ்சோதி முனிவர் என்பார் இயற்றியருளினர். காலம்கி.பி.16-ஆம் நூற்றுண்டு. பாட்டியற் நூற்களால் அமுத எழுத்துக்கள் இன்ன நச்செழுத்துக்கள் இன்ன என்பன போன்ற குறிப்புக்களையும் அறியலாம்.

**சிதம்பர புராணம்** = சிதம்பர மான்மியம் உணர்த்தும் நூல். இதன் ஆசிரியர் திருமலைநாதர் என்பவர்.

காலம் கி. பி. 16-ஆம் நூற்றுண்டு.

தம்பர மும்மணிக் கோவை= முப்பது பாடல்களைக் கொண்ட நூல். சைவசித்தாந்த கருத்துடைய நூல். குமரகுருபரசுவாமிகளால் எழுதப்பட்டது. காலம் கி. பி. 17-ஆம் நூற்றுண்டு. இது தோத்திர நூல்

சித்தாந்த சாத்திரம் = சைவ சித்தாந்த சார்பான 14 நூற்களின் தொகுதியே சித்தாந்த சாத்திரம் எனப்படும். இதுவே மெய் கண்ட நூல் என்றும் கூறப்படும் சிறப்பு வாய்ந்தது. இத் தொகுப்பில் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது. உண்மை விளக்கம், சிவப்பிரகாசம். திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிக் கலி வெண்பா, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை விளக்கம், சங்கற்ப நிராகரணம் அடங்கியுள்ளன. பதி, பசு, பாசங்களைப்பற்றிய குறிப்புக்கள், பஞ்சாட்சர மாண்பு, சுத்தாத்துவித சைவசமய மேம்பாடு முதலானவற்றை அறியத் துணைசெய்யும் தொகுப்பு நூல். இப்பதினான்கு நூற்களையும்ஒன்றுசேர்த்துத் தருமபுர ஆதீனத்தார் வெளியிட்டுள்ளார்.

சித்தாந்த சிகாமணி = சுத்தாத்துவிதமாகிய சைவ சித்தாந்தகருத்துக்களைக் கொண்ட சிறந்த நூல். இதன் ஆசிரியர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். காலம் கி.பி. 17-ஆம் நூற்றுண்டு. இதே பெயரைக்கொண்ட நூல் அம்பலவாண தேசிகர் என்பவராலும் இதே நூற்றுண்டில் பாடப்பட்டுள்ளது.

சித்தாந்த பிரகாசிகை = சைவசித்தாந்த உண்மைகளை வடமொழியில் எழுதப்பட்ட நூல். இதன் ஆசிரியர் சர்வான்மசம்பு சிவாசாரியார். இதனைச் சிவஞான சுவாமிகள் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். அதன் காலம் 18 ஆம் நூற்றுண்டு.

சித்தாந்த வசன பூஷணம் = சைவ சித்தாந்த கருத்துக்களை வசன நடையில் எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளும் நிலையில் எழுதப்பட்ட நூலாகும். ஆசிரியர் பூவை கலியாணசுந்தர முதலியார்

ஆவார். காலம் கி.பி. 20-ஆம் நூற்றாண்டு

**சித்தாந்த பிந்து** = சங்கராசாரிய சுவாமிகள் அத்வைத கொள்கையர் ஆயினும், சைவ சித்தாந்தக் கொள்கையினையும் நன்கு ஆழ்ந்த கருத்தாகக் கொண்டவர் என்பதற்கு இந்த நூலே போதிய சான்றாகும். இது வடமொழியில் உள்ளது இதனைத் தமிழ்மொழியில் ராமசந்திரசாஸ்திரி என்பவர் மொழிபெயர்த்துள்ளார். மொழிபெயர்ப்பின் காலம் கி. பி. 20-ம் நூற்றாண்டு. இதனால் "ஒரும் வேதாந்தத்து உச்சியில் பழுத்துச்சாரம் கொண்ட சைவ சித்தாந்தம்" என்பது உண்மை ஆகின்றதல்லவா?

**சிந்தனைக் கட்டுரைகள்** = தூய செந்தமிழ் நடையில் கட்டுரை எழுதப்படுவோர்க்குப் பெரிதும் துணைசெய்யும் நூல். ஆங்கிலக் கட்டுரைகளைத் தழுவி எழுதப்பட்டது. இதனை எழுதியவர் மறைமலை அடிகள். காலம் கி.பி. 20-ம் நூற்றாண்டு.

**சிலப்பதிகாரம்** = ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்று. நாடகத்தமிழிற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாக அமைந்த நூல். இதனை உரைநடையிடப் பாட்டுடைச்செய்யுள் என்றும், முத்தமிழ் விரவிய நாடகக்காப்பியம் என்றும் கூறுவர். கோவலன் வரலாற்றைக்கூறும் நூல். இதில் புகார் காண்டம், மதுரைக்காண்டம், வஞ்சிக் காண்டம் என்ற முப்பிரிவுகள் உண்டு. ஒவ்வொரு காண்டமும் காதைகள் என்ற சிறு பிரிவுகளையும் கொண்டது. ஆசிரியர் இளங்கோ அடிகள். இதற்கு அடியார்க்கு நல்லார் என்பவர் சிறந்த உரை எழுதி யுள்ளார். பழைய குறிப்பு உரையும் இதற்குஉண்டு. கற்புடைப் பெண்டிரை உயர்ந்தோர் ஏத்துவர் என்பதும், அரசியல் பிழைத்தோர்க்கு அறமே கூற்றாக இருந்து அழிக்கும் என்பதும், ஊழ்வினை உரியவரை உண்பிக்கச் செய்யும் என்பதும் இந்நூலால் அறியப்படும், சீரிய கருத்துக்களாம். இதன்காலம் கடைச் சங்ககாலம். பழங்காலத்துத்தமிழ் நாட்டின் நாகரிகத்தை அறிய இந் நூல் துணை செய்யும் அரிய இசை நாடகங்களைப் பற்

...றிய குறிப்புக்களையும் இந் நூலால் உணரலாம்.

...று எழுபது = கம்பர் பாடிய தாகக் கருதப்படும் நூல். ...வில்லின் மாண்பை உணர்த்தும் நூல். காலம் கி.பி.12ஆம் நூற்றாண்டு.

...யகீதை = அகத்தியரால் எழுதப்பட்ட நூல் என் பர். முழுமுதற் பரம் பொருள் சிவனே என் பதை உணர்த்தும் நூல்.

...வசிவ வெண்பா = சென்ன மல்லையர் என்பவரால் எழு தப்பட்ட நூல். இந்நூ லின் ஒவ்வொரு வெண் பாவின் ஈற்றிலும் ஒவ் வொரு திருக்குறள் அமைந்து, அக் குறட் பொருட்களை எடுத்துக் காட்ட ஒவ்வொரு வர லாற்றுக் குறிப்பும் கொண்டு திகழும் நூல். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

...வஞானசித்தியார் = மெய் கண்ட நூல்கள் எனப் படும் சித்தாந்த சாத்திரம் 14 களுள் ஒன்று. சிவ ஞான போதத்திற்குச் செய்யுள் வடிவில் விளக் கம் கூறும் நூல். இதில் சுபக்கம் பர பக்கம் என்ற இரு பிரிவுகள் உள்ளன. சுபக்கம் சைவ சித்தாந்த சிறப்பையும், பரபக்கம்பிற சமயக் கொள்கைகளை எடுத்துக் காட்டி அவற்றை மறுத்துச் சைவசித்தாந்தகொள்கை யினை நிலைநிறுத்தும். இதன் ஆசிரியர் அரு ணந்தி சிவாசாரிய சுவாமி கள். காலம் கி. பி. 13-ஆம் நூற்றாண்டு. இந் நூலுக்குச் சிவஞானமுனி வர் பொழிப்புரை எழுதி யுள்ளார். சுபக்கத்திற்கு ஞானப்பிரகாச தேசிகரும், மறைஞான தேசிகரும் பரபக்கத்திற்குத் திரு வொற்றியூர் ஞானப்பிர காசர் என்பவரும் உரை எழுதி யுள்ளார். இந் நூலுக்கு ஞானாவரண உரை ஒன்று வெள்ளியம் பலத்தம்பிரானால் எழு தப்பட்டது. பதவுரை சுப் பிரமணிய தேசிகரால் எழுதப்பட்டது. விருத்தி யுரை சிவாக்கர யோகி களால் எழுதப்பட்டது. இந்நூலால் பதிபசு, பாச இலக்கணங்களையும். சைவசித்தாந்த உண்மை களையும், மேன்மைகளையும் நன்கு உணரலாம். இந் நூலில் உள்ள செய்யுட் களில் ஒன்றான பாதி விருத்தமே சித்தாந்த

உண்மையை உணர்தற்குப் போதுமானது என்று தாயுமானவரே கூறுவாரானால், இதன் சிறப்பைக் கூற வேண்டுவதில்லை. இந்நூலின் சுபக்கப் பாயிரச் செய்யுள் ஒன்றில்வரும் எடுத்து என்னும் சொல்லுக்குப் பேருரை எழுதி ஒருதனி நூலாக வடநூற் கடலும், தென்னூற் கடலும் நிலை கண்டுணர்ந்த சிவஞான முனிவர் வெளியிட்டுள்ளார் எனில் வேறு சிறப்புயாது கூற வேண்டும்?

**சிவஞானபோத உதாரண வெண்பா** = இந் நூல் தனித்து விளங்குவது அன்று. சிவஞானபோதத்தில்வரும் 12 சூத்திரங்களில் கூறப்பட்ட கருத்துக்களுக்கு உதாரணமாகப் பாடி அமைக்கப்பட்டது. 81 வெண்பாக்கள் இப்பெயருடன் விளங்குகின்றன. சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்க மெய்கண்டாரால் பாடி அமைக்கப்பட்டவை. சிவஞான சித்தியார் போன்ற நூற்களின் கருத்துக்களுக்கெல்லாம் முன் வழி காட்டியாய் இருப்பன. காலம் கி. பி. 13-ஆம் நூற்றுண்டு.

**சிவஞான போதம்** = இது சுத்தாத்துவிதம் எனப்படும் சைவ சித்தாந்த முடிவை விளக்கிக் கூறும் 12 சூத்திரங்களைக்கொண்டது. அளவில் சிறியதாயினும் கருத்தில் மிகப் பெரியது. பிற சமயக் கொள்கைகளை எல்லாம் தர்க்க முறைப்படி கண்டித்துச் சைவசித்தாந்த கொள்கைகளை ஆணித்தரமாக நிலை நாட்டிக் கூறும் நூல். இதனை இயற்றியவர் மெய்கண்ட சிவாசாரிய சுவாமிகள். இதற்குப் பாண்டிப் பெருமாள் உரை எழுதியுள்ளார். இதற்குச் சிற்றுரையும் பேருரையும் சிவஞான முனிவரால் எழுதப்பட்டுள்ளன. பேருரை மாபாடியம் என்று கூறப்படும். சிவஞான சித்தியார் என்பது இந்நூலிற்குச் செய்யுள் வடிவில் உரை கூறுவது போன்று அமைந்த நூல். பதி, பசு, பாச உண்மைகளையும் பதியைப் பசு அடையும் வழி, பாசத்தின் இயல்பு முதலான பலவும் தருக்க முறையில்

அறிவிக்கும் நூல். குருவின் மாண்பு. சிவவேடப் பெருமை ஐந்தெழுத்தின் சிறப்பு முதலானவற்றையும் இது உணர்த்தும். இதன் காலம் கி. பி. 13 ஆம் நூற்றாண்டு.

**சிவபெருமான் இரட்டை மணிமாலை** = கபிலதேவ நாயனாரால் பாடப்பட்டது. 11-ஆம் திருமுறையில் இணைக்கப்பட்டது. இருபது பாடல்களைக் கொண்டது. ஆசிரியர் சங்ககாலக்கபிலர் அல்லர் என்று கருதப்படுதலின் காலம் கி.பி. 10-ஆம்நூற்றாண்டு எனச் சிலர் கூறுவர். இது ஆராய்தற்குரியது.

**சிவப்பிரகாசம்** = சைவ சித்தாந்த சாத்திரம் 14 களுள் ஒன்று. பதி, பசு. பாச இலட்சணங்களும். தீட்சை விதிகளும் இதில் கூறப்படுகின்றன. சிவ ஞானபோத சூத்திரக் கருத்துக்களைத் தழுவி எழுதப்பட்டது. இதன் ஆசிரியர் கொற்றவங்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகள். காலம் 14-ஆம் நூற்றாண்டு. இந்நூலுக்குத் திருப்பதி சாரச்சாமி, சிதம்பரநாத முனிவர், மதுரை சத்திய ஞானப் பிரகாசர் முதலியோர் உரை எழுதியுள்ளார். இந்நூல் சம்பந்தமாகச் சிற்றம்பல நாடிகள் சிவப் பிரகாசக் கருத்துரைச் சூத்திரம் என்ற நூலும், சிவப்பிரகாசக் கட்டளை என்ற நூலும் (ஆசிரியர் அறிதற்கு இல்லை) நல்ல சிவன் என்பவரால் எழுதப்பட்ட சிந்தனையுரை என்ற நூலும் உண்டு. இதுவிருத்தப் பாவால் அமைந்த நூல். இந்நூலின் அவையடக்கச் செய்யுளில் "தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று, தோன்றிய நூல் என்னும் எவையும்தீதாகா" என்று குறிப்பிடப் பட்டிருப்பது, இக்காலத்துக் கருத்துக்கேற்ற ஒன்றாகும்.

**சிறிய திருமடல்** = வைணவ சமய தோத்திர நூலாகிய அகப்பொருள் கருத்து நிறைந்த நூல். நாலாயிரத் திவ்விய பிரபந்தத்துள் ஒருபிரிவு. இதன் ஆசிரியர் திருமங்கையாழ்வார். காலம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டு.

**சிறுபஞ்சமூலம்** = பதினெண் கீழ்க்கணக்கு நூற்

களுள் ஒன்று'. பஞ்ச மூலம் என்பன கண்டங்கத்தரி, சிறுமல்லி, சிறுவழுதுணை, நெருஞ்சி, பெருமல்லி ஆகிய ஐந்தன் வேர்கள். இவற்றின் சேர்க்கையால் அமையும் மருந்துநோயினைப்போக்க வல்லது. அதுபோல இந்நூலில் உள்ள வெண்பாக்கள் ஒவ்வொன்றும் ஐந்து சிறிய கருத்துக்களைக் கொண்டு நன்மை தரவல்லது. இதில் 105 வெண்பாக்கள் இருந்தனவாகக் கருதப்படுகிறது. ஆனால், ஐந்து செய்யுள்கள் இடையில் குறைந்து காணப்படுகின்றன. இதன் ஆசிரியர் மாக்காயனார் மாணாக்கர் காரியாசான் என்பவர். கடைச் சங்க காலம்.

சிறுபாணாற்றுப்படை = சங்கம் மருவிய பத்துப் பாட்டில் இது ஒன்று. இது ஏறுமா நாட்டு நல்லியக் கோடன்மீது இடைக்கழி நாட்டுநல்லூர் நத்தத்தனால் பாடப்பட்டது. கடை எழு வள்ளல்களைப் பற்றிய குறிப்புக்களையும் இதில் காணலாம். 299 அடிகளுடைய பாடல். நல்லியக் கோடன் புலவர்க்கும் பொருநர்க்கும் அந்தணர்க்கும் என்றும் அடையா வாயில் உடையவன்; என்றும் செய்ந்நன்றி அறியும் குணமும், இன்முகம் உடைய பண்பும், அஞ்சினர்க்கு ஆதரவு தரும் இயல்பும் எண்ணியதை ஈடேற்றும் ஆற்றலும் உடையவன். இன்னோரன்ன குறிப்புக்கள் இதில் உள்ளன. பாணர்களுள் சிறுபாணர் பெரும்பாணர் என இருவர் உளர். அவர்களுள் சிறிய இனியஓசையுடைய யாழினைக் கொண்ட பாணனை ஆற்றுப் படுத்திப் பாடப்பட்டமையின் இப்பெயர் பெற்றது. இதற்கு நச்சினார்க்கினியர் உரை உண்டு. காலம் கடைச் சங்க காலம். தமிழ் நாட்டுப் பண்பை அறிய இது துணைசெய்யும் இலக்கியம்.

சின்னூல் = இது நேமிநாதம் என்னும் இலக்கண நூலுக்கு அமைந்த மற்றொரு பெயர். வெண்பாவால் எழுத்திலக்கணம் சொல் இலக்கணங்களைக் கூறும்நூல். காலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டு. ஆசிரியர் குணவீர பண்டிதர்.

## ஸ்ரீ

**ஸ்ரீபுராணம்** = இதுவே ஸ்ரீ புராணம் என்பதாம். இது சைன நூல். இருசபர் முதல் சிவர்த்தமானர் இறுதியாக உள்ள இருபத்து நான்கு தீர்த்தங்கார்களுடைய வரலாற்றைக்கூறும் நூல். மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டது. அதாவது வடமொழிச் சொற்களும் செந்தமிழ்ச் சொற்களும் கலந்துவர எழுதப்பட்ட நூல். இதனைச் சைனர் போற்றித் தினமும் பாராயணம் செய்து வருகின்றனர். இதன் ஆசிரியரை அறிதற்கில்லை. ஆகவே காலமும் குறிப்பிட முடியவில்லை. வழக்கில் இல்லாத பல அரிய தமிழ்ச் சொற்கள் இதில் உண்டு.

**சீவக சிந்தாமணி** = ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. திருத்தக்க தேவரால் பாடப்பட்டது. சருக்கம் ஒன்பதற்குப்பதிலாக இலம்பகம் என்ற பெயருடன் 13 இலம்பகங்களையுடையது. சீவகன் தன் கலைப் பண்பால் பல மாதர்களை மணக்கின்ற காரணத்தால் இது மணநூல் என்றும் பெயர் பெறும். சீவகனது முழு வரலாற்றைக் கூறுவது. இதில் சீவகன் அடைந்த முத்தி சிவகதி என்று கூறப்பட்டிருப்பதைக் கவனித்தல் வேண்டும். இது படிக்கச் சுவை தரும் நூல். சிற்றின்பம் பேரின்பங்களைப் பற்றிய விளக்கம் பல இதனுள் உண்டு. கி.பி. 10 ஆம் நூற்றாண்டு. பல நீதிகள் இதில் கூறப்பட்டுள்ளன. சுடலையில் சீவகன் பிறந்தபோது விசயை வருந்திப் பாடிய பாடல்கள் கல்லான நெஞ்சையும் கரையச்செய்யும் இயல்பில் அமைந்துள்ளன.

**சீவகாருண்ய ஒழுக்கம்** = இது பல பிரிவுகளாகச் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளால் உரைநடையில் எழுதப்பட்ட நூல். இவ்வுரை நடை படிப்பவர் புலால் புசிப்பையும் கைவிடுவர். எவ்வுயிர்க்கும் தீங்குசெய்ய எண்ணார். 19ஆம் நூற்றாண்டு நூல்.

**சீறாப்புராணம்** = உமறுப் புலவரால் எழுதப்பட்டது. முகம்மது நபியின் வரலாற்றைக் கூறுவது. பெருங்காப்பிய இலக்கண முறைப்படியும் தமிழ் மரபுப்படியும் பாடப்பட்ட நூல். கி.பி. 18 ஆம்

நூற்றாண்டு கொடிய விலங்குகளையும் அடக்கி அவற்றை நல்வழிப்பட நயிநாயகம் செய்தகுறிப்பு முதலியன இதில் உண்டு. இதில் வரும் வர்ணனைக் கவிகள் சுவை தருவன வாகும்.

## சூ

**சூடாமணி நிகண்டு** = சொற்பொருளை அறிதற்குச்செய்யுளில் அமைந்த நூல். இக்காலத்து அகராதி போல அக்காலத்தில் இருந்த அகராதி நூல். இதன் ஆசிரியர் மண்டல புருடர் கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**சூத்திரர்யார்?** = பிராம்மணர்கள் தம்மைத் தவிர்த்து மற்றைய யாவரையும் சூத்திரர்கள் என்று கூறித் தம்மை வேறு பிரித்துக்கொண்டு கூறி வருவதைத் தக்க காரணம் காட்டிக் கண்டித்து ஜே. எஸ். கண்ணப்பர் என்னும் தன்மானம் மிக்கவரால் உரை நடையில் எழுதப்பட்டநூல். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு நூல்.

**சூளாமணி** = ஐஞ் சிறு காப்பியங்களில் தலை சிறந்த நூல். தோலா மொழித் தேவர் எழுதிய நூல், இவரை ஸ்ரீ வர்த்த தேவர் என்றும் கூறுவர். இதில் வரும் வரலாறு கண்ணன் பலராமன் கதை போன்று திவிட்டனது வரலாறு கூறப்படுகிறது. இவனது பகைவன் அயக்கிரீவபிரதிவாத தேவன் என்பவன். காலம் கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

## செ

**செங்கோன் தரைச் செலவு** = இது ஒரு பழைய நூல் முற்றும் கிடைக்கப் பெறாத நூல். ஏழுபாடல்களும் அவற்றிற்குரிய உரையும் பதிப்பிக்கப் பட்டு வெளிவந்துள்ளன. முதல் ஊழிக் காலத்து நூல். இவ்வாறுகூறுவது குறித்து மேலும் ஆராய வேண்டி இருக்கிறது.

**செவ்வந்தி புராணம்** = திருச்சிராப்பள்ளி மான்மியம் கூறும் நூல். சைவ எல்லப்ப நாவலர் இதன் ஆசிரியர். காலம். கி. பி. 17 ஆம் நூற்றாண்டு. திருச்சிராப்பள்ளியில் எழுந்தருளியுள்ள தாயுமானேஸ்வரருக்குத் தாயுமானவர் என்ற பெயர் எதனால் அமைந்தது என்ற காரணத்தை இந்நூலில் காணலாம்.

## சே

**சேக்கிழார் புராணம்** = இது பெரியபுராணம்பாடியசேக்கிழாரது வரலாற்றைச் சிறந்தசைவசித்தாந்த பேராசிரியர் சிதம்பர தீட்சத மரபினர் கொற்றவங்குடி உமாபதி சிவாசாரிய சுவாமிகளால் பாடி அமைக்கப்பட்ட நூலேயாகும். இந்நூலால் பெரிய புராணச் சிறப்பு, சேக்கிழார் மாண்பு, வேளாளர் பெருமை முதலானவை நன்குதெரியவரும். காலம் கி.பி.19 ஆம் நூற்றுண்டு.

**சேத்திரவெண்பா** : 11 ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்ட நூல். ஐயடிகள் காடவர்கோன் என்பவரால்பாடப்பட்டது. நூலாசிரியரது உளத்தைக் கவர்ந்த சைவ க்ஷேத்திரங்கள் ஒவ்வொன்றன் மீதும் ஒவ்வொரு பாடலாகப் பாடப்பட்டநூல். கி.பி. 9-ஆம் நூற்றுண்டு. இது தோத்திர வடிவிலும் உபதேசவடிவிலும் அமைந்த நூல்.

**சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்** = அந்தகக் கவி வீரராகவ முதலியாரால் பாடப்பட்டது. கி. பி. 17 ஆம் நூற்றுண்டு.

**சேனாவரையம்** : தொல் காப்பியச் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையர் எழுதிய உரையே இந்நூலாகும். சொல்லதிகாரத்திற்கு இதனினுஞ் சிறந்த உரை வேறு இல்லை. காலம் கி. பி. 13-ஆம் நூற்றுண்டு.

## சை

**சைவ சமய விளக்க வினுவிடை** = சைவசமயத்தில் உள்ளவர் தம்மத ஒழுக்கங்களை எம்முறையில் கையாள வேண்டும் என்னும்முறைகளைத்தெற்றத் தெளிய உணர வேண்டி வினா வடிவில்கேள்வியும் பதிலும் கொண்டு எழுதி அமைக்கப்பட்ட நூல். எழுதியவர்காஞ்சிசபாபதி முதலியார். காலம் கி. பி. 19-ஆம் நூற்றுண்டு.

**சைவ சித்தாந்த ஞானபோதம்** = இது ஓர் உரை நடைநூல். சைவ சித்தாந்தச் சிறப்பை ஆணித்திரமாக எடுத்துக் கூறும் நூல். ஆசிரியர் மறைமலை அடிகள். காலம் 20-ஆம் நூற்றுண்டு.

## சோ

**சோண சைலமாலை** = திருவண்ணுமலைமீது துறைமங்

கல சிவப்பிரகாச சுவாமி களால் பாடப்பட்ட நூல். தமிழ் கற்க விரும்புபவர் படித்துக் கொள்ள வேண்டிய நூல். காலம் கி. பி 17 ஆம் நூற்றுண்டு. ஒவ்வொ பாடலிலும் அமைந்த கற்பனைகள் படித்து இன்புறுதற்குரியன. திருவண்ணாமலை உயர்ந்து விளங்குவது தவமாகிய கப்பலை நடத்த இது கலங்கரை விளக்கமாகத் திகழ்கிறது என்பது அக்கற்பனைகளுள் ஒன்று.

சோமேசர் முதுமொழி வெண்பா = இதில் உள்ள ஒவ்வொரு வெண்பாவின் ஈற்றிலும் ஒவ்வொரு திருக்குறட்பா அமைந்துள்ளது. அக் குறட் கருத்ததை விளக்கும் கதைக்குறிப்பு வெண்பாவின் முதலில் அமைந்துள்ளது. இது சிவஞான முனிவரால் பாடப்பட்ட நூல். காலம் கி.பி.18 ஆம் நூற்றுண்டு.

சோழ மண்டல சதகம் = சோழ நாட்டின் சிறப்பும் அந்நாட்டைச் சார்ந்த புலவர்கள் வள்ளல்கள் முதலினோர் வரலாறுகளும் அறியத்துணை செய்யும் நூல். ஆத்மநாத தேசிகர் பாடிய நூல். காலம் கி.பி. 17 ஆம் நூற்றுண்டு.

## சௌ

சௌந்தரியலகரி = இது வடமொழியில் சங்கராசாரிய சுவாமிகளால் பாடப்பட்டது. இதனை வீரைக் கவிராசபண்டிதர் தமிழ்ப் பாவில் பாடி அமைத்தனர். கி. பி. 11-ஆம் நூற்றுண்டு. இதில் திருஞான சம்பந்தருக்குத் தேவியார் ஞானப்பால் ஈந்ததைப் பாராட்டிப் பேசி இருப்பதைக் காணலாம். இந்நூல் திருஞான சம்பந்தரைத் திராவிடசிசு என்று குறிப்பிடுகிறது.

## ஞா

ஞானவாசிட்டம் = இது ஒரு வேதாந்த நூல். வசிஷ்டர் ராமனுக்கு உபதேசம் செய்தமுறையில் அமைந்த நூல். ஆளவந்தார்பாடிய நூல். கி.பி. 18-ஆம் நூற்றுண்டு. இந்நூலில் சில பாடல்களைத்திரட்டி ஞான வாசிட்டத்திரட்டு என்ற பெயரால் நமச்சிவாய ஐயர் ஒரு நூலாக வெளியிட்டுள்ளார்.

ஞானவெட்டியான் = இது கி. பி. 18 ஆம் நூற்றுண்டிற்குப் பின் எழுந்த நூல். இது வள்ளுவரால் பாடப்

பட்ட தாகக் கூறுவது தவறு. ஞானக் கருத்துக்கள் இதில் உண்டு.

**ஞானமிர்தம்** = இது சைவ சித்தாந்த நூல். இது அகவற் பாவால் பாடப்பட்டது. கடைசங்க காலத்து நூற்களின் நடை போன்றது. ஆசிரியர் வாகீச முனிவர் என்பவர். (திருநாவுக்கரசர் அல்லர்) இந்நூலைச் சிவஞான முனிவர் பெரிதும்பாராட்டியுள்ளார்என்பதைத் தம் உரைகளில் அடிக்கடி மேற்கொள் காட்டுவதால் அறியலாம். கி.பி. ஆறும் நூற்றுண்டு. இதில் காணப்படும் உவமைகள் சுவைபடக் காணப்படும்.

## த

**தகடூர் யாத்திரை** = இது ஒரு பழைய நூல். தகடூர்மீது படை எடுத்தசெய்தியினை அறிவிப்பது. இதன் ஆசிரியர்கள் பொன் முடியார் அரிசில் கிழார் ஆகிய இருவரும் ஆவர். கடைச் சங்க காலம்.

**தக்கயாகபரணி** = ஒட்டக் கூத்தால் பாடப்பட்ட நூல். சிறந்த பொருட் செறிவுடையது. இதற்குச் சிறந்த உரை உண்டு.

அவ்வுரையால் பல நுண்ணிய கருத்துக்கள் அறியப்படுகின்றன. காலம் கி.பி. 12 ஆம் நூற்றுண்டு. நூலில் ஞானசம்பந்தரது வரலாறு குறிப்பிட்டிருப்பது கவனித்தற்குரியது.

**தசகாரியம்** = இது சைவ சித்தாந்த உண்மைகளைக் கூறும் நூல். பண்டார சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. திருவாவடுதுறை அம்பலவாண தேசிகரால் இயற்றப்பட்டது. தத்துவரூபம் தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்மரூபம், ஆன்ம தரிசனம். ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம், என்னும் பத்தின் தன்மைகளை விரிவாகஉணர்த்தும் நூல். 55பாடல்களைக் கொண்டது. காலம் 19 ஆம் நூற்றுண்டு. இந்நூற் பெயரால் சுவாமிநாத தேசிகர், திருவண்ணாமலையார் என்பவர்களும் எழுதிய இரண்டு நூற்கள் உண்டு.

**தஞ்சை வாணன் கோவை** = நம்பிஅகப்பொருள் இலக்கணத்திற்கு உதாரணச் செய்யுளாக எடுத்துக்காட்டப்பட்டநூல். பொய்யா

மொழிப் புலவரால் பாடப்பட்டது, சுவை மிக்க செய்யுட்களைக் கொண்டது. காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டு. இதற்குச் சொக்கப்ப நாவலர் உரை எழுதியுள்ளார். இந்நூலில் உள்ள நானூறு பாடல்களையும் பொய்யா மொழிப்புலவர் பாடிப்பொருள் கூறுகையில் மகிழ்ந்த இந்நூலின் பாட்டுடைத் தலைவனை தஞ்சை வாணன் ஒவ்வொரு பாடலுக்கும் ஒவ்வொரு பொன் தேங்காயினை உருட்டிச் சிறப்புச் செய்தான் என்பர். தஞ்சை வாணன் என்பவன் தஞ்சாக்கூர் மன்னன். இவன் வாணன் என்றும், சந்திர வாணன் என்றும் கூறப்படுவான். இந்நூலில்வரும் சில துறைகட்குத் திருக்கோவையார் பாடல்கள்உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன.

**தணிகைப் புராணம்** = திருத்தணிகை மான்மியம் கூறும் நூல். கச்சியப்ப முனிவரால் பாடப்பட்டது. சீவகசிந்தாமணி என்னும் நூல் ஒரு சிலரால் சிறப்புறப் பயிலப்பட்டு வந்ததை அறிந்த முனிவர், அந்நூலைப் போன்று சொற் செறிவும் பொருட் செறிவும் துலங்கப்பாடியருளப்பட்டநூல். சிலேடைக் கவிகளும், சித்திரக் கவிகளும் இந்நாலில் மிகுதி. தொல்காப்பிய உரிச்சொற்களை இந்நூலில் பெரிதும் காணலாம். புலவர்கள் விரும்பிப் பயிலும் நூல். கி.பி. 18ஆம் நூற்றாண்டு. இதில் உள்ள வள்ளியம்மையார் திருமணத்தைப் பற்றியகவிகள் கோவைத் துறைகள் அமையப் பாடப்பட்டிருப்பது இன்பம் பயப்பதாகும். கடவுள் வாழ்த்தில் விநாயகப் பெருமான், ஐந்து கரங்களுடன் திகழும் மாண்பிற்குக் காரணம் காட்டும் முறை சுவை தருவதாகும்.

**தணிகையாற்றுப்படை** = ஆற்றுப்படை என்பது பரிசுபெற்ற ஒரு புலவன் பரிசு பெறாத மற்றொருவரிடம், தனக்குப் பரிசில் நல்கியவனது குணங்களையும் அவன் இடத்தையும் கூறி வழிகாட்டி அனுப்புவதாகும். அந்தமுறைப்படி முருகப் பெருமான் திருவருளைப் பெற்றவன் அம்முருகனது திருவருள் பெறத் தணிகைநாதன்

மீது பாடப்பட்ட நூலாகும் இது. இதனைக் கச்சியப்ப முனிவர் பாடியருளினர். தம் மாணாக்கரான கந்தப்பையர் குன்ம நோயால் துன்புற்ற நிலையினைக் கண்டு சகியாத முனிவர் இந் நூலைப் பாடினர். இதன் காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

**தண்டலையார் சதகம்** = சதகம் என்பது நூறு செய்யுட்களைக்கொண்ட நூல். தண்டலை என்னும் ஊரில் உள்ள இறைவன் மீது பாடப்பட்ட நூல். இந் நூலில் உள்ள ஒவ்வொரு பாடலிலும் பழமொழி அமைந்திருக்கும் நீதிகளை அறியவும், பழமொழிகளை உணரவும் பெருந்துணை செய்ய வல்லது. பழமொழிகளைக் கொண்டு இந் நூல் விளங்குதலின் இது பழமொழி விளக்கம் என்ற பெயரையும் பெற்றது. இந்நூலைப் பாடியவர் தண்டலைச் சாந்தலிங்க கவிராயர் ஆவார். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

**தமிழ் நாவலர் சரிதை** = இஃது ஒரு சிறந்த நூல். புலவர்கள் சிலரைப்பற்றியும், சில நூல்களைப்பற்றியும் அறிந்துகொள்ளுதற்குரிய அரிய குறிப்புக்களைக் கொண்ட நூல். இந் நூலைத் தொகுத்தவரைப்பற்றி அறிதற்கு இல்லை. என்றாலும் திரு. கனகசுந்தரம் பிள்ளை என்பவர் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். இந் நூலில் 18-ஆம் நூற்றாண்டு வரையில் இருந்த புலவர் வரலாற்றுக் குறிப்புக்களை உணரலாம்.

**தமிழ்விடு தூது** = இந்நூல் தமிழ்மொழியையே தூது விடுவதுபோல் அமைந்த நூல். சுவை மிகுந்தது. ஏனைய பொருள் தூது போதற்குரியவை அல்ல என்பதற்குரிய காரணங்களும், தமிழே தூது செல்லுதற்கு எல்லாப் படியாலும் பொருந்துதலுடையது என்பதற்குரிய காரணங்களும் காட்டப்பட்டிருப்பது படித்து இன்புறுதற் குரியவையாகும். இந் நூலாசிரியர் யாவர் என்பது அறிதற்கில்லை. இதனை டாக்டர் சாமிநாதய்யர் பதிப்பித்துள்ளார்.

**தனிப்பாடல் திரட்டு** = இந் நூல் ஒருவரால் பாடப்பட்ட நூல் அன்று. இந்

நூலில் பல புலவர்கள் அவ்வப்போது பாடிய பாடல்கள் காணப்படும். இப் பாடல்கள் பெரும்பாலும் எளிமையுடையவையாகவும். நகைச்சுவை ததும்பக் கூடியவையாகவும் காணப்படும். இத்தொகுப்புநூலில் பலசித்திரக் கவிகளும் பொருட்செறிவுடைய கவிகளும், நீதிகளை விளக்கும் கவிகளும் உள்ளன. இந்நூலை முற்ற ஓதி உணர்ந்தால் பல நூல்களின் பொருள்களையும், பல புலவர்களின் கவிதைச்சுவைகளையும் நன்கு உணரலாம். இந்நூலைத் தொகுத்தவர் இன்னார் என்பது அறிதற்கு இல்லை. இந் நூலுக்கு உரை உண்டு.

## தா

**தாயுமானவர் பாடல்** = இது ஒரு சிறந்த தோத்திர நூல். வேதாந்தசித்தாந்த கருத்தும்கொண்ட நூல். இதனைப் பாடியவர் தாயுமான சுவாமிகள். இதன் காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி. இதற்குப்பூவை கலியாண சுந்தர முதலியார் சிறந்த பேருரை எழுதியுள்ளார்.

## தி

**திணைமாலை நூற்றைம்பது** = இந்நூல் சங்கம் மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூற்களுள் ஒன்று. அப்பொருள் சம்பந்தமான நூற்றைம்பது பாடல்களைக் கொண்டது. குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் ஆகிய நிலங்கள் ஒவ்வொன்றிற்கும் முப்பது முப்பது பாடல்கள் உண்டு. இதன் ஆசிரியர் தமிழ் ஆசிரியர் மகனார் மாக்காயனார் மாணாக்கர் கணமேதையார் என்பவர். காலம் கடைச் சங்க காலம்.

**திணைமொழி ஐம்பது** = இது ஓர் அகப்பொருள் தொடர்புடைய நூல். இது சங்கம் மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. ஐந்திணைகளாகிய குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல். ஆகிய ஐந்திற்கும் தனித்தனியே பப்பத்துப் பாடல்களைக் கொண்டது. இதனைப் பாடியவர் சாத்தந்தையார் என்பவர். காலம் கடைச்சங்க காலம்.

**திராவிட மாபாடியம்** = இது சிவஞான போதத்திற்கு

எழுதப்பட்ட விரிவுரை நூல். பாஷ்யம் என்பதே மாபாடியம்என்று ஆயது. இந்நூல் பயிற்சியினால் தருக்கம், இலக்கணம் காவியம், சாத்திரம், சித் தாந்தம் ஆகமம் ஆகிய இவற்றின் நுட்பங்களை இனிதின் உணரலாம். இத்தகைய அரிய உரை யை எழுதியவர் சிவஞான முனிவர் ஆவர். காலம் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

திராவிடமொழிகளின் ஒப்பி லக்கணம் = இந்நூல் ஆங் கிலத்தில் எழுதப்பட் டது. ஆங்கில நூலா யினும் தமிழர் யாவரும் படிக்க வேண்டும் என் னும் குறிக்கோளுடன் இதன் குறிப்பும் இங்கு எழுதப்படுகிறது. இந் இந்நூல் தெலுங்கு, கன் னடம், மலையாளம், துளு முதலான மொழிகளின் இலக்கணங்களை அலசித் தமிழ் இலக்கணத்தோடு ஒத்திட்டுச் காட்டி அம் மொழிகளுக்கும் தாயகம் தமிழ்மொழி என்னும் குறிப்பை நன்கு அறிவிக் கும் நூலாகும். தமிழ்வட மொழியின் துணையின்றி என்றும் தனித்து இயங் கும் ஆற்றல் உடையது என்பதையும், இவ்வாறு தெலுங்கு கன்னடம் முத லான மொழிகள் இருக்க இயலாது என்பதையும் தெற்றத்தெளிய அறி விக்கும் நூலாகும். இந் நூலால் பல தமிழ்ச் சொற்கள் வடமொழியில் சென்று சேர்ந்துள்ளன என்பதையும் நன்கு அறிய லாம். இந்தகைய அரிய பெரிய நூலை எழுதித்தந்த வர் ரெவரெண்ட கால்டு வல் துரைமகனார் ஆவார். காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டு. இந்நூலின் கருத்தைத் தழுவிப் பல நூல்கள் தமிழில் வெளி வந்துள்ளன.

திரிகடுகம் = பதினெண் கீழ்க்கணக்கு நூற்களுள் ஒன்று. சுக்கு, மிளகு, திப்பிலி என்னும் மூன்று கூட்டு மருந்துகளின் சேர்க்கையால் உடற்பிணி போவதுபோன்று அறி யாமையாகிய நோய் நீங்க ஒவ்வொரு பாடலிலும் உள்ள மும்மூன்று நீதிகள் துணைபுரியும். அதனால் தான் இது திரிகடுகம் எனப்படுகிறது. இந் நூலைப்பாடியவர் நல்லாத னார் என்பவர். காலம் கடைச் சங்க காலம்.

**திருக்கருவைப் பதிற்றுப்பத் தந்தாதி** = அந்தாதி என்பது ஒரு பாட்டின் முடிவு அடுத்த பாட்டிற்கு முதலாக அமையப்பாடப்படும் நூலாகும். இது கரிவலம் வந்த நல்லூர்ச் சிவபெருமான்மீது பாடப்பட்ட நூலாகும். இது உருக்கமாகப்பாடுதற்குரிய முறையில் அமைந்திருத்தலின் இதனைக் குட்டித் திருவாசகம் என்றும் கூறுவர். இதனைப் பாடியவர் அதிவீரராம பாண்டியர் ஆவார். காலம் கி. பி. ஆம் நூற்றுண்டு.

**திருக்கலம்பகம்** = இந்நூல் சமண சமயத்தைச் சார்ந்த அருகக் கடவுள் மீது பாடப்பட்டதாகும். இங்குக் கூறப்பட்ட அருகக் கடவுளின் செயல்கள் பலவும் சிவ பெருமான் செய்த செயல்களாகக் குறிப்பிட்டிருப்பது வியப்பைத் தரும். இந்நூலை இயற்றியவர் திருத்தேவர் என்பவர். காலம் கி. பி. 14-ம் நூற்றுண்டு திருக்கலம்பகம் என்ற பெயரால் மற்றொரு நூலும் உண்டு. அது சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பதினோராம் திருமுறையுள் ஒரு பிரபந்தமாகத் திகழ்கிறது. இது ஞானசம்பந்தர் மீது நம்பியாண்டார் நம்பிகளார், கி. பி. 10-ஆம் நூற்றுண்டில் பாடப்பட்ட ஒரு தோத்திர நூல்.

**திருக்காவலூர் கலம்பகம்** = இது கிறிஸ்தவச் சமயச் சார்புடைய நூல். இதனைத் தமிழில் பாடியவர் ரெவரெண்ட் பெஸ்கி என்னும் வீரமா முனிவர் ஆவார். இதன் காலம் 17 ஆம் நூற்றுண்டின் இறுதி.

**திருக்காளத்திப் புராணம்** = இது காளாஸ்திரி என்று வழங்கப்பெறும் திருக்காளத்தீஸ்வரர் திருத்தலத்தின் வரலாற்றைக் கூறும்நூல். சீகாளத்திப் புராணம் என்ற புராண நூலும் உண்டு, அதனினும் இது வேருனது. இதன் ஆசிரியர் ஆனந்தக் கூத்தர் என்பவர். கி.பி.16 ஆம்நூற்றுண்டு.

**திருக்குடந்தைப் புராணம்** = இது கும்பகோணத்தைப் பற்றிய வரலாற்றைக் கூறும் நூல். இதன் வாயிலாக மகாமகத் தீர்த்தத்தின் வரலாறு, கும்பேஸ்வரர் என்ற பெயரை

இறைவர் பெற்றவரலாறு முதலானவற்றை அறிந்து கொள்ளலாம். இதனைப் பாடியவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையாவார். காலம் கி.பி. 19 ஆம் நூற்றுண்டு. இத்தலத்து அம்பிகையாகியமங்களாம்பிகையம்மையார் மீதும் மை. பிள்ளை அவர்கள் பிள்ளைத் தமிழ் நூலையும் பாடியுள்ளார்.

திருக்குறள் = தமிழ் மொழியில் உள்ள ஒப்பு உயர்வு அற்ற நூல். 1330 குறள் வெண்பாவால் ஆன நூல். இது பதினெண் கீழ்க்கணக்கு நூலைச் சார்ந்தது. இதில் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பிரிவுகள் உண்டு. இந்நூல் பயிற்சியால் பல அரிய கருத்துக்களை எல்லாம் தெரிந்து கொள்ளலாம். இந்நூலினது அருமை காரணமாக மேனாட்டு மொழிகள் பலவற்றிலும், கீழ்நாட்டு மொழிகள் பலவற்றிலும் இது மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. இது தமிழ் மொழியில் அமைந்திருப்பது தமிழ் நாட்டவர்க்கு ஒரு தனிப் பெருமையாகும். இந்நூலுக்குப் பதின்மர் உரை எழுதியுள்ளனர். அவற்றுள் பரிமேலழகர் உரையே சிறந்தது. இதன் காலம் கி. பி. 2 ஆம் நூற்றுண்டு. இந்நூலுக்கு முப்பால் உத்திரவேதம், தெய்வநூல், திருவள்ளுவர், பொய்யாமொழி, வரலாற்றை வாழ்த்து, தமிழ் மறை, பொதுமறை திருவள்ளுவப் பயன் என்ற பெயர்கள் உண்டு.

திருக்குறள் வளம் = இந்நூல் திருக்குறளுக்கு இதுவரையில் வந்துள்ள உரை நூல்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது. இத்துடன் குறட் கருத்துக்களைக் கொண்ட செய்யுட்களையும் கொண்டு திகழ்வது. அறத்துப்பால் பொருட்பால், காமத்துப் பால் ஆகிய மூன்று பாலும் தனித்தனி நூலாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இத்தகைய அரிய தொண்டைமேற்கொண்டு செம்மையுறப் பதிப்பித்து வெளிப்படுத்தியவர் தருமபுர ஆதினகர்த்தரான ஸ்ரீலஸ்ரீ திருஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளாவார். இந்நூல் கி.பி. 20 ஆம் நூற்றுண்டில் தொகுக்கப்பட்டு

வெளிவந்துள்ளது. இது திருக்குறளைப் பற்றி ஆராய்ச்சி செய்பவர்கட்குப் பெருந்துணை செய்ய வல்லது.

**திருக்குறுந்தாண்டம்** = இது வைணவர்கட்குரிய நாலாயிர திவ்யபிரபந்தத்தின் உள்பிரிவுகளில் ஒன்று. திருமாலின்மீது திருமங்கையாழ்வாரால் பாடப்பட்ட தோத்திர நூல். திருநெடுந்தாண்டகம் என்பதையும் பாடியவர் இவரே. காலம் கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

**திருக்கைலாய ஞான உலா** = இது தமிழில் உள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இறைவன் பவனி வந்தபோது பருவ மங்கையர் அவனது பேரழகில் ஈடுபட்டுக் காமுற்றுநின்ற நிலைகளை விரிக்கும் முறையில் பாடப்பட்டுள்ளது. இவ்வுலா நூல் முதல் முதல்தோன்றினமையின், இது ஆதி உலா என்றும் கூறப்படும். இது சைவத் திருமுறைகளுள் பதினோராம் திருமுறையில் உள்ள நூல்களுள் ஒன்றாகத் திகழ்வது. இதனைப்பாடியவர்சேரநாட்டுமன்னராய்ச் சிவனடியார்களுள் ஒருவராயுள்ள சேரமான் பெருமாள் நாயனார் ஆவார். காலம். கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

**திருச்சிற்றம்பலக்கோவையார்** = இது திருக்கோவையார் என்றும் கூறப்படும். இதன் அருமை பெருமையறிந்தே இதற்கு ஆர் விகுதி கொடுத்தும், திரு என்ற அடைமொழி கொடுத்தும் திருக்கோவையார் என்று குறித்துள்ளார் தமிழில் பல கோவை நூல்கள். இருப்பினும் அவற்றையெல்லாம் அக்கோவை யார் மீது பாடப்பட்டதோ, அன்றி எத்தலத்தின் மீது பாடப்பட்டதோ, அப்பாட்டுடைத் தலைவன் பெயரையும். தலத்தின் பெயரையும் சார்த்தி வழங்குவர். ஆனல், எந்தவிதமான அடைமொழியும் இன்றிக் கோவை என்றஅளாவில் இத் திருக்கோவையாரைத்தான் உணர்த்தும். பாவை பாடின வாயால் கோவை பாடுக என்று மணிவாசகரை நடராஜ பெருமான் கேட்டுக் கொண்டதற்கு இணங்க இது பாடப்பட்ட நூலாயின் இதன் மாண்பைக் கூறவும் முடியுமோ?

இது சைவத் திருமுறை களுள் 8வதாகத் திகழ்வது. இது சிற்றின்பச் சுவைதரும் முறையில் அகப்பொருள் இலக்கணத்துப்படி பாடப்பட்டிருப்பினும் உள்ளூரப் பேரின்பப் பொருளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இதன் உண்மையைத் திருக்கோவையார் உண்மை என்ற நூலாலும் நன்கு உணரலாம். இந்நூலுக்குச் சிறந்த உரை ஒன்று பேராசிரியர் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. அவ்வுரை திருக்கோவையாரின் நுண்பொருள்களைத் தெள்ளிதின் அறியப் பெருந்துணை செய்யவல்லது. இந்நூலின் ஆசிரியர் மாணிக்கவாசகர். காலம் கி.பி. 4-ஆம் நூற்றாண்டு. அந்தணர் வேதம் என்றும் யோகியர் ஆகமத்தின் சாரம் என்றும், தர்க்கம் உணர்ந்தவர், தருக்க நூல் என்றும் புலவர்கள் இலக்கியம் என்றும் காமுகர் காமநூல் என்றும், கருதுதற்குரிய முறையில் இந்நூல் அமைந்துள்ளது.

**திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ்** = இது திருச்செந்தூர் முருகப் பெருமான் மீது பாடப்பட்டமையின் இப்பெயர் பெற்றது, இதனைப்பாடியவர் பகழிக்கூத்தர். இவர் வயிற்று நோயால்வருந்தினபோது, அந்நோய் நீங்க முருகனை வேண்டி இந் நூலைப் பாடியருளினர். இதன் காலம் 18 ஆம் நூற்றாண்டு. இந் நூலாசிரியர் மீது அன்புகொண்ட முருகப் பெருமான் இந் நூலுக்குப் பரிசிலாக முத்துமாலையை அளித்துள்ளார்.

**திருத்தொண்டர் திருநாமக் கோவை** = கோவை என்றதும் அகப்பொருள் தழுவிய நூலோ என்று கருத வேண்டா. இது சிவனடியார்கள் அறுபத்து மூன்று பேர்களுடைய பெயர்களையும் தொகை அடியார்கள் ஒன்பதின்மர் யாவர் என்பதையும் கோவைபடுத்தி அறிவிக்கும் நூலாகும். இதனைத் தினமும் பாராயணம் செய்து வந்தால் உண்மைச் சிவனடியார் பற்றையும், வஞ்சகம், அற்ப புத்தி, மயக்க அறிவு ஆகியவை நீங்கப் பெறுவர். நித்தியமாய் வாழ்வர். இதனைப் பாடியவர்

சிவஞானமுனிவர். காலம் 18-ஆம் நூற்றாண்டு.

**திருத்தொண்டர் திருவந்தாதி** = இது சைவ சமயத்தைச் சார்ந்த அறுபத்து மூன்று நாயன்மார்களைப் பற்றியவாழ்க்கைவரலாற்றுக் குறிப்பை அறிவிக்கும் பாடல்களைக் கொண்ட நூல். இந்நூல் பெரிய புராணம் பாடுதற்குப் பெருந்துணையாக இருந்தது. இது சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பதினோராவது திருமுறையில் உள்ள நூல்களுள் ஒன்றாகும். இதனைப் பாடியவர் நம்பியாண்டார் நம்பிகள். காலம் கி. பி. 11-ஆம் நூற்றாண்டு.

**திருத்தொண்டர் புராணசாரம்** = இது சைவசமய நாயன்மார்கள் அறுபத்து மூவரது வரலாற்றுக் குறிப்பைக் கொண்ட பாடல்களையுடைய நூலாகும். இது பெரியபுராணத்தையும் திருத்தொண்டர் திருவந்தாதியையும் அடிப்படையாகக்கொண்டு எழுதப்பட்டது. இதனைப் பாடியவர் கொற்றவங்குடி உமாபதி சிவாசாரியார் என்னும் தீட்சதர் ஆவார், இதன் காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு.

**திருப்பள்ளி எழுச்சி** = இதனைப்பாடியவர் தொண்டரடிப்பொடியாழ்வார். திருவரங்க நாதனைத் துயில் எழுப்பும் முறையில் அமைந்த தோத்திர நூல். இது நாலாயிரப் பிரபந்தத்து பல பிரிவுகளுள் ஒன்று. திருவரங்கனைத் துயில் எழுப்பும்முறையில் அமைந்தது. இதன்காலம் 9 ஆம் நூற்றாண்டு. மாணிக்கவாசகர் பாடியுள்ள திருப்பள்ளி எழுச்சியும் உண்டு. அது திருவாசகத்தில் அமைந்துள்ளது. திருப்பெருந்துறை சிவபெருமானைத் துயிலினின்றும் எழுப்பும் முறையில் அது பாடப்பட்டது. காலம் கி. பி. 4 ஆம் நூற்றாண்டு. இவ்விரண்டு நூற்களிலும் இயற்கை வர்ணனை இனிது காணப்படும்.

**திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம்** = இது தொல்காப்பிய தேவரால் பாடப்பட்டது. திருப்பாதிரிப் புலியூர் என்பது இக்காலத்தில் திருப்பாப்புலியூர் என்று வழங்கப்படுகிறது. கி.பி. 14 ஆம் நூற்றாண்டு. இது தோத்திர நூல்,

**திருப்பாவை** - ஸ்ரீ ஆண்டாள் அம்மையாரால் பாடப்பட்ட நூல். 30 பாடல்களைக் கொண்டது. பெண்கள் பாவை நோன்பை நோற்கும்முறைகள் இதில் பாடப்பட்டுள்ளன. இதனை மார்கழி மாதத்தில் பெரிதும்பாடுவர். இது இயற்கை அழகை நிரம்பக் கொண்டு இனிய பொருள் நயமுடையதாய்த் திகழும். இதன் காலம் கி.பி. 8ஆம் நூற்றாண்டு. இதற்கு அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் உரையும் இரங்கநாதாசாரியார் உரையும் பெரிய வாச்சான் பிள்ளை உரையும் உண்டு.'

**திருப்புகழ்** = முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள திருத் தலங்களின் மீது பாடப்பட்ட திருப்பாடல்களின் தொகுதியாகும். திருபுகழைப் பயின்றால் நாக்கு பண்பட்டுச் சொற்கள் தடுமாற்றம் இன்றி வரும். திருப்புகழைப் படிப்பவர் சிந்தைவலுவாலே ஒருத்தரை மதிப்பதில்லை என்று இதன் சிறப்புக் கூறப்படுகிறது. இந்த முறையில் 16000 திருப்புகழ் பாடப்பட்டன. ஆனால், அவை அனைத்தும் கிடைத்தில. கிடைத்தன 1200தாம். இந்நூலை அழகான முறையில் அரிய குறிப்புக்களுடன் திரு. செங்கல்வராயப்பிள்ளை அவர்கள் பதிப்பித்துத் தந்துள்ளனர். இந்நூலின் காலம் கி. பி. 15 ஆம் நூற்றாண்டு. இந்நூல் வாயிலாக முருகப்பெருமானே திருஞானசம்பந்தராக வந்தார் என்ற குறிப்பையும் உணரலாம்.

**திருப்போரூர் சந்நிதிமுறை** = இது முருகப் பெருமானைப்பற்றிப் பாடப்பட்ட தோத்திர நூல். இது திருப்போரூர் முருகன் மீது பாடப்பட்டமையின் இப்பெயர் பெற்றது. இந்நூலுள் முருகப்பெருமான் பிள்ளைத்தமிழும் அமைந்துள்ளது. அப்பிள்ளைத் தமிழ் அரிய உயர்ந்த கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. முருகப் பெருமானே திருஞான சம்பந்தராக வந்தவர் என்ற குறிப்பும் இந்நூலில் உண்டு. இதனைப் பாடியவர் திருப்போரூர் சிதம்பரசுவாமிகள். காலம் கி. பி. 18-ம் நூற்றாண்டு. இதுதோத்திர நூல்.

**திருமந்திரம்** = இது திருமந்திர மாலை என்றும் கூறப்

படும். இது சைவத்திரு முறை பன்னிரண்டனுள் பத்தாம் திருமுறையாக இருப்பது. இதனைப் பாடியவர் திருமூலர் என் னும் பேராசியர் ஆவார். இவர் ஒருவருடம் மௌன மாகயோகத்தில் இருந்து பின் விழித்து ஒரு பாட லைப்பாடிப் பின்னரும் யோ கத்தில் அமர்ந்து அந்த அனுபவத்தில் மூவாயிரம் பாடல்களைப்பாடினார் என் பர். இந்நூல் சித்தாந்த நுண் பொருள்களையும் ஆகமக் கருத்துக்களையும் கொண்டது மக்கள் அறிந்து ஒழுகவேண்டிய நீதிகள் பலவற்றையும் தன்னகத்தே கொண்டது. இதன்காலத்தைப்பற்றிப் பலவித கருத்து வேற்று மைகள் உண்டு. எவ்வாறு இருப்பினும் இது சைவ சமயாசிரியர் நால்வர் காலத்துக்கு முற்பட்டது. இதன் காலத்தைக் கி.பி. நாலாம் நூற்றாண்டு என்று ஒருவாறு கூற லாம்.

திருமயிலைத்தல புராணம் = இது சென்னை மயிலாப் பூர் திருத்தலத்தைப் பற் றிய வரலாற்றைக்கூறும் நூல். இதன் ஆசிரியர் அமிர்தலிங்க தம்பிரான் என்பவர். இதற்குக்காஞ்சி சபாபதி முதலியார் உரை எழுதியுள்ளார். காலம் கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

திருமுருகாற்றுப் படை = இது முருகப் பெருமான் திருப்பெயரால் நக்கீரால் பாடப்பட்ட சிறந்த இலக் கியச் செறிவுடைய பாட் டாகும். இதனை நித்தலும் பாராயணம் செய்துவரின் முருகன் திருவருளைப் பெறலாம். இது பத்துப் பாட்டில் முதல் நூலாக அமைந்தது. இதில் முரு கப் பெருமானது. ஆறு படை வீடுகளைப்பற்றி அறியலாம். இயற்கை அழகும் அன்பர்கள் முரு கனை வழிபடும் முறையும் இதில் குறிப்பிடப்பட் டுள்ளன. காலம் கடைச் சங்க காலம். இதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை உண்டு.

திருமுறை = சைவசமய நூல் களின் தொகை நூல் வகையைச் சேர்ந்தது. இதனுள் திருஞான சம் பந்தர் தேவாரம் முதல் மூன்று திருமுறைகள், அப்பர் தேவாரம் நான்கு முதல் ஆறு திருமுறை, கள், சுந்தரர் தேவாரம் ஏழாவது திருமுறை, மாணிக்கவாசகர் திருவா

சகமும் திருக்கோவையாரும் எட்டாம் திருமுறை, கண்டராதித்தர்முதலானவர் பாடிய திருவிசைப்பாவும் சேந்தனார்பாடிய திருப்பல்லாண்டும் ஒன்பதாம் திருமுறை, திருமூலர் திருமந்திரம் பத்தாம் திருமுறை, திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரம் காரைக்கால் அம்மையார் பாடல்கள் முதல் நம்பியாண்டார் நம்பிகள் பிரபந்தம் வரையில் உள்ளவை பதினோராம் திருமுறை சேக்கிழார்பாடிய பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறை. ஆக திருமுறைகள் 12 இது முதல் திருமுறையில் 'தோடுடைய' என்று தொடங்கும் செய்யுளில் ஓ என்னும் எழுத்தையும் பன்னிரண்டாம் திருமுறையின் ஈற்றுச் செய்யுள் 'உலகெலாம்' என்று முடிவதால் (ம்) என்னும் எழுத்தையும் ஈற்றிலும் கொண்டு விளங்குதலால் ஓம் என்ற பொருளுடன் இத் திருமுறைகள் விளங்குகின்றன என்று பாராட்டுவர்.

திருமுல்லைவாயிற் புராணம் = சென்னைக்கு அடுத்த திருமுல்லைவாயில் என்னும் தலத்தைப் பற்றிப் பாடப்பட்டபுராணமாகும். இத்தலத்தைப்பற்றி இரு புராணங்கள் உண்டு. ஒன்றுவடுகநாதமுதலியாரால்பாடப்பட்டது. அதன் காலம் 17 ஆம் நூற்றாண்டு. மற்றொன்று. திருமயிலை சண்முகம் பிள்ளையால் பாடப்பட்டது. அதன் காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு. இந் நூல் வாயிலாகத் தொண்டை நாடு என்னும் பெயருக்குரிய காரணத்தை நன்கு அறியலாம்.

திருவகுப்பு = இது முருகப் பெருமான்மீது பாடப்பட்ட விருத்தத்தால் ஆனநூல். வேல் வகுப்பு, மயில் வகுப்பு, புயல் வகுப்பு என்பது முதலான பெயர்களுடன் திகழும். இதில் பல இடைச்செருகல் பாடல்களும் சேர்ந்து இருக்கின்றன. இப்போதுள்ள திருவகுப்புக்களுள் 18 வகுப்புக்கள் தாம் அருணகிரியார் வாக்கு எனக் கருதப்படுகிறது. காலம் 15-ஆம் நூற்றாண்டு. இதனைப் பயின்றால் நாக்கு நன்கு திருந்தும்.

திருவருட்பயன் = இதுசைவ சித்தாந்த சாத்திரம், 14

னுள் ஒன்று. இது சிவஞானபோதம், சிவ ஞான சித்தியார், சிவப் பிரகாசம் போன்ற சித் தாந்த நூற்களின் அரிய பொருளை எளிமையாக அறியத் துணைபுரியும் நூல். கொற்றவங்குடி-உமாபதி சிவாசாரிய சுவாமிகள் இந் நூலைப் பாடினர். இதன் மூலம் பதி பசுபாச இலக்கணங்களை யும் ஐந்தெழுத்தின் மாண் பையும் தெற்றத்தெளிய அறியலாம். குறள் வெண் பாவால் ஆனது. இதற்கு நிரம்ப அழகிய தேசிகர் எழுதிய உரை உண்டு.

திருவள்ளுவமாலை = திருக் குறள் சிறப்பையும், திரு வள்ளுவர் மாண்பையும் குறித்துச், சங்க காலப் புலவர்கள் பாடிய வெண் பாக்களைக் கொண்ட ஒரு தொகுப்புநூல். ஆனால், இந்நூலைப்பற்றியகருத்து வேற்றுமையுண்டு. 'இது பல புலவர்கள் பாடிய பாடல்களைக் கொண்ட நூல்அன்று, ஒரேபுலவர் பாடிய நூல்தான்'' என் பதே அக்கருத்து வேற்று மையாகும். என்றாலும், குறளாசிரியர்சிறப்பையும் நூலின் பெருமையும் அறி தற்கு இந்நூல் பெருந் துணை செய்கிறது. சங்கப் புலவர்கள்பாடியபாடலின் தொகையாயின் கடைச் சங்ககாலம் என்னலாம்.

திருவாசகம் = சைவத் திரு முறை 12-னுள் எட்டா வது திருமுறையாகவிளங் கும் பெருமை சான்றது. கல்லான மனத்தையும் கனியச்செய்யும் இயல்பு வாய்ந்த பாடல்கள் அமைந்த தோத்திர நூல். இந்நூலின் அருமை பெருமை தெரிந்து தில்லை நடராசப் பெருமானே இத னைத் தம் திருக்கரத்தால் எழுதிப் பஞ்சாக்கரப்படி யில் வைத்தனர். இது எவர் உள்ளத்தையும் உருக்க வல்லது என்ற குறிப்பில், "திருவாசகத் திற்கு உருகாதவர் ஒரு வாசகத்திற்கும்உருகார்." என்ற பழமொழியும் இது குறித்து வழங்கப்படு கிறது. மேற்கு நாட்டவர் உள்ளத்தைக் கவர்ந்த பெருமை சான்றது. இதனால்தான் ரெவரண்ட் போப் என்பவரும் இதனை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். இதனைப்பாடிய பெரியார் மாணிக்கவாசகர். இதற் குக் காழித் தாண்டவ ராயர் எழுதிய வியாக்கி

யானம் உண்டு. மறைமலை அடிகள் முதல் நான்கு பாடல்களுக்கு எழுதிய உரையுண்டு. இவைகளை அன்றி, மற்றும்சில உரைகளும் வெளிவந்துள்ளன. இதன் காலம் கி. பி. 4 ஆம் நூற்றாண்டு.

**திருவாசிரியம்** = நம்மாழ்வார் பாடிய நாலாயிரப் பிரபந்தத்துள் உள்ளது. காலம், கி.பி. 8 ஆம் நூற்றாண்டு. திருமாலின் பெருமைகளை ஆசிரியப்பாவால் உணர்த்துவது.

**திருவாதவூரடிகள் புராணம்** = மாணிக்கவாசகரது வரலாற்றை அறிவிக்கும் நூல். இதில் பதிபசுபாசங்களின் விளக்கமும், குதிரைகளின் இலட்சணமும் மற்றும் பல அரிய குறிப்புக்களும் அழகுறக் கூறப்பட்டுள்ளன. படிக்கப் படிக்கச் சுவை அமைந்த நூல். இதற்குக் குமாரதேவர் என்பவர் உரை எழுதியுள்ளார். புராணத்தின் காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

**திருவாய்மொழி** = வைணவ சமயத்திற்குரிய நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் உள்ளது. இது வேதத்தின் சாரம் என்று கூறப்படுவது. அகப்பொருள் கருத்துக்களை மிகுதியாகக் கொண்டு பாடப்பட்டது. இதனைப் பாடியவர் நம்மாழ்வார். இதற்கு நம்பிள்ளை நஞ்சீயர், திருக்குருகைப்பிரான் பிள்ளை, பெரியவாச்சான் பிள்ளை, முதலானவர் உரைகள் உண்டு. இந்நூலின் காலம் கி. பி. 8 ஆம் நூற்றாண்டு. திருமாலின்மீது பாடப்பட்ட தோத்திர நூல்.

**திருவாவடுதுறை அம்பலவாணதேசிகர்பிள்ளைத்தமிழ்** = திருவாவடுதுறைகுருமகாசந்நிதானமாக விளங்கிய பரமாசாரிய சுவாமிகளான அம்பலவாண தேசிகர் மீது பாடப்பட்ட பிள்ளைத் தமிழ். இதனைப் பாடியவர் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள். காலம் கி. பி.19 ஆம் நூற்றாண்டு.

**திருவிசைப்பா** = சைவத் திருமுறை 12-னுள் 9-ஆம் திருமுறையாக அமைந்த தோத்திர நூல், இந் நூல் கண்டராதித்தர், கருவூர்த் தேவர், திருவாலியமுதனார், திருமாளிகைத்

தேவர். வேணாட்டடிகள், பூந்துருத்திநம்பிக்காடவர் ஆகியவர்கள் பாடியுள்ள திருப்பாடல்கள் உள்ளன. இவற்றுள் பல சிவபெருமான் மீதும், சில முருகன்மீதும் பாடப்பட்டுள்ளன. இது ஒரு தொகுப்பு நூல் காலம் கி.பி.11 ஆம்நூற்றாண்டு. இதில் தேவாரப் பதிகத்தில் குறிப்பிடப்படாத பண்ணும் உண்டு.

**திருவிளையாடற் புராணம்** = இது மதுரைச் சொக்கநாதரது 64 திருவிளையாடல்களை அறிவிக்கும் நூலாகும். இலக்கியச் செறிவும், சித்தாந்தக் கருத்துக்களும், கவிநயங்களும் மிகுதியும்கொண்ட நூல். தமிழின் பெருமையினை விறு கொண்டு விளம்பும் நூல். இதில் மதுரைக்காண்டம், கூடல் காண்டம், திருவாலவாய்க் காண்டம என்ற மூன்று காண்டங்கள் உள்ளன. இந் நூலால், அசை இலக்கணம், இரத்தின இலக்கணம், முதலான அரிய குறிப்புக்களை அறிந்து கொள்ளலாம். இந்நூலைப்பாடியவர் வடமொழி தென்மொழி அறிந்த பரஞ்சோதி முனிவர் ஆவார். இவரது காலம் கி.பி. 16 ஆம் நூற்றாண்டு. சிவஞான முனிவர் தமது படுக்கையில் எப்போதும் வலப்பக்கத்தே பெரிய புராணத்தையும், இடப்பக்கத்தே இப் புராணத்தையும் வைத்திருப்பாரானல் இதன் மாண்பை மேலும் கூறவேண்டா அன்றே?

**திருவுந்தியார்** = இது சைவ சித்தாந்த சாத்திரம் 14 னுள் ஒன்றாகும். உந்தியை முன்னிலைப்படுத்திச் சித்தாந்த கருத்துக்களை இந்நூல் அறிவிக்கின்றது. இதனைப்பாடியவர் திருவியலூர் உய்யவந்த நாயனார் ஆவார். இதன் பெருமையை உணர்ந்து உந்தி என்னும் சொல்லுக்குமுன் திரு என்னும், பின் ஆர் விகுதியும் கொடுத்துக்கூறப்பட்டதனால் இது திருவுந்தியார் எனப்பட்டது. காலம்கி.பி. 12 ஆம் நூற்றாண்டு. சித்தாந்த சாத்திரம் 14 நூற்களில் முன்னர்த் தோன்றிய நூல்.

**திருவெம்பாவை** = மாணிக்கவாசகர் பாடிய திருவாசகத்துள் விளங்கும் சிறந்த பாடல்பகுதிகளில் ஒன்றாகும். இயற்கை

அழகும். மாதர்கள் ஒருவரை ஒருவர் எழுப்பிக் கொண்டே நீராடப் போகும் முறையும், அவர்கள் தமக்குள் ஏசிப்பேசிச் செல்லும் தன்மையும் சுவை தருவனவாகும். மேகத்தை உமாதேவியாக உருவகப்படுத்திக் கூறும் பாடல் இன்பம் பயப்பதாகும். பாவை நோன்பின் காரணமாக மாதர்கள் பாடும் முறையில் இது அமைந்துள்ளது. திருவண்ணாமலையில் பாடப்பட்டது. பாவை நூல்களுள் இது முதன்மையானது என்று கருதப்படுகிறது. இதன் காலம். கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

திருவேங்கட சதகம் = திருவேங்கடமுடையான் திருப்பெயரால் இந்நூல் பாடப்பட்டமையால், இது இப்பெயர்பெற்றது. இதனைப்பாடியவர் நாராயண பாரதி என்பவர் ஆவார். நீதிகள் பல இதில் கூறப்பட்டுள்ளன. காலம் 18 ஆம் நூற்றாண்டு.

திருவேங்கடத்தலபுராணம் = திருப்பதித் திருத்தலத்தைப்பற்றிப் பாடப்பட்ட நூல். இதனைப் பாடியவர் வீரராகவ அய்யங்கார். காலம். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு. இதில் திருப்பதி மலையில் உள்ள தீர்த்தங்களின் விசேடத்தைப் பற்றியும், பூசித்துப் பேறு பெற்ற அன்பர்களைப் பற்றியும், அலர்மேல்மங்கைத்தாயார் திருமணத்தைப் பற்றியும் அறியலாம்.

திருவொற்றியூர்ப் புராணம் = சென்னைக்கடுத்த திருவொற்றியூரைப் பற்றிய வரலாற்றைக் கூறும் நூல். இதனைப் பாடியவர் திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் என்பவர். காலம். கி. பி. 16 ஆம் நூற்றாண்டு.

திருவொற்றியூர் முருகன் மும்மணிக் கோவை = சுவாமி வேதாசலம்என்னும்மறைமலை யடிகளால் பாடப்பட்டது. இவர் தூய செந்தமிழ் உரைநடை நூல்களையும் ஆராய்ச்சி நூல்களையும், எழுதும் ஆற்றலுடையவர். இவர் செய்யுள் இயற்றுவதிலும் வல்லுநர் என்பதையும் காட்டுதற்குரியமுறையில்சிறந்த இலக்கியச் செறிவுடன் விளங்கும் நூல். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

திலலைக்கலம்பகம் = சிதம்பரத்தின் மீது பிறவியிலேயே குருடும், முடமுமாய்ப் பிறந்து, இளஞ்சூரியர், முது சூரியர் என்னும் பெயருடன் திகழ்ந்த இரட்டைப் புலவர்களால் பாடப்பட்டது. இதன்காலம் 15 ஆம் நூற்றுண்டு. இது தோத்திர நூல். இலக்கிய நயமுடையது.

திவாகரம் = இது ஒரு நிகண்டு நூல். தமிழ் மொழியின் பொருளை நன்கு அறிதற்குத் துணை செய்யும் நூல். இக்காலத்தில் அகராதி பயன் படுவது போல், முற்காலத்தில் இத்தகைய நூற்களே சொற்பொருள் அறியத் துணை செய்தன. திவாகரம் என்னும் நூல் சேந்தன் என்னும் அரசனது வேண்டுகோளால் திவாகர முனிவரால் பாடப்பட்டது. அதனால் இது சேந்தன் திவாகரம் என்றும் கூறப்படும். காலம் கி.பி. 10 ஆம் நூற்றுண்டு.

## து

துகளறு போதக்கட்டளை = இது சைவ சித்தாந்த கருத்தைக் கூறும் நூல். இதில் பதி, பசு பாசங்களின் இயல்புகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இதனைச் சீர்காழி சிற்றம்பல நாடிகளின் சீடர்களில் ஒருவர் செய்துள்ளார். இது உரை நடையால் ஆனது. இந் நூலாசிரியர் தமது அஞ்ஞானத்தைத் தம் ஞானசிரியர் போக்கி அருளிய திறத்தைச் சிறப்பாக எடுத்து மொழிந்துள்ளார். காலம் கி.பி. 15 ஆம் நூற்றுண்டு.

துகளறுபோதம் = இது செய்யுள் வடிவான நூல். சைவ சித்தாந்த கருத்துக்களைச் செவ்வையாக எடுத்துக் கூறும் நூல். பதி, பசு, பாச இயல்புகளை இதன் மூலம் அறியலாம். இதன் ஆசிரியர் சிற்றம்பலநாடிகள். காலம் கி.பி. 15 ஆம் நூற்றுண்டு.

## தே

தேம்பாவணி = தே + பா + அணி என்னும் சொற்கள் இணைந்து தேம்பாவணி என்று ஆயது. இனிமையான பாடல்களை அழகுறக் கொண்ட நூல் என்பதே இத் தொடரின்பொருள். ஏசுப் பெருமானின் வரலாற்றைத் தமிழில் எடுத்து

இயம்பும் நூல். இதனைப் பாடியவர் வீரமாமுனிவர் என்னும் பெஸ்கி என்னும் வீரமா முனிவர் ஆவார். நல்ல இலக்கியச் செறிவுடைய நூல். இதன் காலம் கி. பி. 17 ஆம் நூற்றுண்டு. இதில் திருக்குறள், சீவக சிந்தாமணி கம்பராமாயணம் முதலான காவியங்களின் நடையும் கருத்தும் தழுவப்பட்டிருப்பதைக் காணலாம்.

தேவாரம் = இது சைவ சமயத்தில் தலை சிறந்து விளங்கும் தோத்திர நூல்களில் முதன்மை வாய்ந்தது. தே + ஆரம் என்று இத்தொடர் பிரிக்கப்பட்டு, தேவனுகிய சிவ பெருமானுக்கு உகந்த பாமாலை என்ற பொருளுடையது. இதனைப் பாடியவர்கள். சம்பந்தர் அப்பர், சுந்தரர் ஆவார். இது சைவத் திருமுறைகள் 12 னுள் முதல் ஏழு திருமுறைகளாக விளங்குவது. இது ஒரே காலத்தில் பாடப்பெறுமல், பல்வேறு காலங்களில் எழுந்தமையின் காலம் ஈண்டுக் குறிப்பிடப்படவில்லை. தேவாரம் என்பது வீட்டில் வைத்துப்பூசிக்கத்தக்கது என வைணவப் பேருரை ஆசிரியர்கள் தம் உரையில் குறிப்பிட்டு எழுதியிருப்பது உற்றுக் கவனித்தற்குரியது. இந் நூலால் அறுபத்து நான்கு கலைகளின் குறிப்புக்களையும், பல சித்திரக் கவிகளையும், வரலாற்றுக் குறிப்புக்களையும் இலகிய நயங்களையும், சித்தாந்த கருத்துக்களையும தெரிந்துகொள்ளலாம்.

தொ

தொல்காப்பியம் = தமிழ் மொழியில் உள்ள இலக்கண நூற்களுக்கெல்லாம் நாயகமாக விளங்கும் நூல் இதுவேயாகும். இது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் முப்பிரிவுகளை உடையது. பொருளதிகாரத்தில் யாப்பு இலக்கணமும், அணியிலக்கணமும் அமைந்துள்ளன. தமிழ் நாட்டு மக்களின் நாகரிகம் பண்பாடு முதலியனவற்றை அறிவதற்குப் பெருந்துணை செய்ய வல்லது பொருளதிகாரமே. இந் நூலுக்கு நச்சினார்க்கினியர், சேனவரையர், இளம்

பூரணர், பேராசிரியர் தெய்வச் சிலையார் கல்லாடனார் போன்றவர்கள் உரை எழுதியுள்ளார். தொல்காப்பியத்தின் ஆசிரியர் தொல்காப்பியர் என்பவர். காலம். இடைச்சங்க காலம்.

தொன்னூல் விளக்கம் = இது தமிழ் மொழியில் உள்ள சொல், பொருள், யாப்பு, அணி, ஆகிய ஐந்தின் இலக்கணங்களைச் சுருக்கிக் கூறும் வசன நூல். இதனை எழுதியவர் ரெவரண்ட் பெஸ்கி என்னும் வீரமா முனிவர் ஆவார். காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு. இதன் மூலம் ஐந்திலக்கணங்களின் விளக்கங்களைத் தெற்றத் தெளிய உணரலாம்.

தொண்டைமண்டல சதகம் = இது தொண்டைமண்டலத்தைப்பற்றிப் பாடப்பட்டமையின் இப்பெயர் பெற்றது. இதன் மூலம் தொண்டை நாட்டுத் தொடர்புடைய புலவர்கள் இன்னின்னார் என்பதையும், தொண்டை நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள், இன்னின்ன என்பதையும் தெற்றத்தெளிய அறிந்து கொள்ளலாம். இந் நூலைப் பாடியவர் படிக்காசுப்புலவர். காலம் 17 ஆம் நூற்றாண்டு.

## ந

நந்தனார் சரித்திரக் கீர்த்தனை = நந்தனாருடைய சரித்திரத்தைக் கீர்த்தனைகளின் மூலம்பாடி அமைத்துள்ள சிறந்த நூல். இது போதும் நந்தனார் நாடகம் நடத்துபவர் இதனை அடிப்படையாகக் கொண்டே நடத்துகின்றனர். இதில் அமைந்த கீர்த்தனைகள், செவிக்கு இனிமையுடையனவாய், உருக்க முடையனவாய் இருக்கின்றன. இதற்கு முதலில் சாத்து கவி கொடுக்க மறுத்த மகா வித்துவான், திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களே, பின்னர் இதன் கீர்த்தனைகளை இதன் ஆசிரியர் பாடிக்காட்டிய போது உள்ளம் பரவசப்பட்டுச் சாத்து கவி அருளினர் என்று அறியப்படுதலிலிருந்து, இந் நூலின் மாண்பை அறியலாம். இதனைப் பாடியவர் கோபால கிருஷ்ண பாரதியார். காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டு. இந்தக் கீர்த்தனையில் கூறப்

பட்ட நந்தன் சரித்திரக் குறிப்புக்கும் பெரிய புராணத்தில்வரும் திருநாளைப் போவார் (நந்தனார்) வரலாற்றுக் குறிப்புக்கும் பெரிதும் வேறுபாடு உண்டு.

**நந்திக்கலம்பகம்** = நந்தி வர்மன் என்னும் பல்லவ மன்னன் தமிழ் ஆர்வம் உடையவன், இதனால் புலவர்கள் இவனைப் போற்றினர். இதனைக் கண்டு பொறுமைகொண்ட இவன் தம்பி சித்திரமயன் இவனைக் கொல்ல ஒரு புலவனைச் சரிபடுத்தி அவனை அறம் வைத்துப் பாடிக் கொல்லக் கூறினன். அவ்வாறே புலவன் நச்சு எழுத்துக்கள் அமைய நந்திக் கலம்பகம் என்னும் இந்நூலைப்பாடி நந்தவர்மனை கேட்குமாறு செய்து அவனைக்கொலையுண்ணச் செய்தான். காலம் கி. பி. 8 ஆம் நூற்றாண்டு.

**நற்றிணை** = இது சங்க இலக்கியங்களாகிய எட்டுத் தொகை என்னும் பகுதியுள் ஒன்றாகும். அகப் பொருள் சுவை ததும்பிய நூல். ஆசிரியப் பாவால் ஆனது. நல் என்ற அடைமொழியே இதன் சிறப்பை அறிவிக்கும். 400 பாக்களைக் கொண்டது. பல புலவர்கள் பாடிய பாடலின் தொகை நூல் ஆகும். இதனைத் தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் என்பவன். இதற்கு அழகான முறையில் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் உரை எழுதியுள்ளார். இந்நூலின் காலம் கடைச் சங்க காலம்.

**நன்னூல்** = இது தமிழில் உள்ள இலக்கண நூல். இதில் எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம் ஆகிய இரண்டின் இலக்கணங்கள் தெளிவாகச் சூத்திர வடிவில் கூறப்பட்டுள்ளன. இந்நூல் பொருள், யாப்பு, அணி ஆகிய இலக்கணங்களையும் கொண்டிருக்க வேண்டும் என்பது இதன் சிறப்புப் பாயிரத்தால், அறிய வருகிறது என்றாலும், அம்மூவிலக்கணங்களைக் கூறும் சூத்திரங்களை இதுவரை கண்டிலோம். தொல்காப்பியம் பயில்வதற்குமுன், இந் நூல் பயிற்சி, மிகமிக இன்றியமையாதது. இதன் ஆசிரியர் பவணந்தி முனிவர்

இதன் காலம் கி. பி. 13 ஆம் நூற்றாண்டு. இந் நூலுக்குப் பலர் உரை எழுதியுள்ளார். அவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை மயிலைநாதர் உரை, சங்கர நமச்சிவாயர் உரை, விசாகப் பெருமாளையர் உரை, இராமானுசக் கவிராயர் உரை, ஆறுமுக நாவலர் உரைகளாம், இவற்றுள் சங்கர நமச்சிவாயர் உரை விருத்தியுரை எனப்படும். இவ்வுரையினைத் திருத்தம் செய்து சில அரிய குறிப்புடன் சிவஞானமுனிவரும் ஓர் உரை செய்துளளார்.

**நன்னெறி** = நல்ல நெறிகளை யுணர்த்தும் நாற்பது வெண்பாவாலான நூல். இதனை இளமையில் பயின்று, பின் வாழ்க்கையில் பயின்ற வண்ணம் நடப்பதற்கு ஏற்ற நீதிகளையும் கருத்துக்களையும் கொண்ட நூல். இதனைப் பாடியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள். காலம். கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

## நா

**நாச்சியார் திருமொழி** = இது ஸ்ரீ ஆண்டாள் அம்மையார் பாடிய தோத்திர நூல். திருமாலின் மீது பாடப்பட்டது. நாச்சியார் என்பவர் ஈண்டு ஸ்ரீ ஆண்டாள் அம்மையார். ஆவார். இந் நூல் நாலாயிர திவ்ய பிரபந்தத்துள் ஒன்றாகத் திகழ்கிறது. இதன் காலம் கி. பி. 9 ஆம் நூற்றாண்டு. ஸ்ரீ ஆண்டாள் அம்மையார் தம்மைத் திருமால் மணவாளனை வந்து, மணந்த செய்திகளைத் தம் தோழிக்குக் கூறும் முறையில் அமைந்துள்ள பாடல்களைக் கொண்டு வைதிக முறைப்படி திருமணச் சடங்குகள் நடைபெறும் குறிப்புக்கள் பலவற்றை அறிவிக்குமநூல்.

**நாராயண சதகம்** = நீதிகளை 100 பாடல்களால் விளக்கும் நூல். ஆசிரியர் நாராயண பாரதி. காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**நாலடியார்** = நான்கடிகளைக் கொண்டு சிறப்புடன் திகழ்வதால் நாலடியார் எனப்படும். திருக்குறளோடு ஒருங்கு வைத்து எண்ணப்படும் நீதி நூல். "நாலும் இரண்டும் சொல்லுக்குறுதி"

"சொல்லருமை நாலிரண்டில்" என்பனபோன்ற மொழிகள் இது கருதியே கூறப்பட்டு வருகின்றன. எண்ணாயிரம் சமணர்கள் தம் நாடு பஞ்சத்தால் பரதவித்தபோது, பாண்டிய நாட்டை அடைந்து வாழ்கையில், பின்னர் நாடு செழிப்புற்றதால் தம் நாடு திரும்பிப் போகையில் ஒவ்வொரு வெண்பாவைப் பாடித் தாம் இருந்த இடத்தில் எழுதி வைத்து விட்டுச் செல்லப் பாண்டிய மன்னன் தன்னிடம் கூறாது சென்ற சமணர்களின் பாட்டுநாட்டுக்குத் தேவையில்லை என்று சினந்து அவற்றை வைகை ஆற்றில் எறிந்து விடக்கூற, அவற்றுள் நானூறு பாடல்கள் கரையில் ஒதுங்கி நின்றுவிட்டன. அவற்றை எடுத்துப் பதுமனார் எனபவர் செப்பனிட்டனர். இதன் காலம் கடைச் சங்க காலம். இந்நூலைப் போப் அவர்கள் ஆங்கில மொழியில் மொழி பெயர்த்துளளார். சிலர், "இந்நூல் சைனப் புலவர்கள் பலரால் பாடப்பட்ட நூல் அன்று. ஒருவரால் பாடப்பட்ட நூல்" என்றும் கூறுவர். இதன் காலம் கி. பி. 7 ஆம் நூற்றாண்டு எனச் சிலர் கருதுவர்.

**நாலாயிரப் பிரபந்தம்** = இது வைணவர்க்குரிய தோத்திர வடிவில் அமைந்த நூல்களுள் சிறந்ததாகும். இந்நூலில் நாலாயிரப் பாடல்கள் இருப்பதால் இந் நூலுக்கு இப்பெயர் கொடுக்கப்பட்டது. இந் நூலுக்குரிய ஆசிரியர்கள் 12 ஆழ்வார்கள் ஆவார். அவர்களே பொய்கையார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை யாழ்வார், நம்மாழ்வார், மதுரகவி யாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடி யாழ்வார், திருமங்கையாழ்வார், திருப்பாணாழ்வார் ஆவார். இந் நூலுக்குப் பலர் உரை எழுதியுள்ளனர். அவையாவும் நல்சிறந்த உரைகள். அவை ஆழ்வார்களின் உள்ளக் கருத்தை உரைப்பனவாகும். இந் நூலில் கண்ட ஆசிரியர்கள் பல்வேறு காலங்களில் தோன்றினமையின் காலம் குறிக்கப்படவில்லை.

**நால்வர் நான்மணிமாலை** = திருஞான சம்பந்தர் திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய சைவ சமயாசிரியர்கள் நால்வர் மீது பாடப்பட்ட நூல். நான்கு மணிகள் கோர்க்கப்பட்ட மாலை போல வெண்பா கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், அகவல் பா ஆகிய நான்கு பாக்கள் மாறி மாறி வர 40 பாடல்களாக அந்தாதித் தொடையமையப் பாடப்படுவதே நான்மணிமாலையாகும். இம் முறையில் இந் நூல் நால்வர்மீது பாடப்பட்டதனால் இப் பெயர் பெற்றது. இந் நூலால் நால்வரது தலை சிறந்த பெருமைகளையும், தேவார திருவாசகங்களின் ஒப்புயர் வற்ற மாண்பையும், தெற்றத் தெளிய அறிந்துகொள்ளலாம். இந் நூலை வட நூற் கடலும், தென் னூற் கடலும் நிலை கண்டுணர்ந்த சிவஞான முனிவர் தம சடையில் சிரோரத்னம் போல் வைத்து முடிந் திருப்பார் என்ற ஒரு செய்தியும் கேட்கப்படுவதால், இந் நூலின் பெருமை நன்கு விளங்கும். இந் நூலை இயற்றியவர் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் ஆவார். காலம் கி. பி. 17 ஆம் நூற்றுண்டு.

**நான்மணிக்கடிகை** = இது சங்கம் மருவிய பதினெண் கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்று. நான்கு விலையுயர்ந்த மணிகளின் துண்டு எத்தனைச் சிறப்புடையதோ, அத்துணைச் சிறப்புடையது போன்று ஒவ்வொரு பாடலிலும் சிறந்த நான்கு நீதிகள் அடங்க இந் நூல் பாடப்பட்டுள்ளமையின் இப் பெயர் பெற்றது. இந் நூலைப் பாடியவர் விளம்பிநாகனார் என்பவர். காலம் கடைச் சங்க காலம்.

## நி

**நிகண்டு** = தமிழ்ச் சொற் பொருள்களை அறிதற்குப் பாட்டு வடிவில் அமைந்த நூலாகும். இந்த முறையில் பல நிகண்டுகள் தமிழில் உண்டு. குறிப்பிடத் தக்க நிகண்டு நூல் சூடாமணி நிகண்டு.

## நீ

**நீதிநூல்** = இந் நூலைப் பாடியவர் வேதநாயகம் பிள்ளை

என்பவர். இந்நூலில் மக்கள் நடத்தைக்கு இன்றியமையாத நீதிகள் பல பாவடிவில் அமைந்துள்ளன. தாய் தந்தையரே முதல்தெய்வம் என்பதும் உண்மைக் கற்புடைய மாதர் ஆண்களை ஏறிட்டும் பாரார் என்பதும், அவ்வாறே தம் கணவர் பிற பெண்களைப் பார்க்க இடம்கொடார் என்பதும் போன்ற நீதிகள் பல உள. காலம். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**நீதிநெறி விளக்கம்** = நீதி மார்க்கங்கள் இன்னின்ன என்பதை, விளக்கிக் கூறும் கருத்துடன் எழுதப்பட்ட நூலாகும். இது பெரிதும் திருக்குறளைத் தழுவி எழுதப்பட்ட நூலாகும். திருமலை நாயக்கனுடைய வேண்டுகோளால் குமரகுருபர சுவாமிகள் இயற்றி அருளினார். இதன் காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

**நீதிவெண்பா** = இது நீதி நூல்களில்ஒன்று. இதன் ஆசிரியர் யாவர் என்று அறிந்து கொள்வதற்கில்லை.

**நீலகேசி** = இதன் ஆசிரியர் தெரிதற்கு இல்லை. இதில் சைன மதத்துக் கொள்கைகள்கூறப்பட்டுள்ளன. இதில் பௌத்த மதம், சாங்கிய மதம், வைதிக மதம் முதலான மதக் கொள்கைகள் கண்டித்துக் கூறப்பட்டுள்ளன. இந் நூலுக்கு வாமன முனிவர் உரை எழுதியுள்ளார்.

## நெ

**நெடுநல்வாடை** = இது சங்கம் மருவிய பத்துப்பாட்டுள் ஒன்றாகும். இதனைப் பாடியவர் நக்கீரர். இது பாண்டியன் நெடுஞ்செழியன் மீது பாடப்பட்டது. வாடைக்காற்றின் இயல்பு இதில் அழகுற இயம்பப்பட்டுள்ளது. கடைச் சங்கக் காலத்திய நூல்.

**நெய்தற்கலி** = இதன் ஆசிரியர் நல்லந்துவனார். நெய்தல் திணையின் இயல்பு அழகுறக்கூறும் நூல் இது கலித்தொகை நூலுள் ஒரு பகுதி. இதற்கு நச்சினார்க்கினியர் உரை உண்டு. காலம் கடைச்சங்க காலம்.

## நே

நேமிநாதம் = இது ஓர் இலக்கண நூல். வெண்பாவால் அமைந்தது. இதனைப் பாடியவர் குணவீரபண்டிதர். காலம் கி. பி. 12 ஆம் நூற்றுண்டு. இது சின்னூல் என்றும் கூறப்படும்.

## நை

நைடதம் = நிடத தேசத்து மன்னனும் நளனது வரலாற்றை விருத்தத்தால் கூறும் நூல். நைடதம் புலவர்க்கு ஔடதம் என்னும் பழமொழியே இதன் சிறப்பை உணர்த்தும். இன்பச்சுவை இனிது நுகர விரும்புவார்க்கு இது சிறந்த நூலாகும். இதனை இயற்றியவர் அதிவீரராமபாண்டியர். காலம் கி.பி. 16 ஆம் நூற்றுண்டு.

## ப

பஞ்சதந்திர விருத்தம் = மித்திரபேதம் சுகிர்ல் லாபம், சந்தி விக்ரகம், லப்த ஹானி, அசம்பிரேட்சிய காரித்துவம் (சிநேகத்தைப் பிரித்தல், சிநேகத்தைப் பெறுதல், அடுத்துக் கெடுத்தல், கையில் கிடைத்த பொருளை ஒழித்தல், ஆராயாமல் செய்தல்) ஆகிய ஐந்து தந்திரங்களைக் கூறும் நூல். இதனைப் பாடியவர் வீர மார்த்தாண்ட தேவர். காலம் கி. பி. 19 ஆம் நூற்றுண்டு. இந்த நூலுக்கு அழகான முறையில் உரை நடை நூலும் உண்டு. இதனை எழுதியவர் தாண்டவராய முதலியார்.

பட்டினத்தார் பாடல் = பட்டினத்தார் என்ற பெயருடன் இருவர் இருந்திருக்கின்றனர். அவர்களுள் இரண்டாவது பட்டினத்தார் பாடல்களே, பட்டினத்தார் பாடல் என வழங்கப்பட்டு வருகிறது. இதில் கச்சியேய கம்பமாலை என்பதும். சிதம்பரத்தின் மீது பாடப்பட்ட அகவல்களும், உடற்கூற்றுவண்ணமும், எங்நாள்கண்ணிகளும. தாயாருக்குத் தகன கிரியை நடத்தியபோது பாடிய பாடல்களும திருவொற்றியூர் தலத்திலும, திருவிடைமருதூர் முதலான தலத்திலும பாடப்பட்ட பாடல்களும் உள்ளன. திருவேகமபமாலையில் குலாமர் என்ற இந்துஸ்தான் மொழிச்சொல்

எடுத்து ஆளப்பட்டிருத்தலின், முஸ்லிம்களின் இயக்கம் தமிழ் நாட்டில் மிகுதியும் இருந்த காலத்தில் இந் நூல் பாடப்பட்டிருக்கவேண்டும் என்பது புலனாகிறது. ஆகவே இந் நூல் தோன்றிய காலத்தை 14 ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என யூகிக்கலாம். முதல் பட்டினத்தார் என்பவரே திருவெண்காட்டடிகள் என்னும் பட்டினத்தாராக இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது. அவர் இருந்த காலம் கி. பி. 10 ஆம் நூற்றாண்டு. அவர் பாடிய பாடல்கள் சைவத் திருமுறை பன்னிரண்டனுள் 11 ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. அவை திருவிடைமருதூர் மும்மணிமாலை, கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒரு பஃது என்பன.

**பட்டினப்பாலை** = சங்கம் மருவிய பத்துப்பாட்டு என்னும் தொகை நூலில் ஒன்றாகும். கரிகால் வளவன் காவிரிப்பூம்பட்டினத்தை அரசிருக்கையாகக் கொண்டு, அரசாண்டபோது அவனது சிறப்பு, அவன் நாட்டின் சிறப்பு முதலியவை கடியலூர் உருத்திரங் கண்ணனாரால் பாடப்பட்ட வஞ்சி நெடும் பாட்டாகும். இந் நூலைப்பாடிய காரணத்தால், கரிகாற் சோழன், பதினாறு நூறாயிரம் பொற்காசுகளைப் புலவர்க்குக் கொடுத்தான். இந் நூல் வாயிலாகத் தமிழ் நாட்டின் உன்னத நிலையினையும், நாகரிகப் பண்பினையும் காணலாம். இதில் கலங்கரை விளக்கத்தைப் பற்றியகுறிப்பு (light house) காணப்படுவது குறித்து மகிழ்தல் வேண்டும். காலம் கடைச்சங்க காலம். இந் நூலுக்கு அரிய ஆராய்ச்சிநூல் ஒன்றைப் பேரறிஞர் மறைமலை அடிகள் எழுதியுள்ளார். அது ஆராய்ச்சியாளர்க்குப் பெருந்துணை செய்ய வல்லது.

**பணவிடுதூது** = இதன் மூலம் பணத்தின் மாண்பும், ஏனையபொருள்களைத் தூது அனுப்புவதிலும் பணத்தை தூதாக அனுப்புவதற்குரிய கார

ணமும் தெளிவாகக்கூறப் பட்டிருப்பது படித்து இன்புறுவதற் குரியன வாகும். இந்நூலைப்பாடிய வர் காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

பண்டார மும்மணிக்கோவை = மூன்று மணிகள் கோக்கப்பட்ட மாலை போல் மூன்று பாடல்கள் ஒன்றன் பின் ஒன்றாக அமைய முப்பது பாடல் களைக்கொண்ட நூலே மும்மணிக்கோவையாகும். அம் மூன்று பாடல்கள் அகவல், வெண்பா, கட்டளைக் கலித்துறை. என்பன. குமரகுருபரர் இதன் ஆசிரியர். குமர குருபர சுவாமிகள் திருச்செந்தூர் முருகப்பெருமானை நோக்கித் தமக்கு ஞானசிரியரை நாடித்தருதல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதுபோது செந்தில் பெருமான், 'அன்ப! உனது வாக்கு யாரிடம் தடைபடுகிறதோ, அவரே உனது ஞானசிரியர் ஆவார்'. என்று கூற, சுவாமிகள், அந்த ஆணையைச் சிரமேற் கொண்டு, ஞானசிரியரை அடைய வேண்டுமென்ற நாட்டத்துடன் இருக்கையில், திருத்தருமை ஆதின குரு மகா சந்நிதானமாக அவர் காலத்தில் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகரை வணங்கும் பேறு சுவாமிகளுக்குக் கிட்டியபோது, திரு மகா சந்நிதானம் பெரிய புராணத்திலுள்ள 'ஐந்து பேரறிவு' என்னும் திருப்பாடலுக்கு அனுபவப் பொருளைக் கூறுமாறு பணித்தார். குமரகுருபரர் கூற இயலாது நின்றார். அதன்பின் மகா சந்நிதானம் அதன் பொருளை விளக்கினார். அதனைக்கேட்ட சுவாமிகள் செந்தில் முருகப்பெருமானது கட்டளையைக் கூறி அவருக்கு ஞானப் புத்திரராக ஆயினர். அந்தச் சந்தர்ப்பத்தில் பாடப்பட்ட நூலே இந்நூல். சைவ சித்தாந்தத்தின் மேன்மை சிறப்புற இந்நூலில் கூறப்பட்டுள்ளது. இதன் காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

பதிற்றுப்பத்து = இது சங்க இலக்கியங்களாகிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. சேரநாட்டு மன்னர்களைப் பற்றியும், அவர்களின் நாட்டைப் பற்றியும் அறிதற்குப்

பெருந்துணை செய்பவல்லது. இதில் நூறு பாடல்கள் உண்டு. பத்துப் பத்து என்னும் தொடரே புணர்கையில் இற்றுச்சாரியை பெற்றும் மற்றும் சிலமாறுதல் அடைந்தும் இவ்வாறு ஆயிற்று. இவற்றுள் முதல்பத்தும், ஈற்றி உள்ள பத்தும் கிடைத்தில. இரண்டாம் பத்து இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்மீது குமட்டூர் கண்ணனாரால் பாடப்பட்டது. மூன்றாம் பத்து இமயவரம்பன் தம்பி பல்யானை செல்கெழுகுட்டுவன்மீது பாலைக்கௌதமனாரால் பாடப்பபட்டது. நான்காம் பத்து களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல்மீதுகாப்பியாற்றுக் காப்பியரால் பாடப் பட்டது. ஐந்தாமபத்து கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன்மீது பரணரால் பாடப்பட்டது. ஆறும் பத்து ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்மீது காக்கைப்பாடினியார் நச்செள்ளையாரால் பாடப்பட்டது. ஏழாம் பத்து, செல்வக்கடுங்கோவாழியாதன்மீது கபிலரால் பாடப்பட்டது. எட்டாம் பத்துத் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை மீது அரிசில் கிழாரால் பாடப்பட்டது. ஒன்பதாம் பத்து இரும்பொறையின் மீது, பெருங்குன்றூர்க் கிழாரால் பாடப்பட்டது. காலம் கடைச்சங்க காலம். இதற்குக் குறிப்பு உரை உண்டு.

பதினோராம் திருமுறை = இது சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பதினோராவதாகத் திகழ்வது. இதில் பாடியுள்ள புலவர்கள் பன்னிருவர். (1) திருவாலவாயாராகிய மதுரை சோக்கலிங்கப் பெருமான பாடிய திருமுகப்பாசுரம (2) காரைக்காலம்மையார் பாடிய (i) திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் (ii) அற்புதத் திருவந்தாதி (iii) திருவிரட்டை மணிமாலை. (3) ஐயடிகள் காடவர் கோன் பாடிய திருவந்தாதிக்ஷேத்திர வெண்பா (4) சேரமான் பெருமாள் நாயனர் பாடிய (i) பொன் வண்ணத்து அந்தாதி. (ii) திருவாரூர் மும்மணிக் கோவை. (iii) திருக்கைலாயஞானஉலா. (5) நக்கிரர் தேவர் நாயனர் பாடிய

(i) கைலைபாதி காளத்தி பாதி யந்தாதி. (ii) திருவீங்கோய்மலை எழுபது. (iii) திருவலஞ்சுழி மும்மணிக்கோவை. (iv) திருவெழுகூற்றிருக்கை. (v) பெருந்தேவபாணி. (vi) கோபப் பிரசாதம். (vii) காரெட்டு (viii) போற்றித் திருக்கலிப்பா. (ix) திருமுருகாற்றுப்படை (x) திருக்கண்ணப்ப தேவர் திருமறம். (6) கல்லாட தேவநாயனார் பாடிய திருக்கண்ணப்ப தேவர் திருமறம். (7) கபில தேவ நாயனார் பாடிய (i) மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை. (ii) சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை (iii) சிவபெருமான் திருவந்தாதி. (8) பரணதேவநாயனார் பாடிய சிவபெருமான் திருவந்தாதி. (9) இளம்பெருமான் அடிகள் பாடிய சிவபெருமான் திருமும்மணிக்கொவை. (10) அதிரா அடிகள் பாடிய மூத்த பிள்ளையார் திருமும்மணிக் கோவை. (11) பட்டினத்துப்பிள்ளையார் பாடிய (i) கோவில் நான்மணிமாலை. (ii) திருக்கழுமல மும்மணிக்கோவை (iii) திருவிடைமருதூர் மும்மணிக்கோவை (iv) திருவேகம்பமுடையார் திருவந்தாதி (v) திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது. (12) நம்பியாண்டார் நம்பிகள் பாடிய (i) திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை (ii) கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் (iii) திருத்தொண்டர் திருவந்தாதி (iv) ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி. (v) ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம். (vi) ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை. (vii) ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை. (viii) ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம். (ix) ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை (x) திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை. ஆகிய நூற்கள் அடங்கியுள்ளன. இந் நூலில் அடங்கியபுலவர்கள் சங்க காலம் முதல் 11ஆம் நூற்றுண்டு வரையில் திகழ்ந்தவர்கள் ஆவார்.

பத்துப்பாட்டு = சங்கம் மருவிய தொகை நூல்களுள் ஒன்று. இதில் திருமுருகாற்றுப்படை, பொருநர் ஆற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை,

பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் (இதுகூத்தராற்றுப்படை எனவும் கூறப்படும்) என்னும் பத்துப் பாடல்கள் அடங்கியுள்ளன. இதற்கு நச்சினார்க்கினியர் உரை உண்டு. கடைச் சங்க காலம். தமிழ் நாட்டு வளம், மக்கள் நாகரிகம், பண்புடைமை முதலானவற்றை அறியப் பெருந் துணை செய்ய வல்லது. இது பாட்டு என்றும் கூறப்படும்.

**பரமதத்திமிரபானு** = இது பிற மதங்களின் திறமையைக் காரணத்துடன் எடுத்து விளக்கி, சைவ சித்தாந்த மதத்தின் சிறப்பையும், பெருமையையும் இனிதின் எடுத்துக்கூறுவது. இதன் ஆசிரியர் மறைஞான சம்பந்தர் என்று யூகிக்கப்படுகிறது. காலம் கி. பி. 16-ஆம் நூற்றுண்டு.

**பரமார்த்த குரு கதை** = நகைச்சுவை ததும்பும் முறையில் ரெவரெண்ட் பெஸ்கி என்னும் வீரமா முனிவரால் எழுதப்பட்ட உரைநடை நூல். கி. பி. 19 ஆம் நூற்றுண்டு.

**பராபரக் கண்ணி** = தாயுமானவரால் பாடப்பட்டது. பராபரமே என்று ஒவ்வொரு கண்ணியும் முடிதலின் இப்பெயர் பெற்றது. இதில் சிறந்த உண்மைகளும் சீவாத்மாவின் நிலைகளும் பராபரனுடைய மாண்புகளும் கூறப்பட்டுள்ளன. இது தாயுமானவர் பாடலில் ஒரு பகுதி. காலம். கி. பி. 19-ஆம் நூற்றுண்டு.

**பரிபாடல்** = சங்க நூற்களுள் ஒன்றான எட்டுத் தொகை நூற்களுள் இது ஒரு நூலாகும். பரிபாடல் என்பது தமிழ் மொழியில் உள்ள ஒரு வகைப் பாடல். அப்பாடலால் இந்நூல் அமைந்துள்ளமையின் இப்பெயர் பெற்றது. இதில் எழுபது பாடல்கள் இருந்தன. ஆனால் அவற்றுள் 24 பாடல்களே கிடைத்தன. இந்நூலில் முருகப் பெருமானைப் பற்றியும், திருமாலைப்பற்றியும், மதுரையைப்பற்றியும், வையையைப்பற்றியும் கூறப்பட்ட பாடல்களே உண்டு இவற்றின் மூலம் தமிழ் நாட்டின் வழக்க ஒழுக்கங்கள்

திரப்பரங்குன்றம், திருமாலிருஞ் சோலை, வைகை நதி, மதுரையம்பதி ஆகிய இவற்றின் இயற்கை வளன் முதலியவற்றை நன்கு அறியலாம். திருமாலின் பெருமைகளையும், திருமுருகன் மாண்புகளையும் உணரலாம். அகப்பொருட் சிறப்பு அதிகமாக இதில் பேசப்பட்டுள்ளது. இதற்குப் பரிமேலழகர் எழுதிய உரை உண்டு.

**பழமொழி** = இது சங்கம் மருவிய பதினெண் கீழ்க் கணக்கு நூற்களுள் ஒன்று. இதில் நானூறு வெண்பாக்கள் உண்டு. அதனால் இது பழமொழி நானூறு என்ற பெயரையும்பெற்றது. ஒவ்வொரு வெண்பாவிலும் நல்ல பழமொழி ஒன்றுஉண்டு. அதனால் இந்நூல் பழமொழி என்றே பெயர் பெற்றது. இதனைப் பாடியவர் முன்றுறை அரையனார். காலம கடைச் சங்க காலம்.

**பன்னிரு படலம்** = இது அகத்திய முனிவருடைய மாணவர்கள் பன்னிருவர் புறப் பொருளைப்பற்றிப் பாடிய பாடல்களைக் கொண்ட நூல். என்பர் ஆகவே இது புறப்பொருள் இலக்கணம் கூறும் நூல். காலம் கூறுதற்கில்லை.

## பா

**பாகவத புராணம்** = கிருஷ்ணனது வரலாறு அறிதற்குப் பெருந்துணை செய்யும் நூல். இதுவேயன்றிப் பழைய உலகத் தோற்றம், ஒடுக்கம் முதலானவற்றை உணர்த்த வல்ல நூலும் ஆகும். அதன் ஆசிரியர் ஆரியப்பப் புலவர். காலம் அறிதற்கு இல்லை.

**பாசவதைப் பரணி** = இது ஒரு வேதாந்த நூல். தமிழில் வெற்றி கண்ட வீரன் மீது பாடப்படும் பரணிபோல, சிவான் மாவைப் பந்தித்து நிற்கும் பாசத்தை அழித்து வெற்றி காணும் வகைகளை உணர்த்தும் நூல். இதன் ஆசிரியர் தத்துவராயர். காலம கி. பி. 16 ஆம நூற்றாண்டு.

**பாண்டிமண்டல சதகம்** = பாண்டிய நாட்டின் பெயரால் நூறு பாடல்களில் பாடபபட்ட நூல். இதனால் பாண்டிய நாட்டுப்

புலவர்கள், பாண்டிய நாட்டு சரித்திரக் குறிப்புகள் அறியப்படும். காலம் அறிதற்கு இல்லை. ஆசிரியர் ஐயம்பெருமாள்.

பாரதம் = இப் பெயரால் இரு புலவர்கள் பாடிய நூற்கள் உண்டு. ஒன்று வில்லிபுத்தூரரால் பாடப்பட்டது. அது வில்லிபாரதம் எனப்படும். வில்லியார் தம்மை ஆதரித்த வக்கபாகை வரபதி ஆட்கொண்டான் அது வேண்டுகோளுக்கிணங்கி இந்நூலைப் பாடினார். அவனது சிறப்பையும் இந் நூலில் தக்க இடத்தில் வைத்துப்பாடியுள்ளார். காலம் கி. பி. 15-ஆம் நூற்றுண்டு. நல்லாப்பிள்ளை என்பவரும் பாரதம் பாடியுள்ளார். அது நல்லாப் பிள்ளை பாரதம் என்று கூறப்படும். இதன்காலம் கி.பி. 18ஆம் நூற்றுண்டு. இவ்விரு நூல்களும் பரத வம்சத்தவர்களான கௌரவ பாண்டவர்களின் வரலாற்றைக் கூறுவனவாகும்.

பாரத வெண்பா = பாரதக் கதையை வெண்பாவால் பாடிய நூலே பாரத வெண்பாவாகும். இம்முறையில் பாடியவர் பெருந்தேவனார் என்பவர். காலம் 9-ஆம் நூற்றுண்டு.

பாரிகாதை = தமிழ் நாட்டுப் பண்டைக் காலக் கடையெழுவள்ளல்களுள் ஒருவனான பாரி என்பவனது வரலாற்றை வெண்பாவால் கூறும் நூல் இது. இதனைப் பாடியவர் திரு. ரா. ராகவய்யங்கார் என்பவர். இதன் பொருட்டு ராஜா சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் பொன் முடிப்பு ஒன்றையும் ஆசிரியர்க்குப் பரிசு அளித்துள்ளார்.

பாவலர்விருந்து = பல்வகையான பொருள்களின் மீது சிறந்த கருத்துக்கள் வெளிவரும் முறையில் அகவல் பாவால் பாடப்பட்ட நூலாகும். இது ஆங்கிலத்தில் உள்ள சானட் என்னும் முறையில் அமைதல் வேண்டும் என்ற எண்ணத்துடன் பாடப்பட்டது. கலங்கரை விளக்கம், மாணிக்கன் முதலான தலைப்புக்களுடன் அமைந்த பாடல்களைக் காண்க. இதன் பெருமை அறிந்த டாக்டர் போப்

அவர்கள், ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தும் இருக்கின்றார். இதன் ஆசிரியர் பரிதிமாற் கலைஞர் என்னும் திரு. வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் ஆவார். காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு.

## பி

**பிங்கல நிகண்டு** = நிகண்டு என்பது தமிழ்மொழியில் உள்ள சொற்களின் பொருளை அறிவிக்கும். நூலாகும். இதனைப் பாடியவர் பிங்கலமுனிவர். காலம் 10-ஆம் நூற்றாண்டு.

**பிரதாபமுதலியார் சரித்திரம்** = இது ஒரு நல்ல தமிழ் நாவல். படிக்கப் படிக்கச் சுவையும் நகையும் தரும் நூல். எழுதியவர் மாயூரம் வேதநாயகம் பிள்ளை. காலம் 19-ஆம் நூற்றாண்டு.

**பிரபுலிங்க லீலை** = கன்னட தேசத்துக் கதைகளின் தொடர்புடையது. காவியச்சுவை ததும்ப வெகு அழகான முறையில் பாடப்பட்டது. வீர சைவ சித்தாந்தக் கருத்துக்களைக் கதைகளின் வாயிலாக விளக்கும் நூல். இதில் உள்ள பிரிவுகள் படலம் என்றோ, சருக்கம் என்றோ, கூறப்படாமல் கதி என்று கூறப்பட்டிருக்கும். பிரபுவாகிய லிங்கத்தின் திருவிளையாடல்களைக் கூறும் நூல். மாயையின் வன்மை, அல்லமன் மாண்பு முதலானவற்றைக் காணலாம். இதில் காணப்பெறும் வர்ணனைகளும் கற்பனைகளும் கற்றோர்க்கு இன்பந் தரும். ஆசிரியர் துறை மங்கலம். சிவப்பிரகாச சுவாமிகள். காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

**பிரபோத சந்திரோதயம்** = அறிவு, மோகத்துடன் சண்டை செய்து, வெற்றி காண்கின்றது என்பதை விருத்தக் கவியால் காவிய இன்பம் தோன்றப் பாடப்பட்ட ஒரு வேதாந்த நூல். ஆசிரியர் திருவேங்கட மன்னன், திருவேங்கிடநாத ஐயர் என்றும் கூறுவர். காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

## பு

**புலவர் புராணம்** = பண்டைக்காலத்துப் புலவர்களின் வரலாற்றை அறிவிக்கும் நூல். இதனைப் பாடியவர் முருகதாச

சுவாமிகள். காலம் 19ஆம் நூற்றுண்டு.

புறத்திரட்டு = இந் நூல் ஒரு தொகை நூல். இந் நூலில் பல நூல்களி னின்றும் தேர்ந்தெடுக் கப்பட்ட பாடல்கள் உள் ளன. இத்தொகை நூலால் இறந்துபட்ட சில நூற்களின் பெயர் களையும், பாடல்களையும் அறியலாம். இது முறைப் படத் தொகுக்கப்பட்டுள் ளது. திருக்குறள் போன்ற நூல்களில் உள்ள தலைப்புக்களைப் போன்று தலைப்புக்களைப் பெற்று அத்தலைப்பின் கீழ்ப் பன்னூல்களி னின்று எடுக்கப்பட்ட பாடல்கள் தரப்பட்டுள் ளன. இந்நூல் ஆராய்ச்சி யாளருக்குப் பெருந்துணை செய்யவல்லது. இதனை இம் முறையில் தொகுத் தவர் யாவர் என்பது அறிதற்கு இல்லை.

புறநானூறு = சங்கம் மரு விய எட்டுத்தொகை நூற் களுள் ஒன்று. இதில் நானூறு பாடல்கள் உண்டு. புறப்பொருளைப் பற்றிக் கூறும் நூல். இதில் பல புலவர்களின் பாடல்கள் காணப்படும். அப் புலவர்கள் ஆண் பாலராகவும், பெண்பால ராகவும், பல சாதியின ராகவும், அரசர்களாகவும் பல தொழிலினராகவும், குறுநில மன்னர்களாக வும் உள்ளனர். இந்நூல் பண்டைத் தமிழ் நாட் டின் பெருமை, மக்களின் நாகரிகம் முதலியன அறி தற்குப் பெருந் துணை செய்யவல்லது. நீதிகளும் அரிய கருத்துக்களும் அடங்கிய நூல். இதன் மூலம் பண்டைக்காலத்து மக்களைப்பற்றியும், வள் ளல்களைப்பற்றியும், அரசர் களைப்பற்றியும் நன்கு அறி யலாம். இதற்கு உரை உண்டு. ஆனால் உரை யாசிரியர் பெயர் தெரிந் இலது. காலம் கடைச்சங்க காலம்.

புறப்பொருள் வெண்பாமாலை இது வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, தும்பை முதலான புறப் பொருளைப்பற்றி வெண் பாவால் பாடப்பட்ட நூல். இந் நூலால் தமிழ் நாட் டுப்போர் முறை, வீரச் சிறப்பு முதலியன அறிய லாம். இதன் ஆசிரியர் ஐயனாரிதனர். காலம் கி. பி. 9-ஆம் நூற்றுண்டு.

இந்நூலுக்கு உரை உண்டு. இதனை எழுதியவர் சாமுண்டி தேவ நாயனார் என்பவர். ஒரு சிலர் மாகவூர்கிழான் எழுதினார் என்றும் கூறுவர்.

## பெ

**பெரிய திருமொழி** = நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் உள்ள ஒரு பகுதி. திருமால் மீது பாடப்பட்ட தோத்திர நூல். இதனைப் பாடியவர் திருமங்கை ஆழ்வார். காலம். கி. பி. 9 ஆம் நூற்றாண்டு. இதற்குப் பெரியவாச்சான் பிள்ளை என்பவர் எழுதிய வியாக்கியானம் உண்டு.

**பெரியபுராணசாரம்** = பெரிய புராணத்தை அடிப்படையாகக் கொண்டு, ஒவ்வொரு நாயன்மார்களின் மீதும் ஒவ்வொரு விருத்தமாகப் பாடப்பட்ட நூல். சில நாயன்மார்களுக்கு இரண்டு பாடல்களும் உண்டு. இதன் ஆசிரியர் கொற்றவங்குடி உமாபதி சிவசாரியர். காலம். 14 ஆம் நூற்றாண்டு.

**பெரிய புராணம்** = சைவத் திருமுறை பன்னிரண்டனுள், பன்னிரண்டாவதாகத் திகழ்வது. பெரியவர்களான சிவனடியார்களின் வரலாற்றைக் கூறும் நூல். இது ஒருசீர் திருத்த நூல் என்பதையும், இக்காலத்துக்கு ஏற்ற நூல் என்பதையும், இது ஒரு வரலாற்று நூல் என்பதையும், சாதி, மத வேறுபாட்டைக் கடந்த நூல் என்பதையும் விதவை மணம், சமபந்திபோசனம், பிறப்பால் உயர்வு தாழ்வு கருதாத நிலைமை ஆகிய இவற்றை விளக்கும் நூல் என்பதையும் இதனைப் படிப்பவர் உணராமல் இரார். சைவ சமய அடியார்களின் வரலாற்றைக் கூறுவது. இதன் ஆசிரியர் சேக்கிழார், காவியச்சுவை கனிந்து ஒழுகும் நூல். கவி நலம் கனிந்த நூல். இரண்டாம் குலோத்துங்கன் சிவக சிந்தாமணியில் ஈடுபட்டிருந்த நிலையினையுணர்ந்த சேக்கிழார். சிவனடியார்களின் வரலாற்றைக் கூற, அவற்றைக் காவியமாகப் பாடும்படி வேண்டிக்கொண்டதன் காரணமாக வெளிவந்த நூல். காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு. சுந்தரர் பாடிய தொகை

நூலை முதல் நூலாகவும், நம்பியாண்டார் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியை வகை நூலாகவும்கொண்டு சேக்கிழார் இதனை விரிநூலாகப்பாடினார். "தண்டமிழின் மேலாந்தரம்" எனக்குறிப்பிடப்பட்ட ஆறு நூல்களில் இதுவும்ஒன்று. இது திருத் தொண்டர் புராணம்என்றும் கூறப்படும். இது சைவத் திருமுறை 12-னுள் பன்னிரண்டாம் திருமுறையாகும்.

பெரியாழ்வார் திருமொழி = நாலாயிர திவ்யபிரபந்தத்தில் உள்ள ஒரு பகுதி. இதில் கிருஷ்ணனது சரித்திரம், அழகாகவும், தோத்திர ரூபமாகவும் பாடப்பட்டுள்ளது. இதனைப் பாடியவர் பெரியாழ்வார். இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளையும் மணவாள முனிகளும் உரை எழுதியுள்ளனர். காலம் 9 ஆம் நூற்றாண்டு.

பெரும்பாணாற்றுப் படை = இது சங்கம் மருவிய பத்துப்பாட்டில் ஒன்றாகும். இதனைப்பாடியவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார் இந்நூல் தொண்டைமான் இளந்திரையன்மீது பாடப்பட்டது. இந்நூலால் அம்மன்னனது பிறப்பும், காஞ்சியம்பதியின் சிறப்பும், தமிழ் நாட்டின் நாகரிகப் பண்பும், தெற்றத்தெளிய விளங்குகின்றன. காலம் கடைச் சங்க காலம். இதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை உண்டு. 500 அடிகளைக்கொண்ட ஆசிரியப் பாவால் ஆனது.

## பொ

பொருநர் ஆற்றுப்படை = 248 அடிகளையுடைய ஆசிரியப்பாவால் ஆனது. இது பத்துப் பாட்டு என்னும் தொகை நூலுள் ஒன்று. இது சோழன் கரிகால் பெருவளத்தான் மீது முடத்தாமக் கண்ணியர் என்பவரால் பாடப்பட்டதாகும். போர்க்களம்பாடும் பொருநனை ஆற்றுப்படுத்தலின் இது இப்பெயர் பெற்றது. காலம் கடைச் சங்க காலம். இதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை உண்டு.

## ம

மகாராசா துறவு = இது வீர சைவ மதத்தைச் சார்ந்த நூல். மன்னன் சிறக்க வீற்றிருந்தும், அச் சிறப்பை உதறித்தள்ளித் துறவு பூண்ட நிலையினைப்

பற்றிக் கூறுவது. இந்நூலால் துறவிகளின் இயல்பு, வைராக்கியசிந்தைபோன்றகருத்துக்கள் நிரம்பஉள்ளன. இதனைப் பாடியவர் சாந்தலிங்க சுவாமிகள். காலம். 17ஆம் நூற்றுண்டு.

**மக்கள் நூறுண்டு வாழ்வது எப்படி?** = இது ஒரு வசன நூல். இந்நூல் வாயிலாக மக்கள் உடலை ஓம்பும் விதத்தையும் உணவு கொள்ளும் முறையையும் மற்றும் பல குறிப்புக்களை அறியலாம். இநநூலில் கூறப்பட்ட முறையில் சிறிதும் வழுவாது வாழ்க்கையை நடத்திருல் உலகில் நூறுண்டுகள் உயிருடன் வாழலாம் என்பதை நன்கு தெற்றத் தெளியஅறிந்து கொள்ளலாம். இதனை எழுதியவர் சுவாமி வேதாசலம் என்ற மறைமலை அடிகள். காலம் 20 ஆம் நூற்றுண்டு.

**மணிமேகலை** = ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்று. கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மணிமேகலையின் வரலாற்றைக் கூறுவது. மணிமேகலை துறவு பூண்டு வாழ்ந்த காரணத்தால் இது மணிமேகலை துறவு என்றும் கூறப்படும். இது பௌத்த மதக் கொள்கைகள் பலவற்றை ஆங்காங்கு விளக்கிச் செல்கிறது. இதன் மூலம் தமிழ்நாட்டு வரலாற்றுக் குறிப்புக்கள் பலவற்றைக் காணலாம். யாக்கை நிலையாமை இளமை நிலையாமை, முதலியன வெகு தெளிவாகக் விளக்கப்பட்டுள்ளன. நீதிகள் பலவும் கூறப்பட்டுள்ளன. கற்புடை மாதர் செயல்களும் இதில் உள்ளன. இதனை எழுதியவர் கூலவாணிகச் சீத்தலைச் சாத்தனுர். காலம் கடைச் சங்ககாலம். இந் நூலைக் குறித்துச் சிறந்த முறையில் ஓர் ஆராய்ச்சிநூலும் வெளிவந்துள்ளது. அதனை எழுதியவர் ஔவை துரைசாமிப் பிள்ளை என்பவர்.

**மதிவாணன்** = இது ஓர் உரை நடை நூல். பெரிதும் பிறமொழி கலவாது தூய தமிழ் நடையில் எழுதப்பட்ட நூல். உயர்ந்த கம்பீரமான நடையுடையது. படிக்கப்படிக்க இனிமை தருவது. ஆசிரியர் பரிதிமால் கலைஞர். காலம் கி. பி. 20 ஆம்

நூற்றாண்டு. ஆங்கிலத்தில் உள்ள நாவல்போல் இது தமிழில் உள்ள நாவல்.

**துரைக்கலம்பகம்** = தென் மதுரை சொக்கலிங்கப் பெருமான் மீது பாடப்பட்ட நூல். தமிழின் மாண்பு, மதுரையின் சிறப்பு முதலியன இதனால் தெரியவரும். இதனைப் பாடியவர் குமரகுருபர சுவாமிகள். காலம். கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

**மதுரைக்காஞ்சி** = சங்கம் மருவிய பத்துப்பாட்டில் ஒரு பாட்டு. ஆசிரியப் பாவால் 782 அடிகளையுடையது. வீடு பேற்றை அடையப் பல்வேறு நிலையாமைகளைப் பெரியோர் எடுத்துக்கூறுவது காஞ்சியாதலின் இதிலும் அத்தகைய குறிப்புக்கள் காணப்படுதலின் இப்பெயர் பெற்றது. இம்முறையில் தலையாலங்காலத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியற்கு விடுபேறு நிமித்தம் பலவகை நிலையாமையைச் செறியறிவுறுத்தினார் மாங்குடி மருதனார் என்பவர். இது தமிழ் நாட்டின் சிறப்பை அறிதற்குப் பெருந் துணைசெய்ய வல்லது. காலம் கடைச்சங்க காலம். இதற்கு நச்சினார்க்கினியர் உரை உண்டு.

**மத்தான்சாயபு பாடல்** = இது ஒரு வேதாந்த கருத்துக்கள் அடங்கிய நூல். தாயுமானவர் பாடல் போக்கைத் தழுவிப் பாடப்பட்டது. அமைப்பு முறையும் அதுபோன்றே இருக்கும். இதனைப் பாடியவர் மத்தான்சாயபு காலம் 19 ஆம் நூற்றாண்டு.

**மலரும் மாலையும்** = தனித் தனிமலர்களும் அம்மலர்களால் ஆன மாலைகளும் எப்படி நலனுற விளங்குமோ, அது போலத் தனித் தனிப் பாடல்களையும் பாடல்களின் தொடர்பு பெற்ற தொடர்நிலைச் செய்யுட்களையும் கொண்டு இந் நூல் தொடுக்கப்பட்டது. இதனால்தான் இது இப்பெயர்பெற்றது. இதன் ஆசிரியர் தேசிகவிநாயகம்பிள்ளை. காலம் 20 ஆம் நூற்றாண்டு.

**மலைபடுகடாம்** = சங்கம் மருவிய பத்துப்பாட்டில் ஒன்று. இது கூத்தர் ஆற்றுப்படை என்றும் கூறப்படும். 583 அடிகளைக்கொண்டது. ஆசிரி

யப்பவால் ஆனது. மலைக்கு யானையை உவமானமாகக் கூறி அதனிடம் பிறந்த ஓசையைக் கடாம் எனச் சிறப்பித்ததனால் இது மலைபடுகடாம் என்ற பெயரைப் பெற்றது. பரிசில் பெற வரும் கூத்தன் ஒருவனைப் பரிசில் பெற்றான் ஒருவன் செய்கண்மாத்துவேள் நன்னன் சேய் நன்னனிடத்தில் ஆற்றுப் படுத்தியதாக அம்மன்னனை இரணிய முட்டத்துப் பெருங் குன்றூர்ப் பெருங் கௌசிகனார் பாடினர். காலம் கடைச் சங்க காலம். இதற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரை உண்டு.

**மனுமுறை கண்ட வாசகம்** = இது ஓர் உரை நடை நூல். மனுநீதி கண்ட சோழனது வரலாற்றைப் பெரிய புராணத்தைத் தழுவி எழுதப்பட்ட நூல். இதன் வாயிலாக ஆசிரியர், சோழநாட்டின் சிறப்பு, பசுவின் மாண்பு, அரசன் கடமை, மந்திரியின் மாண்பு, மக்கள் செய்யக் கூடாத் தீமைகள் முதலானவற்றை அழகாகக் குறித்து இராமலிங்கசுவாமிகள் எழுதியுள்ளார். இவ்வரிய நூலை எழுதியவர் காலம் 19 ஆம் நூற்றாண்டு.

**மனோன்மணீயம்** = இது ஒரு நாடக நூல். பெரிதும் ஆசிரியப்பாவால் ஆனது. வேற்றுப்பாக்களும் சில உண்டு. இது ஆங்கில நூலின் நாடக அமைப்பு முறையில் களம், அங்கம், முதலிய உறுப்புககளைக் கொண்டது. இதல் கடவுள் வாழ்த்துத் தமிழ்த் தாய் வாழ்த்து. அதன் மூலம் தமிழின் பெருமை திறம்படக் கூறப்பட்டுள்ளது. அக்கடவுள் வாழ்த்தில் கன்னடம், தெலுங்கு, மலையாளம், முதலான மொழிகள் தமிழ்மொழியின் சேய்கள் என்பதையும், தமிழ்மொழி அவற்றினை தாய் என்பதையும் யும் குறிததிருப்பதை நன்குதெரியலாம். இதில் உள்ள சிவகாமி சரிதை படித்து இன்புறுதற்குரியது. இந்நூல் முழுமையும் ஆங்கில நூலைத் தழுவி எழுதப்பட்டது. ஆசிரியர் சுந்தரம்பிள்ளை. காலம் 19 ஆம் நூற்றாண்டு. தாவரத்தைப் பற்றியும் வாய்க்காலைப் பற்றியும் நாங்கூழ்ப் புழுவைப்பற்றியும் கூறும்

இடங்களில் பல உண்மைகளை இந்நூல் எடுத்துக் காட்டுகிறது. அதன் வாயிலாகச் சமயக் கருத்துக்கள் பல அறியவருகின்றன.

## மா

**மாணிக்கவாசகர் காலம்** = இது ஒரு சிறந்த உரைநடை நூல். இந்நூலில் மாணிக்கவாசகர் எக்காலத்தில் திகழ்ந்தார் என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது. இந்நூலில் தமிழ் நாட்டில் திகழ்ந்த பல மாபெரும் புலவர்களின் காலங்களும் திட்டவட்டமாகக் குறிக்கப்பட்டுள்ளன. அகத்தியர், தொல்காப்பியர் சைவ சமய ஆசிரியர்கள் வைணவ சமய ஆசிரியர்கள் மற்றும் பல ஆசிரியர்களின் காலங்களும் எழுதப்பட்டுள்ளன. தமிழ் மொழி ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்களுக்கு இது ஒரு பெருந்துணையாகும். எழுதியவர் சுவாமி வேதாசலம் என்னும் மறைமலை அடிகள். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு. இந் நூலாசிரியர் ஒவ்வொரு நூலையும் எழுத்தெண்ணிச் சொல்லெண்ணிப் படித்தவர் என்பதற்குரிய சான்றுகள் பலவற்றை இதன்கண் அறிந்து கொள்ளலாம்.

**மாறன் அலங்காரம்** = இது தமிழ் மொழிக்குரிய அணி இலக்கணத்தை அழகுபடக் கூறும் நூல். சூத்திரயாப்பால் அமைந்தது. தொல்காப்பியத்தில் சுருக்கமாகச் சொல்லியவற்றை விரிவாக விளக்கும் நூல். தக்க உதாரணங்கள் காட்டி எழுதப்பட்டது. ஆசிரியர் குருகைப்பெருமாள் கவிராயர் கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

## மீ

**மீனாட்சிசுந்தரம்பிள்ளை சரித்திரம்** = இது ஒரு வசன நூல். திரிசிரபுரம் மகாவித்துவானும் திருவாவடுதுறை ஆதீன வித்துவானும் ஆன மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாற்றைக் குறிக்கும் நூல் இந்நூலை எழுதியவர், மேற்படி பிள்ளையவர்களின் மாணவர்களில் ஒருவராகிய டாக்டர் உ. வே. சுவாமிநாத அய்யர் ஆவார். இதன் வாயிலாக திரு அய்யர் அவர்களின் வாழ்க்கைவரலாற்றையும்

அறிந்து கொள்ளலாம். அரியகுறிப்புக்கள் இதில் உண்டு. காலம் 20ஆம் நூற்றாண்டு.

**மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் பிரபந்தம்** = இதில் மகாவித்துவான் திருவாவடுதுறை ஆதின வித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பாடியுள்ள கலம்பகம், அந்தாதி, பிள்ளைத் தமிழ், சிவபுராணம் முதலானவற்றை ஒன்று சேர்த்து அன்னார் மாணவர் டாக்டர் உ. வே. சுவாமிநாத அய்யர் வெளியிட்டுள்ள ஒரு தொகை நூலாகும். இப்பிரபந்தத் திரட்டால் ஸ்ரீ. பிள்ளை அவர்களின் பிரபந்த நூற் புலமையையும், கவி பாடும் பேராற்றலையும் மற்றும் பல சிறப்புக்களையும் அறியலாம். காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**மீனாட்சி அம்மை கலி வெண்பா** = கலி வெண்பா என்பது வெண்பா வகையுள் ஒன்று. பல அடிகளைக்கொண்டது. அப்பா அமைப்பில் மதுரை மீனாட்சி அம்மையார் மீது பாடப்பட்டமையின் இப் பெயர் பெற்றது. இந் நூலை அம்மையார் தம் மீது பாடும்படி கட்டளையிட்ட காரணத்தால் இது பாடப்பட்டது. தேவியின் திருவருளைப் பெறுதற்கும் துணை செய்யும் நூல். இந் நூலைப் பாடியவர் மதுரைச் சிதம்பர சுவாமிகள். காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு

**மீனாட்சி அம்மை குறம்** = குறம் என்பது குறத்தி குறி சொல்லும் முறைகளைப்பற்றிப் பாடப்படும் நூலாகும். இது மதுரை மீனாட்சியம்மையின் மீது பாடப்பட்டமையின் இப் பெயர் பெற்றது. இந்நூல் குறத்தியர் வாழ்க்கை, மலைவளம் முதலானவற்றை அறிவிக்கும் நிலையில் அமைந்துள்ளது. மீனாட்சியம்மையார் தடாதகை பிராட்டியாராக மதுரையை அரசாண்ட போது விளங்கிய நிலைகளும் இதில் உண்டு. குமரகுருபர சுவாமிகள் இதனைப்பாடினர். காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

**மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்** = மதுரை மீனாட்சியம்மை மீது குமரகுருபர சுவாமிகளால் பாடப்பட்ட நூல். இந் நூலில் உள்ள வருகைப் பருவத்தில் அமைந்த "தொடுக்கும்

கடவுள் பழம்பாடல்" என்ற பாட்டைப் படித்து ஆசிரியர் பொருள்விரித்த போது மதுரை மீனாட்சி அம்மையார் வியந்து தமது கழுத்து முத்து மாலையினை ஆசிரியருக்குப் பரிசு அளித்தார் என்றால், இந்நூலின் மாட்சியினைக் கூற வேண்டுவதில்லை அல்லவா? இந்நூல் மதுரைத் திருமலை நாயகர் அவையில் அரங்கேற்றம் செய்யப்பட்டது. காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

முஃகையத்தின் புராணம் = முஸ்லிம் சமய இலக்கியங்களுள் ஒன்று. முஃகையதின் ஆண்டவர் வரலாற்றைக் கூறுவது. ஆசிரியர் அல்இன் புலவர். காலம் 18 ஆம் நூற்றாண்டு.

முஃகைதீன் மாலை = இதுவும் முஸ்லிம் சமய இலக்கியம். தமிழில் உள்ள பிரபந்த இலக்கண முறைப்படி பாடப் பட்ட நூல். இதன் ஆசிரியர் நயினா முகமது புலவர். காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

முக்கூடல்பள்ளு = பள்ளு என்பது உழத்தியர் பாட்டாகும். இது 96 வகைப்பிரபந்த வகைகளுள் ஒன்று. இதன் மூலம் வயலில் உழவர்கள் உழு தொழில் செய்யும் சிறப்பும், அது போது அவர்கள் களிப்புடன் பாடி ஆடிப்பயிர்த் தொழில் செய்யும் விதமும், மழைவரும் குறிகளைக் கூறும் அழகும் அமைந்திருப்பதைக் காணலாம். சந்தப் பாடல்களைக் கொண்டது. பாடியவர் என்னயிருர் காலம் 18 ஆம் நூற்றாண்டு.

முதற்றிருவந்தாதி = இது நாலாயிர பிரபந்தத்தில் ஒரு பகுதி. இதனைப் பாடியவர் பொய்கையாழ்வார். செய்யுட்கள் எல்லாம் வெண்பாவால் ஆனவை. பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய முதலாழ்வார் மூவரும் பாடியுள்ள திருவந்தாதிகளில், இது முதற்கண் இருத்தலின், இது முதற்றிருவந்தாதி எனப்பட்டது. காலம் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு.

முதுமொழிக்காஞ்சி = இது சங்கம்மருவிய பதினெண்கீழ்க்கணக்கு நூற்களுள் ஒன்று. நீதிகளை அழகுற எடுத்துக் கூறும் நூல். இதில் கூறப்பட்ட ஒவ்வொரு நீதியும் ஒவ்வொரு பழமொழிகளைப்

போல் அமைந்திருத்தலின், இது முதுமொழிக்காஞ்சி எனப்பட்டது. முதுமொழியாவது பழமொழி. ஆசிரியர் கூடலூர் கிழார். காலம் கடைச்சங்க காலம்.

**முத்திநிச்சயம்** = சைவசித்தாந்த கருத்துக்களை அழகுறத் தெளிவுற அறிவிக்கும் நூல். ஆசிரியர் ஞானசம்பந்த தேசிகர். காலம் 16 ஆம் நூற்றுண்டு. இந்நூற்பெயராலேயே மோட்சம் அடைதற்குரிய வழியினை இந்நூல் வாயிலாக அறியலாம் என்பது கூருமலே தெரிகிறதல்லவா?

**முத்துக் குமாரசாமி பிள்ளைத் தமிழ்** = வைத்தீஸ்வரன் கோவிலில் உள்ள முத்துக்குமரன்மீது குமரகுருபர சுவாமிகள் பாடிய பிள்ளைத்தமிழ். இதன்மூலம் சோழ நாட்டு வளம், புலவரின் கற்பனைத்திறன் முதலானவற்றைப் படித்து இன்புறலாம். காலம் கி. பி. 17 ஆம் நூற்றுண்டு. சிவபெருமானது சடையில் உள்ள சந்திரனைப் பாம்பினிடம் வைத்தும், மானின் வாயில் அறுகம் புல்லை வைத்தலும், இறைவன் மார்பில் கூத்தாடியும், கண் சிவக்க கங்கையாற்றில் குளித்தும், மற்றும பல குறும்புகளையும் முருகன் செய்வார் என ஆசிரியர் அழகுபடக்கூறி இருப்பது படிக்கச்சுவை தருவதாகும்.

**முத்தொள்ளாயிரம்** = இது தமிழ்மொழியில் தோன்றி மறைந்த நூற்களில் ஒன்று. இது சேர சோழ பாண்டியர்கள்மீது தனித் தனியே 900 பாடல்களாகப் பாடப்பட்ட நூலாகும். ஆக 2700 பாடல்களைக் கொண்டிருக்க வேண்டும். ஆனல் ஒரு சிலர் தனித்தனி 300 பாடல்கள் பாடப்பட்டு 900 பாடல்களைக் கொண்டதாக இருக்க வேண்டுமென யூகிக்கின்றனர். என்ன கூறிலும் நமக்கு இதுபோது கிடைத்துள்ள பாக்கள் சிலவே. அச்சிலவற்றுடன் இந்நூல் வெளிவந்துள்ளது. இதில் 108 பாடல்களே இதுபோது கிடைத்துள்ளன. இந்நூலால் மூவேந்தர்களின் சிறப்பு, தமிழ் நாட்டுச் சிறப்பு முதலியன அறியலாம். அகப்பொருள் சுவையுடைய பாடல்கள் படிக்கப் படிக்கச்சுவை தருவனவாகும்.

ஆசிரியர் யார் என அறிதற்கில்லை.

முல்லைப்பாட்டு = இது சங்கம் மருவியபத்துப் பாட்டில் ஒன்று. இதன் மூலம் பிரிந்த தலைமகன் திரும்பும் அளவும் தலைவி ஆற்றியிருந்தமையையும் அவன் வருகையைக் கண்டு தோழி கூறுவதையும் அறியலாம். இதனைக் காவிரிப் பூம்பட்டினத்துப் பொன் வாணிகனார்மகனார் நப்பூதனார் பாடியருளினார். 103 அடிகளைக் கொண்டது. இதன்மூலம் பல அரிய குறிப்புக்களை அறிந்து இன்புறலாம். நிமித்தம் பார்க்கும் வழக்கமும் பெண்கள் அரசனது பாடி வீட்டில் அவனுக்குக் காவல் பெண்களாக இருந்து காத்துவந்தனர் என்பதும், யவனர்கள் காவல்காரர்களாகவும், விளக்குத் தூக்கிகளாகவும் அமைக்கப்பட்டனர் என்ற செய்தியும் ஊமையர்களான மிலேச்சர் அரசன் பள்ளி கொள்ளும் இடத்தில் காவல் காத்தனர் என்ற செய்தியும் அறிந்து இன்புறலாம், காலம் கடைச் சங்க காலம். இதற்கு நச்சினார்க்கினியர் உரை உண்டு. இத்தகைய நூலுக்கு அழகுக்கு அழகு செய்வது போல மறைமலையடிகள் முல்லைப் பாட்டு ஆராய்ச்சி என்ற நூலையும் எழுதியுள்ளார்.

## மூ

மூத்த திருப்பதிகம் = சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராம் திருமுறையில் இரண்டாவது நூலாகத் திகழும் பெருமையுடையது. தேவாரப் பதிகங்களே திருப்பதிகம் என்னும் சிறப்புக்குரியனவாக இருத்தலின், அத்தேவாரப் பதிகங்களை நோக்க இப்பதிகம் முன்னர்த் தோன்றினமை கருதி, இதற்கு மூத்த திருப்பதிகம் என்ற பெயரை ஈந்தனர். இது திருவாலங்காட்டின் இறைவர் மீது காரைக்கால் அம்மையார் பாடிய திருப்பதிகமாகும். இதன் காலம் அப்பர், சம்பந்தர் சுந்தரர் ஆகிய மூவருக்கும் முற்பட்ட காலம். ஆகவே, கி. பி. 7 ஆம் நூற்றுண்டுக்கு முற்பட்டது.

மூத்த நாயனார் இரட்டை மணிமாலை = இது சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பதினோராவது திரு

முறையில் அமைந்ததாகும். இது விநாயகப் பெருமான் மீது பாடப்பட்டது. இளைய நாயனார் என்று முருகப் பெருமானைக் குறித்துப் பேசப்படுதலின், ஈண்டு மூத்த நாயனார் என விநாயகப் பெருமான் குறிப்பிடப் பட்டார். இதனைப் பாடியவர் கபிலதேவ நாயனார். விநாயகரைப் பற்றிய குறிப்புச் சங்க நூற்களில் எங்கும் இல்லை. ஆகவே, இங்குக் குறிப்பிடப்பட்ட கபிலதேவ நாயனார் என்பவர் சங்க காலக் கபிலராக இரார் என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. ஆகவே, காலம் உறுதியாகக் கூறுவதற்கில்லை.

மூத்த பிள்ளையார் பிள்ளைத் தமிழ் = இதுவும் பதினோராம் திருமுறையாக அமைந்த நூலாகும். விநாயகப் பெருமானைப் பற்றிய தாகும். இதனைப் பாடியவர் அதிராவடிகள். காலம் அறிதற்கு இல்லை.

மூன்றாம் திருவந்தாதி = நாலாயிர பிரபந்தத்தில் உள்ள ஒரு பகுதி. 100 வெண்பாக்களைக் கொண்ட நூல். திருமால் மீது பாடப்பட்ட தோத்திர நூல், ஆசிரியர் பேயாழ்வார். காலம் கி.பி. 8-ஆம் நூற்றாண்டு. பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் ஆகிய மூவரும் அந்தாதி பாடியுள்ளமையின் அவைகளுள் இவ்வந்தாதி மூன்றாவதாக அமைந்திருத்தலின், இது மூன்றாம் திருவந்தாதி எனப்பட்டது.

## மெ

மெய்கண்ட சாத்திரம் = இந்நூலுக்கு அமைந்திருக்கும் பெயரைக் கொண்டே இந்நூலின் அருமை பெருமைகளை உணர்ந்து கொள்ளலாம். இது ஒரு தொகுப்பு நூல். பதி, பசு, பாசங்களைப் பற்றிய சைவ சித்தாந்தத்தின் தெளிவை நன்கு விளக்கும் நூல். இந்நூற்களைவிடத் தெற்றத் தெளிய சைவ சித்தாந்த உண்மைகளை ஒழுங்காகத் தர்க்க முறைப்படி காரணங்களுடன் கூறத்தக்க நூல்கள் எவையும் இல்லை என்னலாம், இவற்றிற்குப்பின் வந்த பிற நூல்கள் இக்கருத்துக்களைக் கூறினும் அக்கருத்துக்களுக்கு அடிப்படை இந்நூற்களே அன்றி வேறு அல்ல. இந்நூலில் திருவுந்தியார்

திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், சிவப்பிரகாசம் திருவருட் பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் ஆகிய பதினான்கு சாத்திரங்கள் உள்ளன. பற்பல காலத்தில் இருந்த ஆசிரியர்கள் செய்த காரணத்தால் காலம் குறிப்பிடப்படவில்லை.

## மோ

**மோகவதைப் பரணி** = இது ஒரு வேதாந்தநூல். இதனைப் பாடியவர் தத்துவராயர். இது வேதாந்த கருத்துக்களைக் கற்பனையாகக் கொண்டு பாடப்பட்டது. இதில் மோகன், விவேகன் என்பானுக்கும் போர் நடந்ததாகக் கூறி, இறுதியில் விவேகன் வெற்றி கொண்டான் என்ற முறையில் முடியும் நூல். காலம் கி. பி. 16-ஆம் நூற்றாண்டு.

## ய

**யசோதர காவியம்** = இது ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்று. இது 320 பாடல்களுடன் 5 சருக்கங்களுடன் விளங்குவது. இது வடமொழி யசோதர சாத்திரத்தை ஆதாரவாகக் கொண்டு எழுதப்பட்டது. மாரித்தன் என்னும் இராச மாபுர மன்னனுக்கு உயிர்கள் பலி கொடுத்தல் தீமையாகும் என்று அறுவுறுத்த யசோதரனது பல பிறவிகளைக் கூறும் கதைகள் அடங்கிய நூல். தலைவன் யசோதரன். கதை சுவையுடையது. ஆசிரியர் அறிதற்கு இல்லை. கி. பி. 11-ஆம் நூற்றாண்டிற்குப் பின் தோன்றிய நூல்.

## யா

**யாப்பருங்கலக் காரிகை** = தமிழ் மொழியின் இலக்கணங்களுள் ஒன்றான யாப்பிலக்கணத்தைக் கட்டளைக் கலித்துறை என்னும் பாவால் கூறும் நூல். எழுதியவர் அமிர்தசாகர முனிவர். இதற்குக் குணசாகரர் என்பார் உரை எழுதியுள்ளார். காலம் 11-ஆம் நூற்றாண்டு. சுயமாகச் செய்யுளைப் பாட இந்நூற் பயிற்சி இன்றியமையாது வேண்டற்பாலது.

**யாப்பருங்கலவிருத்தி** = இதுவும் யாப்பிலக்கணத்தை விரித்துக் கூறும் நூல். இது சூத்திரப் பாவால் ஆனது. இதன் மூலம் செய்யுளைப்பற்றிய அரிய பெரிய குறிப்புக்களைக் காணலாம். புது புது செய்யுட்களின் பெயர்களை உணரலாம். ஆராய்ச்சி செய்பவர்க்கு ஒரு பெருந் துணையான நூல். ஆசிரியர் அமிர்தசாகரர். காலம் 11-ஆம் நூற்றுண்டு. இந்நாலுக்கு உரையும் உண்டு.

**யாழ்நூல்** = இம்மாதிரியான நூல் ஒன்று இருந்ததாக நச்சினர்க்கினியர் தமது உரையில் மேற்கோள் கொடுத்திருப்பதன் மூலம அறியலாம். ஆனல், இது போது அந்நூல் கிடைத்திலது. 20-ஆம் நூற்றுண்டில் யயிலேறும் பெருமாள் பிள்ளையாகிய சுவாமி விபுலானந்தர்என்பவரும் உரைநடையில் இப்பெயரால் ஒரு நூல் எழுதியுள்ளார். இதில் யாழ்வகைகளையும் அவற்றின் உருவங்களையும் மற்றும் பல அரிய குறிப்புக்களையும் எடுத்துக் காட்டியுள்ளார். ஆராய்ச்சிக்கு உகந்த நூல்.

## வ

**வளையாபதி** = ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. இந்நூல் முற்றிலும் கிடைத்திலது. உரைகளில் மேற்கோளாக் காட்டப்பட்ட சில பாடல்களே கிடைத்துள்ளன. இது சமண சார்புடைய நூல். இது சீவகசிந்தாமணிக்கு முற்பட்டது. ஆகவே, இது பத்தாம் நூற்றுண்டுக்கு முற்பட்ட நூல்.

## வா

**வாக்குண்டாம்** = இந்நூல் நீதிகளை அறிவிப்பது. ஔவையார்பாடினதாகக் கூறப்பட்டு வருவது. வாக்குண்டாம் என்று முதல் பாடல் தொடங்கப் பட்டமையின் அத்தொடக்கப்பெயரே நூலுக்கு அமைக்கப்பட்டது. இந்த ஔவையார் சங்க காலத்து ஔவையார் அல்லர். இதில் வான்கோழி குறிப்பிட்டிருத்தலின், இது ஆங்கில ஆட்சி தமிழ் நாட்டில் நிலவத் தொடங்கிய காலத்தில் எழுதப்பட்டதாகக் கருதலாம். ஆகவே இது கி. பி. 16 ஆம் நூற்றுண்டு நூல். எனக் கருத இடமுண்டு.

**வாயு சங்கிதை** = வியாசர் வடமொழியில் இயற்றியதை ஒட்டி வரதுங்க பாண்டியர் தமிழில் பாடிய நூல். சிவபரத்துவத்தை விளக்குவது. காலம் 16-ஆம் நூற்றாண்டு.

## வி

**விநாயக புராணம்** = இது பார்க்கவ புராணம் என்றும் கூறப்படும். விநாயகப் பெருமானது வரலாற்றையும், பெருமையையும், அவரைப் பூசித்துப் பேறு பெற்றவர்களையும் எடுத்து மொழிவது. திருக்குறள் கருத்துக்கள் மிகுதியும் இதில் எடுத்து ஆளப்பட்டுள்ளன. அவற்றில் பெரும்பாலும் பொருட்பாலில் உள்ள குறட்பாக்களின் கருத்துக்களைப் பரக்கக் காணலாம். ஆசிரியர் கச்சியப்ப முனிவர். காலம் 18-ஆம் நூற்றாண்டு.

**விநாயகர் அகவல்** = விநாயகர் சதுர்த்தி அன்று முக்கியமாகப் பாராயணம் செய்யும் நூல். இதனை ஔவையார் பாடினர். இவ்வௌவையார் சுந்தரர் காலத்தவர். இந்நூலைப் பாடி விநாயகப் பெருமான் திருவருளால் சுந்தரருக்கு முன் கைலாயம் சேர்ந்தவர். எளிய நடையில் செய்யுள் அமைப்பு இருப்பினும் அரிய கருத்து உடைய செய்யுளாகும். இதனைப் பிள்ளையார் அகவல் என்றும் கூறுவர். காலம் கி. பி. 9-ஆம் நூற்றாண்டு.

**விநோத ரசமஞ்சரி** = இது ஓர் உரைநடை நூல். படிக்கப்படிக்கச் சுவை தரும் நூல். கம்பரைப் பற்றி முழுவிவரம் இந்நூலால் அறியலாம். தமிழறியும் பெருமாள் கதை இதில்தான் உளது. சிதறுண்ட பல கர்ண பரம்பரைச் செய்திகளை ஒருங்கே அறிவதற்கு இந்நூல் துணை செய்யும். இதன் ஆசிரியர் வீராசாமி செட்டியார். காலம் கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

**விவேகசிந்தாமணி** = இது ஒரு தொகுப்பு நூல். இதில் பல நூல்களிலிருந்தும் தேர்ந்து எடுக்கப்பட்ட பாடல்கள் உள்ளன. அவை அனைத்தும் சிறந்த நீதிகளைக் கற்பிப்பனவாய் இருக்கும். பல நூல் கருத்துக்களை ஒரு நூலில் காண்பதற்கு இது ஒரு பெருந்துணையானது.

தொகுத்தவர் யாவர் என அறிதற்கு இல்லை. தொகுத்த காலமும் தெரிதற்கு இல்லை.

**விறலி விடுதூது** = இது ஒரு சிற்றின்ப நூல். இதில் தாசிகளின் மோசமும், அவர்கள் செய்யும் தந்திரங்களும், அவர்களின் சேர்க்கையால் ஏற்படும் துன்பங்களும், புணர்ச்சி இன்பங்களும் மற்றும் பலவும் அழகுபடக் கூறப்பட்டுள்ளன. விறலி என்பவள் தன் உள்ளக் குறிப்பினைத் தன் உடல் வழியே தோன்ற விறல்பட ஆடிக் காட்டுபவள். அவளைத் தூது விடுக்கும் முறையில் இது அமைந்திருத்தலின் இப்பெயர் பெற்றது. இதனைப் பாடியவர் ஸ்ரீரங்கம் அட்டாவதானியார். காலம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டு.

**வினாவெண்பா** = சைவ சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்று. வினாக்களும் அவ்வினாக்களுக்குரிய விடைகளும் வெண்பாவால் பாடப்பட்ட நூல். இவ்வினாக்களும் விடைகளும் சைவ சித்தாந்தத்தை ஒட்டிய வினாக்களும் அவற்றிற்குரிய விடைகளும் ஆகும். ஆசிரியர் உமாபதி சிவாசாரியார். காலம் கி. பி. 14-ஆம் நூற்றாண்டு. இப்பெயரால் சிற்றம்பல நாடிகளும் ஒரு நூல் எழுதியுள்ளார். அதன் காலம் கி. பி. 15-ஆம் நூற்றாண்டு.

## வீ

**வீர சோழியம்** = இது ஓர் இலக்கண நூல். புத்தமித்திரரால் எழுதப்பட்டது. இதன் மூலம் வடமொழிப் புணர்ச்சி இலக்கணங்கள் முதலியவற்றை அறியலாம். கந்த புராண முதற் பாடலின் தொடக்கமான திக் + தசம் = திகடசம் என்று புணர்ந்தமைக்கு இந்நூலில் இருந்தே இலக்கணம் காட்டப்பட்டது. காலம் கி. பி. 11-ஆம் நூற்றாண்டு.

## வெ

**வெங்கைக்கலம்பகம்** = வெங்கனூர் தலத்து இறைவன் மீது பாடப்பட்ட கலம்பகம். இவ்வூரின் மீது உலாவும், கோவையும் பாடப்பட்டுள்ளன. இவற்றைப் படிக்கப் படிக்க ஆசிரியரின் கற்பனைத் திறத்தை நன்கு சுவைக்கலாம். இவற்றின் ஆசிரியர் துறைமங்கலம் சிவப்

பிரகாச சுவாமிகள். காலம் கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

வெற்றிவேற்கை = நீதிகளை உணர்த்தும் நூல். இது நறுந்தொகை என்றும் கூறப்பெறும். அதிவீரராம பாண்டியரால் பாடப்பட்டது. வெற்றிவேற்கை என்று இந்நூலின் முதற் செய்யுள் தொடங்கலின் இப்பெயர் கொடுக்கப்பட்டது. காலம் கி. பி. 16 ஆம் நூற்றாண்டு.

## வே

வேம்பத்தூரார் திருவிளையாடல் = இது பழைய திருவிளையாடற் புராணம் என்றும் கருதப்படும். மதுரைச் சொக்கலிங்கப் பெருமானது திருவிளையாடல்களை அறிவிப்பது பெரும்பற்றப்புலியூர் நம்பிகள் பாடியது. காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு. இந்நூல் அமைப்பிற்கும் பரஞ்சோதியார் திருவிளையாடற் புராண அமைப்புக்கும் வேறுபாடு நிரம்ப உண்டு.

வேளாளர் நாகரிகம் = இது ஓர் உரை நடை நூல். இதில் வேளாளர் மாண்பும், தமிழ் நாட்டின் நாகரிகமும், நன்கு தெரிவிக்கப்பட்டுள்ளன. வேதத்தில் கூறப்பட்ட செய்திகள் என்ன என்பதைப் பரக்க எடுத்துக் காட்டியும் விளக்கும் நூல். ஆராய்ச்சி செய்பவர்க்குத் துணையாயது. ஆசிரியர் மறைமலை அடிகள். காலம் கி. பி. 20-ஆம் நூற்றாண்டு,

## வை

வைராக்கிய சதகம் = இது வேதாந்த நூல். இதனைத் திருத்துறையூர்ச் சாந்தலிங்க சுவாமிகள் பாடி அருளினர். வைராக்கிய தீபமும் இவரால் பாடப்பட்டதே. இவற்றிற்குச் சிறந்த முறையில் பல மேற்கோள்களைக் காட்டி விரிவானமுறையில் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் உரை எழுதியுள்ளார். காலம் 17-ஆம் நூற்றாண்டு.

நூல் அகராதி முற்றிற்று.

## அ

அகத்தியர் = இவர் தமிழ் முனி, குறுமுனி என்றும் கூறப்படுவர். இவர் வடநாட்டிலிருந்து தென்னாடு வந்தவர். இமயமலையில் சிவபெருமானுக்குத் திருமணம் நடக்கும்போது, தேவர்களும் மற்றுமுள்ளவர்களும் ஒருங்கே திரண்டு கூடியதால் வடகோடு தாழ்ந்தது. தென்கோடு உயர்ந்தது. அதுபோது இவர் சிவபெருமானால் தென்னாட்டுக்கு அனுப்பப்பட்டார். அப்படி வந்தவர் பொதிகைமலையில் தங்கினார். இதனால் இவர் பொதிகை முனிவர் என்றும் கூறப்படுவார். இவர் கும்பத்தில் பிறந்ததனால் கும்பமுனி எனவும் அழைக்கப்படுவார். வடிவில் குறுகிக்காணப்பட்டதால் குறுமுனி என்றும், சிவபெருமானிடம் தமிழ் மொழிபயின்று, இலக்கணம் செய்ததால் தமிழ் முனி என்றும் கூறப்பட்டவர். இந்திரனது பகைவனை விருத்திரா சூரன் கடலில் ஒளிந்துகொள்ள, அவனை வெளிப்படுத்தக் கடலைத் தம் உள்ளங்கையில் அடைத்தவர். இவர் 12000 நூற்பாக்கள் அடங்கிய இலக்கண நூலைச் செய்தவர் என்பர். அதுவே பேரகத்தியம் எனப்படும். ஆனால் அவற்றுள் பல மறைந்துபோக வெகு சில சூத்திரங்களே இதுபோது கிடைத்துள்ளன. சோதிடம், வைத்தியம் சம்பந்தமாக நூல்களையும் செய்தவர். தலைச்சங்கத்தில் ஒரு புலவராகத் திகழ்ந்தவர். இவரது மனைவியார் உலோபாமுத்திரை. காவிரியாறு உண்டானதற்கு இவர் காரணர். இவர் வேத பாடல்களையும் செய்ததாகக்கூறுவர்.

அகோர சிவாசாரியார் = இவர் சிதம்பரத்தில் வாழ்ந்த ஆதி சைவ பிராமணர். இவர் வெற்றிவேற்கை செய்த அதிவீரராமபாண்டியரின் ஆசிரியர் ஆவார். அகோர பத்ததி என்னும் நூலைச் செய்தவர். கி. பி. 16-ஆம் நூற்றாண்டினர்.

அகோர முனிவர் = இவர் வடமொழி தென்மொழி அறிந்தவர். திருவாரூர் தேவாலயத்தில் அபிடேகக் கட்டளையை நடத்தி வந்தவர். கி. பி. 17-ஆம் நூற்றாண்டினர். இலக்கண விளக்க வைத்திய

நாத தேசிகர் ஆசிரியர். கும்பகோணப் புராணம், திருக்கானப்பேர்புராணம், வேதாரண்ய புராணம் இயற்றியவர். இவரை அகோரதேவ முனிவர் என்றும் கூறுவர்.

**அசலாம்பிகை அம்மையார்** = பிராமண வகுப்பினர். காந்தி புராணம், இராமலிங்கசுவாமிகள் புராணம் பாடியவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**அடியார்க்கு நல்லார்** = இவர் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதியவர். நிரம்பையூர் என்னும் ஊரினர். இவரைப் பொப்பண்ண காங்கேயன் என்பவன் ஆதரித்து வந்தான். இவர் தமது வாழ்க்கையைத் திருவாரூருக்கு அருகில் உள்ள திபங்குடியில் நடத்தியவர். கி.பி. 13-ஆம் நூற்றாண்டினர்.

**அட்டாவதானி சுப்பிர தீபக் கவிராயர்** = இவர் வைணவர். கம்மாள சாதியினர். திருவரங்கத்தில் பிறந்தவர். கூளப்ப நாயகன் காதல், விறலி விடுதூது என இரண்டு நூற்களை இயற்றியவர். காலம் கி.பி. 18ஆம் நூற்றாண்டு.

**அணிலாடு முன்றிலார்** = சங்க காலத்தவர். முன்றிலை வர்ணிக்கையில் அணில் ஆடும் முன்றில் எனச் சிறப்பித்துப் பாடிய காரணத்தால் இப்பெயர் பெற்றார். இவரது பாட்டு ஒன்று குறுந்தொகையில் உள்ளது. இவர் பெண்பாலராக இருக்கலாமோ என்று யூகிக்கப் படுகிறது.

**அண்டர்மகன் குறுவழுதியார்** = சங்க காலத்தவர். இவர் பாண்டிய மரபினர். இவரது பாடல்கள் அகநானூற்றில் இரண்டும், குறுந்தொகையில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றும் உள்ளன.

**அண்ணாமலை ரெட்டியார்** = இவர் பாண்டிய நாட்டுக் கரிவலம் வந்த நல்லூருக்கு அடுத்த சென்னிக்குளம் என்னும் ஊரினர். ஊற்றுமலை ஜமீந்தாரிடம் ஆஸ்தான புலவராய்த் திகழ்ந்தவர். இவர் பாடிய நூற்கள் காவடிச் சிந்து, சங்கர நாராயண கோயில் திரிபு அந்தாதி, நவநீத கிருஷ்ணன் பிள்ளைத்தமிழ். அவற்றுள் காவடிச்சிந்து படிக்கப் படிக்கச் சுவை தருவதோடு பேரின்பச் சுவை

யுடன் சிற்றின்பச் சுவைகளையும் இனிதின் எடுத்துக் காட்டும் நூல். கி.பி. 19-ஆம் நூற்றாண்டினர்.

**அதங்கோட்டாசான்** = இவர் அகத்தியமாணவர்களுள் ஒருவர். இவர் முன்தான் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டது. நான்கு வேதங்களை நன்கு பயின்றவர். அகத்தியர் காலத்தவர். இவை அனைத்தும் தொல்காப்பாயிப்பாயிரச் செய்யுளால் விளங்குகின்றன.

**அதிமதுரகவி** = இவர் மதுரையில் வாழ்ந்தவர். திருமலைநாயக்கன் ஆஸ்தானப் புலவர். காளமேகப்புலவரிடம் வாதத்தில் தோற்றவர். கி. பி. 16-ஆம் நூற்றாண்டினர்.

**அதிராவடிகள்** = இவர் பதினோராம் திருமுறையில் உள்ள மூத்த பிள்ளையார் திருமும்மணிக்கோவையின் ஆசிரியர். கி. பி. 9-ஆம் நூற்றாண்டினர்.

**அதிவீரராம பாண்டியர்** = இவர் குலசேகர பாண்டியன் திருமகனார். இவரது தமையனார் வரதுங்க பாண்டியர். கொற்கை, தென்காசி ஆகியவற்றைத் தலை நகராகக் கொண்டு மதுரையை ஆண்டவர். இவரது ஆசிரியர்கள் சுவாமி நாததேவர், வேம்பத்தூர் ஈசன முனிவர், சுவாமி வாசுதேவர், சிதம்பரம் அகோர சிவாசாரியார். இவருக்கு வல்லபதேவன், பிள்ளைப் பாண்டியர், குலசேகரன், குணசேகரவழுதி என்ற பெயர்களும் உண்டு இவர் இயற்றிய நூல்கள் நைடதம், காசிகாண்டம், கூர்மபுராணம் இலிங்கபுராணம், வாயுசங்கிதை வெற்றி வேற்கை என்பன. இவரது தமையனார் வரதுங்க பாண்டியரும் பல நூல்களைச் செய்திருப்பதால் "பட்டரில் இருவர் பாண்டியில் இருவர்" என்ற பழமொழியும் வழக்கத்தில் உள்ளது. பட்டரில் இருவர் சிவஞானமுனிவரும், கச்சியப்பரும். பாண்டியில் இருவர் வரதுங்கரும், அதிவீரராமரும்: தவறுடைய பாடல்களைப் பாடிவரும் புலவர்களின் தலையில் குட்டி வந்த பாண்டியர் இவர். இவரைக் குறித்துத்தான் "குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன் ஈங்கில்லை" என்ற பாடலும் எழுவதாயிற்று.

இவர் 16-ம் ஆம் நூற்றுண்டினர்,

அந்தாரி = இவர் மதுரை கிருஷ்ணவீரப்ப நாய்க்கர் அமைச்சர் சனிப்பெருமாள் திருமகனுர்; தொண்டை நாட்டுப்புலவர். சுந்தர பாண்டியம் என்னும் நூல் இவரால் செய்யப்பட்டது. காலம் கி. பி. 16 ஆம் நூற்றுண்டு.

அநந்த கவிராயர் = மதுரைப் பதிற்றுப்பத்து அந்தாதியின் ஆசிரியர். (இதனைப் பரஞ்சோதி முனிவர் இயற்றியதாகவும் கூறுவர்.) காலம்தெரியவில்லை.

அநவரத விநாயகம் பிள்ளை = நல்ல தமிழ்ப்புலமையும், ஆங்கிலப்புலமையும் பெற்றவர். எம்.ஏ. பட்டம் பெற்றவர். திருநெல்வேலியில் பிறந்தவர். இவர் தலைமையில் சில காலம் தமிழ் லக்ஸிகன் தொகுக்கப்பட்டது. பல வசன நூல்களை எழுதியவர். ஔவையார், தமிழ்ப் பெருமக்கள் வரலாறு சைவசித்தாந்தம் முதலியன இவர் எழுதிய நூற்கள். கி. பி. 20-ஆம் நூற்றுண்டினர்.

அந்தகக்கவி வீரராகவ முதலியார் = இவர் வேளாளர். கி. பி. 17-ஆம் நூற்றுண்டினர். காஞ்சிபுரத்தை அடுத்த பூதூரில் பிறந்தவர். வடுகநாத முதலியாரின் திருமகனுர். இலங்கை பரராசசேகரனிடம் பல பரிசு பெற்றவர்; பிறவிக் குருடர். முதுகில் பிறரை எழுதச் சொல்லிக் கல்வி பயின்று புலமை பெற்றவர். கழுக்குன்ற புராணம்; கழுக்குன்ற மாலை, சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ், திருவாரூர் உலா, கயத்தாற்றரசன் உலா, சந்திரவாணன் கோவை முதலியன இவர் எழுதிய நூற்கள். இவர் எழுதியசீட்டுக்கவி ஒன்றில் குதிரைக்குரிய பல சொற்களைச் சமத்காரத்துடன் குறித்திருப்பது படித்து இன்புறுதற்குரியது.

அந்தி இளங்கீரனுர் = சங்க காலத்தவர். அந்திக் காலத்தை வர்ணித்துப் பாடிய காரணத்தால் இப்பெயர் பெற்றுர். இவரது பாடல் அகநாநூற்றில் உளது.

அபிராமிப்பட்டர் = இவர் பிராமணர். சரபோஜ மகாராசரது அரசாங்கப் புலவர். திருக்கடவூர்

தேவியான அபிராமி அம்மையார்மீது அபிராமி அந்தாதி என்னும் நூலைப் பாடியவர். தேவி கடாட்சத்தால் அமாவாசையில் பூரண சந்திரனைக் காட்டியவர். கி.பி. 18-ஆம் நூற்றாண்டினர்.

**அப்பர்** = இவர் சைவவேளாளர். திருவாமூரில் பிறந்தவர். இவரது பெற்றோர் புகழனார் மாதினியார் என்பவர். இவரது தமக்கையார் திலகவதியார். சைவ சமயத்தினர். சில காலம் சமண சமயத்தில் இருந்தவர். அதுபோது சூலைநோய் வர அதனைப்போக்கிக் கொள்ள மீண்டும் சைவ சமயம் புகுந்தவர். இவர் கொல்லவந்தயானையைக் குனியச் செய்தவர். விஷத்தையுண்டும் சாவாதவர். சுண்ணாம்பு அறையில் அடைக்கப்பட்டும் இறவாதவர். கல்லொடு கட்டிக் கடலில் இட்டும் அழுந்தாது கரை ஏறியவர். இவ்வளவு துன்பங்களையும் இவருக்கு இழைத்தவர்கள் சமணர்கள். அந்தணராகிய அப்பூதியடிகளாரால் குலதெய்வமாகப் போற்றிப் பூசிக்கப்பட்டவர். அப்பூதியார் மகன் பாம்பு கடித்து இறக்க அவனை எழுப்பியவர். திருமறைக்காட்டுத் தேவாலயக் கதவைத் திறந்தவர். பொன்னையும் மாதரையும்வெறுத்தவர். திருஞான சம்பந்தரின் நண்பர். இவருக்குத் தாண்டகவேந்து, திருநாவுக்கரசர், வாகீசர், ஆளுடைய அரசுகள் என்ற பல பெயர்களும் உண்டு. பல தலங்களை வணங்கிப் பதிகம் பாடியவர். இவர் பாடிய பதிகங்கள் சைவத் திருமுறைகளில் 4, 5, 6 எனத் திகழ்கின்றன. இவரது காலம் கி. பி. 7 ஆம் நூற்றாண்டு. இவர் பாடிய பதிகங்கள் 49000 என்பர். ஆனால் 311 பதிகங்களே இதுபோது உள்ளன. இவரது காலத்துப் பல்லவ மன்னன் மகேந்திரவர்மன். இவரது பதிகங்கள் திருத்தாண்டகம், திருநேரிசை திருவிருத்தம், திருக்குறுந்தொகை என்ற தலைப்பினைப் பெற்றிருக்கும். இவரைப்பற்றி, "என்னப்பன் என்னைப் பாடினான்" என்று சிவபெருமானே சிறப்பித்துக் கூறியதாகக் கூறப்படுகிறது. திருப்புகலூரில் இறைவன் திருவடிநிழலை அடைந்தவர். 81 ஆண்டு

கள் சில உலகில் வாழ்ந்தவர்.

அப்பாவு முதலியார் = வைணவர். இவரது ஊர் முடிச்சூர். குரேச விஜயம், விட்டுணு தத்துவம், இராமானுச நூற்றந்தாதி உரை இவரால் இயற்றப்பட்ட நூற்கள். காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு.

அமிர்த கவிராயர் = இவர் பாண்டிய நாட்டுப் பொன்னங்கால் என்னும் ஊரினர். இராமநாதபுர தளவாய் இரகுநாத சேதுபதியால் ஆதரிக்கப்பட்டவர். கோவை நூலில் வரப்பெறும் நாணிக்கண் புதைத்தல் என்னும் ஒரு துறையினை நானூறு விதமாகப் பாடிய பெரும் புலவர். அதுவே ஒரு துறைக்கோவை எனப்படும். இவரது காலம் கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

அமிர்த சாகரர் = வேளாளர். சமண சமயத்தினர். யாப்பருங்கலம், யப்பருங்கலக் காரிகை என்ற இரண்டு நூற்களும் இவரால் செய்யப் பெற்றவை. கி. பி. 11-ஆம் நூற்றாண்டினர். இவர் அமுத சாகரர் என்றும் கூறப்படுவார்.

அமுதனார் = இவரைத் திருவரங்கத்து அமுதனார் என்றும் கூறுவர். இவர் திருவரங்கத்தினர். இவர் இராமானுஜ நூற்றந்தாதியின் ஆசிரியர், இது பிரபந்த காயத்திரி என்றும் கூறப்படும்.

அம்பலவாணக் கவிராயர் = இவர் அருணாசலக் கவிராயர் திருமகனார். அறப்பளீசுர சதக ஆசிரியர். கி. பி. 18-ஆம் நூற்றாண்டினர்.

அம்பலவாண தேசிகர் = திருவாவடுதுறை ஆதினத்தில் 15-ஆம் பட்டத்துக் குருமகா சந்நிதானமாக விளங்கியவர் கல்விக் களஞ்சியமாக இருந்தவர். பல சித்தாந்த சாத்திரங்களை எழுதிவர். அவற்றுள் சில உபதேச வெண்பா. சித்தாந்த சிகாமணி, தசகாரியம், பஞ்சாக்கர மாலை முதலியன. காலம் கி.பி.17 ஆம் நூற்றாண்டு.

அம்பிகாபதி = கம்பருடைய திருமகனார். சோழ மன்னனுடைய திருமகளையே காதலித்தவர். அதன் காரணமாகக் கொலையுண்டவர். இவரது குமாரனார் தண்டி என்று கூறப்படுகின்றார். அம்பிகாபதி

ஒரு கோவை பாடியுள்ளார். அது அம்பிகாபதி கோவை எனப்படும். இவர் கி.பி. 12-ஆம் நூற்றாண்டினர். பல தனிப் பாடல்களும் இவரால் பாடப்பட்டுள்ளன.

அம்மூவனார் = சங்க காலத்தவர். இவரால் பாடப்பட்ட வள்ளல் மலையமான் திருமுடிக் காரியாவான். ஐங்குறுநூறு என்னும் நூலில் நெய்தல் திணையைப் பற்றிய நூறு பாடல்களையும், அகத்தில் ஐந்தும், நற்றிணையில் பத்தும், குறுந்தொகையில் பதினொன்றும் ஆக 126 பாடல்களைப் பாடியுள்ளார்.

அரங்கநாத முதலியார் = இவர் பூண்டி என்னும் ஊரினர். எம்.ஏ. பட்டமும், இராவ்பகதூர் பட்டமும் பெற்றவர், கணித நூற் புலமையுடையவர். சென்னை அரசியலார் கல்லூரியில் பேராசிரியராக இருந்தவர். தமிழில் கச்சிக்கலம்பகம் என்னும் நூலைப் பாடியவர். ஒரு முறை ஜட்ஜ் முத்துசாமி ஐயர் தம்வளை தடி தொங்கிய கையை எடுத்து "அடியேன்" என்று இவருக்கு வணக்கம் செலுத்தியபோது, திரு. முதலியார் வேடிக்கையாக, "அப்படியானால் உம் கையில் தடியேன்?" என்று கேட்டு அப்போது இருந்தவரை நகைக்கும் வண்ணம் செய்தவர். பல மாணவர்கட்கு உபகாரச் சம்பளம் ஈந்தவர். காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

அரசகேசரி = இவர் பரராசசேகரர் மருகர். வடமொழி தென்மொழிகளை நன்கு பயின்றவர். இரகுவம்சம் என்னும் நூலை எழுதியவர். யாழ்ப்பாணவாசி. ஆழ்வார் திருநகரி அட்டாவதானம் இராமானுசக் கவிராயர் இவரது ஆசிரியர். காலம், கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.

அரசஞ்சண்முகனார் = இவர் சோழவந்தான் என்னும் ஊரில் வாழ்ந்தவர். இலக்கண இலக்கிய புலமை மிகுந்தவர். செய்யுள் இயற்றுவதில் வல்லவர். எளிய வாழ்க்கையர். ஆடம்பரத்தை வெறுத்தவர். 'சாவாமருந்து' என்னும் தொடருக்குப் பரிமேலழகர் சாவாமைக்குக் காரணமாகிய மருந்து என்று கூறிய உரையை மறுத்து, "மருந்து என்

ருலே சாகாமைக்குரிய பொருள் தொனித்தலின், சாவா என்ற சொல்லை மருந்து என்னும் சொல்லுக்கு அடையாகக் கொள்ளக்கூடாது என்று கூறிச் சாவா என்னும் சொல்லைச்சாவாம், என்று முற்றுப் புள்ளி தந்து முடித்துக் காட்டிப் பொருள் கூறும் ஆற்றல் வாய்ந்தவர். இவரது புலமையை இவர் எழுதியுள்ள முருகக் கடவுள் வெண்பா, இன்னிசை இருநூறு, மதுரைச் சிலேடை வெண்பா முதலான செய்யுள் நூற்களின் மூலமும், ஆராய்ச்சித்திறனையும் நுண்ணறிவு வன்மையையும் தொல்காப்பியப்பாயிரம் சண்முகவிருத்தி ஆகுபெயர், அன்மொழித்தொகை என்பனபோன்ற உரை நடை நூல்களாலும் நன்கு அறியலாம். காலம் 19-ஆம் நூற்றுண்டு.

அரதத்தாசாரியார் = இவர் வைணவ பிராமணர் குடியினர். பின்னர் சைவ சமயம் புகுந்தவர். காஞ்சிபுரவாசி. பல நூல்களைச் செய்தவர். அவற்றுள் சில அரிஹரதாரதம்மியம், சைவாகமபூஷணம், விபூதி உருத்திராக்க பஞ்சகம், தெய்வம் சிவமே என்பன நிலைநாட்டவல்ல சுலோகம் ஐந்து முதலியன. காலம் சிவஞான முனிவர்க்கு முந்தியது.

அரிசில் கிழார் = சங்க காலத்தவர். வேளாளர். பதிற்றுப்பத்து நூலில் எட்டாம் பத்து இவரால் பாடப்பட்டது. அப்பாட்டுடைத் தலைவர் பெருஞ்சேரல் இரும்பொறை. இம் மன்னன் இவருக்கு 9000 பொற்காசு பரிசில் நல்கினன். பெருஞ்சேரல் இரும்பொறை தகடூரை முற்றுகையிட்டு அதிகமானைக்கொன்றதைக் குறிக்கும் நூலாகிய தகடூர் யாத்திரை இவரால் பாடப்பட்டது. இந்நூலில் பொன் முடியார் பாடல்களும் உண்டு. அரிசில் கிழாரால் புறத்தில் எட்டும், குறுந்தொகையில் ஒன்றும், பதிற்றுப்பத்தில் எட்டாம் பத்தும், திருவள்ளுவ மாலையில் ஒன்றும் பாடப்பட்டுள்ளன.

அருணகிரிநாதர் = திருவண்ணமலையில் பிறந்தவர்,

முருக பக்தர். இவர் தேவதாசி மரபினர் எனக் கூறப்படுகின்றனர். இவர் பாடிய நூற்கள் திருப்புகழ், கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, கந்தர் அந்தாதி, திருவகுப்புகள், மயில் விருத்தம், வேல் விருத்தம் முதலியன. இவர் பிரபுடதேவன் காலத்தவர். வில்லிபுத்தூராரிடமும், சம்பந்தாண்டானிடமும் வாதுசெய்து வென்றவர். கிளிவடிவாக இருந்துகொண்டு இன்னமும் முருகன் புகழைப் பாடுகின்றார் என்றும் கூறுவர். இவர் கி. பி. 15-ஆம் நூற்றாண்டினர்.

அருணந்தி சிவாசாரியார் = இவர் அந்தணர். திருத்துறைப்பூண்டியில் பிறந்தவர். ஆகமங்களை ஐயம் திரிபறப் பயின்றவர். இதனால் சகலாகம பண்டிதர் என்ற பெயரையும் பெற்றவர். இவரது ஆசிரியர் மெய்கண்ட தேவர். தம் ஆசிரியர் எழுதிய சிவஞானபோதம் என்னும் நூலின் விளக்கமாகவே சிவஞான சித்தியார் என்னும் நூலைப் பாடியவர். இவர் பிற மதங்களைத்தக்க காரணம் காட்டிச் சைவ சித்தாந்தத்தின் சிறப்பை உணர்த்தும் திறன் மிகமிகப் போற்றற்குரியது. இவர் இயற்றிய நூற்கள் சிவஞான சித்தியார், இருபா இருபஃது. காலம் கி.பி.13-ஆம் நூற்றாண்டு.

அருணாசலக் கவிராயர் = வேளாளர். இவரது பெற்றோர் நல்லதம்பிப் பிள்ளை, வள்ளியம்மையார். தருமை ஆதீன அம்பலவாண தேசிகரிடம் தமிழ் பயின்றவர். இவர் இயற்றிய நூற்கள் சீகாழித்தல புராணம், சீகாழிக்கோவை, பர்வதவர்த்தனியம்மை பிள்ளைத் தமிழ், இராமாயண கீர்த்தனை, இராம நாடகம், அனுமார் பிள்ளைத் தமிழ், அசோமுகி நாடகம் முதலியன. கி. பி. 18 ஆம் நூற்றாண்டினர்.

அருண்மொழித் தேவர் = சென்னைக்கு அடுத்த குன்றத்தூரினர். சைவ வேளாளர். சேக்கிழார் என்ற பெயரை உடையவரும் இவரே. அனபாயச் சோழனிடம் அமைச்சராக இருந்தவர். பெரிய புராணத்தை இயற்றியவர். தொண்டர் சீர்பரவுவார் என்ற பெயரையும் பெற்

றவர். இவருக்குப் பாலரூவாயர் என்ற இளவலும் உண்டு. சிதம்பரத்தில் முத்தி பெற்றவர். கி. பி. 12-ஆம் நூற்றுண்டினர். பெரும் புலமையுடையவர். இவரது ஏனைய சிறப்புக்களைச் சேக்கிழார் என்ற இடத்தும் காண்க.

**அவிநயனார்** = இவர் இலக்கண நூல் ஒன்றைச் செய்தவர். இவரது நூல் உரையாசிரியர்களால் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. இவரால் செய்யப்பட்டது அவிநயம் என்பது. பன்னிரு பாட்டியல் என்னும் நூலிலும் சில சூத்திரங்கள் உள்ளன. இவர் தொல்காப்பியர் காலத்தவரா அன்றிப் பிற்பட்டவரா என்பதுபற்றி இன்னமும் அறிஞரிடையே ஐயத்திற்கு இடமாகவே இருக்கிறது. பழங்காலத்தவராஞல் அகத்தியமாணவர்களுள் இவரும் ஒருவர்.

**அவ்வையார்** = இப்பெயர் கொண்டவர் பலர் ஆவர். சங்க காலத்தில் ஓர் ஔவையார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் காலத்தில் ஓர் ஔவையார். கம்பர் காலத்தில் ஓர் ஔவையார் இருந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது. ஆனல், சங்க காலத்து அதிகமான் என்னும் வள்ளல் கொடுத்த நெல்லிக் கனியை உண்டு பல்லாண்டுகள் வாழ்ந்தவர் என்று கருதினல் ஒரே ஔவையார் தாம் இருந்தனர் என்று யூகிக்கலாம். ஔவையார் என்பது பாட்டியார் என்ற பொருள் தருதலின், இவரது முதுமையை உணரலாம். இந்த அம்மையார் இளைஞர்கட்கும் முதியர்கட்கும் உகந்த பல பாடல்களைப் பாடியவர். சைவ நெறியினர். இவர் பல வள்ளல்களைப் பாடியவர் கூழுக்குப் பாடியவர் ஔவையார் என்பதனல் இவ்வம்மையாரது பண்பாடு நன்கு புலனுகும். இவர் பாணர் குடியினரால் எடுத்து வளர்க்கப்பட்டதாகக் கூறுவர். ஆதி, பகவன் என்ற இருவர்க்கும் பிறந்த எழுவருள் ஒருவர் இவர் என்ற வரலாறும் உண்டு. இவரால் பாடப்பட்ட பாடல்கள் பல. அகத்தில் ஐந்து, குறுந்தொகையில் பதினைந்து, நற்றிணையில் ஏழு, புறத்தில்

பதினேழு, உண்டு, ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, வாக்குண்டாம், அசதிகோவை, பந்தனந்தாதி, ஞானக்குறள், விநாயகர் அகவல் முதலிய தனி நூற்களும். இவைகளே அன்றி மற்றும் பல நூல்களும் இவர் பெயரால் வழங்கப்படுகின்றன. இவர் பல தனித்தனிப் பாடல்களையும் பாடியுள்ளார். அவற்றைத் தனிப் பாடல் திரட்டில் காணலாம்.

**அழகிய சிற்றம்பலக் கவிராயர்** = சிவகங்கையைச் சார்ந்த மிதிலைப் பட்டி என்னும் ஊரில் இருந்தவர். இரகுநாத சேதுபதியின் சிறப்பாகத் தளசிங்க மாலை என்னும் நூலைப்பாடியவர். கி. பி. 17-ஆம் நூற்றாண்டினர்.

**அழகிய சொக்கநாதப் பிள்ளை** = திருநெல்வேலி தச்சநல்லூரினர்; சைவர். திருநெல்வேலி காந்திமதி அம்மையார் மீது பிள்ளைத் தமிழ் பாடியவர். பல தனிப் பாடல்களையும் பாடியுள்ளார். அவை பெரிதும் முத்துச்சாமி வள்ளல் மீது பாடப்பட்டவை. சிலேடைப் பொருள் அமைந்தன. அவற்றுள் செருப்புக்கும் திருடனுக்கும் சிலேடையாக அமைந்த கவி சுவை தரும். கி. பி. 19-ஆம் நூற்றாண்டு.

**அழகிய நம்பி** = வைணவர். இவரே குரு பரம்பரை வரலாற்றை எழுதியவர். கி. பி. 18-ஆம் நூற்றாண்டு.

**அழகிய மணவாள ஜீயர்** = திருவிருத்தம், திருவாய்மொழிகட்கு வியாக்கியானமும், பன்னீராயிரப்படி என்னும் உரையும், பகவத்கீதை வெண்பாவும் பாடிய புலவர். வீர வைஷ்ணவர். காலம் அறிதற்கு இல்லை.

**அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்** = திருப்பாவைக்கு உரை, ஆறாயிரப்படி உரை, ஆசாரிய இருதயம் முதலியன இவரால் இயற்றப்பட்டவை. பிள்ளை உலோகாசாரியரின் இளவலாவார். காலம். கி. பி. 15-ஆம் நூற்றாண்டு.

**அறிவுடைநம்பி** = சங்க காலத்தவர். பாண்டிய மன்னர் மரபினர். இவர் மன்னராயினும், பாடல்

களையும் பாடியவர். இதற்குச் சான்று இவருக்கு முன்னுள்ள அறிவுடை என்னும் சொல்லே அறிவித்து விடும். புலவர்கள் கூறும் இனிய மொழிகளைக் கேட்டு அவர்களின் குறைகளைப் போக்கும் குணமுடையவர். இவரது பாடல்கள் அகத்தில் ஒன்று, புறத்தில் ஒன்று, நற்றிணையில் ஒன்று, குறுந்தொகையில் ஒன்று உள்ளன.

## ஆ

**ஆசிரியர் நல்லந்துவனார்** = சங்க காலத்தவர். பரிபாடல் என்னும் நூலில் முருகப் பெருமானுக்கு ஒன்றும், வையை ஆற்றிற்கு மூன்றும் ஆக நான்கு பாடல்களை இயற்றியவர், நெய்தற்கலியைப் பாடியவரும் இவரே. இவரே கலித்தொகை நூலைத் தொகுத்து அமைத்தவர். திருவள்ளுவ மாலையிலும் ஒரு பாடல் காணப்படுகிறது. இவைகளே அன்றி அகத்தில் ஒன்று, கலித்தொகைக் கடவுள் வாழ்த்து. நற்றிணையில் ஒன்று இவரால் பாடப் பட்டவை.

**ஆண்டாளம்மையார்** = இவர் பெரியாழ்வாரின் வளர்ப்புத் திருமகளார். துளசிப் பாத்தியில் அவருக்குக் கிடைத்தவர். பெருமாளுக்கெனத் தொடுக்கப்பட்ட மாலையைத்தாம முன்னர் அணிந்து அழகுபார்த்தவர். இதனால் சூடிக் கொடுத்த நாச்சியார் என்ற பெயரையும் உடையவர். ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழ்ந்தவர். திருவரங்கப் பெருமாள் இவரை ஏற்று மணந்து கொண்டனர். இவர் பாடிய நூற்கள் திருப்பாவை, நாச்சியார் திருமொழி என்பன. கி.பி. 9 ஆம் நூற்றாண்டு.

**ஆண்டிப்புலவர்** = இவர் ஆசிரியநிகண்டு செய்தவர் செஞ்சிக்கு அருகில் உள்ள ஊற்றங்கால் என்னும் ஊரினர். காலம் 17 ஆம் நூற்றூண்டு.

**ஆதிமந்தி** = சங்ககாலத்தவர். பெண்பால் புலவர். சோழன் கரிகால்வளவன் மகள். ஒருசமயம் கரிகாற் சோழன் காவிரியாற்றில் புதுப்புனல் வருங்கால் ஒரு விழா கொண்டாடினன். அதுபோது ஆதிமந்தியும் அவர் கணவனை ஆட்டனத்தியும் காவிரியில் நீராடி விளை

யாடுகையில், அந்நதி ஆட்ட நந்தியை அடித்துக்கொண்டு போயது. அதனால் வருந்திக் கொண்டு கடற்கரையை அடைய அங்கு மருதி என்பவள் ஆட்ட நந்தியைக் காட்டி ஆதிமந்தியுடன் சேர்த்தனள். அதன்பின் மகிழ்ச்சியுடன் திரும்பினார். இம்மாதரார் பாடல் குறுந் தொகையில் ஒன்று உளது.

**பிரகாம் பண்டிதர்** = இவர் தஞ்சாவூரினர். இவர் நல்ல சங்கீதப்பயிற்சி பெற்றவர். கருணாமிர்த சாகரத் திரட்டு என்னும் நூலை இயற்றியவர். தமிழ் இசையைப் பற்றி அறிதற்கு இது பெருந்துணை செய்யும். இவர் கி.பி. 20 ஆம் நூற்றாண்டினர்.

**ியப்பப் புலவர்** = இவர் வேளாள மரபினர். கும்பகோணத்தைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் பாகவதம் என்னும் நூலைப் பாடியவர். அது விஷ்ணுபாகவதம் எனப்படும். இதில் 1970 பாடல்கள் உள. காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**லசுந்தரம் பிள்ளை** = இவர் சிறந்த சித்தாந்தப் புலவர். பெரிய புராணத்திற்குப் பேருரை கண்டவர். அதன் வாயலாகச் சேக்கிழாரது கவிநயத்தைப் பாக்கக் காணலாம். திருக்களிற்றுப்படியாருக்கு உரை எழுதியவர். ஆசாரியப் பிரபாவம் என்னும் வசனநூலையும் எழுதியவர். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**ஆளவந்தார்** = இவர் பிராமணர், வெம்பத்தூர் வாசி வடமொழி தென்மொழி அறிந்தவர், ஞானவாசிட்டம் என்னும் நூலை இயற்றியவர். இது ஒரு மொழி பெயர்ப்பு நூல். கி. பி. 18 ஆம் நூற்றாண்டினர்.

**ஆறுமுகத் தம்பிரான்** = யாழ்ப்பாணர். திருத்தருமை ஆதினத்தில் புலவராக இருந்தவர். மடத் தலைவராகவும் திகழ்ந்தவர். பெரிய புராணத்திற்குச் சிறந்த உரைகண்டவர், காலம் கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

**ஆறுமுக நாவலர்** = இவர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த நல்லூரில் கந்தப் பிள்ளை என்பாருக்குப் பிள்ளையாகப் பிறந்தவர். தமிழ் உரை நடை எழுது

வதில் தலை சிறந்தவர். சிறந்த சொற்பொழிவும் செய்யக்கூடியவர். இவரது ஆசிரியர் இருபாலைச் சேனாதிராய முதலியார். நாவலர் என்றே சிறப்பாக அழைக்கப்படுபவர். இவர் இளைஞர்கட்குரியனவாகிய பால பாடங்களை எழுதியவர். பெரிய புராண வசனமும் திருவிளையாடற் புராண வசனமும் இவரால் எழுதப்பட்டவை. இலக்கணச் சுருக்கமும் எழுதியுள்ளார். சமய சம்பந்தமாகச் சைவ வினா விடை நூலையும் எழுதியுள்ளார். கோயில் புராணம் நன்னூல் முதலியவற்றிற்கு உரையும் எழுதியுள்ளார். தேவ கோட்டைத் தல புராணத்தையும் எழுதியுள்ளார். இவர் பல நூல்களையும் பதிப்பித்தவர். அவை பெரிய புராணம், கந்தபுராணம், திருக்குறள் பரிமேலழகர் உரை, (இப்பதிப்பின் வாயிலாகத்தான் 'பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்க்கும்' என்பது 'குரவர்த் தப்பிய கொடுமையோர்க்கும்' என்னும் தொடர் அறிய வந்தது) திருக்கோவையார் உரை, இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம், நன்னூல் விருத்தி, சூடாமணி நிகண்டு, சிவஞான போதம் முதலியன. காலம் கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

## இ

**இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார்** = இவர் கடைச் சங்க காலத்தவர். பத்துப்பாட்டில் உள்ள சிறுபாணாற்றுப் படையினை எழுதியவர்.

**இடைக்காடர்** = சங்ககாலத்தவர். இவர் இடையர்களைப்பற்றிப் பெரிதும் பாடியிருப்பதால் இப்பெயர் பெற்றனரோ அன்றி, மலையாள பிரதேசத்தைச் சார்ந்த இடைக்காடு என்னும் ஊரினராக இருந்த காரணத்தால் இப்பெயர் பெற்றனரோ என்பதைத் திட்டமாகத் தெரிந்து கொள்ள இயலவில்லை. இவர் பாடினவாக அகத்தில் ஆறு, புறத்தில் ஒன்று, குறுந்தொகையில் ஒன்று, திருவள்ளுவமாலையில் ஒன்று, நற்றிணையில் மூன்று, ஆக பன்னிரண்டு பாடல்கள் உள்ளன. இவைகளை அன்றி ஊசிமுறி, அறுபது வருட வெண்பா, மூவடி முப்பது என்னும்

நூற்களையும் பாடியுள்ளதாகத் தெரிகிறது. இப் பெயர் கொண்ட சித்தர் ஒருவர் இருந்திருக்கிறார். அவர் கொங்கண சித்தர் மாணவர். கி. பி. 15 ஆம் நூற்றாண்டினர்.

ம்மென் கீரனார் = சங்க காலத்தவர். இம் என்ற சொல்லை அமைத்துப் பாடிய காரணத்தால் இப் பெயர்பெற்றவர் அகத்தில் ஒருபாடல் உளது.

ரசை வடமலையப்பப் பிள்ளை = சோழநாட்டைச் சார்ந்த இரசை என்னும் ஊரினர். கார்காத்த வேளாளர்; திருமலை நாயகர் காலத்தில் பாண்டி நாட்டிற்கு அரசப் பிரதிநிதியாக இருந்தவர். இவர்மச்சபுராணம், சேதுத் தல புராணம், நானூற்றுக் கோவை, நாற்கவி வண்ணம் முதலான நூற்களைச் செய்தவர்.

ரட்டையர் = இவர்கள் இருபுலவர்கள். இளஞ்சூரியர், முதுசூரியர் எனப் படுபவர். ஒருவர் குருடர்; ஒருவர் நொண்டி. சோழ நாட்டு ஆலந்துறையினர். செங்குந்தமரபினர். இவர்கள் சேர்ந்தே பாடல்களைப் பாடுவர். இவர்கள் பல தனிப் பாடல்களையும் திருவாமாத்தூர்க் கலம்பகம், ஏகம்பரநாதர் உலா, தில்லைக்கலம்பகம் முதலியன முதலான, வற்றையும் அக்கபாகை ஆட்கொண்டானால் ஆதரவு தரப்பட்டவர்கள். அவன்மீது பாடலையும் பாடியுள்ளனர். காலம் கி.பி. 15 ஆம்நூற்றாண்டு

இரணிய முற்றத்துப் பெருங் குன்றூர்ப்பெருங் கௌசிகனார் = இவர் கடைச்சங்க காலத்தவர். பத்துப்பாட்டில் மலைபடுகடாம் பாடிய ஆசிரியர்.

இரத்தினவேலு முதலியார் = சக்காடு என்னும் ஊரினர் பின் சிறப்புப்பெயர் அகராதி ஆசிரியர், திருவிளையாடற்புராணம், காசிகாண்டம் விநாயக புராண நூல்களுக்கு உரையும் எழுதியவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

இரத்தினக் கவிராயர் = இவர் இரசை வடமலையப்பப் பிள்ளை மீது புலவர் ஆற்றுப் படை என்னும் நூலைப்பாடியவர். திருப் பேரைத் திருமணிமாலையும் இவரால் செய்யப்பட் பட்டது. காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

இராகவஐயங்கார். ரா. = இவர் புதுக்கோட்டையினர்.

மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையின் பதிப்பாசிரியர். இவர் வஞ்சிமாநகரம், சேதுநாடும் தமிழும், நல்லிசைப் புலமை மெல்லியலார், தமிழ் வரலாறு, பாரிக்காதை, தொழிற்சிறப்பு முதலான நூற்களை எழுதியவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இராசகோபாலப் பிள்ளை** = சிறந்த இலக்கணப்புலவர்; உரையாசிரியர். நாலடியார் நளவெண்பா, திருவாய்மொழி முதலான நூற்களுக்கு உரைஎழுதியவர். வைணவர். சென்னை மாகாண அரசினர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இராசப்பக்கவிராயர்** = இவரே திரிகூடராசப்பக் கவிராயர் எனப்படுபவர். இவர் குற்றால சம்பந்தமாகப்பல நூல்களை இயற்றியுள்ளார். குற்றாலத்தல புராணம், குற்றாலமாலை, குற்றால உலா, குற்றலக் கோவை, குற்றாலப் பிள்ளைத் தமிழ் முதலியன இவர் பாடிய நூற்கள். இவர் செய்த குற்றாலக் குறவஞ்சி நாடகத்தைக் கேட்ட முத்து விசய சொக்கலிங்கநாயக்கர் இவருக்குப் பூமிதானம் செய்தார். அது குறவஞ்சி மேடு என்று இப்பொழுதும் குற்றலத்தே வழங்கப் பட்டுவருகிறது. இவரது காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**இராமபாரதி** = இவர் சிறந்த சைவர். ஆத்திசூடி நீதி வாக்கியங்களை அமைத்துத் தனித் தனியே வெண்பாவைப் பாடி, அதில் ஒவ்வொரு கதைகளையும் சேர்த்து ஆத்திசூடி வெண்பா என்னும் நூலைப்பாடியவர். காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**இராமலிங்க சுவாமிகள்** = தென்னாற்காடு மருதூரில் பிறந்தவர். கருணீகக் குலத்தினர். இவர் செய்த நூலே திருவருட்பா என்பது. பலவசன நூல்களையும் இயற்றியவர். அவற்றுள் தலைசிறந்தவை மனுமுறைகண்ட வாசகம், சீவ காருண்ய ஒழுக்கம் என்பன. வேதாந்தம் சித்தாந்தம் வடமொழி தென்மொழி ஆகிய இவற்றில் நல்ல புலமையும் அனுபவமும் பெற்றவர். சித்துப் பல செய்தவர். வடலூரில் ஒரு கோயில் கட்டி வாழ்ந்

தவர். காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**இராமானுச கவிராயர்** = இவர் இராமநாதபுரத்தினர். பின்னர்ச் சென்னையில் வாழ்வை நடத்தியவர். வைணவ சமயத்தவர். திருவாவடுதுறைச் சோமசுந்தர தேசிகரையடைந்து அவரிடம் இலக்கண இலக்கியங்களைப் பயின்றவர். திருக்குறள், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நன்னூல் இவற்றிற்கு உரை எழுதியவர். பார்த்தசாரதி மாலை, வரதராசப் பெருமாள் பதிற்றுப் பத்தந்தாதி முதலிய நூல்களைப்பாடியவர். காலம் கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**இரும்பிடர்த்தலையார்**—கடைச் சங்க காலத்தவர். இவர் பாடிய பாடல் புறநானூற்றில் ஒன்று உளது. இவர் கரிகாற் சோழன் மாமனர். இவர் யானையினை வர்ணிக்கையில் இருப்பிடர்த்தலை என வர்ணித்துப் பாடியதால் இப்பெயரினைப் பெற்றார்.

**இரேவண சித்தர்** = இவர் சைவ வேளாளர். பேரளத்தில் பிறந்தவர். சிதம்பரத்தில் சில காலம் வாழ்ந்தவர். பின்னர் சென்னைக் கோடம்பாக்கத்தில் வாழ்ந்தவர். அகராதி நிகண்டு என்னும் நூலை இயற்றியவர். இவர் பட்டீசுரப்புராணம் திருவலஞ்சுழிப்புராணம், திருமேற்றளிப்புராணங்களையும் பாடியவர். காலம் கி. பி. 16 ஆம் நூற்றாண்டு.

**இலக்கணம் சிதம்பரநாத முனிவர்** = இவர் சிவஞானமுனிவர் மாணவர்களில் ஒருவர். திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம் பாடியவர். காலம் கி.பி.18 ஆம் நூற்றாண்டு.

**இலாசரஸ்** = இவரே ரெவரண்டு லாசாஸ் என்பவர். தமிழ்மொழியினை நன்கு பயின்று ஆராய்ச்சி அறிவு பெற்றவர், நன்னூல் திருககுறள் முதலியவற்றை ஆங்கிலத்தில்மொழி பெயர்த்தவர். ஆராய்ச்சி கட்டுரைகள்பல எழுதியவர். காலம் 20 ஆம் நூற்றாண்டு.

**இளங்கோவடிகள்** = சங்க காலத்தவர். இளமையில் துறவு பூண்டவர். சேரன் செங்குட்டுவன் இளவல்; சைவர் ; சைனர் என்னும் கூறுவர். முத்தமிழையும் நன்குபயின்ற

வர். அதற்குச் சான்றாக இவர் செய்த சிலப்பதிகாரத்தை எடுத்துக் காட்டலாம்.

**இளம்பூரணர்** = இவர் சிறந்த உரையாசிரியர். ஆதலால் இவரை உரையாசிரியர் என்றே கூறுவர். தொல்காப்பியத்திற்கு உரை கண்டவர். "உளங்கூர் கேள்வி இளம்பூரணர்." உளங்கூர் உரையாய இளம் பூரணம் என்று இவரையும் இவரது நூலையும் சிறப்பித்துள்ளனர். காலம் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**இளம் பெருமானடிகள்** = இவர் காலம் தெரிதற்கு இல்லை. என்றாலும் இவர் பாடிய சிவபெருமான் திருமும்மணிக்கோவை பதினோராம் திருமுறையிற் சேர்க்கப்பட்டிருத்தலினால், அதனை அப்படிச் சேர்த்த நம்பியாண்டார் நம்பிகளின் காலமாகிய கி.பி. 10 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் என்னலாம்.

**இறையனார்** = முதற் சங்க காலத்தவர். இவர் செய்த நூலே இறையனார் அகப்பொருள் என்பது. இது களவியல் என்றும் கூறப்படும். இவரால் குறுந்தொகையில் ஒருபாடலும், திருவள்ளுவ மாலையில் ஒரு பாடலும் பாடிச் சேர்க்கப் பட்டுள்ளன. திருவாலவாய்ச் சொக்கலிங்கப்பெருமானே இவ்வாறு பெயர் கொண்டு புலவராகத் திகழ்ந்தவர் என்பது தொன்று தொட்டு வரும் செய்தியாகும்.

ஈ

**ஈசானதேசிகர்** = இவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்தவர். இவரே சுவாமிநாத தேசிகர் எனப்படுபவர். கல்லாட உரையாசிரியர் மயிலேறும் பெருமான் பிள்ளையிடம் கல்விகற்றவர். இலக்கணக்கொத்து, தசகாரியம் திருச்செந்திற் கலம்பகம் முதலான நூற்களைச் செய்தவர். காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

உ

**உக்கிரப்பெருவழுதி** = சங்க காலத்தவர். பாண்டிய மரபினர். அரசராய் இருந்தும் கவிபாடிய காவலர் ஆவார். அகநானூற்றைத் தொகுக்குமாறு செய்தவர் இவரே. இவர் வேங்கை மார்பனது

கானப் பேருரை வென்றவர். இவர் பாடியனவாக அகத்தில் ஒன்று, நற்றிணையில் ஒன்று, திருவள்ளுவமாலையில் ஒன்று ஆக மூன்று பாடல்கள் உள்ளன.

**உதீசித் தேவர்** = சைனசமயத்தவர். கி.பி. 14 ஆம் நூற்றாண்டினர். திருக்கலம்பகம் என்னும் நூலை இயற்றியவர். தொண்டைமண்டலத்தைச் சார்ந்தவர். இவரது திருக்கலம்பக நூலில் சிவபெருமான் செய்த செயல்களை எல்லாம் அருகன் செய்ததாகக் கூறியிருக்கும் கருத்து ஊன்றிக் கவனித்தற்குரியது.

**உமாபதிசிவாசாரியார்** = இவர் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள கொற்றவங்குடியில் அந்தணர் மரபில் உதித்தவர். சைவசந்தானாச்சாரியர் நால்வருள் ஒருவர். இவரது ஆசிரியர் மறைஞானசம்பந்தர். இவர் பல நூல்களை இயற்றியவர். சிவப்பிரகாசம் கொடிக்கவி, உண்மை நெறி விளக்கம், நெஞ்சுவிடு தூது, திருவருட்பயன் சங்கற்ப நிராகரணம், முதலிய சைவசித்தாந்த நூற்களையும், கோயிற் புராணம், சேக்கிழார்புராணம் முதலிய புராண நூற்களையும் செய்தவர். பௌட்கர ஆகமத்திற்கு உரை கண்டவர். இவர் பெற்றான் சாம்பான் என்னும் ஆதிதிராவிடனுக்கு இறைவன் கட்டளைப்படி இட்சை செய்து அவனை முத்திக்கு உரியவனாக்கினவர். முள்ளிச் செடிக்கும் முத்தி கொடுத்ததாகக் கூறுவர். இவரது காலம் கி. பி. 14 ஆம் நூற்றாண்டு.

**உமறுப் புலவர்** = இவர் முஸ்லிம் இனத்தவர். நல்ல தமிழ்ப்புலமையுடையவர். இராமநாதபுரத்தைச் சார்ந்த கீழக்கரையில் பிறந்தவர். இவரது தந்தையார் சேகு முதலியார். முகம்மது நபியின் வரலாற்றைக் கூறும் சீறாப் புராணத்தையும், முதுமொழிமாலை என்னும் நூலையும் பாடியவர். இவரது காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

**உய்யவந்ததேவ நாயனார்** = இவர் திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனார் என்றும் கூறப்படுவார். இவரது ஆசிரியர் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார். இவரே திருக்களிற்றுப்படியார் என்

னும் நூலுக்கு ஆசிரியர். கி. பி. 12 ஆம் நூற்றுண்டினர். இவரது ஆசிரியராகிய திருவியலூர் உய்ய வந்ததேவநாயனூர் பாடிய நூல் திருவுந்தியார்.

**உருத்திரசன்மர்** = இவரது தந்தையார் உப்பூரிகுடிகிழார். இதனுல் இவர் உப்பூரிகுடிகிழார் மகனுர் உருத்திரசன்மர் எனப் படுவர். இவரே அகநானூற்றைத் தொகுத்துத் தந்தவர். இவர் பிறவியிலேயே ஊமையாகப் பிறந்தவர். இவர் களவியல் என்னும் நூலுக்குப் பலர் உரை கூறியபோது, அவற்றை எல்லாம் பாராட்டாமல், நக்கீரர் கூறிய உரையைக் கேட்ட போதுமட்டும் தம் உணர்ச்சியைக் கண்ணீர் வடித்துக் காட்டியவர். கடைச் சங்க காலத்தவர்.

**உறையூர் மருத்துவன் தாமோதரனுர்** = கடைச் சங்க காலத்தவர். உறையூரினர் வைத்தியத் தொழிலில் கைவந்தவர் இவரது பாடல் புறத்தில் மூன்றும், அகத்தில் இரண்டும், திருவள்ளுவமாலையில் ஒன்றும் உள.

## ஊ

**ஊன்பொதி பசுங்குடையார்** = கடைச் சங்க காலத்தவர். தாம் இளஞ்சேட் சென்னியைப் பாடிப் பெற்ற பரிசிலைத் தமது வறுமைச் சுற்றத்திற்கு வழங்கிமகிழ்ந்தவர். இவரது பாடல் புறத்தில் நான்கு உள.

## எ

**எருக்காட்டூர்த்தாயம் கண்ணனுர்** = கடைச்சங்ககாலத்தவர், சோழநாட்டு தஞ்சையினைச் சார்ந்த எருக்காட்டூர் வாசி. இவரது பாடலால் ரோமர்களும் கிரேக்கர்களும் சேர்ந்து முசிறித் துறை முகத்திற்கு வந்து தமது நாட்டுக்கு நம்நாட்டு மிளகைக் கொண்டு சென்றனர் என்பதைக் குறித்துப் பாடியுள்ளார். இவரது பாடல்கள் புறத்தில் ஒன்றும் அகத்தில் மூன்றும் குறுந்தொகையில் ஒன்றும் நற்றிணையில் ஒன்றும் உள.

**எல்லப்ப நாவலர்** = இவரைச் சைவ எல்லப் நாவலர் என்பர். தருமையாதினத்தைச் சார்ந்தவர். காவிரிப் பூம்பட்டினத்திற்கு

அண்மையதான இராத நல்லூரில் தோன்றியவர். இவர் அருணைக்கலம்பகம் திருவெண்காட்டுப் புராணம் செவ்வந்திப் புராணம், திருச்செங்காட்டங்குடிப் புராணம் பாடியவர். பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் காலத்தவர். இவரது மனைவியாரும் கவிபாடுவதில் வல்லவர். ஐயங்கார் சிவபெருமானைத் தாழ்த்தி விஷ்ணுவை உயர்த்திப் பாடிய பாடல்களுக்கு எதிராக விஷ்ணுவைத் தாழ்த்திச் சிவபெருமானை உயர்த்திப் பாடியவர். காலம் கி. பி, 17 ஆம் நூற்றாண்டு.

**என்னையிருப்புலவர்** = இவர் எழுதிய நூல் முக்கூடற்பள்ளு என்பது. காலம் கி.பி.17 ஆம் நூற்றாண்டு. இவர் இயற்கையைப் பாடுவதில் வல்லவர்.

## ஏ

**ஏனிச் சேரிமுடமோசியார்** = இவர் பிறவியில் முடமாகவே பிறந்தவர். ஏனிச்சேரி என்னும் கிராமத்தவர். இவர் உறையூர் ஏனிச்சேரி முடமோசியார் என்றும் கூறப்படுவர். இவரது பாடல்கள் புறத்தில் ஆறு உள. இவர் அந்துவஞ்சேரல் இரும்பொறையும் முடித்தலைக்கோப்பெருநற்கிள்ளியும் வாழ்ந்த காலத்துப் புலவர்.

## ஐ

**ஐயடிகள் காடவர் கோன்** = பல்லவமன்னர் மரபினர், துறவு பூண்ட தூயர், பல தேவாலய யாத்திரை செய்தவர். இதன்பயனாக க்ஷேத்திர வெண்பா என்னும் நூலைச் செய்தவர். கி. பி. 9 ஆம் நூற்றாண்டினர்.

**ஐயம் பெருமாள் பிள்ளை** = பாண்டிமண்டல சதக ஆசிரியர். கி. பி. 19 ஆம் நூற்றாண்டினர்.

**ஐயனாரிதனார்** = இவர் சேர வம்சத்தினர். சைவர். இவர் புறப்பொருள் வெண்பா மாலை என்னும் நூலைச் செய்தவர். இவரது காலம் கி. பி. 12 ஆம் நூற்றாண்டு.

## ஒ

**ஒட்டக்கூத்தர்** = செங்குந்த மரபினர். சைவர். இவர் வயதால் முதிர்ந்தவர். முதற் குலோத்துங்கன் காலத்தவர். அவன் மீது பிள்ளைத்தமிழ், உலா நூல்களைப் பாடியவர். இவை

யே அன்றி புதுவை காங்கேயன் மீதும் நாலாயிரக் கோவை நூல் பாடியவர். விக்ரம சோழன் மீதும் இரண்டாம் குலோத்துங்கன் மீதும் உலா பாடியவர். மூன்று உலாக்கள் அடங்கிய நூலே மூவர் உலா எனப்படும். தக்கயாகபரணியும், இராமாயண உத்தரகாண்டமும், ஈட்டி எழுபதும் இவரால் பாடப்பட்டவை. கி.பி. 12 ஆம் நூற்றுண்டினர். தேவியின் அருளைப்பூரணமாகப்பெற்றவர். அதனுல் வெட்டுண்ட உடலங்களையும் தலைகளையும் ஒட்டப் பாடிய காரணத்தால் ஒட்டக்கூத்தர் என்னும் பெயரைப் பெற்றவர். இவரை வாணிதாதன் என்றும் கூறுவர்.

ஒப்பிலாமணிப் புலவர் = சிறந்த சைவர். சிவ ரகசியம் என்னும் நூலுக்கு ஆசிரியர். இலக்கண விளக்க வைத்திய நாத தேசிகரிடம் கல்விபயின்றவர். தஞ்சை சரபோஜி மன்னர் காலத்தவர். கி.பி. 18 ஆம் நூற்றுண்டினர். குமணன் வரலாற்றைப் பாடியவர் ஒருவரும் இப்பெயருடையவர் ஆவர். கி.பி. 19 ஆம் நூற்றுண்டினர் என்பது அறிஞர் துணிபு.

## க

கச்சியப்ப சிவாசாரியார் = இவர் காஞ்சிபுர குமர கோட்ட அர்ச்சகருள் ஒருவர். முருகப்பெருமான் அருளைப் பூரணமாகப் பெற்றவர். இவரது தந்தையார் காளத்தியப்பசிவாசாரியார். இவர் வடமொழி தென்மொழிகளையும் ஆகமங்களையும், திருமுறைகளையும்நன்கு பயின்றவர். இவரே கந்த புராணத்தின் ஆசிரியர். காலம் கி.பி. 12 ஆம் நூற்றுண்டு.

கச்சியப்ப முனிவர் = இவர் சிவஞான முனிவரின் மாணவர். திருத்தணிகையில் வேளாளர் குலத்தில் உதித்தவர். இவர் பாடிய நூல்கள் பல. விநாயக புராணம், தணிகை புராணம், ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூது, திருவானைக்காப்புராணம், பேரூர்ப் புராணம், காஞ்சி புராணத்தின் இரண்டாம் காண்டம், திருத்தணிகைப் பதிற்றுப்பத்து அந்தாதிமுதலியன. கி. பி. 18 ஆம் நூற்றுண்டு.

**கடவுள் மாமுனிவர்** = திருவாதவூர் அடிகள் புராணம்செய்தவர். கச்சியப்ப முனிவரின் காலத்தவர். அவருக்கு நெருங்கிய நண்பரும் ஆவார். கி. பி. 18 ஆம் நூற்றாண்டு.

**கடிகை முத்துப்புலவர்** = இவர் எட்டையபுரம்சமஸ்தானப் புலவர். யமகம் அந்தாதி முதலியவற்றைப் பாடுவதில் வல்லவர். இவர் பல தனிப் பாடல்களையும் நூற்களையும்எழுதியுள்ளார். அவற்றுள் சமுத்திர விலாசம். காமரசாஞ்சரி, முதலியன குறிப்பிடத்தக்கன. காலம் 17ஆம் நூற்றாண்டு.

**கடியலூர் உருத்திரங் கண்ணனார்** = கடைச்சங்க காலத்தவர்; பெரும்பாணாற்றுப்படை, பட்டினப் பாலைகளின் ஆசிரியர். இரண்டும் முறையே தொண்டைமான் இளந்திரையன் சிறப்பும், சோழன் கரிகால் பெருவளத்தான் சிறப்பும் கூறுவன.

**கணக்காயனார்** = இவர் ஆசிரியத்தொழிலை மேற்கொண்டவர். மதுரைவாசி. நக்கீரனார் தந்தையார். இவரது பாடல் குறுந்தொகையில் ஒன்று உளது. காலம்கடைச்சங்க காலம்.

**கணிமேதாவியார்** = இவர் எழுதிய நூற்கள்ஏலாதி, திணைமாலை நூற்றைம்பது. சோதிடம் வல்லவர். இக்காரணம் பற்றியே கணி என்று அடையுடன் கூறப்பட்டு வருகின்றனர். காலம் கடைச்சங்க காலம்.

**கணியன் பூங்குன்றனார்** = கடைச்சங்க காலத்தவர். சோதிடம்வல்லவர், புறத்தில் ஒன்றும், நற்றிணையில் ஒன்றும் இவரது பாடல்கள் உள.

**கண்டராதித்தர்** = இவர் சோழ மரபினர். முதற் பராந்தகன் திருமகனார். சைவத் திருமுறைகளுள் ஒன்பதாம் திருமுறையில் உள்ள திருவிசைப்பா பாடிய ஆசிரியர்களுள் இவரும் ஒருவர். கி.பி. 10 ஆம் நூற்றாண்டினர்.

**கண்ணங்கூத்தனார்** = கடைச்சங்ககாலத்தவர். இவரது தந்தையார் கண்ணன் என்பவர். இவரால் பாடப்பட்ட நூல் கார் நாற்பது, என்பது.

**கண்ணஞ்சேந்தனார்** = கடைச்சங்ககாலத்தவர். இவரது தந்தையார் சாத்தந்தை

யார். இவரது நூல் திணை மொழி ஐம்பது.

**கண்ணுடை வள்ளலார்** = இவர் காழிகண்ணுடைய வள்ளலார் எனப்படுவார். சைவத்துறவி. சீர்காழியில் வாழ்ந்தவர். இவரது நூல் ஒழிவில் ஒடுக்கம். அத்துவைதக் கலி வெண்பா. சித்தாந்த தரிசனம் முதலியன. 18 ஆம் நூற்றாண்டு.

**கதிரைவேற்பிள்ளை** = யாழ்ப்பாணத்தில் புலோலியூரில் பிறந்தவர். சைவ வேளாளர். வடமொழி, தென்மொழி பயின்றவர். நல்ல சொற்பொழிவாளர் அட்டாவதானம் சதாவதானம் செய்த அறிஞர். இவர் கூர்மபுராணத்திற்கும் பழனித்தலபுராணத்திற்கும் உரை எழுதியுள்ளார். சிவாலய மகோற்சவ விளக்கம். சைவ சித்தாந்தச் சுருக்கம் முதலியனவும் இவர் எழுதிய நூற்கள். கி.பி. 19 ஆம் நூற்றுண்டினர்.

**கந்தசாமிப்புலவர்** = திருப்பூவணத்தில் சைவ மரபில் உதித்தவர். அத்தலத்தைப் பற்றிப் புராணம், உலா, வண்ணம் முதலிய நூற்களைச் செய்தவர். ஆப்பனூர்ப் புராணம் பாடியவரும் இவரே. 17 ஆம் நூற்றுண்டு.

**கந்தப்பையர்** = கச்சியப்ப முனிவரின் மாணவர். திருத்தணிகை வாசி. வீரசைவ மரபினர். இவர் தணிகையைப் பற்றி உலா, அந்தாதி, கலம்பகம் அனுபூதி முதலான நூற்களைப் பாடியவர். பழமலை அந்தாதி, செந்தில் நிரோட்டக அந்தாதிகளுக்கு உரைஎழுதியவர். இவர் பெற்றபிள்ளைகளே விசாகப் பெருமாள் ஐயர், சரவணப் பெருமாள் ஐயர் என்பவர்கள். இவ்விருவர்களும் சிறந்த புலமையுடையவர்கள் கி. பி. 18 ஆம் நூற்றுண்டினர்.

**கந்தியார்** = இவர்சைவணவர். பெண்பாற்புலவர். திருக்குருகூருக்கு அருகுள்ள திருப்பேரையில் பிறந்தவர். சிந்தாமணியிலும், பரிபாடலிலும் பாடல்களைப் பாடிச்சேர்த்தவர். கி.பி. 12 ஆம் நூற்றுண்டினர்.

**கபிலர்** = கடைச்சங்ககாலத்தவர். திருவாதவூரில்பிறந்த அந்தணர். இவர் சேரன் செல்வக்கடுங்கோ வாழி ஆதனைப் பாடி நூறாயிரம் பொன்னும், வளநாடும்

பெற்றவர். பாரி வள்ளலின் நண்பர். குறிஞ்சிப் பாட்டு. ஐங்குறு நூற்றில் குறிஞ்சிப் பாடல்கள். கலித்தொகையில் குறிஞ்சிக்கலிகள் இருநூற்பது. நற்றிணையில் இருபது குறுந்தொகையில் இருபத்தொன்பது. அகத்தில் பத்து, புறத்தில் முப்பது, திருவள்ளுவ மாலையில் ஒன்று ஆகிய இவைகள் இவர் பாடிய பாக்களும் நூற்களும் ஆகும். இவரது பாடல்களாகப் பதினோராம் திருமுறையிலும் சில உள. அவை மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி முதலியன. இவை இவரால் பாடப்பட்டவை அல்ல என்பது சிலரது கருத்து. பாட்டியல் ஒன்றும் இவரால் பாடப்பட்டுள்ளது.

**கமலைஞானப்பிரகாசர்** - இவர் திருவாரூரில் பிறந்தவர். திருத்தருமை ஆதினத்தைச் சார்ந்தவர். பழுதைகட்டிய ஞானப்பிரகாசர் மாணவர். இவர் புட்பவிதி, அனுட்டான அகவல், திருவாரூர்பள்ளு, சிவபூசை அகவல், சிவானந்த போதம், திருமழுவாடிப் புராணம் திருவாணைக்காப்புராணம் முதலான நூற்களைப்பாடியவர், காலம் கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**கம்பர்** = இவர் உவச்சர் குலத்தினர். திருவழுந்தூரில் பிறந்தவர். வெண்ணெய் சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப்பட்டவர். மூன்றாம் குலோத்துங்கன் அவைப் புலவராக இருந்தவர். இவர் ராமாயணம், ஏர் எழுபது, சரஸ்வதி அந்தாதி, சடகோபர் அந்தாதி, முதலிய நூற்களைப் பாடியவர். கல்வியில் பெரியர் கம்பர் என்ற சிறப்புடையவர். இவரது திருமகனார் அம்பிகாபதி காலம். கி. பி. 12 ஆம் நூற்றாண்டு.

**கருணைப்பிரகாசர்** = இவர் காஞ்சிபுரத்தினர். துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் சகோதரர். வெள்ளியம்பலவாணர் இவரது ஆசிரியர். இவர் இட்டலிங்க அகவலையும் காளத்திப் புராணத்தில் ஒரு பகுதியும் எழுதியவர் காலம். கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

**கருவூர்த்தேவர்** = கொங்கு நாட்டில் கருவூரில் பிறந்தவர். இவர் சிறந்த சித்தர். இவரது பாடல்கள் ஒன்பதாம் திருமுறையில் திருவிசைப்பா என்னும் பகுதியில் உள்ளன. இவரே இராஜ ராஜேஸ்வரச் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைக்கு உதவியாய் இருந்தவர். காலம் கி.பி. 11 ஆம் நூற்றாண்டு.

**கலியாணசுந்தர முதலியார்** = இவர் சிறந்த சைவ சித்தாந்தி. சொற்பொழிவு ஆற்றும் திறனும் உரை எழுதும் வன்மையும் உடையவர். இவரே பூவை கலியாணசுந்தரர் எனப்படுவார். பட்டினத்தார் பாடல், தாயுமானவர் பாடல்களுக்குச் சிறந்த உரைகளை எழுதியவர். சித்தாந்த வசன பூஷணம் என்னும் நூலையும் எழுதியுள்ளார். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டிடு.

**கலியாணசுந்தர முதலியார்** = இவரே திரு. வி. க. எனப்படுபவர். இவர் சமய உலகிற்கும் தொழிலாளர் உலகிற்கும் பெரிதும் பாடுபட்டவர். எழுதும் திறனும் பேசும் திறனும் படைத்தவர். பல உரை நடை நூற்களையும், செய்யுள் நூற்களையும் எழுதியவர். பெரிய புராணத்திற்குச் சிறந்த முறையில் குறிப்புரை எழுதியவர். பெண்ணின் பெருமை என்கடன் பணிசெய்து கிடப்பதே. வள்ளலார் திருவுள்ளம் முருகன் அல்லது அழகு முதலியன உரைநடை நூற்களில் குறிப்பிடத்தக்கன. முருகன் அருள் வேட்டல் திருமால் அருள்வேட்டல் முதலியன இவரது செய்யுள் பாடும் திறனுக்கு எடுத்துக்காட்டுகள். சைவ சமயத்தவர் ஆயினும் சமரச நோக்கினர். ஏயேசுப்பெருமான் மீதும் பாடல்களைப் பாடியவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு. தம் சுயசரித்திரத்தையும் இவர் எழுதியுள்ளார்.

**கல்லாடர்** = இவர் மலையாள நாட்டைச் சார்ந்த கல்லாடம் என்னும் ஊரினர் போலும். கடைச்சங்க காலத்தவர். இவரது பாடல்கள் அகத்தில் ஏழும், குறுந்தொகையில் இரண்டும் திருவள்ளுவ மாலையிலும் ஒன்றும் உள்ளன. தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்கு உரை கண்ட கல்லாடரும் கல்லாடம் என்னும்

நூலைச் செய்தவரும், பதினோராம் திருமுறையில் காணப்படும் திருக்கண்ணப்பதேவர் திருமறம் பாடியவரும் இப்பெயரால் குறிப்பிடப்பட்டு வருகின்றனர். பிற்பட்ட நூற்களைப் பாடிய கல்லாடர் சங்க காலக் கல்லாடர் அல்லர் என்பது சிலரது கருத்தாகும்.

**வீராசபண்டிதர்** = இவர் வீரைக்கவிராச பண்டிதர் என்றும் கூறப்படுவார். இவர் பாண்டியநாட்டு வீர சோழன் ஊரினர் அந்தணமரபினர். சங்கராசாரியர் பாடிய சௌந்தரிய லகரி, ஆனந்த லகரி என்னும் வடமொழி நூற்களைத் தமிழில் மொழி பெயர்த்துப் பாடியவர். கி. பி. 16 ஆம் நூற்றுண்டினர்.

**னகசபைப்பிள்ளை** = இவர் யாழ்ப்பாண ஊரினர். பின்னர் சென்னையில் வாழ்ந்தவர். ஆங்கிலம் பயின்று பி.ஏ. பட்டம் பெற்றவர். இவர் 1800 ஆண்டுகளுக்கு முந்திய தமிழர் என்னும் நூலை இயற்றியவர். களவழி நாற்பது விக்ரம சோழன் உலா, கலிங்கத்துப் பரணி நூற்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். கி. பி. 19 ஆம் நூற்றுண்டினர்.

**கனகசுந்தரம்பிள்ளை** = திரிகோண மலையில் பிறந்தவர். தமிழ் நாவலர் சரிதை என்னும் நூலைப் பதிப்பித்தவர். இல்லாண்மை என்னும் உரைநடை நூலையும் எழுதியவர் காலம் கி.பி. 19 ஆம் நூற்றுண்டு.

## கா

**காக்கைபாடினியார் நச்செள்ளையார்** = கடைச் சங்க காலத்தவர். ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடி ஒன்பது துலாம் பொன்னும் நூறுஆயிரம் பொற்காசுகளும் அரசன் பக்கத்தில் அமரும் பேறும் பெற்றவர். பெண்பாற் புலவர். இவரது பாடல்கள் பதிற்றுப் பத்து என்னும் நூலில் ஆறும் பத்தும், குறுந்தொகையில் ஒன்றும், புறத்தில்ஒன்றும் காணப்படுகின்றன. காக்கை பாடினியம் என்னும் யாப்பு இலக்கண நூலைச் செய்தவரும் காக்கைபாடினியார் என்று கூறப்படுகின்றார். இந் நூலைப் பாடியவர் சங்க காலத்தவர் அல்

லர் என்பது சிலரது துணிபு.

**காங்கேயர்** = உரிச் சொல் நிகண்டு ஆசிரியர். செங்குந்த மரபினர். தொண்டைமண்டலத்தில் தோன்றியவர். காலம் கி. பி. 16 ஆம் நூற்றாண்டு.

**காஞ்சி ஞானப்பிரகாசர்** = இவர் காஞ்சிபுரத்தில் உள்ள சைவமடத்தலைவர் கச்சிக் கலம்பகம், இவர் பாடிய நூல். கி. பி. 16 ஆம் நூற்றினர். சிறந்த சைவ சித்தாந்தியார்.

**காரி இரத்தினக் கவிராயர்** = இவரைத் திருமேனி இரத்தினக் கவிராயர் என்றும் கூறுவர். ஆழ்வார் திருநகரியினர். மாறன் அலங்காரம் என்னும் அணியிலக்கண நூலுக்கு உரை எழுதியவர். பரிமேல் அழகர் நுண் பொருள் மாலை என்னும் நூலையும் எழுதியவர். கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

**காரியாசான்** = கடைச் சங்க காலத்தவர். சிறு பஞ்ச மூல நூல் ஆசிரியர். சைன சமயத்தவர்.

**காரைக்கால் அம்மையார்** = இவருக்குப் புனிதவதியார் என்ற பெயரும் உண்டு. காரைக்காற் பதியில் நிதிபதி செட்டியார் திருமகளார். நாகை பரமதத்தனுக்கு வாழ்க்கைப் பட்டவர். இறைவன் திருவருளால் பேய் வடிவினை வேண்டிப் பெற்றவர். திருவாலங்காட்டில் முத்தியடைந்தவர். இவர் பாடியன அற்புதத் திருவந்தாதி, மூத்த திருப்பதிகம், இரட்டைமணிமாலை என்பன. இவை பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. காலம் கி. பி. 6 ஆம் நூற்றாண்டு.

**கார்த்திகேய முதலியார்** = தொண்டைநாட்டு மாகறல் என்னும் ஊரினர். சைவ சமயத்தவர். மொழி நூல் எழுதியவர். தமிழ் விண்ணப்பம் என்னும் நூலும் இவரால் எழுதப்பட்டது. காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**கார்மேகக் கவிஞன்** = கொங்கு நாட்டின் விஜமங்கல ஊரினர். கொங்கு மண்டல சதகம் இவரால் இயற்றப்பட்டது. இவரது மரபு இன்னதென அறிதற்கு இல்லை,

**கால்டுவெல் துரைமகனார்** = இவர் மேனாட்டுபாதிரியார். தென்னாடு வந்து தென்னாட்டு மொழிகளை நன்கு

பயின்றவர். அப்பயிற்சியின் காரணமாக மொழிநூல் என்ற நூலை ஆங்கிலத்தில் எழுதி அதனுள் திராவிடமொழிகள் ஒவ்வொன்றையும் ஆய்ந்து ஒன்றற்கொன்றிற்குள்ள ஒற்றுமைகளை எடுத்துக் காட்டித் தமிழ்மொழியின் தனிச்சிறப்பை விளக்கியவர். இவர் தெற்றத் தெளிய வடமொழிசாரின்றித் தமிழ்மொழி இயங்க வல்லது என்றும எவரும் அறிய எழுதியவர். கி. பி. 19 ஆம் நூற்றுண்டினர்.

காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் = கடைச் சங்க காலத்தவர். முல்லைப் பாட்டு ஆசிரியர்.

காளமேகப் புலவர் = ஆசு கவிபாடுவதில் மிக வல்லவர். ஸ்ரீரங்கம் கோயிலில் பரிச்சாரகராக இருந்தவர். அது போது வரதர் என்பது பெயர். திருவானைக்கா சிவன் கோயில் தாசி மோகனாங்கி காரணமாகச் சைவரானவர். அகிலாண்ட நாயகியின் அருளால் கவிபாடும் திறன் பெற்றவர். திருவானைக்கா உலா, பரப்பிரம்ம விளக்கம், சரஸ்வதி மாலை இவர் பாடிய நூல்கள். பலப்பல தனிப் பாடல்களைப் பாடியவர். அவை பெரும்பாலும் நகைச் சுவை ததும்பி இருக்கும். கி. பி. 14 ஆம் நூற்றுண்டினர்.

## கி

கிருட்டிணப்பிள்ளை = பாளயங் கோட்டையினர். வைதிக சமயத்தில் இருந்து பின்னர்க் கிறிஸ்தவச் சமயத்தைச் சார்ந்தவர். இவர் இரட்சண்ய யாத்திரிகம், இரட்சண்ய மனோகரம், இரட்சண்ய குறள் முதலான நூற்களை இயற்றியவர். காலம் கி.பி. 19 ஆம் நூற்றுண்டு.

## கு

குகை நமச்சிவாயர் = திருவண்ணாமலையில் குகையில் தவம் கிடந்த யோகியார், இவர் அருணகிரி அந்தாதி, சோணகிரி மாலை இவற்றைப் பாடியுள்ளார். கி. பி. 16 ஆம் நூற்றுண்டினர்.

குணசாகரர் = இவர் சைனர். யாப்பருங்கலக்காரிகைக்கு உரை எழுதியவர். கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

குணவீர பண்டிதர் = இவர் தொண்டை நாட்டைச் சார்ந்த களந்தைஎன்னும் ஊரினர். நேமிநாதம் என்னும் இலக்கண நூலைச் செய்தவர். வச்சணந்தி மாலை என்னும் நூலும் இவரால் இயற்றப் பட்டது.கி.பி. 12 ஆம் நூற்றாண்டினர்.

குமட்டூர்க்கண்ணனார் = கடைச் சங்க காலத்தவர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடி இம்பற் காட்டில் உள்ள 500 ஊர்களைப் பிரம்மதாய மாகவும், 38 ஆண்டுகள் தென்னாட்டுள் வரும் வருவாயில் ஒரு பாகமும் பரிசிலாகப் பெற்று மகிழ்ந்தவர். அந்தணர் குலத்தினர்.

குமாரகுருபரர் = இவர் பாண்டிய நாட்டு ஸ்ரீவைகுந்தம் என்னும் இடத்தில் சண்முக சிகாமணி கவிராயருக்கும் சிவகாமிஅம்மைக்கும் பிறந்த சைவ வேளாள மரபினர். ஐந்து வயது வரை ஊமையாக இருந்தவர். பின்னர்த் திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால் அது நீங்கப் பெற்றவர். இவரே திருப்பனந்தாளில் ஒரு மடத்தை ஸ்தாபித்தவர். தமது சிறப்பையும், சைவ சமய ஏற்றத்தையும் உயிருள்ள சிங்கத்தின்மீது அமர்ந்து முஸ்லீம் மன்னருக்குக் காட்டியவர். இவர் எழுதிய நூற்கள் கந்தர்கலி வெண்பா, மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ், முத்துக் குமாரசாமிபிள்ளைத்தமிழ், மதுரைக் கலம்பகம், கைலைக் கலம்பகம், மீனாட்சியம்மைகுறம், மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை, திருவாரூர் நான் மணிமாலை, பண்டார மும் மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, நீதி நெறி விளக்கம், சிதம்பர மும்மணிக்கோவை, சிவ காமி யம்மை இரட்டை மணிமாலை, காசிக் கலம் பகம், இந்துஸ்தான் மொழியை உணரச் சகல கலாவல்லி மாலை முதலியவற்றைப் பாடியவர். இவரது ஞானாசிரியர் தருமை ஆதினமாசிலாமணி தேசிகர் ஆவார்.இவர் திருமலை நாய்க்கன் காலத்தவர். இவர் காலத்தில் தான் துளசிதாசர், பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் விளங்கினர். கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

குமாரசுவாமிப்புலவர் = இவர் சுன்னாகத்தில் வேளாளர்

மரபில் பிறந்தவர். இவர் சைவ மரபினர். வடமொழியிலும் வல்லவர். இப்பயிற்சியினால் மேகதூதக் காரிகை, சாணக்கிய நீதி வெண்பா என்னும் நூற்களை மொழிபெயர்த்து எழுதியுள்ளார். தமிழ்ப் புலவர் சரிதம், வினைப்பகுபத விளக்கம் முதலியனவும் இவர் செய்தவையே. காலம் 19 ஆம் நூற்றாண்டு.

குமாரதேவர் = இவர் கன்னட தேசத்து மன்னர். சாந்தலிங்க சுவாமிகளை ஞானாசிரியராகக் கொண்டவர். பின்னர் அரசு துறந்தவர். திருப்போரூர்சிதம்பரசுவாமிகள் இவர்மாணவர். இவர் அத்துவிதஉண்மை மகாராஜா துறவு, ஆகமநெறி அகவல், ஞானஅம்மானை, சிவதரிசன அகவல், சமரச அகவல் முதலான நூல்களைப்பாடியவர். திருவாதவூரார் புராணத்திற்கும் உரைஎழுதியவர். வீர சைவர். கி.பி. 18ஆம் நூற்றாண்டு.

குருகைப் பெருமான் கவிராயர் = திருநெல் வேலியில் ஆழ்வார் திருநகரியில் வேளாள மரபில் பிறந்தவர். மாறன்அலங்காரம் என்னும் அணி இலக்கணம், மாறன் பாப்பாவினம் மாறன்அகப்பொருள், நம் பெருமான் மும்மணிக்கோவை முதலான நூற்களை இயற்றியவர். காலம்கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

குருநமச்சிவாயர் = இவர் குகை நமச்சிவாயர் மாணவர். அண்ணாமலை வெண்பா, சிதம்பர வெண்பா, பரமரகசிய மாலைஎன்னும் நூல்களைப்பாடியவர். கி.பி. 16 ஆம் நூற்றாண்டினர்.

குருபாததாசர்--இவர் குமரேச சதகம்பாடியவர் கி. பி. 18 ஆம் நூற்றாண்டினர்.

குலசேகர ஆழ்வார் = இவர் பன்னிரண்டு ஆழ்வார்களில் ஒருவர். சேர மன்னர் மரபினர். திருவஞ்சைக்களத்தில்பிறந்தவர். திருமாலிடத்தும் ராமபிரானிடத்தும் பேரன்புடையவர். மன்னார்குடியில் பரமபதம் அடைந்தவர். இவரது திருப்பாடல்கள் பெருமாள் திருமொழி என்று தலைப்பின் கீழ் நாலாயிரப் பிரபந்தத்தில் உள்ளன. இவர் முகுந்தமாலை என்னும் நூலை வடமொழியில் பாடியிருப்பதாகத் தெரிகிறது. பாகவதர் பெருமையினை உணர்த்த நன்கு காய்ச்சப்பட்ட

எண்ணெயில் கையை யிட்டுத் தம் கைக்கு எந்த வித துன்பமும் ஏற்படாத வாறு காட்டியவர். காலம் 9 ஆம் நூற்றாண்டு.

## கூ

கூடலூர்கிழார் = கடைச்சங்க காலத்தவர். இவர் யானைக் கண் சேய்மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் காலத் தவர். வானநூல் புலமை பெற்றவர். முதுமொழிக் காஞ்சி என்னும் நூலைப் பாடியவர். ஐங்குறுநூறு என்னும் நூலைத்தொகுத் துத் தந்தவர். இவர் பாடினவாகப் புறத்தில் ஒன்றும், குறுந்தொகை யில் மூன்றும் ஆக நான்கு பாடல்கள் உள.

## கொ

கொங்குவேள் = இவரே உத யணன் காதை ஆசிரியர். அது கொங்குவேள் மாக் கதை, பெருங்கதை என் றும் கூறப்படும். இந் நூலாசிரியர் விகடமங்க லம் என்னும் ஊரினர். கொங்கு நாட்டு வேளாள சிற்றரசருள் ஒருவர். காலம் கி. பி. 6 ஆம் நூற் றாண்டு.

கொட்டையூர்சிவக்கொழுந்து தேசிகர் = இவர் பல நூல்களைப் பாடியவர். அவற்றை இணைத்துச் சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தத்திரட்டு என்ற பெயரால் ஒருநூல் வெளி வந்துள்ளது. குறிப்பிடத் தக்க நூற்கள் சரபோச ராசன் குறவஞ்சி, சரபேந் திரன் வைத்திய முறை கோடிச்சுரக் கோவை, கொட்டையூர்ப் புராணம், பிரகதீஸ்வரர் உலா, குற வஞ்சி என்பன. கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

## கோ

கோபாலகிருஷ்ண பாரதியார் இவர் இசை நூற் புலவர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை காலத்த வர். நந்தனார் கீர்த்தனை என்னும் நூலையும், சிதம் பரக்கும்மி என்னும் நூலை யும் பாடியவர். கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

கோப்பெருஞ் சோழர் = சங்க காலத்தவர் சோழ மன் னர் மரபினர். பொத்தி யார், பிசிராந்தையார் என் னும் புலவர்கட்கு உயி ரனைய நண்பர். இவர் சோழன் குரும்பொறை என்போனால்வெல்லப்பட் டவர். அதன் பொருட்டு வடக்கிருந்து உயிர் விட்டவர். இவரது பாடல்

கள் குறுந்தொகையில் நான்கும் புறத்தில் மூன்றும் உள.

**கோவூர் கிழார்** = கடைச்சங்க காலத்தவர். வேளாள மரபினர். இவர் மன்னர்கட்கு அறிவுரை புகட்டுவதில் வல்லவர். சமாதானப்படுத்திவைப்பதிலும் சமர்த்தர். இளந்தத்தன் நெடுங்கிள்ளி என்பானால் கொல்லப்படும் தருவாய் கொல்லப்படாமல் செய்தவர். மலையமான் மக்கள் கிள்ளிவளவனால் யானைக்காலில் வைத்துக் கொல்லக் கட்டளை இட்டதைத் தடுத்தவர். இவரது பாடல்கள் புறத்தில் பதினைந்தும், நற்றிணையில் ஒன்றும், குறுந்தொகையில் ஒன்றும், திருவள்ளுவமாலையில் ஒன்றும் உள்ளன.

**கோனேரியப்ப நாவலர்** = இவர் கந்தபுராணத்தைச் சார்ந்த உபதேச காண்டத்தை இயற்றியவர். இவரைக் கந்த புராண ஆசிரியர் கச்சியப்ப சிவாசாரியாரின் மாணவர் என்பர். அப்படியானால் இவரது காலம் கி. பி. 12 ஆம் நூற்றாண்டு. இவரை 18 ஆம் நூற்றாண்டு புலவர் என்றும் கூறுவர்.

## ச

**சங்கர நமச்சிவாயர்** = இவர் திருநெல்வேலியில் பிறந்தவர். இலக்கணக் கொத்து எழுதிய சுவாமிநாத தேசிகரிடம் கல்வி பயின்றவர். இவர் போலிகார் மருதப்பதேவன் வேண்டுகோளின்படி நன்னூலுக்கு விருத்தியுரை வரைந்தவர். காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு. இவ்வுரையினைச் சிவஞான முனிவர் திருத்தம் செய்துள்ளார்.

**சசிவண்ணர்** = இவர் தத்துவராயரிடம் இட்சை பெற்றவர். விருத்தாசலத்தில் உதித்தவர். இவர் வெண்குஷ்டநோயால் துன்புற்றவர். இக்காரணம்பற்றியே இப்பெயரால் குறிப்பிடப்பட்டுவந்தார். இவரது பெற்றோர் சாந்தசீலர் விரத சீலை என்பவர். காலம் 15 ஆம் நூற்றாண்டு. சசிவண்ண போதம் என்னும் நூலை யியற்றியவர்.

**சண்முகம் பிள்ளை** = இவர் மயிலை சண்முகம் பிள்ளை என்றும் கூறப்படுவார். மயிலையில் வாழ்ந்தவர். கம்பராமாயணம் பாடம் சொல்லுவதில் வல்லவர்,

திருமுல்லைவாயில் புராணம் இவரால் பாடப்பட்டது. காலம் கி.பி. 20ஆம் நூற்றுண்டு.

**சத்திமுற்றப் புலவர்** = இவர் பிறந்த ஊர் சத்திமுற்றம் என்பது. இது கும்பகோணத்தைச் சார்ந்தது. இவரை ஆதரித்தவர் சோழ நாட்டுக் குடிதாங்கி என்பவன். இவர் பாடிய நாரைவிடுதூது என்னும் ஒரு தனிப்பாடல் இவரது வறுமை நிலையினையும், உவமைகூறும் ஆற்றலையும புலப்படுத்தும். காலம் கி. பி. 13 ஆம் நூற்றுண்டு.

**சபாபதி நாவலர்** = ஆறுமுக நாவலர் மாணவர்களுள் ஒருவர். யாழ்ப்பாணத்தைச் சார்ந்தவர். நல்ல பேச்சாளர்; எழுத்தாளர். இவர் இயற்றிய நூற்கள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்கன : ஏசு மத சங்கற்ப நிராகரணம். சிதம்பர சபாநாதர் புராணம், இராமாயண தாற்பரிய சங்கிரகம், சதுர் வேததாற்பரிய சங்கிரகம், திருச்சிற்றம்பல யமக அந்தாதி, திருவிடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, இலக்கண விளக்கப் பதிப்புரை மறுப்பு, திராவிட பிரகாசிகை என்பன. காலம் கி. பி. 19ஆம் நூற்றுண்டு.

**சம்பந்தசரணலயர்** = இவர் தருமபுர மடத்துப் பண்டார சந்நிதியாவார். கந்த புராணச் சுருக்கம் பாடியவர். மைசூர் மன்னன் இவரைக் கண்டபோது, இவர் கருநிறமுடையவராக இருந்த காரணத்தால் 'வாரும் அண்டங் காக்கை யாரே' என்று அழைத்தபோது, உடனே இவர், "அண்டங்காக்கை யார் என்பது உமக்குத் தகுமே அன்றி எம் போன்ற துறவிக்கு எங்ஙனம் பொருந்தும்?'' என்று கூறிய அறிஞர். அண்டங் காக்கை என்பது உலகைக்காத்தல் என்ற பொருள் தருதலின் இங்ஙனம் கூறினர். காலம் கி.பி. 16 ஆம் நூற்றுண்டு.

**சம்பந்தர்** = இவரே திருஞானசம்பந்தர் எனப்படுபவர். ஆளுடைய பிள்ளையார் என்பதும் இவரது பெயர். மற்றும் பலபெயர்கள் இவருக்கு உண்டு. சீர்காழியில் கௌணியர் கோத்திரத்தில் அந்தணர் மரபில் சிவபாத இருதயருக்கும் பகவதி என்னும் அம்மை

யாருக்கும் பிள்ளையாகப் பிறந்தவர். மூவாண்டில் ஞானப்பால் உண்டு பாடல்களைப் பாடியவர். சிவபெருமான் திருவருளால் பல அற்புதங்களைச் செய்தவர். பாம்பு கடித்தவனை எழுப்பினார். பாண்டியன் கூனை நிமிர்த்தினார். சுரத்தைப் போக்கினார். எலும்பைப் பெண்ணாக்கினார். சமணர்களை வாதில் வென்றார். தம் திருப்பதிகம், ஆற்றில் அடித்துப்போகாவண்ணமும், நெருப்பில் வேகாவண்ணமும் செய்தவர். இவர் பாடிய பாடல்கள் தேவாரத்தில் உள்ளன. இவரது பாடல்கள் திருக்கடைக்காப்பு என்றும் கூறப்படும். சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள், முதல் மூன்று திருமுறைகளாக உள்ளன. இவர் பல்லாயிரக் கணக்கான பதிகங்களைப்பாடியும் இப்போது உள்ளவை 384 பதிகங்களே ஆகும். இவர் காலத்தில் அப்பர், சிறுத்தொண்டர் முதலியோர் திகழ்ந்தனர். காலம் கி.பி. 7 ஆம் நூற்றாண்டு.

**சயங்கொண்டார்** = இவர் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தவர். தீபங்குடியில் தோன்றியவர். கலிங்கத்துப்பரணியைப்பாடியவர். பரணி பாடுதலில் வல்லவர் என்பதை உணர்த்த ''பரணிக்கோர் ஜயங்கொண்டார்'' எனச் சிறப்பிக்கப்பட்டவர். சைவ சமயத்தவர். இசையாயிரம் என்னும் நூலையும் இயற்றியதாகக் கூறுவர். காலம் கி. பி. 11ஆம் நூற்றாண்டு.

**சரவணப்பெருமாள் ஐயர்** = இவர் வீரசைவ மரபினர், திருத்தணிகையில் பிறந்தவர். இவரது தந்தையார் கந்தப்பையர் என்பவர். இவர் சிறந்த உரையாசிரியர். நைடதம், பிரபுலிங்கலீலை ஆகிய நூற்களில் சில பகுதிகளுக்கு உரை கண்டவர். நாலடியார் திருவாசகம் முதலிய நூல்களைப்பதிப்பித்தவர். இயற்றமிழ்ச் சுருக்கம், அணியியல் விளக்கம், களத்தூர்ப் புராணம் இவரால் இயற்றப்பட்டவை. காலம் கி. பி. 19ஆம் நூற்றாண்டு.

**சரவணப் பெருமாள் கவிராயர்** = முத்து ராமலிங்க சேதுபதியின் அவைக்களப் புலவர். பணவிடு தூதின் ஆசிரியர் இவர்

என்பர். முத்து இருளப்பப் பிள்ளை மீது காதல் என்னும் நூலையும், விநாயகர் திருமுக விலாசம் என்னும் நூலையும் பாடியவர். காலம் கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

**சவ்வாதுப்புலவர்** = முஸ்லீம இனத்தவர். ஆண்டவன் பிள்ளைத்தமிழ் என்னும நூலையும், சேதுபதி மன்னர் வைகூரியால் வருந்தியபோது அது நீங்கத் தேவியை வேண்டி இராஜராஜேஸ்வரி பஞ்சரத்தினம் என்னும் நூலையும் பாடியவர். பல தனிப் பாடல்களையும் பாடியவர். 18 ஆம் நூற்றாண்டு.

**சாந்தக்கவிராயர்** = இவர் திருவரங்கர் பெயரை அமைத்து இரங்கேசா வெண்பா என்னும் நூலைச் செய்தவர். ஒவ்வொரு வெண்பாவிலும ஒவ்வொரு குறட்பாவை அமைத்துக்குறட்பாவுக்கேற்ற உதாரணக் கதையும் அமையப்பாடியுள்ளார். இது சூடாமணி என்றும் கூறப்படும், காலம் கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**சாந்தலிங்க சுவாமிகள்** = வீரசைவ மரபில் திருத்துறையூரில் பிறந்தவர். வேதாந்த சித்தாந்த மெய்யறிவு படைத்தவர். இவரது மாணவர் மகாராஜா துறவு என்னும் நூலைப்பாடிய குமார தேவர் இவர்பாடிய நூற்கள் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம். அவிரோத உந்தியார் முதலியன. இவற்றிற்குத் திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் சிறந்த உரை எழுதியுள்ளார். வீராகமத்தையும தமிழில் இயற்றியவர். காலம் கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

**சாமிநாதபண்டிதர்** = சிறந்த சைவ சித்தாந்தி. யாழ்ப்பாணவாசி. சிவஞான மாபாஷ்யம், தேவாரம் முதலான நூற்களை அச்சிட்டவர். சைவ நூற் சார சங்கிரகம் என்னும் நூலையும் இயற்றியவர். காலம கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**சாமிநாதய்யர்** = திரிசிரபுரம மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம பிள்ளை அவர்களிடம் தமிழ் பயின்ற மாணவர். மறைந்து போகும் நிலையில் இருந்த சங்க நூற்கள் பலவற்றைப் பதிப்பித்தவர். பதிப்பாசிரியர்

பண்பில் தலை சிறந்தவர். எளிய இனிய உரை நடை எழுதும் ஆற்றல் படைத்தவர். தமது ஆசிரியர் திரு பிள்ளை அவர்களிடத்தில் அளவு கடந்த அன்பும் பக்தியும் உடையவர். அவர் பெயரைத் தம் வாயாலும் கூறாது பிள்ளை அவர்கள் என்றே கூறிவந்தவர். வித்துவான் தியாகராய செட்டியாரிடத்தும் அன்புடையவர். அவ்வன்புக்கு அறிகுறியாகத் தம் இல்லத்திற்குத் தியாகராய விலாஸ் என்ற பெயரையே அமைத்தவர். மீனாட்சி சுந்தரம்பிள்ளை சரித்திரம், சங்க காலத்தமிழும் பிற்காலத்தமிழும், என் வாழ்க்கை வரலாறு, கண்டதும் கேட்டதும் முதலான உரைநடை நூற்களையும் எழுதியவர். காலம் கி.பி. 20ஆம் நூற்றாண்டு.

சி

**சிதம்பர சுவாமிகள்** = சிறந்த இலக்கணப்புலவர். இவர் மதுரையிலிருந்த சாந்தலிங்க சுவமிகளிடம் ஞான தீட்சை பெற்றுத் துறவியானவர். திருப்போரூரில் தங்கி மடம் ஒன்றைத் தாபித்தவர். இவர் பாடிய நூற்கள் திருப்போரூர் சந்நிதி முறை. திருப்போரூர் முருகன் பிள்ளைத் தமிழ். உபதேசக் கட்டளை முதலியன. சாந்தலிங்க சுவாமிகள் எழுதிய வைராக்கிய தீபம், கொலை மறுத்தல் வைராக்கிய சதகம், முதலான நூல்களுக்கு உரைகண்டவர். திருப்போரூர் முருகன் கோயிலைக் கண்காணித்து வந்தவர். பல சித்துக்களிலும் வல்லவர். இவரது உரையால் தான் சம்பந்தர் பாடல்கள் திருக்கடைக்காப்பு என்றும், திருநாவுக்கரசர் பாடல்கள் தேவாரம் என்றும், சுந்தரர் பாடல்கள் திருப்பாட்டு என்றும் அறிய வருகின்றன. காலம் கி. பி. 18 ஆம் நூற்றாண்டு.

**சிதம்பரம் பிள்ளை** = இவர் சிறந்த நாட்டுப் பற்றுடையவர். திருநெல்வேலியைச் சார்ந்தவர். அதன் பொருட்டுப் பல இன்னல்களுக்கு ஆளானவர். சிறையில் இருந்து துன்புற்றவர். கப்பலோட்டிய தமிழர் என்ற சிறப்புப்பெற்றவர், இவர் இன்னிலை விருத்தியுரை, அகமே புறம், மெய்யறிவு என்ற நூல்களைச்

செய்ததாகத் தெரிகிறது. இளம்பூரணம், திருக்குறள் மணக்குடவர் உரைகளைப் பதிப்பித்தவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**சிவஞான முனிவர்** = இவர் விக்ரமபுரத்துச் சைவவேளார் குலத்து ஆனந்தக் கூத்தர், மயிலம்மை என்பாரின் தவப் புதல்வர். இவரது திருப்பெயர் முக்களாலிங்கர் என்பது. இளமையிலேயே கல்வியில் சிறந்து விளங்கியவர். கவிபாடும் ஆற்றலும் பெற்றனர். இவர் திருவாவடுதுறையை அடைந்து பின் வேலப்ப தேசிகரால் ஞானஸ்நானம் செய்விக்கப்பட்டுச் சிவஞானயோகி என்ற பெயரைப் பெற்றவர். இவர் இலக்கணம் இலக்கியம், தருக்கம் முதலியவற்றில் ஒப்பாரும் மிக்காரும் இன்றி விளங்கியவர். வடமொழியிலும் பேரறிவு பெற்றவர், இதன் பொருட்டே இவர் "வடநூற் கடலும் தென்நூற் கடலும் நிலை கண்டுணர்ந்த சிவஞான முனிவர்" என்று சிறப்பிக்கப் பட்டவர். இவர் எல்லாத் துறையிலும் நூல் இயற்றியுள்ளார். இவர் மாபாஷ்யம் செய்ய வல்லவர் என்பதைச் சிவஞானபோதத்திற்கு விரிவுரை எழுதியதாலும், பிரபந்தங்களைப் பாடவல்லவர் என்பதை அமுதாம்பிகை பிள்ளைத் தமிழாலும். புராணம் பாட வல்லவர் என்பதைக் காஞ்சிபுராணத்தாலும் கண்டன நூற்களை எழுதவல்லவர் என்பதைச் சிவசமயவாத மறுப்பு என்ற நூலாலும், பரந்த இலக்கண புலமைக்குத் தொல்காப்பியச் சூத்திர விருத்தி எழுதியதாலும் அறிந்து கொள்ளலாம், இவரைப் போன்று பரந்த பேரறிவுபடைத்த ஒரு புலவரைக் காண்டல் அரிது. இங்கு எடுத்துக் கூறப்பட்ட நூற்கள் சிலவே. மொழி பெயர்ப்பு அறிவைத் தருக்க சங்கிரகம் என்னும் நூலாலும் அறியலாம். காலம் 18 ஆம் நூற்றாண்டு.

**சிவப்பிரகாச சுவாமிகள்** = இவரைத் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் என்பர். காஞ்சிபுரத்தில் வாழ்ந்த குமாரசுவாமிப் பண்டாரம் என்பார் புதல்வர். வடமொழி தென்மொழி உணர்ந்த பெரும்

புலவர். வீர சைவ மரபினர். இவர் வெள்ளியம்பலத் தம்பிரானிடம் இலக்கணம் கற்றவர். கற்பனைக் களஞ்சியம் என்றும் சிறப்பித்துப் பேசப்படுபவர். இவர் பல நூல்களை இயற்றியுள்ளார். அவை பிரபுலிங்க லீலை, நால்வர் நான்மணி மாலை, சோண சைலமாலை, வெங்கைக்கலம்பகம், வெங்கைக் கோவை, கிரோட்டக யமக அந்தாதி. சிந்தாந்த சிகாமணி, வேதாந்த சூடாமணி, பெரியநாயகி கலித்துறை தர்க்க பரிபாஷை. நன்னெறி, ஏசுமத நிராகரணம், திருக்கூவப் புராணம் திருக்காளத்தி புராணத்தில் இரண்டு சுருக்கங்கள் முதலியன. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் திருவீழிமிழலையில் படிக்காசு பெற்ற வரலாற்றை நால்வர் நான்மணிமாலையில் குறிப்பிடும் போது, "ஞானசம்பந்தர் பிராம் மணப் பிள்ளையாதலின் பிறர் கொடுக்க வாங்கத் தகும்; கொடுக்கும் குலமாகிய வேளாளர் குலத்தில் பிறந்த நீங்கள், வாங்கத் தகுமா?" என்று அப்பரை வினவும் வினு வேளாளர் மேம்பாட்டை உள்ளத்தில் வைத்து இவர் பாடியுள்ளது சிந்தித்தற்குரியது. காலம் 17 ஆம் நூற்றாண்டு.

சிவவாக்கியர் = இவர் தாயுமானவரால் குறிப்பிடப் பட்டபெருமை சான்றவர். இவரை ஒரு சித்தர் என்பர். இவர் பாடல்கள் சித்தர்கள் பாடிய பாடல்களைக் கோவைபடுத்தி வெளியிட்டுள்ள நூலில் காணலாம். நாடிப்பரீட்சை என்னும் நூலும் இவரால் செய்யப்பட்டது என்பர். இவரது காலம் கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

சிவாக்கிர யோகிகள் = இவர் சூரியனார் கோயில் ஆதினத்தலைவர். இவர் சிறந்த சைவ நூற் புலவர். சரபோசி மகாராசர் காலத்தவர். மணவாள முனிவருடன் வாதம் புரிந்து வென்றவர். இவர் பல நூல்களைச் செய்தவர். வடமொழியிலும் வல்லவர். இவர் இயற்றிய நூற்கள் சைவ சந்நியாசபத்ததி, வடமொழிச் சிவஞான போத சங்கிரக வியாக்கியானம், சைவ பரிபாஷை, சுருதி சூக்தி மாலை, தமிழ் உரை, சித்தாந்த தீபிகை, வேதாந்த

இபிகை, சிவஞான சித்தியார் உரை முதலியன கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

சீ

**சித்தலைச் சாத்தனார்** = இவர் கடைச் சங்க காலத்தவர். இவரது இயற்பெயர் சாத்தனார் என்பது. சித்தலை என்னும் ஊரினர் என்பதனால் சித்தலைச் சாத்தனார் எனப்பட்டார். பிறர் செய்யுளில் குற்றம் கண்ட போது தம் தலையில் எழுத்தாணி கொண்டு குத்திக்குத்திச் சீழ் ஒழுகும் தலையினையுடையராய் இருந்த காரணத்தால் சீழ்த் தலைச் சாத்தனார் என்று கூறப்பட்டு நாளடைவில் சித்தலைச் சாத்தனார் எனப்பட்டார் என்றும் கூறுவர். மதுரையில் தானியங்களை விற்று வந்த வணிகத் தொழிலாளர். அது காரணமாக மதுரைக் கூலவாணிகச் சித்தலைச் சாத்தனார் என்றும் கூறப்பட்டவர். இளங்கோ அடிகளாரின் நண்பர். பௌத்த மதத்தினர். இவர் செய்த நூலே மணிமேகலை என்பது. இதுவே அன்றி, அகத்தில் ஐந்தும், குறுந்தொகையில் இரண்டும், நற்றிணையில் மூன்றும், புறத்தில் ஒன்றும், திருவள்ளுவ மாலையில் ஒன்றும் ஆகப் பன்னிரண்டு பாடல்களும் இவரால் பாடப்பட்டுள்ளன.

**சீனிவாசப் பிள்ளை** = சிறந்த ஆராய்ச்சியாளர். வரலாற்றுப் புலமை மிக்கவர். தஞ்சாவூரில் வழக்கறிஞராக இருந்தவர். தமிழ் வரலாறு என்னும் நூலை எழுதியவர். இது ஆராய்ச்சியாளர்கட்குப் பெரிதும் பயன்பட வல்லது. 20 ஆம் நூற்றாண்டு.

சு

**சுந்தரம் பிள்ளை** = இவர் ஆலப்புழை என்னும் ஊரில் பெருமாள் பிள்ளை என்பாரின் புதல்வர். ஆங்கிலத்தில் எம். ஏ. பட்டமும் இராவ்பகதூர் என்ற சிறப்புப்பட்டமும் பெற்றவர். திருவனந்தபுறத்தில் தத்துவப் பேராசிரியராக இருந்தவர். இவர் மனோன்மணியம் என்னும் நாடக நூலை எழுதியவர். நூல் தொகை விளக்கம், ஞானசம்பந்தர் காலம் முதலியன இவரால் எழுதப்பட்டவை. மொழிநூல் ஆராய்ச்சியில் சிறந்தவர். கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

**சுந்தரர்** = இவர் சைவ சமயாசிரியர் நால்வருள் ஒருவர். இவர் பாடிய பாடல்கள் தேவாரத்தில் உள்ளன. அப் பாடல்களைத் திருப்பாடல்கள் என்றும் கூறுவர். திருநாவலூரில் ஆதிசைவ பிராமண மரபில் சடையனார் இசைஞானியார் என்பாருக்குத் தவப் புதல்வராய்ப் பிறந்தவர். இவரது திருமணத்தில் சிவபெருமானே வந்து, இவர் திருமணத்தை நடத்திக் கொள்ளாமல் படி தடுத்து ஆட்கொள்ளப் பெற்றவர். பின்னர்ப் பல தலங்களுக்கு யாத்திரை செய்தவர். அவ் யாத்திரையில் பரவையார், சங்கிலியார் என்ற மாதர்களைச் சிவனார் அருளால் மணந்தவர். பல அரிய பெரிய அற்புதங்களைச் சிவபெருமான் திருவருளால் நடத்திக் காட்டியவர். அவற்றுள் குறிப்பிடத்தக்கவை முதலையுண்ட பாலனை அழைத்தல், செங்கல்லைப் பொன்கல்லாகச் செய்தல், ஆற்றில் இட்ட பொருளைக் குளத்தில் எடுத்தல் முதலியன. இவர் பாடிய தேவாரப் பதிகங்கள் 37000. ஆனால், இன்று உள்ளவை 100 பதிகங்களே. காலம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டு. இவரது பாடல்கள் பலவகையான நயங்களைக் கொண்டு விளங்குவதால்," நயத்துக்குச் சுந்தரனார் என்று இவரைச் சிறப்பித்துப் பேசுவர். கல்வியின் பொருட்டு இவரது நட்பைச் சிவபெருமான் பெற்றார் என்றால், இவரது பெருமையைக் கூறவும் வேண்டுமா? அதன் பொருட்டுத் தம்பிரான் தோழர் என்றும் பெயரையும் பெற்றவர்.

**சுப்பிரமணிய பாரதியார்** = இராமநாதபுர எட்டயபுரத்தில் பிறந்தவர். தேசியக் கவிஞர். பின்னிகழ்வதை முன்னறிந்து பாடும் ஆற்றல் மிக்கவர். வடமொழி தென்மொழி அறிந்தவர். தமிழ்மொழியினிடத்து அளவுகடந்த பற்றுடையவர். இவரது பாடல்கள் உறங்குபவனையும் தட்டி எழுப்பி உணர்ச்சி யூட்ட வல்லன. சென்னைத் திருவல்லிக்கேணியிலும் புதுவையிலும் விழைந்தவர். பாஞ்சாலி சபதம், பாப்பாப் பாட்டு, கண்ணன் பாட்டு

முதலான பாடல்களைப் பாடியவர். பிற நாட்டுக் கலைகளைத் தமிழ் மொழியில் பெயர்த்து எழுத வேண்டுமென்ற பேரவா படைத்தவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**சுப்பிரமணியப் பிள்ளை** = திருநெல்வேலியினர். இவர் எம். எல். பிள்ளை என்று கூறப்பெறும் சிறப்புடையவர். சட்டம் பயின்று சட்டக் கல்லூரித் தலைவராக மிளிர்ந்தவர். தமிழ் நூல்களையும சைவ சித்தாந்த நூற்களையும் நன்கு பயின்றவர். பல உரைநடை நூற்களை எழுதியவர். அவை யாவும் ஆராய்ச்சி நூற்களாகவே இருக்கும். தமிழ் இலக்கிய வரலாறு. மெய்கண்ட நூற்கள் உரைநடை, மெய்கண்டாரும் சிவஞான போதமும். இந்துசமயங்களின் சுருக்க வரலாறு மொழி நூற்கொள்கையும் தமிழ் மொழி அமைப்பும, பழந்தமிழர் நாகரிகம், வான நூல் முதலியன இவர் எழுதிய நூற்கள். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**சுவாமிநாத தேசிகர்** = சைவ வேளாள மரபினர் இவரது வடமொழி யாசிரியர் கனகசபாபதி சிவாசாரியார், தமிழ் ஆசிரியர் மயிலேறும் பெருமாள்பிள்ளை. திருவாவடுதுறை அம்பலவாண தேசிகரிடம் ஞானோபதேசம் பெற்று ஈசான் தேசிகர் என்ற தீட்சா நாமம் பூண்டவர். இலக்கணக் கொத்துத் தசகாரியம் முதலான நூற்களைஎழுதியவர். கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

## சூ

**சூரியநாராயண சாஸ்திரியார்** = இவர் பரிதிமாற் கலைஞர் என்றும் கூறப்படுவார். தமிழ் மொழிப் பற்றில் தலை சிறந்தவர். மதுரை சபாபதி முதலியாரின் மாணவர். கிறிஸ்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். உயர்ந்த நடையில் செய்யுளையும் உரை நடைகளையும் எழுதக்கூடியவர். இவர் பி. ஏ. பட்டம் பெற்றவர். வரலாற்றுப் புலமையுடையவர். தமிழ் வரலாறு. மதிவாணன், பாவலர் விருந்து, கலாவதி, நாடக இயல், ரூபாவதி முதலான நூற்களை எழுதியவர். இவர்வாழ்ந்த சில ஆண்டுகளில் தமிழ் மொழிக்குச் செய்த

தொண்டு மிக மிகப் பாராட்டற் குரியது. கி.பி. 19ஆம் நூற்றாண்டு. இவர் "வட மொழிக்கு வாய் இல்லை என்று எழுதிய அத்துணைத் தமிழ்ப் பற்றுடையவர் என்றால் இவர் தமிழ் மொழியி னிடத்துக் கொண்டிருந்த அன்பைக் கூறவும் வேண்டுமோ?"

## செ

செல்வகேசவராய முதலியார் = இவர் சென்னை, பச்சை யப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர் எம். ஏ. பட் டம் பெற்றவர். வேளாள மதத்தினர் கம்பன், திருவள்ளுவர், தமிழ், கண்ணகி முதலான உரை நடை நூல்களை எழுதிய வர். கி. பி. 20 ஆம் நூற் றுண்டு. இவர் தமது திருக் குமாரர்களுக்கு நச்சினார்க் கினியன், பரி மேலழகர், இளம்பூரணன் என்றபெய ரைச் சூட்டி மகிழ்ந்தவர்.

செவ்வைச்சூடுவார் - விண்டு பாகவத ஆசிரியர். இத னைப் பாகவதம் என்றும் கூறுவர். இவர் வேம்பத் தூர்வாசி. வைணவ பிரா மணர். கி. பி. 16 ஆம் நூற்றுண்டு.

## சே

சேக்கிழார் = அருள்மொழித் தேவர் என்ற பெயரும் இவருக்கு உண்டு. ஆத லின் அருள மொழித் தேவர் என்ற இடத்துக் காண்க. சேக்கிழார் மரபு வேளாளர் மரபுகளில் ஒன்று. அம் மரபில் சிறந்து விளங்கினமை பற்றி இப்பெயரால் இவர் குறிப்பிடப் பட்டார். காலம் 12 ஆம் நூற் றுண்டு.

சேதிராயர் = சேதிநாட்டு மன்னர் மரபினர், திரு விசைப்பாப் பாடியவர்க ளுள் ஒருவர், கி.பி.11ஆம் நூற்றுண்டு.

சேந்தனார் = ஒன்பதாம் திரு முறையில் உள்ள திருப் பல்லாண்டு என்னும் திருப்பாடல்களுக்கும், திருவிசைப்பாவில்உள்ள பாடல்கள் சிலவற்றிற்கும் ஆசிரியர்.பட்டினத்தாரின் நிதிமந்திரியார் என்று கருதப்படுபவர்.கருவூலத் தில் இருந்த பொருள் களைப் பட்டினத்தார் உத்தரவுப்படி சூறையிட் டவர். அதன் காரணமாக அவர் காலத்து மன்ன னால் சிறை செய்யப்பட்ட வர். பின்னர்ப் பட்டினத்

தடிகள் இறைவனை வேண்டச் அச் சிறையினின்றும் நீக்கப் பெற்றவர். பின்னர்ச் சிதம்பரத்தில் விறகுவிற்று வாழ்ந்தவர். இவரைத் திருவீழிமிழலையில் இருந்தவராகவும் கௌணிய கோத்திரத்தார் எனவும் கூறுவர். ஏறன் என்ற பெயரும் இவருக்கு உண்டு என்பர். கி.பி. 10 ஆம் நூற்றுண்டு.

**சேரமான் கணைக்கால் இரும்பொறை** = இவர் சேர மன்னர். சோழன் செங்கணுைல் தோற்கடிக்கப் பட்டுச் சிறை புகுந்தவர். சிறந்த மானி. தம் மானத்தைக் காக்க உயிரைவிட்டவர். தாம் சிறைபட்டிருந்த சிறைச்சாலைச் சேவகனை நீர் வேண்ட, அவன் கொணரத் தாமதம்செய்து பின்னர்க் கொணர்ந்த காரணத்தால் அந்நீரைப் பருகாது உயிர்விட்டவர். கடைச் சங்க காலத்தவர். இவரது பாடல் புறத்தில் ஒன்று உண்டு.

**சேரமான்பெருமாள்** = இவர் பொறையன் என்பானின் திருமகனுராகக் கொடுங்கோளுரில் பிறந்தனர். இவர் மாக்கோதையார் என்னும் பெயரும் உடையவர். இவர் சேரநாட்டைச் சார்ந்த ஊருக்கு மன்னராணமையின் சேரமான் பெருமான் எனப்பட்டார். இவர் சுந்தரருடைய நண்பர். அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர். இவர் பாடிய நூற்கள் திருக்கைலாயஞானஉலா, பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை முதலியன. காலம் 9 ஆம் நூற்றுண்டு. இவர் தாம் அரசு நடத்துகையில் எல்லா உயிர்களின் பேச்சையும் அறிந்து அவற்றிற்கு நன்மை செய்யவேண்டி, அவை கூறியவற்றை அறிந்து வந்த காரணத்தால், கழறிற்று அறிவார் என்ற பெயரையும் பெற்றவர்.

**சேனாவரையர்** = "ஆனைப் புலமை சேனாவரையர்" என்று சிறப்பிக்கப் பட்டவர். தொல்காப்பியம்சொல்லதிகாரத்திற்குச் சிறந்த உரை கண்டவர். வடமொழிப்புலமையும் உடையவர். பாண்டிய நாட்டு ஆற்றூரில் சேனைத் தலைவர் குடும்பத்தினர். கி.பி. 13 ஆம் நூற்றுண்டினர். இவர் அந்தணமரபினர் என்றும் கருதப்படுவர்.

**சொக்கப்பநாவலர்** = இவர் ஓர் உரையாசிரியர். தஞ்சை வாணன் கோவைக்கு உரை எழுதியவர். குன்றத்தூர் வாசி என்று இவரைக் கூறுவர். கி. பி. 18ஆம் நூற்றாண்டு.

## சோ

**சோமசுந்தர நாய்க்கர்** = இவர் ஒரு சிறந்த சைவ சித்தாந்தி. வடமொழி தென்மொழிகளையும் சைவ சித்தாந்த சாஸ்திரங்களையும் திருமுறைகளையும் நன்கு பயின்றவர். சைவ சித்தாந்த சண்ட மாருதம் என்ற சிறப்புப் பெயர் பெற்றவர். இவர் வைணவ சமயத்தைச் சார்ந்த குடும்பத்தினர். அதுபோது ரங்கசாமி என்பது பிள்ளைத் திருநாமம். இவர் ஏகாம்பர சிவயோகியாரால் சோம சுந்தரம் என்று அழைக்கப்பட்டவர். வாதம் செய்து தம் கொள்கைகளை நிலைநிறுத்துவதில் ஈடும் எடுப்பும் அற்றவர். தம் அறிவுத் திறனைப் பேச்சாலும் எழுத்தாலும் காட்டியவர். இவர் திருஞான சம்பந்தரை ஆத்மார்த்த ஞானாசிரியராகக் கொண்டவர். சென்னை, சூளையில் வாழ்ந்தவர். இவர் நூற்றுக்கு மேலும் நூல்களை எழுதியவர். அனைத்தும் சிவபரத்துவம, நால்வர் பெருமை, சைவசமய ஏற்றம் முதலான பொருள்களைக் கொண்டு மிளிரும். இவர் எழுதிய நூற்களில் சில சிவாதிக்க இரத்தினவளி, சித்தாந்த ரத்தினகரம், சித்தாந்த ஞானபோதம், ஆசாரிய பிரபாவம், வேத சிவாகமப் பிரமாணியம், சிவநாமப் பஃறொடை வெண்பா முதலியன. இவரது தலை சிறந்த மாணவர் மறைமலையடிகளார். காலம் 19 ஆம் நூற்றாண்டு. இவர் சொற்பொழிவு ஆற்றும்போது, எவரும் மேலாடை அணிந்து கொண்டு கேட்டல் கூடாது. அப்படி மேலாடையுடன் கேட்பவரை எழுந்து போமாறு கூறும் அத்துணைக் கண்டிப்பு உடையவர்.

**சோழன் குளமுற்றத்துத் துஞ்சியகிள்ளிவளவன்** = இவர் கடைச்சங்க காலத்தவர். சோழமரபினர். கவிபாடும் காவலர் ஆவார். கொடையும் வீரமும் உடையவர். இவர் சிறுகுடி கிழான் பண்ணன் என்

பாணைப்பாடியபாடல்புறத்தில் ஒன்று உண்டு. இவரைப் பல சங்க காலப் புலவர்கள் பாடியுள்ளார்.

சோழன் நலங்கிள்ளி = இவர் சோழ மன்னர் மரபினர். கவியும் பாடவல்லவர். கடைச் சங்க காலத்தவர். இவரைச் சேட் சென்னி என்றும் மாவளத்தான் என்றும் புட்பகை என்றும் தேர்வளர்கிள்ளி என்றும் கூறுவர். நெடுங்கிள்ளிக்குப் பகைவர். பாண்டியநாட்டு ஏழ் அரண்களை வென்று தம் புலிக்கொடியை நாட்டியவர். பின்னர் உறையூர் முதுகண்ணன் சாத்தனரால் அறிவுறுத்தப்பட்டு அறம் செய்தலை மேற்கொண்டவர். இவர் பாடியனவாகப் புறத்தில் இரண்டு செய்யுட்கள் உள.

## ஞ

ஞானசம்பந்த தேசிகர் = இவர் சைவ வேளாளர். ஸ்ரீ வில்லிபுத்தூரில் பிறந்தவர். இவர் பல நூல்களைப்பாடியவர். அவற்றுள் சிவபோக்சாரம், முத்தி நிச்சயம், திரிபதார்த்த தசகாரிய அகவல் குறிப்பிடத்தக்கவை. காலம் கி.பி. 16ஆம் நூற்றாண்டு.

## ஞா

ஞானப்பிரகாச தேசிகர் = யாழ்ப்பாணத்தில் உள்ள திருநெல்வேலியில் பிறந்தவர். நல்ல இலக்கண இலக்கிய வடமொழிப் புலமையுடையவர். இவர் பௌட்கர ஆகமத்திற்கும் சிவஞானசித்தியார் சுபசாகத்துக்கும் உரை எழுதியவர். திருவண்ணாமலையில் சைவ மடத் தலைவராக இருந்தவர். சிதம்பரத்தில் இவர் ஒரு குளம் வெட்டுவித்தார். அதுவே ஞானப் பிரகாசர் குளம் என்பது. கி.பி. 17ஆம் நூற்றாண்டு.

## த

தண்டி = இவர் தாராபுர போசராஜ மன்னன் அவைக்களப் புலவர். இவரை அம்பிகாபதியின் குமாரர் என்றும்கூறுவர். இவர் செய்தநூல் அலங்காரம் என்பது. இதனைத் தண்டி அலங்காரம் என்றும் கூறுவர் இவரது காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு.

தத்துவராய சுவாமிகள் = இவர் வேதியர். சோழநாட்டு வீரை என்னும்

ஊரினர். இவர் சொரூபானந்தர் என்பாரின் மாணவர். இவர் பல நூல்களைப்பாடியுள்ளார். அவற்றுள் சில ஈசுரக்கீதை, பிரமகீதை, பாடுதுறை, குறுந்திரட்டு, பெருந்திரட்டு அஞ்ஞைவதைப் பரணி, மோகவதைப் பரணி, நெஞ்சுவிடுதூது. திருத்தாலாட்டு முதலியன, கி.பி. 16 ஆம் நூற்றுண்டு.

## தா

**தாமோதரம் பிள்ளை** = இவர் பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். யாழ்ப்பாணத்தார். ஏழாலை என்னும் ஊரில் பிறந்தவர். இவரது போதகாசிரியர் சுன்னுகம் முத்துக்குமாரக்கவிராயர். புதுக்கோட்டையில் நீதிபதியாக இருந்தவர். பழந் தமிழ் நூல்களை எடு தேடிப் பதித்த பெரியார். வீரசோழியம் இறையனார் அகப் பொருள் உரை, தொல்காப்பியப் பொருளதிகாரம், இலக்கண விளக்கம், சூளாமணி கலித்தொகை, தணிகைப் புராணம், தொல்காப்பிய சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை முதலான நூல்களைப் பதிப்பித்தவர். அப்பதிப்புக்களின் முகவுரைகளில் இவரது ஆராய்ச்சிப் புலமையினை நன்கு அறியலாம். இவர் சைவ மகுத்துவம் என்னும் நூலையும் இயற்றியவர். கி.பி. 19 ஆம் நூற்றுண்டு.

**தாயுமான சுவாமிகள்** = இவர் சைவவேளாளர். வேதாரண்யம் கேடிலியப்பப் பிள்ளையின் திருமகனுர். மௌனகுரு இவரது ஆசிரியர். திரிசிரபுர விசயரகுநாத சொக்கலிங்க நாயகரிடம் அரசாங்க அலுவலில் இருந்தவர். திருமணம் முடித்து இல்லறம்நடத்தி ஒரு குழந்தை பிறந்ததும், துறவிக்கோலம் பூண்டவர். இவரது நூல் தாயுமானவர் பாடல் எனப்படும். கி.பி. 18 ஆம் நூற்றுண்டு.

## தி

**திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனுர்** = இவர் ஆளுடைய தேவநாயனுர், திருவியலூர் உய்யவந்ததேவ நாயனுர் ஆகிய இருவரிடமும் ஞான அறிவு பெற்றவர். திருக்களிற்றுப்படியார் என்னும் நூலைப் பாடியவர். கி. பி. 12 ஆம் நூற்றுண்டு.

**திருத்தக்க தேவர்** = இவர் சமண சமயத்தவர்.

சிறந்த துறவி. சீவக சிந்தாமணி ஆசிரியர். நரி விருத்தம் என்பதும் இவரால் பாடப்பட்டது. கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

திருநாவுக்கரசர் = இவரே அப்பர் எனப்படுபவர். இவரைப்பற்றி அப்பர் என்ற தலைப்பின் கீழ்ப் பார்க்க.

திருப்பாணாழ்வார் = வைஷ்ணவ சமயாசிரியர் பன்னிருவர்களில் ஒருவர். பாணர் குடியினர். உறையூரில் பிறந்தவர். லோக சாரங்கர் என்பார் திருமால் கட்டளைப்படி இவரைத் தம் முதுகில் தூக்கிச்சென்று அரங்கன் முன் விட்ட காரணத்தால் முனிவாகனர் என்றும் கூறப்படுபவர். இவர் பாடியது அமலநாதிப்பிரான் என்பது. இதனை நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தில் காண்க. கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

திருமங்கை யாழ்வார் = இவர் சோழ நாட்டுத் திருவாலித்திருநகரியின் அருகுள்ள திருக்குறையலூரில் கள்ளர் மரபில் பிறந்தவர். இவரை நீலன் என்றும்கூறுவர். இவர்சோழ மன்னன் சேனாதிபதியாக இருந்து, வெற்றிகள் பல வற்றைக்காட்ட அதனால் அவன் திருமங்கை என்னும் ஊருக்கு மன்னன் ஆக்கினான். இவர் குமுதவல்லி என்பாளை மணந்து பின் பரம வைஷ்ணவ பாகவதர் ஆயினார். இவர் நாற்கவிகளும் பாடவல்லவர். இவர் பாடிய பாடல்கள் பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந் தாண்டகம், திருவெழுக்கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்பன. இவற்றை நாலாயிரத் திவ்யபிரபந்தத்தில் காணலாம். இவர் புத்தரது பொன்னுருவத்தைக் கொணர்ந்து ஸ்ரீரங்கத்தில் மூன்றும் பிரகாரம் கட்டப் பயன்படுத்தியவர். கி.பி. 9 ஆம் நூற்றாண்டு.

திருமழிசையாழ்வார் = இவர் தொண்டை நாட்டில் திருமழிசை என்னும் ஊரில் பிறந்தவர். இவரது மாணவன் மணிகண்ணன். இவர் வடமொழியிலும் வல்லவர். இவர் தம்மைச் சூத்திரர் என்று கூறிய வேதியரைக் கும்பகோணத்தில் வென்றவர். வைணவ சமயத்தில் ஆழ்ந்த பற்றுடையவர். இவர்சொல்படி காஞ்சியில்

உள்ள பெருமாள் கேட்டனர் என்ற காரணத்தால் அப்பெருமாளைச்சொன்ன வண்ணம் செய்த பெருமாள் என்றும் கூறுவர். இவர் பாடியவை. திருச்சந்தவிருத்தம், நான்முகன் திருவந்தாதி என்பன. இவை நாலாயிரத் திவ்யபிரபந்தத்தில் உள்ளன. காலம் கி.பி. 8 ஆம் நூற்றுண்டு.

**திருமாளிகைத் தேவர்** = இவர் சைவத் திருமுறைகளில் உள்ள ஒன்பதாம் திருமுறைகளில் காணப்படும் திருவிசைப்பாக்களின் ஆசிரியருள் ஒருவர். திருவாவடுதுறையில் இருந்தவர். இவரைப் போகமுனிவர் மாணவர் என்பர். இவர் சிதம்பரம் சென்று ஓடாது தடைப்பட்ட தேரை ஓடச் செய்த சித்தர். இவரது கோயில் திருவாவடுதுறைத் திருமடத்தில் உள்ளது. கி.பி. 11 ஆம் நூற்றுண்டு.

**திருமூலர்** = அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர். சித்தரும் சிவயோகியும் ஆவார். மூலன் என்னும் இடையன் திடீர் என்று இறக்க அவன் மேய்த்து வந்த ஆடுமாடுகள் வருந்தும் நிலைகண்டு, அவன் உடலில் புகுந்து ஆடுமாடுகளுக்கு இன்பம் வரச் செய்தவர். பின்னர் அப்படியே அம் மூலவன் வடிவில் இருந்து ஆகமங்களின் சாரமான திருமந்திரங்களை எழுதியவர். அதுவே திருமூலர் திருமந்திரம் எனப்படும். திருவாவடுதுறையில் இவரது கோயில் உண்டு. கி.பி. 5 ஆம் நூற்றுண்டு.

**திருவள்ளுவர்** = இவர் ஆதி பகவன் என்பாரின் பிள்ளை என்பர். இவரை வள்ளுவர் குடியினர் எடுத்து வளர்த்தனர் என்பர். மதுரையில் பிறந்து மயிலையில் வாழ்ந்தனர் என்பர். மயிலாப்பூரில் இவருக்கு ஒரு கோயில் உண்டு. இவர் வாசுகி அம்மையாருடன் இல்லறம் நடத்தினர். இவரது மாணவர் ஏலேல சிங்கர் என்பவர். இவரைப்பற்றிய வரலாறுகள் பலவாகும். இவர் சைவர் என்பதற்கு அடையாளமாக இவரது கோயில் சைவர்களால் பூசிக்கப்பட்டு வருவதாலும், நாயனுர் என்ற பெயராலும் அறியலாம் இவர் முதற் குறளில் ஆதிபகவன் என்று கூறியிருப்

பது அம்மை அப்பரது வணக்கமே ஆகும். இவர் எழுதிய நூலே திருக்குறள். காலம். கி. பி. இரண்டாம் நூற்றுண்டு.

திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் = இவர் கமலை ஞானப்பிரகாசரின் மாணவர். சிவஞானசித்தியார் பரபக்கத்திற்கும் சங்கற்ப நிராகரணத்திற்கும் உரை எழுதியவர். திருவொற்றியூர்ப் புராணமும் இவர் பாடிய நூல். காலம். கி.பி. 16 ஆம் நூற்றுண்டு.

## தே

தேரையர் = இவர் அறுப்புச் சிகிச்சை செய்வதில் வல்லவர். ஒருவரது மண்டையின் கபாலத்தை நீக்கி அதில் தேரை இருந்ததைக் காட்டியவர். இக் காரணம்பற்றியே இவர் தேரையர் என்று அழைக்கப்பட்டவர். இவர் அகத்தியர் மாணவர் என்றும். தருமசௌமியர் மாணவர் என்றும் கூறப்படுவர். இவரால் பதார்த்த குணசிந்தாமணி நோயணுகா வழி நாடிக் கொத்து முதலான நூல்களைச் செய்தவர். காலம் திட்டமாகக் கூற இயலாது.

தேவராசபிள்ளை = இவர் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை மாணவர். தொண்டமண்டல ஊரினர். பின்னர் பெங்களூரில் வாழ்ந்தவர். இவர் குசேலோபாக்கியானம், பஞ்சாக்கர தேசிகர் பதிகம், தணிகாசல மாலை முதலான நூல்களைச் செய்தவர் கி. பி. 19 ஆம் நூற்றுண்டு.

## தொ

தொண்டரடிப் பொடியாழ்வார் = இவர் விப்பிரநாராணர் என்றும் கூறப்படுபவர். தேவதேவி என்றும் கோயில் தாசியின் வலையில் சிக்கியவர். திருமண்டங்குடி என்னும் இடத்தில் பிறந்தவர். திருநந்தவன கைங்கரியம் செய்து திருமாலுக்கு மாலைசாத்திவழிபட்டவர். திருமாலை, திருப்பள்ளி எழுச்சி என்னும் நூற்களைப் பாடியவர். கி. பி. 9 ஆம் நூற்றுண்டு.

தொல்காப்பியர் = தமிழ் மொழியின் மேன்மையினையும் நாகரிகப்பண்பையும் எடுத்துக்காட்டும் தொல்காப்பியம் என்னும் தலை சிறந்த நூலை எழு

திய மரபெரும் புலவர். இவரைத் திரணதூமாக்கினி என்றும் கூறுவர். அகத்தியர் மாணவர்களுள் ஒருவர் என்பர். "ஒல்காப் பெருமைத் தொல்காப்பியர்" என்று சிறப்பிக்கப்படும்பெருமை சான்றவர். இக்காலத்தில் தமிழர் தனிப்பெருமையுடன் திகழ்வதற்கு இவரது நூலாகிய தொல்காப்பியமே காரணமாகும். காலம். கி.பி. 4ஆம் நூற்றுண்டு.

## தோ

**தோலாமொழித் தேவர்** = இவர் எழுதிய நூலே சூளாமணி என்பது. இவர் சைனர். இவரைக் கார்வெட்டி நகரத்தரசன் விசயன் என்பான் ஆதரித்தனன். கி. பி. 10 ஆம் நூற்றுண்டு.

## ந

**நக்கணையார்** = கடைச் சங்க காலத்தவர். பெண்பாற் புலவர். வணிக மரபினர். இவ்வம்மையார் தந்தையார் பெருங்கோழி நாய்க்கன் என்பவர். போர்வைக்கோ பெருநற்கிள்ளி என்னும் மன்னனிடம் காதல் கொண்டு மணக்க விரும்பியவர். இவர் நற்றிணையில் இரண்டும் அகத்தில் ஒன்றும், புறத்தில் மூன்றும் பாடியுள்ள பாடல்கள் உண்டு.

**நக்கீரர்** = நல்ல மொழிகளைப் பேசிய காரணத்தால் நக்கீரர் எனப்பட்டார். இவரது தந்தையார் மதுரையில் கணக்காயர் (ஆசிரியர்) தொழிலை மேற்கொண்டிருந்த காரணத்தால் இவர் மதுரைக் கணக்காயனூர் மகனூர் நக்கீரர் என்று கூறப்பட்டவர். தமிழ்ச் சங்கப் புலவர்களின் தலைவர். இறையனூர் அகப் பொருளுக்குச் சிறந்த உரை கண்டவர். வேளாப் பார்ப்பனர் என்றும் மரபினர். தமிழ் மொழியினை எவரேனும் இழிவாகக் கூறின் அவர்களை அழியும் வண்ணம் தமிழ்பாடும் ஆற்றல் மிக்கவர். அப்படியே கொண்டான் என்னும் குயவன் வடமொழி உயர்ந்தது என்று கூறக்கேட்டு அவன் சாவுமாறு பாடிப் பின்னர் பலர் வேண்டுகோளுக்கு இணங்கி அவன் உய்யுமாறும் பாடியுள்ளார். திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை என்னும் நூற்களும் இவரால்பாடப்பட்டவைகளே.

அடிநூல், நக்கீரர் நாலடி நானூறு முதலான நூல்களைப் பாடினதாகவும் கூறுவர். சைவத் திருமுறைகளில் காணப்படும் கைலைபாதி காளத்திபாதி யந்தாதி, திருஈங்கோய்மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, பெருந்தேவபாணி, திருவெழுக் கூற்றிருக்கை. கோவப்பிரசாதம், காரெட்டு, போற்றிக் கலிவெண்பா, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் முதலானவையும் இவர் பாடினவாகக் கூறப்படுகின்றன. சிவபெருமானை பாடிக்கொடுத்த பாடல் ஒன்றில் குற்றம் கூறியதால் குட்ட நோய் வரப்பெற்றுப் பின்னர் அவரைத் துதித்து அதனின்றும் நீங்கினர் என்பர். மேலே கூறிய தனி நூல்களே அன்றி, அகத்தில் 19, குறுந்தொகையில் 8, நற்றிணையில் 7, புறத்தில் 3, திருவள்ளுவமாலையில் 1 ஆகப் 38 பாடல்கள் உள.

**நச்சினார்க்கினியர்**- இவர் தலைசிறந்த உரையாசிரியர் "உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர்" என்று சிறப்பித்துக் கூறப்படுபவர். பாரத்துவாச கோத்திரத்தினர். மதுரையில் பிறந்தவர். அந்தணமரபினர். சைவசமயத்தினர். தொல்காப்பியம் பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி என்னும் நூற்களுக்கு உரை எழுதியவர். கி.பி. 14 ஆம் நூற்றாண்டு.

**நஞ்சீயர்** = இவர் உரையாசிரியர். திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி என்னும் உரை எழுதியவர். வைணவ சமயத்தவர். திருப்பள்ளி எழுச்சிகளும் கண்ணிநுண் சிறுதாம்பு என்னும் பாக்களுக்கும் உரை எழுதியவர் கி.பி.13 ஆம் நூற்றாண்டு.

**நமச்சிவாயதேசிகர்**- இவர் திருவாவடுதுறை ஆதினத் தம்பிரான் ஆவார். வினாவெண்பா, இருபா இருபஃது, சிவஞானசித்தியார் சுபக்கம் ஆகிய நூற்களுக்கு உரை எழுதியவர். கி.பி. 15 ஆம் நூற்றாண்டு.

**நமச்சிவாய முதலியார்** = இவர் காவேரிப்பாக்கத்தவர். சைவ மரபினர். தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தவர். இளைஞர்கட்கும் முதியவர்க்கும் பயன்படும் வண்ணம்

நூல் பல எழுதியவர். பெருஞ் செல்வம இரட்டியவர். சென்னையில் செந்தோமில் சிறக்க வாழ்ந்தவர். உதார குணமுடையவர். தணிகைப் புராணம். இளம்பூரணம் சொல்லதிகாரம், முதலான நூற்களைப் பதிப்பித்தவர். ஓர் அறு வரிசை எனப் புலவர் வறுமை, கண்ணப்பர், நளன், அரிச்சந்திரன், முதலான உரை நடை நூல்களை எழுதியவர். பிரிதிவி ராசன் என்னும நாடக நூலையும் எழுதியவர். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**நம்பியாண்டார் நம்பி** = இவர் தமிழ்வேதவியாசர் எனக் கூறப்படுபவர். இவரே சைவத் திருமுறைகளைத் தொகுத்தவர். திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் திருவருள் பெற்றவர். ஆதி சைவ பிராமண வகுப்பினர். இவர் பாடிய நூற்கள் திருத்தொண்டர் திருவந்தாதி, கோயில் திருப்பண்ணியர் விருத்தம், திருச்சண்பை விருத்தம், திருக்கலம்பகம், திருநாவுக்கரசர் ஏகாதசமாலை முதலியன. கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

**நம்மாழ்வார்** = இவர் சடகோபர், மாறர் என்றும் கூறப்படுபவர். வைணவ சமய வேளாள மரபினர். திருநெல்வேலி ஆழ்வார் திருநகரியில் பிறந்தவர். ஆழ்வார்களில் தலைசிறந்தவர். புளியமரத்தடியில் அமர்ந்து யோகம் புரிந்து திருமால் திருவருள் பெற்றவர். திருமால் இவர் மீது பற்றுடையவர் என்பது கம்பரை நோக்கி "நந்தம் சடகோபனைப் பாடினையோ?" என்று கேட்டதால் விளங்குகிறது. இவர் பாடிய பாடல்கள் வேதத்தின் சாரம் எனப்படும். இவரைப் போற்றியே மதுரை கவியாழ்வார் திருமாலின் திருவருள் பெற்றார். இவர் பாடிய பாடல்கள் திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி, திருவிருத்தம் என்பன.

**நரிவெருஉத்தலையார்** = இவர் உடல் விகாரம் உடையவர் போலும்; இவரது தலையைக் கண்டால் நரியும் பயப்படும் என்ற காரணத்தால் இப் பெயர் பெற்றார் என்று கருதப்படுகிறது. இவ் விகார சொரூபம் சேரமான் கருவூர் ஏரிய ஒள்வாள்

கோப்பெருஞ்சேரல் இரும்பொறையைக் கண்ட போதுநீங்கிய தாம்.கடைச்சங்க காலத்தவர். குறுந்தொகையில் 2, புறத்தில் 2, திருவள்ளுவமாலையில் 1, ஆக 5 பாடல்கள் இவரால் பாடப்பட்டுள்ளன.

**நல்லசாமிப்பிள்ளை** = இவர் சிறந்த தமிழ் அறிவும் ஆங்கில அறிவும் பெற்றவர். பி.ஏ. பி.எல். பட்டம் பெற்றவர். டிஸ்டிரிக்ட் முன்சிப்பாகப் பணி புரிந்தவர். பெரிய புராணம், சிவஞான சித்தியார் சிவஞானபோதம், சிவப்பிரகாசம், உண்மை விளக்கம், சைவசமய நெறி, திருவருட்பயன் முதலான நூற்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். சித்தாந்த தீபிகையின் பத்திராதிபர். கி.பி. 19ஆம் நூற்ருண்டு.

**நல்லாப்பிள்ளை** = இவர் பாரதம் பாடிய நல்லாப்பிள்ளை எனப்படுபவர். தொண்டைமண்டலத்தில் முத்தாலப்பேட்டையில் கணக்கர் குடியில் பிறந்தவர். தெலுங்கு, கன்னடமும் அறிந்தவர் தமிழிலும் வடமொழியிலும் புலமைமிக்கவர். தெய்வயானை புராணமும் இவர் பாடியதாகக் கூறுவர். கி. பி. 18 ஆம் நூற்ருண்டு.

## நா

**நாராயணசாமி ஐயர்** = இவர் திருத்துறைப் பூண்டிப் பின்னத்தூரில் பிராமணக்குடியில் பிறந்தவர். வடமொழி தென்மொழியில் புலமைமிக்கவர். நற்றிணைக்கு அழகான உரை எழுதியவர். இவர் பல நூல்களை எழுதி யிருப்பதாகத்தெரிகிறது. இடும்பாவன புராணம், சிவ கீதை, மாணுக்கர் ஆற்றுப்படை, பழைய துவிடுதூது செருப்பு விடுதூது முதலியன குறிக்கத்தக்கன. கிபி. 19ஆம் நூற்ருண்டு.

**நாராயணபாரதி** = இவர் பிராமண வகுப்பினர். இவர் மணவாளநாராயணன் என்னும் பிரபுவின் வேண்டுகோளால் ஒரு சதகம் பாடியுள்ளார். அது திருவேங்கட சதகம் எனப்படும். அதனைக் கோவிந்த சதகம் என்றும் கூறுவர். கி. பி. 18 ஆம் நூற்ருண்டு.

**நாற்கவிராசநம்பி** = இவர் தொண்டை நாட்டைச் சார்ந்த புளியங் குடியில் பிறந்தவர். சமணசமயத்

தவர். இவர் நாற்கவி பாடும் ஆற்றலும் படைத்தவர். இதனால் நாற்கவி ராசநம்பி என்றும் கூறப்படுபவர். இவர் எழுதிய நூலே நம்பி அகப்பொருள் என்பது. கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

## நி

**நிரம்பவழகிய தேசிகர்** = இவர் திருமறைக்காட்டில் சைவவேளாளர் குலத்தில் தோன்றியவர். கருணை ஞானப்பிரகாசரிடம்சிவதீட்சைபெற்றவர். மதுரையில் வாழ்ந்தவர். இவரது நண்பர் பரஞ்சோதி முனிவர். சேது புராணம், திருப்பரங்கிரி புராணம் முதலான நூற்களைப் பாடியவர். சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கும், திருவருட்பயனுக்கும் உரை எழுதியவர். கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

## ப

**பகழிக்கூத்தர்** = இவர் இராமநாத புரத்தில் சன்னியாசி என்னும் கிராமத்தில் வைணவ சமயக் குடும்பத்தில் பிறந்தவர். இவருக்கு வயிற்று நோய் கண்டு, அதன் பொருட்டுத் தம் குலத்துக்குரிய தெய்வங்கட்குப் பிரார்த்தனை பலவும் செய்தும் தீராது துன்பப்பட்டவர். பின்னர்த் திருச்செந்தூர் முருகப்பெருமானைப்பாடித் தம் வயிற்று நோயினின்றும் நீங்கியவர். இவரது அன்புக்கு உகந்த செந்தில் வேலவன் தன் திருவாபரணங்களுள் ஒன்றையும் வழங்கியுள்ளான். இவர் பாடிய நூல் திருச்செந்தூர் முருகர் பிள்ளைத் தமிழ் என்பது. கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**படிக்காசுப்புலவர்** = தொண்டை நாட்டைச் சார்ந்த தென் களந்தை என்னும் ஊரில் செங்குந்த மரபில் தோன்றியவர். இலக்கண விளக்கம் வைத்தியநாத தேசிகரின் மாணவர். மாவண்டூர்கத்தூரிமுதலியார் வேண்டுகோளுக்கிணங்கித் தொண்டை மண்டல சதகம் பாடியவர். இவரது பாடலின் சிறப்பைச் சொக்கநாதப் புலவர், "தொட்டாலும் கைமணக்கும், சொன்னாலும் வாய்மணக்கும் துய்ய சேற்றில் நட்டாலும் தமிழ்ப் பயிராய் விளைந்திடுமே பாட்டினது நளினம் தானே" என்றுபாடியுள்ளார். இவர் முஸ்லிம்

இனத்துப் பெருவள்ளலாகிய சீதக்காதி என்பாரையும் பாடிய பாவலர். இவர் பாடிய வேறு நூற்கள் வெளூர்க்கலம்பகம். உமைபாகர் பதிகம் முதலியன. கி.பி. 11ஆம் நூற்றுண்டு. பல தனிப்பாடல்களையும் இவர் பாடியுள்ளார்.''

**பட்டினத்தடிகள்** = இவர் திருவெண்காடர் என்றும் கூறப்படுபவர். காவிரிப் பூம்பட்டினத்தில் பிறந்தவர். வாணிபம் செய்து பெரும்பொருள்ஈட்டியவர். இவரை யாட்கொள்ள இறைவரே சிலகாலம் பிள்ளையாக வந்து இருந்தார் என்றும் கூறுவர். அரசர் மெச்சச் சிறக்க வாழ்ந்தவர். பின்னர்த் துறவு உள்ளம் கொண்டு எல்லாச் செல்வச் சிறப்பினையும் உதறித்தள்ளி வெளியேறியவர். இவரது மாணவர் பத்திரகிரியார். இவர் திருவொற்றியூரில் சாமாதி நிலையுற்றவர். அதனை இன்னும் அங்குக் காணலாம். இவர் பாடிய நூற்கள் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி. திருவொற்றியூர் ஒருபஃது என்பன. இவை பதினோராம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன. இவர் காலம் 10 ஆம் நூற்றுண்டு. இவர் பெயர்கொண்ட மற்றொரு பட்டினத்தார் இருந்ததாகவும் தெரிகிறது. அவர் பாடியநூலே பட்டினத்தார் பாடல் என்ற தொகுப்பு நூலாகும். இதில் உள்ள பாடல்கள் பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பட்டில. அதில் குலாம் என்ற இந்துஸ்தான் வார்த்தை இருப்பதிலிருந்தே அது பிற்பட்ட நூல் என்பது தெரிகிறது. இதன்காலம் கி.பி. 15 ஆம் நூற்றுண்டு எனலாம்.

**பண்டிதர் சவிரிராய பிள்ளை** = இவர் திரிசிரபுரம் செயிண்ட் ஜோசப்கல்லூரியின் தமிழாசிரியர். கிறித்தவச் சமயத்தவர். டமிலியன் ஆண்டிக்யூரி என்னும் இதழுக்கு ஆசிரியர். தமிழர் ஆரியர் கலப்பு. சங்க காலம் என்னும் கட்டுரைகளை எழுதியவர். நல்ல ஆராய்ச்சிப் புலமையுடையவர். கி.பி. 20ஆம் நூற்றுண்டு.

**பதுமனார்** = இவர் ஓர் உரையாசிரியர். இவரே நாலடியார் என்னும் நூலைத்

தொகுத்தவர். அதற்கு உரையும் கண்டவர். நாலடியாரை அறம் பொருள் இன்பம் என முப்பிரிவு படுத்தி அதிகார அடைவும் தந்தவர். காலம் கி. பி. 9 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

**பத்திரகிரியார்** = இவர் அரச மரபினர். பட்டினத்தார் தொடர்பு ஏற்பட்டபின் அவரோடு துறவியாகவே தொடர்ந்தவர். அவருக்குத் திருத்தொண்டுபுரிந்தவர். இவர் பாடிய நூல் பத்திரகிரியார் புலம்பல் எனப்படும். இவரோடு இருந்த நாய் இவரும் இவரது ஞானாசிரியர் பட்டினத்தாரும் உண்ட மிச்சிலை உட்கொண்டதனால் காசிராசன் மகளாகப்பிறக்கும் பேறு பெற்றது. பின்னர்ச் சோதியில் கலந்து முத்தி பெற்றது. காலம் கி. பி. 10 ஆம் நூற்றாண்டு. வடமொழியுணர்ந்த பத்திரகிரியார் இவரினும் வேறானவர்.

**பரஞ்சோதி முனிவர்** = இவர் திருமறைக் காட்டுச் சைவ வேளாளமரபினர். மதுரை மடத்தில் தம்பிரானாக இருந்தவர். வேதாரண்யத்தில் அபிடேகப் பொருள்களைத் தயாரிக்கும் திருத்தொண்டு புரிந்ததாகவும் கூறுவர். தமிழ் இலக்கண இலக்கியங்களையும், சமய சாத்திர நூல்களையும் நன்கு பயின்றவர். வடமொழியிலும் வல்லவர். இவர் எழுதிய நூற்கள் திருவிளையாடற் புராணம், வேதாரண்ய புராணம், மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி முதலியன. கி. பி. 16 ஆம் நூற்றாண்டு.

**பரணர்** = இவர் கடைச் சங்க காலத்தவர். கபிலரின் நெருங்கிய நண்பர். கடல் பிறக்கோட்டிய செல்கெழு குட்டுவனைப் பாடி உம்பற் காட்டுவருவாயையும் அவன் மகனையும் பரிசிலாகப் பெற்றவர். இவர் சேரனையே அன்றிச் சோழனையும், பேகன் என்னும் வள்ளலையும் பாடியவர். இவர் பாடின பாடல்கள் அகத்தில் 34, குறுந்தொகையில் 10, புறத்தில் 13, திருவள்ளுவமாலையில் 1, உள்ளன. இவையே அன்றிப் பதினோராம் திருமுறையில் உள்ள பாடல்கள் பல இவர் பெயரால் அமைந்துள்ளன. இது ஆராய்ச்சிக்கு உரியது.

**பரிதியார்** = இவர் திருக்குறளுக்கு உரை எழுதியவர். சிறந்த சைவ சமய உணர்ச்சியினர். இவரைப் பருதியார் என்றும் கூறுவர். காலம் அறிதற்கு இல்லை.

**பரிமேலழகர்** = இவர் காஞ்சிபுரத்தில் உலகளந்த பெருமாள் கோயில் பட்டாசாரியர்களில் ஒருவர். திருக்குறளுக்குச் சிறந்த உரைகண்டவர். இவர் திருமுருகாற்றுப் படைக்கும் பரிபாடலுக்கும் உரை எழுதியதாகவும் கூறுவர். மணிவாசகர் பொருட்டுச் சொக்கலிங்கப் பெருமான் குதிரை மீது வந்த காரணத்தால், அவரைப் பரிமேலழகர் என்று கூறுவது கொண்டு. அப்பெயரை இவர் பெற்றுத் திகழ்வதால் இவரைச் சைவ மரபினர் என்றும் கூறுவர். இவரது திருக்குறள் உரைச் சிறப்பை உமாபதி சிவாசாரியர் "தெள்ளுபரி மேலழகர் செய்த உரை" என்று பாடிப் பாராட்டியுள்ளார். காலம். கி. பி. 13 ஆம் நூற்றாண்டு.

**பவணந்தி முனிவர்** = இவர் தொண்டைநாட்டுச் சனகாபுரத்தில் சைன மரபில் உதித்தவர். தந்தையார் சன்மதி முனிவர் எனப்படுவார். சீயகங்கன் வேண்டுகோளுக்கு இணங்கி நன்னூல் என்னும் நூலைப் பாடியவர். இவர் பல் கலைக்குரிசில் என்று சங்கரநமச்சிவாயப் புலவரால் பாராட்டப் பட்டவர். காலம் கி. பி. 13 ஆம் நூற்றாண்டு.

**பல்காயனார்** = இவர் பழங் காலப் புலவர். தொல்காப்பியத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியவர். இவர் யாப்பிலக்கண நூலும் செய்ததாகத் தெரிகிறது. இதனை யாப்பருங்கல விருத்தியுரையால் உணரலாம். குறுந் தொகையிலும் ஒரு பாடல் உளது.

**பாண்டித்துரைத் தேவர்** = இவர் தமிழ்ப் புலவர்களை ஆதரித்தவர். தமிழ்நூல்கள் பல வெளியாதற்குத் துணை புரிந்தவர். இது போது உள்ள மதுரைத் தமிழ்ச்சங்கம் தோன்றுதற்கு முதற் காரணர் இவரே. இவர் சைவ மஞ்சரி, துதி மஞ்சரி. பன்சொல் திரட்டு என்னும் தொகை நூல்களின் ஆசிரியர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

ராண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் = கோவலனது கொலைக்குக் காரணர். ஆரியப்படைகளை வென்றவர். கல்வியில் பெரிதும் கருத்துடைய வர். கடைச் சங்ககாலத்த வர். புறத்தில் இவரது பாடல் ஒன்று உண்டு.

பாரதம் பாடிய பெருந்தேவ னார் = கடைச் சங்க காலத் தவர். இவர் பாடிய நூல் பாரதம். இது அன்றிச் சங்க நூற்களின் பகுதி பகுதியாகிய எட்டுத் தொகை நூற்களான அகம், புறம், ஐங்குறுநூறு, நற்றிணை, குறுந்தொகை யாகியவற்றிற்கு முதற் கண்கடவுள் வாழ்த்துப் பாடி அமைத்தவர். இவர் பாரத வெண்பா பாடிய பெருந்தேவனாரி னும் வேறானவர். திருவள் ளுவமாலையில் இவர் பாடிய பாடல் ஒன்று உண்டு.

## பி

பிசிராந்தையார் = கடைச்சங்க காலத்தவர் கோப்பெருஞ் சோழனது உயிர் நண்பர். அவன் இறந்த போது அவனோடு இறந்தவர். பாண்டிய நாட்டில் பிசிர் என்னும் ஊரில் பிறந்த வர். இவரது குமாரர் ஆதன் தந்தையார் என் பது ஆந்தையார் என மருவி ஊர்ப்பெயரையும் இணைத்துப் பிசிராந்தை யார் எனப்பட்டவர். இவ ரது பாடல்கள் அகத்தில் 1, நற்றிணையில் 1, புறத் தில் 4 உள்ளன.

பிள்ளைப் பெருமாள் அய்யங் கார் = இவர் வைணவப் பிராமணர். அழகிய மண வாள தாசர் என்றும் கூறப்படுவர். திருவரங்க நாதனிடம் மிகுந்த ஈடு பாடுடையவர். இவர் பாடல்களின் சுவையைக் கண்ட திருவேங்கடநாதன் தன் மீது பாடல்களைப் பாடும்படி கேட்க 'அரங் கனைப் பாடிய வாயால் குரங்கனைப்பாடேன்' என்று கூறியவர். பின்னர்த் திரு வேங்கடநாதனால் வயிற்று வலி கண்டு, அது தீர அந்நாதன் மீது சில நூல் களைப் பாடியவர். திருமலை நாயகன் காலத்தில் திகழ்ந்தவர். இவர் பாடிய நூற்களின் தொகுதியே அஷ்டப் பிரபந்தம் எனப் படும். அதில் அடங்கிய நூற்கள். அழகர் அந்தாதி திருவரங்கக் கலம்பகம், திருவரங்கமாலை, திருரங் கத் தந்தாதி, திருவேங்

கடத் தந்தாதி, திருவேங்கட மாலை, திருவரங்கத் தூசல், 108 திருப்பதி அந்தாதி, என்பன. கி.பி. 17 ஆம் நூற்றாண்டு.

## பு

**புகழேந்திப்புலவர்** = தொண்டை மண்டலத்தில் பொன் விளைந்த களத்தூரில் வேளாளர் மரபில் உதித்தவர். வைணவ சமயத்தினர். மதுரைப் பாண்டியனிடம் சமஸ்தானப்புலவராகத் திகழ்ந்தவர். மள்ளுவ நாட்டு மன்னனாகிய சந்திரன் சுவர்க்கியினாலும் ஆதரிக்கப்பட்டவர். நளவெண்பா என்னும் நூலைப்பாடியவர். "வெண்பாவில் புகழேந்தி" என்று சிறப்பிக்கப்பட்டவர். இரத்தினச் சுருக்கம் என்னும் நூலையும் பாடியுள்ளார். ஒட்டக்கூத்தர் பேச்சைக் கேட்டுக் குலோத்துங்கன் இவரைச் சிறையில் இட்டனர் என்றும், அந்தத் தருணம நங்கைமார்களின் பொருட்டு அல்லி அரசாணி மாலை, பவளக் கொடிமாலை புலந்திரன் களவுமாலை முதலான நூற்களைப் பாடியதாகவும் கூறுவர். காலம் 13 ஆம் நூற்றாண்டு. பல தனிப் பாடல்கள் இவர் பாடினவாகக் கருதப்படுகின்றன.

**புத்தமித்திரன்** = இவர்செய்த நூலே வீர சோழியம் என்பது. இது வீர சோழன் பெயரால் இயற்றப் பட்ட இலக்கண நூல். இவர் தஞ்சாவூர் மாவட்ட மிழலைக் கூற்றத்தைச் சார்ந்த பொன்பற்றி என்னும் ஊரினர். கி. பி. 11 ஆம நூற்றாண்டு,

## பூ

**பூதத்தாழ்வார்** = இவர் முதல் ஆழ்வார்கள் மூவருள் ஒருவர். மாவலிபுரம் என்னும திருக்கடல் மல்லை என்னும் ஊரில் குருக்கத்திமரத்தின் கீழ்ப் பிறந்தவர். இரண்டாம் திருவந்தாதி என்னும நூலைப் பாடியவர். அது நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இயற்பா என்றதலைப் பின் கீழ் உளளது. காலம் 8 ஆம் நூற்றாண்டு.

**பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு** = இவர் பூதப்பாண்டியன் மனைவியார். அவன் இறந்ததும உடன்கட்டை ஏறி உயிர் விட்டவர். கடைச் சங்ககாலத்தவர். இவரது

பாடலில் விதவைகள் எப்படித் தம் வாழ்க்கையை நடத்தவேண்டும் என்பது கூறப்பட்டுள்ளது. இவர் பாடல் ஒன்று புறத்தில் உளது.

பூரணலிங்கம் பிள்ளை = இவர் திருநெல்வேலி முந்நீர்ப் பள்ளம் என்னும் ஊரினர். பி.ஏ.எல்.டி. பட்டங்களைப் பெற்றவர். திரிசிரபுரத்தில் ஆங்கில பேராசிரியராக இருந்தவர். தமிழ் இந்தியா, தமிழ் இலக்கிய வரலாறு மாணிக்கவாசகரின் வாழ்க்கையும் உபதேசங்களும் என்னும் நூற்களின் ஆசிரியர். திருக்குறளைப் பற்றியும் ஆய்ந்து நூல் எழுதியவர். இராவணனைப் பற்றியும் ஆய்வு நூல் வரைந்தவர். கி.பி. 20ஆம்நூற்றாண்டு.

## பெ

பெரியவாச்சான் பிள்ளை = இவர் வைணவர், சிறந்த உரையாசிரியர். இவரது உரையில் வடமொழிக் கலப்பு மிகுதியும் உண்டு. ஆதலின் அதனை மணிப் பிரவாள நடை என்று கூறுவர். இவர் நம்பிள்ளை என்பாரின் மாணவர். இவர் 24,000 படி கத்திய உரை, திவ்யபிரபந்த உரை, அமலநாதிப் பிரான் வியாக்கியானம் முதலானவற்றை எழுதியவர். கி.பி. 15ஆம் நூற்றாண்டு.

பெரியாழ்வார் = இவர் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் வடமலையப், பனைத்திருத் துளசி மாலை கட்டி வழிபட்ட சிறந்த வைஷ்ணவ பிராம்மணர். பன்னிரண்டு ஆழ்வார்களில் இவர் ஒருவர். வில்லிபுத்தூர் ஆழ்வார் என்ற திருப்பெயரும் உடையவர். ஸ்ரீ ஆண்டாள் அம்மையாரை வளர்ப்புப் பெண்ணாகப் பெற்றவர். மதுரை வல்லப தேவ மன்னன் காலத்தவர் அவன் முன்னிலையில் வைணவ மதத்தின் ஏற்றத்தைக் கூறிப் பொற்கிழியினைப் பெற்றவர். இவர் பாடிய பாடல்கள் பெரியாழ்வார் திருமொழி, திருப்பல்லாண்டு என்பன. கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

பெருந்தலைச்சாத்தனார் = இவர் கடைச் சங்க காலத்தவர். குமணனைப்பாடிப் பரிசில் பெற்றவர். அவன் தலையைக் காத்தமை

யால் இப்பெயர் பெற்றவர். குமணன் தன் தலையை வெட்டித் தம்பி கையில் கொடுத்துப் பொருள் பெற்றுச் செல்லுமாறு கத்தியைக் கொடுக்க அக் கத்தியைப் பெற்று இளங்குமணனை கண்டு அறவுரை கூறி அண்ணனோடு அன்பு கொள்ளசெய்தவர். ஆவூர் மூலங்கிழார்மகனார். இவர் அகத்தில் 2. நற்றிணையில் 1, புறத்தில் 6, பாடல்களைப் பாடியுள்ளார்.

**பெரும்பற்றபுலியூர் நம்பி** = இவர் வேம்பத்தூரார் என்றும் கூறப்படுபவர். இவர் மதுரைச் சொக்கநாதர் திருவிளையாடல்களைக் குறிக்கும் நூல் ஒன்று பாடியுள்ளார். அதுவே பழைய திருவிளையாடல் என்பது. இவர் பாண்டியநாட்டு, வேம்பத்தூர் கௌணிய மரபுடை அந்தணர். இவரைத் தில்லை நம்பி என்றும் கூறுவர். இவரை செல்வி நகரினர் என்றும் கூறுவர். கி. பி. 12 ஆம் நூற்றுண்டு.

## பே

**பேயாழ்வார்** = இவர் சென்னை மயிலாப்பூரில் ஆதிகேசவப் பெருமாள் ஆலயத்தில், செவ்வல்லி மலரில் தோன்றியதாகக் கூறுவர். இவர் திருமாலின அன்பில் ஈடுபட்டு, அழுதலும், அலறுதலும், சிரித்தலும் செய்து கொண்டிருந்ததால் பேயர் போலும் என்று ஒரு சிலர் கூறி வந்தது கொண்டு, அப் பெயரே இவருக்கு நிலைத்து விட்டது என்பர். ஆழ்வார் பன்னிருவருள் ஒருவர். நாலாயிரத்திவ்விய பிரபந்தத்தில் உள்ள இயற்பாவின் மூன்றும் திருவந்தாதி இவரால் பாடப்பட்டது. கி.பி. 8 ஆம் நூற்றுண்டு.

**பேராசிரியர்** = இவர் சிறந்த உரையாசிரியர். சைவ சமயத்தவர். தொல்காப்பியம் பொருளதிகாரத்திற்கும் திருக் கோவையார்க்கும் உரை கண்டவர். குறுந்தொகையில் பல பாடல்களுக்கும் உரை எழுதினர் என்பர். இவரை மதுரை ஆசிரியர் என்றும் கூறுவர். கி. பி. 12 ஆம் நூற்றுண்டு.

## பொ

**பொய்கையார்** = கடைச்சங்க காலத்தவர். இவர் சேரன்

கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கண்ணுல் சிறைப்பட்ட போது அவனை மீட்கக் களவழி நாற்பது என்னும் நூலைப் பாடியவர். நற்றிணையில் 1 புறத்தில் 1. இருபாடல்கள் உண்டு. இவர் இன்னிலை என்னும் நூலும் செய்ததாகக் கூறுவர். அது எட்டாம் நூற்ருண்டு. என்பது ஒருசிலரது கருத்து. இந்நூலை எழுதியவர் பொய்கையாழ்வாராக இருந்தலாம் என்ற கருத்தும் உண்டு.

பொய்கை யாழ்வார் = வைணவ சமயாசிரியர் பன்னிருவர்களுள் ஒருவர். முதல் ஆழ்வார்கள் மூவர் எனப்படுவோருள் ஒருவர். காஞ்சிபுரத்தில் பிறந்தவர். திருவெஃகா என்னும் வைணவத் திருத்தலத்தின் பொய்கையில் இவர் தோன்றினமைப் பற்றிப் பொய்கையார் எனப்பட்டவர். இயற்பாவைச்சார்ந்த முதல் திருவந்தாதி இவரால் பாடப்பட்டது. கி.பி. 8 ஆம் நூற்ருண்டு.

பொய்யாமொழிப் புலவர் = சோழநாட்டுத் துறையூரில் பிறந்தவர். தஞ்சைவாணன் மீது கோவை பாடி 400 பொன் தேங்காய்களைப் பெற்றவர். பல தனிப்பாடல்களைப் பாடியவர். இவர் சிவபெருமானிடத்தில் பேரன்புடையவர். இவர் திருவாயால் ஒரு பாடலைப்பெற விரும்பிய முருகப்பெருமான் இவரைப்பாடும்படி வேண்டிய போது, 'கோழியைப் பாடிய வாயால் அதன் குஞ்சைப் பாடேன்'' என்று கூறிய அத்துணை மன உரம் படைத்தவர். என்ருலும் தமக்குப் புலவர் என்ற பட்டம் தகாது என்பதை, ''அறம்உரைத் தானும் புலவன், முப்பாலின் திறமுரைத்தானும் புலவன், தரணி பொறுக்குமோ யான் புலவன் என்றக்கால்'' என்று கூறிய அத்துணை அடக்கமும் உடையவர். கி.பி. 13 ஆம் நூற்ருண்டு.

## போ

போப்பையர் = இவர் மேனுட்டு அறிஞர். நம் நாட்டிற்கு வந்து தமிழ் மொழி பயின்று தமிழ் மொழிக்குப் பெருந்தொண்டுபுரிந்தவர். ''தமிழர்கள் ஒழுக்கத்தில் தலை சிறந்தவர்கள். இப்படிக்

சிறந்தவர்கள் என்பதை அவர்களிடம் உள்ள பல ஒழுக்க நூல்களால் உணரலாம்'' என்ற உத்தமர். திருக்குறள், திருவாசகம் நாலடியார் முதலானவற்றை ஆங்கிலத்தில்மொழி பெயர்த்து உரை கண்டவர். இவரையே டாக்டர். ஜி. யு. போப் என்பர். பாதிரியார் பணியினைமேற்கொண்டவர். கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

## ம

**மணவாளமுனிவர்** = இவர் பெரிய சியர் என்ற பெருமை பெற்றவர். தென்கலை வைணவர்கட்குத் தலைவர். 'மணவாளமா முனியே இன்னும் ஒரு நூற்றாண்டிரும்' என்று வைணவர்கள் வாழ்த்தும் சிறப்புப்பெற்றவர். இவர் பாண்டிய நாட்டுச்சிக்கில் கிடாரம் என்னும் ஊரில் பிறந்தவர். முன்னர் அரசாங்க அலுவலில் அமர்ந்துபின்னர்த்துறவு நெறியை மேற்கொண்டவர். இவர் திருமந்திரத்திற்கு வியாக்கியானமும், திருவாய்மொழி நூற்றந்தாதியும், ஸ்ரீவசனபூஷண வியாக்கியானமும், பெரியாழ்வார் திருமொழி வியாக்யானமும் முதலானவற்றையும் செய்துள்ளார். கி.பி. 15 ஆம் நூற்றாண்டு.

**மண்டலபுருடர்** = தொண்டை மண்டலம் வீரை என்னும் ஊரிற்பிறந்தவர். சைனசமயத்தவர். இவரே சூடாமணி நிகண்டு என்னும் நூலை இயற்றியவர். ஸ்ரீபுராணம் என்னும் நூலையும் இயற்றியுள்ளார், கிருஷ்ணதேவராயர் காலத்தவர். சூடாமணி உள்ளமுடையான் என்னும் நூல் செய்ததாகவும் கூறப்படுகிறது. கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**மதிவாணனார்** = இவர் மன்னர் மரபினர். கடைச்சங்க காலத்தவர். நூல் இயற்றும் வன்மையும் படைத்தவர். இவர் செய்த நூல் மதிவாணனார் நாடகத் தமிழ் என்பது. இதனைக் கூத்த நூல் என்றும் கூறுவர்,

**மதுரகவியாழ்வார்** = வைணவ ஆழ்வார் பன்னிருவருள் ஒருவர். நம்மாழ்வாரையே போற்றி முத்திபெற்றவர். பாண்டியநாட்டில் திருக்கோளூர் என்னும் ஊரில் பிறந்தவர். மதுரமாகக் கவி பாடவல்லவர். அந்தண

மரபினர். கி. பி. 9 ஆம் நூற்றாண்டு.

மதுரைக்கணக்காயனார் = இவர் மதுரைவாசி. வேளாப் பார்ப்பனர் குடியினர். ஆசிரியர்தொழிலை மேற்கொண்டவர். நக்கீரரைத் திருமகனாகப் பெறும்பேறு பெற்றவர். அகத்தில் 3, நற்றிணையில் 1, புறத்தில் 1, ஆக 5 பாடல்கள் உள. கடைச் சங்க காலத்தவர்.

மஸ்தான் சாயபு = இவர் முஸ்லிம் இனத்தவர். தமிழ் பயின்று பாடும் ஆற்றல் படைத்தவர். திருச்சிராப்பள்ளியில் அத்தர் வாணிபம் செய்து வந்தவர். வாலை வழி பாட்டினர். இதன் காரணமாகச் சித்தர் என்றும் கருதப்பட்டவர். குணங்குடி மஸ்தான் சாயபு என்றும் இவரைக் கூறுவர். இவரது பாடல்கள் தாயுமானவர் பாடல் போன்று காணப்படும். இவர் அகத்திசர் சதகம், நந்தீசர் சதகம்' கிறிஸ்துமத கண்டனம்வச்சிரதண்டம் முதலான நூற்களை இயற்றியவர். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

மயிலேறும் பெருமாள் பிள்ளை = இவர் திருநெல்வேலியில் வேளாளர் மரபில் பிறந்தவர். இவர் இலக்கணக்கொத்து ஈசான தேசிகர்க்கு ஆசிரியர். கல்லாடம் 37 பாடல்களுக்கு உரைகண்டவர். தொல்காப்பியம் குறள் முதலானவற்றிற்கும் உரை எழுதி இருப்பதாகக் கூறுவர். கி.பி.17 ஆம் நூற்றாண்டு.

மயிலைநாதர் = இவர் ஓர் உரையாசிரியர். சைன சமயத்தவர். நன்னூலுக்கு உரை எழுதியவர். கி. பி. 13 ஆம் நூற்றாண்டு.

மருந்துவன் தாமோதரனார் = இவர் வைத்தியமும் நன்கு தெரிந்தவர். உறையூரில் பிறந்தவர். வைணவ நெறியினர். கடைச் சங்க காலத்தவர். கூலவாணிகச் சித்தலைச் சாத்தனார்க்குத் தலையில் சீழ் வடிந்த காரணத்தையும், அது தீர்ந்தகாரணத்தையும் கூறியவர் இவரே ஆவார். இவர் பாடினவாகத் திருவள்ளுவமாலையில் 1, அகத்தில் 2. புறத்தில் 3 பாடல்கள் உள.

மறைஞானசம்பந்தர் = இவர் திருக்களஞ் சேரியில் வேளாண்மரபில் உதித்த

பெரியார். சந்தானசாரியர் நால்வருள் ஒருவர். அருணந்திசிவாசாரியர் மாணவர். உமாபதி சிவாசாரியரின் ஆசிரியர். வேதாகமங்களில் வல்லவர் கி.பி. 13 ஆம் நூற்றாண்டினர். இவர் சிவதருமோத்தரம் என்னும் வடமொழி நூலைத் தமிழில் மொழிபெயர்த்தவர் என்றும் கூறுவர். இவரேயன்றி மற்றொரு மறைஞான சம்பந்தர் இருந்துள்ளார். இவர் சிதம்பரத்தில் வாழ்ந்த பெரியார். துறவொழுக்கம் பூண்டவர். சைவ வேளாளமரபினர். வடமொழி தென்மொழிகளை நன்கு பயின்றவர். கமலாலய புராணம், சைவ சமயநெறி, பதிபசுப்பனுவல், பரமதிமிரபானு முதலானவை. இவரது நூற்கள். காலம் 16 ஆம் நூற்றாண்டு.

**மறைமலையடிகள்** = இவரே நாகை வேதாசலம்பிள்ளை என்பவர். சுவாமி வேதாசலம் என்றும் இவரை குறிப்பிடுவர். இவர் வடமொழி, தென்மொழி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளிலும் ஈடும்எடுப்பும் அற்றவர். சைவ சித்தாந்த நுண் பொருள்களைத் தெற்றத் தெளிய உணர்ந்தவர். ஆராய்ச்சித்துறையில் தலைசிறந்தவர். மறுப்புரை எழுதுதலில் மாபெரும் புலவர். இவர் உரைநடை எழுதுவதிலும், உரை வரைவதிலும், செய்யுள் இயற்றுவதிலும் தலை சிறந்தவர். இவர் பேச்சும், எழுதும் நடையும் தமிழ்ச் சுவை மிக்கனவாக விளங்கும். சைவக் குடும்பத்தில் நாகைபட்டினத்தில் பிறந்தவர். பின்னர்ச் சென்னை, பல்லாவரத்தில் சிறக்க வாழ்ந்தவர். இவர் நாகை நாராயணசாமிப் பிள்ளையிடம் இயற்றமிழ் அறிவையும், சூளை, சோமசுந்தர நாயகரிடம் சித்தாந்த நூற் புலமையும் பெற்றவர். இவர் எழுதியுள்ள நூற்களில் உள்ள முகவுரையுல் இவரது பன்மொழிப் புலமை புலப்படும். இவர் எழுதியுள்ள நூற்களுள் மாணிக்கவாசகர் கால ஆராய்ச்சி என்னும் மாபெரும்நூலை ஒவ்வொருவரும் படித்தல் சாலச் சிறந்தது. தமிழ் நாட்டில் துலங்கிய இலக்கண இலக்கிய சமய ஆசிரியர்கள் காலம் அனைத்தையும இந்

நூலில் காணலாம். இவர் எழுதிய நூற்களுள் சில முல்லைப் பாட்டாராய்ச்சி, பட்டினப்பாலை ஆராய்ச்சி, அறிவுரைக் கொத்து, சிந்தனைக் கட்டுரைகள், சகுந்தலை நாடக ஆராய்ச்சி, கோகிலாம்பாள் கடிதங்கள், பண்டைக் காலத் தமிழரும் ஆரியரும், நாக நாட்டரசி, தமிழர் நாகரிகம், திருவாசக விரிவுரை, மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி? சிவஞான போத ஆராய்ச்சி, மரணத்தின் பின் மனிதர் நிலை, வேளாளர் நாகரிகம். தமிழர் சமயம், ஓங்கார உண்மை. திருவொற்றியூர் முருகர் மும்மணிக் கோவை, சோமசுந்தரக் காஞ்சி ஆக்கம் பஞ்சாட்சர ரகசியம், சிறுவர்க்கான செந்தமிழ். இந்தி பொது மொழியா? சாதிச் சண்டையும் போலிச்சைவமும், பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம், தென்புலத்தார்யார்? முதலியன. கி.பி. 20 ஆம் நூற்றாண்டினர். நாட்டுப் பற்றும் தேசத் தலைவர்களைப் பாராட்டும் பண்பும் உடையவர். இதனை இவர் திலகர் இறந்தது குறித்துக் கையறு நிலை ஒன்றைப் பாடி இருப்பதாலும் நன்கு உணரலாம்.

**மனவாசகங் கடந்தார்** = இவர் மெய்கண்டாரின் மாணவர். திருவதிகையில்வாழ்ந்தவர். உண்மை விளக்கம் என்னும் சித்தாந்த நூலின் ஆசிரியர் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

## மா

**மாங்குடி மருதனார்** = இவர் மாங்குடி என்னும் ஊரினர். மருதனார் என்ற இயற்பெயருடையவர். இவர் தலையாலங்கானத்து நெடுஞ்செழியன்மீது மதுரைக் காஞ்சி என்னும் நூலைப்பாடியவர். கடைச் சங்க காலத்தவர். நிலையாமையை அழகாக எடுத்துக் காட்டும் ஆற்றல் படைத்தவர். திருவள்ளுவமாலையில் ஒருபாடலை இவர் பாடியுள்ளார்.

**மாணிக்க நாயகர்** = இவர் ஒரு தலைசிறந்த ஆராய்ச்சியாளர். ஃ என்னும் ஆய்த எழுத்துத் தமிழ் மொழியில் இருப்பதால் எத்தகைய பிற நாட்டு எழுத்துக்களையும் உச்சரித்தற்குப் பயன்படுத்தலாம் என்று கண்டறிந்து கூறியவர். அரசாங்க அலு

வலை மேற்கொண்டவர். இவர் அருஞானம் தமிழ் மறை விளக்கம், தமிழ் அலைகைத் தொடர் முதலான நூற்களை எழுதியவர். கி. பி. 19 ஆம நூற்றுண டினர்.

**மாணிக்கவாசகர்** = இவர் சைவசமயாசிரியர் நால்வருள் ஒருவர். மூவர் முதலிகளான அப்பர். சமமந்தர் சுந்தரருக்கு முற்பட்டவர். இதனை இவர் பாடியுளள திருவாசகத்தில் விநாயகரைப்பற்றி எதுதவிதக் குறிப்பும கூறுமைகொண்டும், பல்லவர்களைப் பற்றியும குறிப்பிடாமைம கொண்டும் கண்ணப்பர் சண்டேசுரர் ஆகியபழைய அடியார்களைமட்டும குறிப்பிட்டிருப்ப திலிருந்தும அறியலாம். மற்றும் பல காரணங்கள் உண்டு. கி. பி. 3 ஆம் நூற்றுண்டினர். திருவாதவூரில் ஆமாத்திய பிராமணர் வகுப்பில் சம்புபாதாசரியரின் புதல்வர். மதுரை அரிமார்த்தன பாண்டியனிடம் தலைமை அமைச்சராக இருந்தவர். திருப்பெருந்துறையில் ஆலயம் கட்டியவர். அத் தலத்தின் குருந்த மரததடியில் இறைவனால் ஞானேபதேசம் பெற்றவர். தில்லையில் முத்தி பெற்றவர். ஊமைப் பெண்ணைப் பேசவைத்தவர். இவர் பொருட்டு இறைவர் குதிரைச் சேவகனாக வந்தார். நரிகளைக் குதிரைகளாக்கினர். வையையில் நீர் பெருகச் செய்தார். மண்சுமந்து பிரமபடியும் பட்டார். இவர் பாடிய நூற்கள் திருவாசகம், திருக்கோவையார் என்பன.

**மாமூலனர்** = இவர் கி. மு. 3 ஆம நூற்றுண்டினர். சிறந்த யோகியார் இவர் மோரியர் படை எடுப்பைப்பற்றியும் நந்தர்கள் தம்செல்வத்தைக் கங்கையாற்றில் மறைத்து வைத்தனர் என்பதைப்பற்றியும் அகத்தில்பாடியுள்ள. இக் குறிப்புச் சரித்திர ஆராயச்சிக்கு மிகவும் உதவவல்லது.

**மாறன்பொறையனர்** - கடைச் சங்க காலத்தவர். ஐந்திணை ஐம்பதின் ஆசிரியர்.

**மாரேருக்கத்து முள்ளிநாட்டு நல்லூர் கவிதியார் மகனர் புல்லங்காடனர்** = இவர் கடைச் சங்க காலத்தவர் கைந்நிலை என்னும் நூலின் ஆசிரியர்.

## மீ

**மீனாட்சிசுந்தரம் பிள்ளை** = இவர் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை என்று கூறப்படுபவர். சைவ மரபினர். இவரது பெயரைக் குறிப்பிடாமல் பிள்ளையவர்கள் என்றே யாவரும் குறிப்பிட்டுவந்த பெருமை சான்றவர். இவர் இலட்சத்திற்கு மேல் கவிகளைப் பாடியவர். இவர் பாடியுள்ள தல புராணங்களும் பிரபந்தங்களும் பலப்பல வாகும். திருச்சிராப்பள்ளியிலிருந்து திருவாவடுதுறை ஆதீனத்தில் புலவராகத் திகழ்ந்தவர். இவரும் ஆறுமுக நாவலரும் ஒருகாலத்தவர். இவரிடம் கல்வி பயின்று பெருமை பெற்றவர் பலராவார். தியாகராய செட்டியார், டாக்டர் சுவாமிநாதய்யர், மாயூரம் வேதநாயகம் பிள்ளை, வல்லூர் தேவராசப் பிள்ளை முதலியோர்கள் இவரது மாணவர்களே. இவர் இயற்றிய நூற்களுள் சில சேக்கிழார் பிள்ளைத் தமிழ், வாட்போக்கிக் கலம்பகம், திருத்தில்லை யமக அந்தாதி, தனியூர்ப் புராணம் காசிரகசியம், திருவாரூர்த் தியாகராயர்மாலை, திருவிடைமருதூர் உலா முதலியன. கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

## மு

**முத்துத்தாண்டவர்** = இவர் சீர்காழி முத்துத் தாண்டவர் எனப்படுபவர். நட்டுவர் வகுப்பைச் சார்ந்தவர். சிவனடியாராக விளங்கியவர். சிதம்பர சபாநாதர்மீதும் திருநாளைப்போவார் மீதும் கீர்த்தனைகளைப் பாடியவர். கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

**முரிஞ்சியூர் முடிநாகராயர்** = முதற்சங்ககாலப் புலவர். உதியஞ் சேரலாதன், கௌரவ பாண்டவர் போரிட்ட காலத்தில் இவ்விரு மன்னர்களின் படைகளுக்குச் சோறு கொடுத்து வழங்கியதைப் பாடியவர். இவர் புறத்தில் பாடிய பாடல் ஒன்று உளது.

**முருகதாச சுவாமிகள்** = இவரைத் திருப்புகழ்சாமி என்றும் வண்ணச்சரபம் என்றும் தண்டபாணி சுவாமிகள் என்றும் கூறுவர். இவர் திருநெல்வேலி வேளாளமரபினர். ஆமாத்தூரில் இறைவன் திருவடியினை யுற்றவர்,

இவர் பாடிய நூற்கள். சென்னைக் கலம்பகம். ஒலியல்அந்தாதி, தமிழ்த் திருப்பதிகம், அறுவகை இலக்கணம், அருணகிரி நாதர் புராணம், திருமயி லைக் கலம்பகம் முதலியன. கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

## மெ

**மெய்கண்ட தேவர்** = சந்தா னுசாரியர் நால்வருள் முதன்மையானவர். அருணந்தி சிவாசாரியரின் ஞானசாரியார். சிவஞான போதம் என்னும் ஒப்புயர் வற்ற நூலின் ஆசிரியர். இவர் அச்சுதகளப்பாளர் திருமகனூர். சைவ வேளாண் குடியினர். பெண்ணாகடத்தில்பிறந்த வர். இவரது ஞானசாரி யார் பரஞ்சோதி முனிவர். இவருக்குப் பெற்றோர் இட்டபெயர் சுவேதவனப் பெருமாள் என்பது. காலம் கி.பி. 13 ஆம் நூற் றாண்டு. அருணந்தி சிவா சாரியர் முதல் முதல் இவரைச் சந்தித்தபோது, "ஆணவமலத்தின் சொரூபம் எத்தகையது?" என்று கேட்டதும் அவரையே ஏற இறங்கப் பார்த்துச் சும்மா இருந்து அக் குறிப்பி லிருந்தே ஆணவமலத்தின் சொரூ பத்தை அருணந்தி சிவா சாரியர் அறிந்துகொள் ளும் வண்ணம் செய்து, அவரது ஞானசிரியராக விளங்கியவர்.

## வ

**வடக்குத்திருப்பதிப்பிள்ளை** = இவர் வைணவ சமயத் தவர். திருவாய்மொழிக்கு முப்பத்தாறுயிரப்படி உரை எழுதியவர். இவரது திருக்குமாரரே பிள்ளை லோகாசாரியார் என்பவர். கி. பி. 15 ஆம் நூற்றாண்டு.

**வண்ணக்களஞ்சியப் புலவர்** = இவர் மதுரையைச் சார்ந்த மீசல் என்னும் ஊரினர். வண்ணக் கவி பாடுதலில் வல்லவர். வட மொழியிலும் வல்லவர். மலையாளமும் தெரிந்தவர் பின்னர் நாகூரில் வாழ்ந்து அங்கேயே கால மானவர். முகையதீன் புராணம் இயற்றியவர். இதன் காரணமாக ஒரு செல்வன் மகளைத் திரு மணம் முடித்துச் சிறக்க வாழ்ந்தவர். கி. பி. 18 ஆம் நூற்றாண்டு.

**வரதுங்கராம பாண்டியர்** = இவர் மன்னர் மரபினர். சைவ சமயத்தவர். அதி

வீரராம பாண்டியரின் பெரியதந்தையார் திருமகனார். இவர் பிரம்மோத்திரகாண்டம், கருவையந்தாதி, கூர்மபுராணம் முதலான நூற்களை இயற்றியவர். இவரும் இவரது இளவலும் தமிழ்மொழிக்குத் தொண்டு செய்ததால், "பாண்டியில் இருவர் பட்டரில் இருவர்" என்ற பழமொழியும் எழலாயிற்று. ஈண்டுப்பட்டர் என்பவர் சிவஞானமுனிவரும் கச்சியப்பரும். இவரது மனைவியாரும் கவி பாட வல்லவர். கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**வரந்தருவார்** = இவர் பாரதம் பாடிய வில்லிபுத்தூராரின் திருமகனார். தம் தந்தையார் பாடிய பாரதத்திற்குச் சிறப்புப் பாயிரம் பாடியவர். கி. பி. 15 ஆம் நூற்றாண்டு.

## வி

**விசாகப்பெருமாள் ஐயர்** = இவர் திருத்தணிகை கந்தப்பையரின் திருமகனார். சரவணப்பெருமாள் ஐயரின் உடன்பிறந்தவர். வீரசைவ மரபினர். சென்னை அரசினர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். இவர் நன்னூலுக்கு உரை எழுதியவர். யாப்பிலக்கண அணியிலக்கண வினாவிடை என்னும் நூலையியற்றியவர். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**வித்தியாரண்யர்** = இவர் பிராமணமரபினர். விசயநகரத்தில் பிறந்தவர். இவர் மாதவர் என்றும் குறிப்பிடப்பட்டவர். வித்தியாரண்யம் என்னும் நகர் மன்னனுக்கு மந்திரியாக இருந்தவர். இவர் சிருங்கேரிசங்கராசாரியமடத்து 12 வது பட்டத்தைப் பெற்றவர். இவர் சதுர்வேத பாடியம், சங்கர திக்குவிஜயம், பிரமகீதை, சங்கரவிலாசம், கீதாதாற்பரியம் முதலான நூற்களைச் செய்தவர். கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**விபுலாநந்தர்** - இவரது இயற்பெயர் மயில்வாகனப் பிள்ளை என்பது. யாழ்ப்பாணத்தில் பிறந்தவர். ஆங்கிலப்பட்டம் பெற்றவர். சைவசமய நூல்களில் நல்ல பயிற்சியுடையவர். சிலகாலம் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகத் திகழ்ந்தவர். இராமகிருஷ்ண மடத்தைச்

சார்ந்து தொண்டாற்றியவர். துறைக்கோலம் பூண்டவர். யாழ் நூல், மதங்க சூடாமணி எனும் நூல்களை இயற்றியவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

வில்லிபுத்தூரார் = இவர் நடுநாட்டில் திருமுனைப்பாடியைச் சார்ந்த சனியூரில் பிறந்த வைணவ அந்தணர். சந்தக்கவி பாடுவதில் வல்லவர். தம்மோடு வாதம் செய்து தோற்றவர் காதை அறுத்துவந்தவர். இதனால் தான் "குறும்பியளவாகக் காதைத் தோண்டி, எட்டினமட்டும் அறுப்பதற்கு இங்கு வில்லி இல்லை" என்று ஒரு புலவரும் பாடினார். இவர் அருணகிரிநாதர் பாடிய கந்தர் அந்தாதிக்கு உரை கூறியவர். அதில் 34-வது கவிக்கு மட்டும் உரை கூறத் தெரியாது தொற்றவர் என்று கூறுவர். சிறந்த ஆழ்ந்த வைணவப் பற்றுடையவராயினும், சிவபரத்துவம் கூறுவதில் சிறிதும் பின் வாங்காதவர். இதனை இவர் பாடிய பாரதத்தில் வரும் அருச்சுனன் தவநிலைச் சருக்கத்தில் நன்கு காணலாம். இவர் வைணவராக இருந்தும் திருமால் பன்றியாக வடிவு பூண்டு சிவபெருமான் திருவடிகளைக் காணச்சென்றதைப் பாடியிருப்பது கொண்டு உண்மையினை ஒளிக்காமல் கூறும் உத்தமர் என்பது தெரிகிறது. இவர் பாடிய நூல் பாரதம் என்பது. கி. பி. 15 ஆம் நூற்றாண்டு. வக்கபாகை வரபதியாட் கொண்டானால் ஆதரிக்கப்பட்டு அவன் வேண்டுகோளுக்கு இணங்கிப் பாரதம் பாடியவர்.

## வீ

வீரகவிராயர் = இவர் பொற்கொல்லர் மரபைச்சார்ந்தவர். பாண்டிய நாட்டு நல்லூரில் பிறந்தவர். அதனால் இவரை நல்லூர் வீர கவிராயர் என்றும் கூறுபவர். அரிச்சந்திர புராணம் இவர் பாடியதே. காலம் கி. பி. 16 ஆம் நூற்றாண்டு.

வீரமாமுனிவர் = இவர் இத்தாலிய நாட்டுப் பாதிரியார். நம்நாடு வந்துற்றுத் தாந்து இயற் பெயராகிய ரெவரண்ட் பெஸ்கி என்பதையும் மாற்றி வீரமாமுனிவர் என்று சூட்டிக் கொண்டவர். காவியுடுத்தும், புலால் புசியாதி

ருந்து பல்லக்கில் சென்றும் கட்டை மிதியடி அணிந்தும் சைவத் துறவி போல் தமிழ் நாட்டில் வாழ்ந்தவர். தமிழ் மொழியில் அளவு கடந்த பற்றுடையவர். இவர் பல நூல்களைத் தமிழில் செய்துள்ளார். அவை தேம்பாவணி, வேதியர் ஒழுக்கம், சதுர அகராதி, தொன்னூல் விளக்கம், அவிவேக பூரண குருகதை, திருக்காவலூர் கலம்பகம் முதலியன. இவரைத் தைரிய நாதர் என்றும் கூறுவர். கி. பி. 18 ஆம் நூற்றாண்டு.

## வெ

**வெள்ளியம்பலத்தம்பிரான்** = இவர் சிறந்த புலவர். துறைமங்கலம் சிவப்பிரகாசரின் ஆசிரியர். தருமபுர ஆதீனத்தைச் சார்ந்தவர். இவர் தமிழில் உள்ள சிறந்த நூற்களில் இடையிடையே தாம் சில பாடல்களைப் பாடிச் சேர்ந்தவர் என்றும் கூறுவர். அப்பாடல்களை 'இடைச் செருகல்' என்றும், "வெள்ளிப் பாடல்கள்" என்றும் கூறிவருகின்றனர். இவர் முத்தி நிச்சயம், சிவஞான சித்தியார், மிருகேந்திர ஆகமம் முதலியவற்றிற்கு உரை எழுதியவர். கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

## வே

**வேங்கடசாமி நாட்டார்** = இவர் சிறந்த சொற்பொழிவாற்றும் புலவர். ஆராய்ச்சி உரை நடை எழுதும் ஆற்றலும் படைத்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகத் திகழ்ந்தவர். "நாட்டார் ஐயா" என்று அழைக்கப் பட்டவர். திரிசிரபுரத்தில் திகழ்ந்தவர். திருவிளையாடற் புராணம், சிலப்பதிகாரம், அகநானூறு முதலான நூற்களுக்கு உரை எழுதியவர். கபிலர், நக்கீரர், முதலான உரை நடை நூல்களை எழுதியவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**வேணாட்டடிகள்** - வேணாட்டு மன்னர். வேணாடு என்பது தென் திருவிதாங்கூர் எனக் கருதப்படுகிறது. இவர் பாடிய பாடல் திருவிசைப்பாவில் உள்ளது. கி. பி. 10 ஆம் நூற்றாண்டு.

**வேதநாயகம் பிள்ளை** = இவர் மாயவரத்தில் டிஸ்டிரிக்ட்

முன்சிபாக இருந்தவர். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை மாணவர் கதந்தோலிக்கக் கிறித்தவர். திருவாவடுதுறை ஆதின மடாதிபதிகளிடத்தும் பேரன்பு காட்டியவர். திரிசிரபுரத்தில் பிறந்தவர். இவர் பெண்புத்திமாலை, நீதி நூல், சர்வசமரச கீர்த்தனை, பிரதாப முதலியார் சரித்திரம் முதலான நூல்களைச் செய்தவர். பல தனிப் பாடல்களையும் பாடியவர். கி. பி. 19 ஆம் நூற்றுண்டு.

வேதாந்த தேசிகர் = காஞ்சிபுரத்தில் பிறந்த வைஷ்ணவ சமயத்தினர். இவர் திருவேங்கடமுடையார் என்ற இயற்பெயரை முன்னர் பெற்றிருந்தவர். வடகலை மரபினர்களுக்குரிய மதாசாரியர். பல நூல்களைத் தென் மொழியிலும் வட மொழியிலும் இயற்றியவர். அத்திகிரி மான்மியம் இவரால் இயற்றப்பட்டது. நவரத்தின மாலை, பிரபந்த சாரம், பன்னிரு நாமம் முதலானவை இவர் இயற்றியவை. கி.பி. 14 ஆம் நூற்றுண்டு.

வேலாயுத முதலியார் = இவரைத் தொழுவூர் வேலாயுத முதலியார் என்றும் கூறுவர். இலக்கண இலக்கியம் நன்கு பயின்றவர். இராமலிங்க அடிகளாரை அடுத்து அவருக்குத் தொண்டு செய்தவர். சென்னை இராஜதானிக் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராக இருந்தவர். திருவருட்பாவைத் தொகுத்தவர் இவர் என்பர். திருவெண்காட்டடிகள் வரலாறு, வேளாண் மரபியல், முதலியன இவர் எழுதிய நூற்கள். கி.பி.19 ஆம் நூற்றுண்டு.

வேலைய தேசிகர் = இவர் காஞ்சிபுரத்தில் பிறந்தவர். வீர சைவ மரபினர். துறைமங்கலம் சிவப்பிரகாசரின் சகோதரர். வெள்ளியம்பலத் தம்பிரானிடம் கல்வி பயின்றவர். காளத்திப் புராணத்தின் இறுதிப்பகுதியின் ஆசிரியர். இவர் நல்லூர்ப் புராணம், மயிலை இரட்டைமணிமாலை, மயிலத்துலா முதலான நூற்களைப் பாடியுள்ளார். கி. பி. 12 ஆம் நூற்றுண்டு.

## வை

வைத்தியநாத தேசிகர் = இவரை வைத்தியநாத நாவலர் என்றும் கூறு

வர். இவரே இலக்கண விளக்கம் என்னும் நூலை இயற்றியவர். படிக்காசுப் புலவரின் ஆசிரியர். சைவ மரபினர் இவர் எழுதிய பிறநூல்கள் திருவாரூர்ப் பன்மணிமாலை. மயிலம் அம்மைப் பிள்ளைத் தமிழ் முதலியன. கி. பி. 17 ஆம் நூற்றாண்டு.

புலவர் அகராதி முற்றிற்று.

# பிற்சேர்க்கை

ஸ்ரீ

**ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள்** - இதுபோது காஞ்சி காமகோடி பீட ஆசாரிய சுவாமிகளாக விளங்குபவர். அரியசீலர். வடமொழியும் தென் மொழியும் நன்கு அறிந்தவர். பல இடங்கட்குக் கால் நடையாகவே செல்லும் தூய துறவு ஒழுக்கம் மேற் கொண்டவர். இவரது அரும் பெருங் கருணையினால் தான் சைவர்களும் வைஷ்ணவர்களும் ஒன்று சேர்ந்து திருவெம்பாவையையும் திருப்பாவையையும் பற்றி எங்கும் பேசவும், மாநாடுகளைக் கூட்டவும் நேர்ந்தது. இந்த அரிய செயலை எவரும் இதற்கு முன் செய்ததில்லை. எவர்க்கும் தரிசனம் தந்து தண்ணருள் சுரப்பவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள்** = இவர் திருவாடுதுறைச் சைவ ஆதின குருமகா சந்நிதானமாக இருந்து அடியார்கட்கு அருள் புரிந்து வருபவர். சைவ நூற் புலமையும் தமிழ் அறிவும் மிக்கவர். இவர்கள் சைவ சித்தாந்த சாத்திரங்கள் யாவற்றையும் உரையுடன் வெளியிட்டு அவற்றை இலவசமாகத் தக்கார்க்கு ஈந்து சைவ சமயத்தைப் பரப்பி வருபவர். திருமந்திர மாநாட்டை ஆண்டுதோறும் கூட்டித் திருமந்திரக் கருத்துக்களைப் பேசுமாறு செய்து திருமந்திர நூற் கருத்துக்களை எழுதுமாறு செய்து அவற்றை வெளியிட்டு உபகரித்து வருபவர். புலவர்கட்குத் தகுதி அறிந்து ஈயும் மாபெரும் கொடையாளியாவார். அண்மையில் இவர்களின் உத்தரவுப்படிவெளிவந்துள்ள கணபதியைப் பற்றிய நூல் கண்ணையும் கருத்தையும் கவரும் ஒரு சிறந்த நூல். பல பெயர்களைப் பெற்ற விநாயகப் பெருமானின் திருவுருவங்கள் இந்நூலில் அழகுடன் திகழ்கின்றன. அந்தந்த விநாயகனைப் பூசிக்கும் முறை அதனால் அடையும் பயன் முதலியன அழகுற இதில் எழுதப்பட்டுள்ளன. கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகள்** — இவர்கள் திருத்தருமை ஆதினத்து 25-வது குருமகா சந்நிதானமாக இருந்து கொண்டு அருட் செங்கோல் செலுத்தி வருபவர். இவர் ஆட்சியை மேற்கொண்ட பிறகு சமயப் பிரசாரத்திற்காகப் பல தொண்டுகளைச் செய்து வருபவர். சென்னையில் இதற்காகப் பெருங்கட்டடம் ஒன்றை அமைத்து நூல்நிலையம், சமயவகுப்பு வித்துவான் வகுப்புச் சமயச் சொற்பொழிவு முதலானவை நடக்க ஏற்பாடு செய்துவருபவர். மாநாடு, நடத்தி அதன் மூலம் சமயச் சொற்பொழிகள் இலக்கியச் சொற்பொழிவுகள் முதலானவற்றைத் தக்க அறிஞர்களைக் கொண்டு நடத்திச் சன்மானங்களை தந்து வருபவர். இவரது ஆட்சிக் காலத்தில் வெளிவந்த நூற்கள் பல. அவற்றுள் சிறப்பு முறையில் குறிப்பிடத் தக்கவை திருக்குறள் வளம், முதல் மூன்று திருமுறைகளின் குறிப்புரைகள் என்பன. இவர் அவ்வப்போது ஆற்றிய ஆசி உரைகள் இது போது "செந்தமிழ்ச் செல்வம்" என்ற பெயரால் வெளிவந்துள்ளது. இந்நூல் வாயிலாகக் குருமகாசந்நிதானம் அவர்கள் சைவ சித்தாந்தக் கருத்துக்களை வாரி வழங்கி இருக்கிறார். இதன் மூலம் குருமகா சந்நிதானத்தின் பரந்த நூற்புலமையை நன்கு அறிந்து கொள்ளலாம். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள்** = இவரே திருப்பனந்தாள் திருமடத்து எஜமான் சுவாமிகள். தமிழ் மொழியிலும் ஆங்கில மொழியிலும் நல்ல அறிவு பெற்றவர். தமிழ் மொழியும் சைவ இலக்கியங்களும் நாட்டில் பரவ வாரி இறைத்திருக்கும் தொகைக்கு அளவே இல்லை. இவர்களின் திருவருள் காரணமாகச் சைவத் திருமுறைகளும் மற்றும் பல நூல்களும் வெளிவந்துள்ளன. அவற்றைத் தக்கார்க்கு இலவசமாக வழங்கிக் கொண்டு வருகிறார். இவர் செய்துவரும் அரும் பெருந்தொண்டு

களில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை பெருங் கோவில்களில் சிவசிவ என்னும் மந்திரத்தை மின் ஒளி மூலமாக யாவரும் கண்டு கூறிப் பயனடையுமாறு செய்திருப்பதும், அத் தலத்துத் தேவாரத் திருவாசகப் பதிகங்களைச் சலவைக் கற்களில் பொறித்துச் சுவரில் பதியவைத்திருப்பதும் ஆகும். "சமய வளர்ச்சிக்கு இன்னும் என்னசெய்யலாம்?" என்பதைத் தினமும் சிந்தித்துச் செய்து வருபவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள்** = இவர்கள் திருப்பனந்தாள் திருமடத்து இளவரசுப் பட்டம் பெற்றுத் திகழ்பவர். வித்துவான் பட்டம் பெற்றவர். நல்ல எழுத்தாளர். பேச்சாளர். பல தலங்களைப் பற்றிய வரலாறுகளைத் தக்க கல்வெட்டுச் சான்றுகளைக் கொண்டு எழுதி வருபவர். இந்த முறையில் எழுதப்பட்ட காஞ்சித் தலத்தைப்பற்றியும், திருவால்வாய்த் தலத்தைப் பற்றியும் எழுதியுள்ள நூற்களில் காணலாம். இவரது திருமடத்தின் சார்பில் வெளிவரும் நூற்களுக்கு எழுதிவரும் முகவுரைகள் இவரது புலமையை வெளியாக்குவன. கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**ஸ்ரீலஸ்ரீ பாலய்ய சுவாமிகள்** - இவர்கள் திருமயிலம் திருமடத்துத் தலைவர். இவர் தமிழ்மொழி ஆக்கம் பெற வேண்டுமென்ற கருத்துடன் வித்துவான் பட்டம் பெறத்தக்க கல்லூரியினை நடத்தி வருபவர். சிவப்பிரகாச சுவாமிகளின் பிரபந்தங்களை ஒன்று சேர்த்து வெளியிட்டவர். பிரபுலிங்க லீலையில் ஒரு பகுதிக்கு உரை எழுதுமாறு செய்து வெளிவரச் செய்தவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**ஸ்ரீலஸ்ரீ மதுரைச் சோமசுந்தர தேசிகப் பரமாசாரிய சுவாமிகள்** = இவர் மதுரைத் திருஞான சம்பந்தர் திருமடத்தின் ஆதீனகர்த்தராக இருந்து கொண்டு சைவத்திற்கும் தமிழுக்கும் பெருந் தொண்டு செய்து வருபவர். இவர் பற்பல சமய மாநாடுகளுக்கும் சங்கங்களுக்கும்

தலைமைபூண்டு அவற்றின்வாயிலாகத் தலைமையுரைகளை ஆற்றிச் சமயத் தொண்டுபுரிந்து வருபவர். அவைகள் அச்சிடப்பட்டும்வழங்கப்பட்டு வருகின்றன. இவர் பலருக்குச் சிவதீட்சை செய்து, அவர்களைச் சிவபூசை செய்யுமாறு செய்து வருபவர். இறந்தவர்களோடு பேச முடியும் என்பதைக் குறித்து எண்ணமுடையவர். அது சம்பந்தமான கருத்துக்களைப் பேசியும் நடத்திக் காட்டியும் வருபவர். கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**ஸ்ரீலஸ்ரீ குன்றக்குடி அடிகளார்** = இவர் வித்துவான் பட்டம் பெற்ற சைவத் துறவியார். நல்ல பேச்சாளர். சீர்திருத்தக் கருத்துக் கொண்டவர். தேவார திருவாசக, திருவாய் மொழிகளின் மூலம் தேவாலயங்களில் அர்ச்சனை நடைபெற வேண்டுமென்ற கருத்துக் கொண்டவர். அக் கருத்தை எங்கும் பரப்பி வருபவர். இராமநாதபுரத்தைச் சார்ந்த குன்றக்குடித் திருமடத்துக்குத் தலைவர். மலேயா, சிங்கப்பூர் முதலான இடங்கட்குச் சென்று இந்துமத சார்பான சொற்பொழிவுகளை நடத்தியவர். பிறமதத்தார்கள் செய்வது போல பிறமதத்தினரையும் சேரியில் உள்ளவர்களையும் சீர்திருத்தி இந்து மதத்தில் சேர்த்து மதத்தை வளம்படுத்த வேண்டுமென்ற எண்ணங் கொண்டு உழைப்பவர். இவர் அவ்வப்போது பேசிய பேச்சுகள் அச்சு வடிவில் வந்துள்ளன. அவற்றுள் ஒன்று தமிழ் இசைச் சங்க ஆண்டுவிழாவில் தலைமை வகித்தபோது பேசிய தலைமைப் பேச்சு அடங்கிய நூலாகும். கி.பி. 20 ஆம் நூற்றுண்டு.

**ஸ்ரீலஸ்ரீ ரமணரிஷி** = இவர் இளமையிலேயே வைராக்கியம் கொண்டு துறவினை மேற்கொண்டவர். திருவண்ணமலையில் வந்து தங்கி ஓர் ஆஸ்ரமத்தை உண்டாக்கிப் பல அன்பர்களை நன்னெறிபடுத்தியவர். துறவியே ஆனாலும் தாயார் மீது பற்றுக் கொண்டு தம் ஆஸ்ரமத்திலேயே அவர்கட்குச் சமாதி அமைத்துப் பூசித்தவர். ஒரு சமயம் இவரது திருமடத்தில் பல பரதேசிகள் வந்து கூடி

உணவு கேட்ட போது, "பரதேசிகளுக்கு உணவு இடும் ஆஸ்ரமம் இது அன்று" என்று கூறி விரட்ட இதனை உணர்ந்த ஸ்ரீ ரமணரிஷி எவரும் அறியாது ஆஸ்ரமத்தை விட்டு வெளியே போய் ஒரு மரத்தடியில் அமர்ந்துவிட ஆஸ்ரமத்து அன்பர்கள் ஓடிச்சென்று அவரை அழைத்தபோது, "நானும் ஒரு பரதேசி. எனக்குமட்டும் ஆஸ்ரமத்தில் எப்படி உணவு கொடுக்கலாம்? ஆகவே நான் வெளியேவந்துவிட்டேன்" என்று கூறி ஆஸ்ரமத்தார் போக்கைக் கண்டித்துப் புத்திவரச்செய்த புண்ணியவான். இவரது அனுபவ உபதேசங்களை திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் இவரைப்பற்றி எழுதியுள்ள நூலில் காணலாம். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## அ

**அண்ணாதுரை** = இவரை அறிஞர் அண்ணா என்றும், அடுக்கு மொழி அண்ணாதுரை என்றும் கூறுவர். நல்ல எழுத்தாளரும், பேச்சாளரும் ஆவார். ஆங்கிலத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றவர். வள்ளுவர் கூறிய "கேளாரும் வேட்ப மொழிவதாம் சொல்" என்பதற்கு இணங்கப் பேசும் பேராற்றல் படைத்தவர். பல நூல்களைத் தமிழில் எழுதியுள்ளார். சீர்திருத்த நோக்குடையவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**அருணாசாரியார்** = இவர் தூத்துக்குடி வா. வு. சிதம்பரம்பிள்ளை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி முதல்வராக இருந்து வருபவர். எம். ஏ. பட்டம் பெற்றவர். உளநூல் புலமை வாய்ந்தவர். அது சம்பந்தமாக பல நூல்களைத் தமிழில் எழுதியவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**அருணகிரிநாதர் எஸ். எஸ்.** = இவர் சென்னைத் தொண்டை மண்டல உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக இருந்தவர். பல ஆங்கில நூல்களைத் தமிழ்ப்படுத்தியவர். எழுத்தாளர்களில் இவரும் ஒருவர். சிறுவர்கட்கேற்ற சிறுகதைகளை எழுதுவதில் வல்லுநர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## ஆ

**ஆறுமுக முதலியார்** = இவர் திருப்பராய்த் துறையில் உள்ள ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் முதல்வராக இருந்து வருபவர். எம். ஏ. எம். ஓ. எல். எல். டி. பட்டம் பெற்றவர். தமிழ் மொழியினை எப்படிக் கற்பிப்பது என்னும் அரிய நூலை எழுதியவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு. சிறந்த எழுத்தாளரும் பேச்சாளரும் ஆவார்.

## இ

**இராமலிங்கம் பிள்ளை. மா.** = இவர் தமிழில் டாக்டர் பட்டம் பெற்றவர். இவர் எம்.ஓ.எல்.எம்.ஏ., வித்துவான், எல். டி. ஆகிய பட்டங்களையும் பெற்றுத் திகழ்பவர். ஆராய்ச்சி செய்வதில் பற்றுக் கொண்டு அதன் காரணமாகப் பல நூல்களை எழுதியவர். மதுரைத் தியாகராயர் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்து வருபவர் நல்ல பேச்சாளரும் ஆவார். இவருக்குச் சேக்கிழார் மீது அளவுகடந்த அன்பு உண்டு. அதன் காரணமாகப் பெரிய புராணத்தைத் நன்கு ஆராய்ந்து அந்நூல் ஒரு சிறந்த வரலாற்று நூல் என்பதை நிறுவி எழுதியவர். இவர் இளைஞர் முதல் முதியவர் வரை பயிலத் தக்க நூல்களை எழுதி வருபவர். பல ஆராய்ச்சிக் கட்டுரைகளின் ஆசிரியர். மொகஞ்சதரோ என்ற நூலும் இவரால் எழுதப் பட்டது. கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இராஜேஸ்வரி அம்மையார்** = இவர் சென்னைக் குயின் மேரீஸ் காலேஜில் விஞ்ஞானப் பேராசிரியையாக இருந்தவர். எம். ஏ. பட்டம் பெற்றவர். தமிழ் மொழியில் உயர்ந்த விஞ்ஞானக் கருத்துக்களை எழுதி வெளியிட்டவர். பேசும் திறனும் படைத்தவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இராமச்சந்திரஞ் செட்டியார்** = இவர் பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். ராவ் பகதூர்பட்டமும்பெற்றுச் சைவசமயத்தில் அறநிலை பாதுகாப்புக் கழகக் கமிஷனராக இருந்தவர். இவரது அரிய தொண்டின் காரணமாகக் அவ்வக் கோவில்களின் பண்கள் சுவர்களை அலங்கரிப்பன

ஆயின. அவ்வக் கோயில்களின் வரலாறுகள் வெளிவருவன ஆயின. ஆராய்ச்சியில் வல்லவர். பல ஆராய்ச்சி நூற்களையும் கட்டுரைகளையும் எழுதியவர். கொங்கு நாட்டைப்பற்றி அவர் எழுதியுள்ள நூல் படித்து அறிதற்குரியது. கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இராஜகோபாலாசாரியார்** = இவரை ராஜாஜி என்றும் அழைப்பர். சிறந்த அரசியல் அறிஞர். கவர்னர் ஜெனரல் பதவியினை முதல் முதல் ஏற்ற அறிஞர் இவரே. சென்னையில் முதல் அமைச்சராகவும் இருந்து தொண்டாற்றியவர். இவரது பேச்சில் உவமைகள் மலிந்து காணப்படும். அவைகள் நூலாகவும் தொகுக்கப்பட்டு வெளிவந்துள்ளன. இவர் பலப்பல நூல்கள் எழுதியுள்ளார். அவை அனைத்தும் வெளியாகியுள்ளன. கல்கியில் இவர் எழுதிய கட்டுரைகள் அனந்தம். அண்மையில் வெளிவந்த வியாசர் விருந்து எல்லாருடைய உள்ளத்தையும் கவர்ந்துள்ளது. கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இராமநாதஞ் செட்டியார்** = இவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகவும் தமிழ்த் துறைத் தலைவராகவும் இருப்பவர். பண்டிதபரீட்சையிலும், வித்துவான் தேர்தலிலும் தேர்ந்தவர். மத்திய அரசாங்கத்தாரால் நிறுவப்பட்ட சாகித்திய அகடெமியின் சார்பில், இதுவரையிலுள்ள தமிழ் இலக்கியங்களையும், ஆசிரியர்களையும் அறிவிக்கக்கூடிய நூலினைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டிருப்பவர். கல்லூரி மாணவர்கட்குரிய உரைநடை நூல்களை எழுதியவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**இலக்குமணப் பிள்ளை** = இவர் திருவனந்தபுரத்தைச் சார்ந்தவர். திருவாங்கூரில்மொழிபெயர்ப்பாளராக அலுவல் பார்த்து வந்தவர். இவர் தமிழ்க் கீர்த்தனை பாடவேண்டும் என்ற நோக்கத்துடன் தியாகைய்யர் தெலுங்கு கீர்த்தனைகளைப் போலத் தமிழில் கீர்த்தனைகளைப் பாடியவர், சங்கீதம் பயின்றவர். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

**லட்சுமணசாமி முதலியார் -** இவரை டாக்டர் ஏ. எல். முதலியார் என்று எவரும் புகழ்வர். இவர் சென்னைப் பல்கலைக் கழகத்துத் துணைவேந்தர். இவர் இந்தியாவின் ஒப்புயர்வற்ற அறிஞர் பெருமக்களில் ஒருவர். இவரது அரிய முயற்சியினல் சென்னைப் பல்கலைக் கழகம் பல துறையில் முன்னேறி நூற்றாண்டு விழாவினைச் சிறப்புறக் கொண்டாடிப் பெரும் புகழுடன் திகழ்கிறது. இவரது பேச்சாற்றல் உலக முழுமையும் பரவியுள்ளது தமிழ் மொழிக்கும் தமிழ் அறிஞர்க்கும் பெருந் துணையாய் இருந்து ஆக்கம் தேடுபவர். மருந்துவத்துறையிலும் ஒப்புயர்வற்றவர். இவர் பெற்றுள்ள பட்டங்கள் மிக மிகப் பல. காலம். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு. திரு. ஏ. எல். முதலியாரின் தமையனரான டாக்டர் ஏ. ராமசாமி முதலியார் அவரும் பேசுந் திறன் படைத்தவர். திருவிதாங்கூரில் பல்கலைக் கழகத்துணை வேந்தராக இருந்து வருகிருர். இவரும் உலகப புகழ்வந்த பேச்சாளர். கடல் கடந்து சென்று தம் அரிய கருத்துக்களைப் பேச்சின் மூலம் வெளியிட்டவர். ஆகவே, ராமசாமி முதலியாரும், லட்சுமணசாமி முதலியாரும் இராம இலக்குமணர்களாகவே இருந்து வருபவர்கள். இருவரும் வைஷ்ணவமரபினர். அக்காலத்தில் "பாண்டியில் இருவர் பட்டரில் இருவர்" என்றும், இரட்டைப் புலவர்கள் என்றும் திகழ்ந்ததை அறிந்தோம். இதுபோது இவ்விருவர்களும் "சென்னையில் இருவர்" என்று கூறத்தக்க மாட்சிமை யுடையவர்.

## உ

**உமாமகேஸ்வரம் பிள்ளை =** இவர் தஞ்சையில் வாழ்ந்த பிரபல வழக்கறிஞர். சிறந்த சைவப் பற்றுடையவர்பி. ஏ.பி. எல். பட்டம்பெற்றவர். தஞ்சையில் உள்ள கருந்தட்டான் குடி என்னும் கரந்தையில் ஒரு தமிழ்ச் சங்கம நிறுவித் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபட்டவர். தமிழ்ப்பூம் பொழில் என்றும பத்திரிகையை நடத்தியவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

## ஐ

**ஐயம்பெருமாள் கோனார்** = இவர் திருச்சி நேஷனல் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக இருந்து வருபவர். இவர் தமிழ் மொழியில் இண்டர் எஸ்.எல்.ஸி. பி.ஏ. வகுப்புக்களுக்கு நோட்ஸ் எழுதி வருபவர். கி.பி. 20ம நூற்றாண்டு. இவர் அகராதி ஒன்றைத் தொகுத்துள்ளார்

## ஔ

**ஔவை துரைசாமிப் பிள்ளை**— இவர் வித்துவான பட்டம் பெற்றவர். சுவைபடப் பேசும் ஆற்றலும் எழுதும் திறனும் அமையப் பெற்றவர். திறந்த சைவ சித்தாந்த புலமை மிக்கவர். இவரது சைவ நூற் புலமைக்குச் சான்றாக இவர் பதிப்பித்துள்ள ஞானாமிர்தம் என்னும் நூல்கொண்டு அறியலாம. இவர், சிந்தாமணி, மணிமேகலை போன்ற நூல்களுக்குச் சிறந்த முறையில் ஆய்வுக்கருத்துக்கள் அடங்கிய நூலை வெளியிட்டுள்ளார். பண்டார மும்மணிக் கோவைக்கு ஒரு சிறந்த விளக்கம எழுதியுள்ளார். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## க

**கண்ணப்ப முதலியார். பானார்** = இவர் சென்னைப் புதுக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும் தமிழ்த் துறைத் தலைவராகவும் இருந்து வருபவர். பி. ஓ. எல். வித்துவான் பட்டம் பெற்றவர். பேச்சுத்திறனும எழுதும் ஆற்றலும் பெற்றவர். இவர் கீழ்வகுப்பு இளைஞர்கட்கும் கல்லூரி வகுப்பு மாணவர்கட்கும் நூற்கள் பலவற்றை எழுதி யுள்ளார். இவர் எழுதியுள்ள நூற்களுள் பொய் யடிமை இல்லாத புலவர் யார்? என்னும் அரிய ஆராய்ச்சி நூலும, திருமணம என்னும நாடக நூலும், வையம போற்றும் வனிதையர் என்னும உயரிய செந்தமிழ் நடையில் அமைந்த நூலும், வள்ளுவர் கண்ட அரசியல் என்னும் நூலும் திருவெமபாவை, திருப்பாவை திருப்பள்ளி எழுச்சி ஆராய்ச்சிக் கட்டுரை நூலும குறிப்பிடத் தக்கவை. இவர் பல அரியகட்டுரைகளை வாரத்தாள்கட்கு எழுதியுள்ளார். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

கதிரேசஞ் செட்டியார் = இவர் மகாமகோபாத்தியாய பட்டமும் பண்டித பட்டமும் பெற்றவர். வடமொழி தென்மொழி அறிந்தவர். நகைச்சுவை ததும்பப் பேச வல்லவர். அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். திருவாசகத்தில் நீத்தல்விண்ணப்பம் திருச்சதகம் ஆகிய இவற்றிற்கு உரை எழுதியவர். சுக்ர நீதியைத் தமிழ் மொழியில் பெயர்த்து வெளியிட்டவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

கந்தையா பிள்ளை = இவர் சிறந்த ஆராய்ச்சியாளர். சைவசமயத்தவர். ஓயாது படித்துக் கொண்டிருப்பவர். சங்க நூற்களுள் பலவற்றை உரை நடையில் எழுதியவர். இவர் எழுதியுள்ள நூற்கள்பல. அவற்றுள் மறைந்த நகரங்கள், திருவள்ளுவர் அறிவுரைக் கோவை, அறிவுரைமாலை, ஆரிய வேதங்கள், ஆதி மனிதன், ஆதி உயிர்கள் திருமணம் முதலானவற்றைக் குறிப்பிடலாம். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## கா

கார்மேகக்கோனார் = இவர் அமெரிக்கன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து இது போது ஒய்வு பெற்று விளங்கும் தமிழ் அறிஞர். தூய தமிழில் உயர்ந்த நடையில் பேசவும் எழுதவும் ஆற்றல் மிக்கவர். இவர்பால் அமைந்த இத் தன்மைகளை இவர் எழுதிய நல்லிசைப் புலவர் என்னும் நூலில் காணலாம். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## கி

கிருஷ்ணமூர்த்தி = இவரைக் கல்கி என்றதும் எவரும் அறிந்து கொள்வர். இவர் தமிழ் மொழிக்குச்செய்துள்ள தொண்டு அனந்தம். இவரது உரை நடை எளிய நடையில் அமைந்து அரிய பொருளினைக் கொண்டு திகழும். இவர் சிறுகதை எழுதுவதில் தலை சிறந்த ஆசிரியர். இவர் எழுதிய நூல்கள் பல வெளிவந்துள்ளன. தமிழ் இசை வளரவும், பாரதியார் பாடல் பரவவும், பெரிதும் பாடுபட்டவர். ஸ்மார்த்த பிராமண

மரபினர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

### கோ

**கோவிந்தராஜ முதலியார் கா.ரா.** = வைஷ்ணவ மரபினர். சென்னைப் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக இருந்தவர். இலக்கண அறிவுமிக்கவர். பல உரை நடை நூல்களை எழுதியவர். பதினெண் கீழ்க்கணக்கு நூற்கள் சிலவற்றிற்கு உரை எழுதியவர். உரை நடையில் எழுதியுள்ள நூற்களுள் சங்க நூற்கள் என்னும் நூல் ஆராய்ச்சிக்குத் துணை செய்யவல்லது. கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

### ச

**சகந்நாதய்யர் கி. வா.** = இவர் டாக்டர் சுவாமிநாதய்யரின் தலை சிறந்த மாணவர். வித்துவான், எம். ஏ. பட்டங்களைப் பெற்றவர். நல்ல பேச்சாளர். சங்க இலக்கியச் சார்பாகவும் சைவத் திருமுறைகளின் சார்பாகவும் உரை நடைநூல்கள் பல எழுதியவர். கலைமகள் என்னும் பத்திரிகையின் தலைமை பத்திராதிபராக இன்றும் இருந்து வருபவர். அவ்வப்போது பல பத்திரிகைகளில் சுவைமிக்க கட்டுரைகளை எழுதிவருபவர். கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**சகவீர பாண்டியர்** = இவர் தூத்துக்குடியைச் சார்ந்தவர். திருக்குறட் பாக்களை இணைத்துக் குமரேச வெண்பா என்னும் நூலை எழுதியவர் கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**சச்சிதானந்தம் பிள்ளை, எஸ்** - இவர்சென்னைக் கல்வித்துறைஅதிகாரியாக இருந்து ஓய்வு பெற்று இருப்பவர். பி.ஏ. எல்.டி. பட்டம் பெற்றவர். இவர் தொழிலில் ஈடுபட்டிருந்தபோதே சமய வளர்ச்சிக்கரக அரும் பாடுபட்டு ஆங்காங்குச் சொற்பொழிவு ஆற்றியவர். இப்போது அங்காங்கு நடைபெற்று வரும் வார வழிபாட்டிற்கு வழி காட்டியாய் நின்றவர் இவரே. இவர் எழுதிய நூல்களுள் சிவ சின்னங்கள் அணிவதேன்? என்பதும் ஒன்று. கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**சண்முகஞ் செட்டியார்** = சர். ஆர். கே. என்றதும் இவரை நன்கு அறிவர்,

பெற்றவர். பெரிய புராணத்தில் மிகுதியும் ஈடுபாடு உடையவர். அந் நூலைப்பற்றி விரிந்த முறையில் ஓர் ஆராய்ச்சி நூல் எழுதியுள்ளார். அதுவே சேக்கிழார் என்பது. பெரிய புராணத்திற்கு ஈடும் எடுப்பும் இல்லா உரையையும் எழுதியுள்ளார். கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**சுப்பிரமணிய முதலியார்** = இவர் வெள்ளக்கால் என்னும் ஊரினர். மருத்துவர் தொழில் மேற்கொண்டவர். ஆங்கிலமும் அருந்தமிழும் அறிந்தவர். கம்பராமாயணத்தில் மிகப்பற்றுக்கொண்டவர். இவர் இராமாயண உள்ளுறை பொருளும் தென்னிந்திய சாதி வரலாறும் என்னும் நூலை இயற்றியவர். இதுவே அன்றி, அகலிகை வெண்பா கோம்பி விருத்தம் போன்ற நூல்களையும் செய்துள்ளார். கி.பி. 20 ஆம் நூற்றுண்டு.

## செ

**செங்கல்வராய பிள்ளை** = இவர் சைவ மரபினர். எம்.ஏ. பட்டம் பெற்றவர். அமைதியாக இருந்து நூல் ஆராய்ச்சி செய்பவர் பல கட்டுரைகளை எழுதியவர். இவரது நுண்ணிய அறிவுத்திறனைத் திருப்பனந்தாள் திருமடத்தார் வெளியிட்டுள்ள கந்த புராண நூலின் முகப்பில் இவர் கந்தபுராணத்தைப் பற்றி எழுதியுள்ள குறிப்புக்களைக்கொண்டு உணரலாம். காலம் கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

## சே

**சேதுப்பிள்ளை ரா. பி.** = இவர் டாக்டர் பட்டம் பெற்றவர். பி. ஏ. பி. எல். பட்டமும் உடையவர். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியராக இருப்பவர். சைவ சமயத்தவர். இவரது பேசுந்திறன் அறிந்த தமிழ் நாட்டு நல்லறிஞர் இவரைச் சொல்லின் செல்வர் என்றுசொல்லி மகிழ்வர். இவரது பேச்சிலும் எழுத்திலும் செந்தமிழ் நடை சிறந்து விளங்கும். இவரது எழுத்தாற்றலைப் பாராட்டி டில்லி அரசாங்கம் இவரது கட்டுரைத் தொகுதிகள் அடங்கிய தமிழ் இன்பம் என்னும் நூலுக்கு ரூ. 5000 பரிசு அளித்திருக்கின்றது. இவர் பல அரிய நூல்களை

எழுதியுள்ளார். பேரும் ஊரும, வில்லும வேலும, முதலான நூற்கள் இவர் எழுதியவைகளே. இவர் தமிழ் மொழியினிடத்துக் கொண்ட ஆர்வத்தினை இவர் 25000 ரூபாய் அம் மொழி வளர்ச்சியின் பொருட்டு நன்கொடை அளித்ததிலிருந்து அறிந்து கொள்ளலாம. காலம கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**சேஷாசல அய்யர் டி. என். =** இவர் சைவ சமயத்தவர். பி. ஏ. பி. எல். பட்டம பெற்றவர். தமிழில் நல்ல அறிவு படைத்தவர். கலா நிலையம என்னும பத்திரிகையில் இவர் எழுதிய கட்டுரைகள் அறிஞர் கட்கு நல்ல விருந்தாகும. பிஜாரோ என்னும் நாடக நூலையும் ஜூலியஸ்ஸீசர் என்னும நாடக நூலையும் ஏமாங்கத நாட்டு இளவரசன் என்னும் நூலையும் எழுதியவர் ஆங்கிலத்திலும கம்பரைப்பற்றி நூல் எழுதியுள்ளார். ஏமாங்கத நாட்டு இளவரசன் என்னும் உரை நடை நூல் உயர்ந்த செந்தமிழ் நடையால் ஆனது. கம்பராமாயணத்தில் அதிக ஈடுபாடு உடையவர். அது பற்றிப் பல கட்டுரைகளை எழுதியுள்ளார். ஆங்கில வகுப்புக்களையும் தமிழ் வகுப்புக்களையும் நடத்திப் பலரை அறிஞர் ஆக்கின வர். கி.பி. 20 ஆம் நூற்றுண்டு.

## சோ

**சோமசுந்தர பாரதியார் =** இவர் ஒரு வழக்கறிஞர். பசுமலையில் வாழ்பவர். எம். ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். இவர் தமிழிலும நல்ல அறிவு பெற்றிருந்த காரணத்தால், சிதம்பரம் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராகப்பல்லாண்டு இருந்து தொண்டாற்றியவர். நல்ல பேசுந்திறன் பெற்றவர். ஆழ்ந்த தமிழ்ப்பற்று உடையவர். இவர் எழுதிய கட்டுரைகள் அரிய கருத்துக்களை யுடையனவாய் இலங்கும். அவைகள் ஒன்றுசார்ந்து நூலாகவும வெளிவந்துள்ளன. இவரது ஆராய்ச்சித் திறனை திருவள்ளுவர் என்னும் நூலால் நன்கு அறியலாம். செய்யுள் இயற்றுவதிலும் வல்லுநர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

**சோமசுந்தரம்பிள்ளை** = இவர் பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். இவர் அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் பதிப்பாசிரியராக இருந்துவருபவர். தமிழ்ப் புலமை மிக்கவர். இவர் தேவாலயங்கட்கு ஆட்சித் தலைவராக இருந்தபோது, அவ்வத்தலங்களைப்பற்றி நூல்களை எழுதி வெளியிட்டவர். கல்வெட்டுக்களை ஆய்வதில் பெருவிருப்புடையவர். தஞ்சைப்பெருவுடையார் ஆலயத்தைப்பற்றிச் சிறந்த முறையில் நூல் எழுதியவர். அண்மையில் நல்லசாமிப்பிள்ளை எழுதிய ஆங்கிலப் பெரிய புராணத்தைச் சிறிய முறையில் பதிப்பித்து வெளியிட்டவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு. தமிழ் இசைச் சங்கத்திலும் தொண்டு புரிந்தவர்.

## ஞா

**ஞானசம்பந்தம், சா.** = இவர் சென்னையில் உள்ள அகில இந்திய ஒலிபரப்பும் நிலையத்தில் நாடகங்களை ஒழுங்குபடுத்தி ஒலிபரப்புதல் மூலம் வெளியிடும் பணியில் ஈடுபட்டுள்ளார். எம். ஏ. பட்டம் பெற்றவர். உரை நடை எழுதும் வன்மை வாய்ந்தவர். அவர்கள் எழுதிய நூற்களுள் ராவணன் மாட்சியும் வீட்சியும் என்பதும் ஒன்று. கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## த

**தண்டபாணிதேசிகர்** = இவர் வித்துவான் பட்டம் பெற்றவர். இவர் தருமை ஆதினத் தொடர்பும் திருவாடுதுறை ஆதினத் தொடர்பும் பெற்றுத் திகழ்பவர். இவர் தருமபுர ஆதினத் தொடர்பில் நெருங்கித் தொண்டாற்றிய போது, திருக்குறள் வளம் என்னும் நூலையும் சம்பந்தரது முதல் திருமுறைக்குக்குறிப்புரையையும் அரிதின் முயன்று எழுதி குருமகா சந்நிதானத்தின் திருவருள் பெற்றுப் பதிப்பித்தவர். திருவாவடுதுறை ஆதினத் தொடர்பு பெற்றபின் விநாயகரைப் பற்றிய அரிய நூலை எழுதித் திருவாவடுதுறை ஆதின குருமகா சந்நிதானத்தின் திருவருள் துணையால் பதிப்பித்தவர். இதுபோது அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்

சித்துறை அலுவலகத்தில் தமிழ்ப் பணி செய்து வருபவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

## தா

**தாண்டவராய முதலியார்** = இவர் பஞ்சதந்திரக் கதையினை உரைநடையில் எழுதியவர். இவரது நடையில் ஒரு தந்திரத்தைப்படித்து அடுத்த தந்திரத்தை வாசிக்கத் தொடங்கும் போது முன்னைய நடையினைவிடச் சிறிது தரம் உயர்ந்து காணபடுதலை அறியலாம். இவர் சிறுவர்கட்காக இலக்கண வினாவிடை, கதா மஞ்சரி என்னும் நூற்களையும் எழுதியுள்ளார். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.

## தி

**தியாகராய செட்டியார்** = இவர் ஒரு பெருஞ் செல்வர். இவரது பார்வையில்தான் மதுரைத் தியாகராயர் கல்லூரி நடைபெற்று வருகிறது. இவர் சமய நூல்களில் பெரிதும் ஈடுபாடுடையவர். தக்க அறிஞர்களைக் கொண்டு சமய நூல்களைத் தமக்கும் தம் குடும்பத்தாருக்கும் போதிக்குமாறு செய்து கேட்டு இன்புறுபவர். தகுதிவாய்ந்தவர்கட்கு உதவும் உதார குணமுடையவர். இவர் தமிழ்க் கலைவளரத் தமிழ்நாடு என்னும் பத்திரிகை நடந்து வருதற்கு முதற் காரணராய்த் திகழ்பவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு. தம் கல்லூரியில் பயிலும் மாணவர்கள் நல்ல அறிவு பெற வேண்டித் தக்க பேராசிரியர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கள் உளம் மகிழும் வண்ணம் ஊதியத்தினை மிகுதியும் தந்து களிப்பவர்.

**திருநாவுக்கரசு முதலியார் மணி** = இவர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக இருந்தவர். பேசுந் திறனும் எழுதும் திறனும் படைத்தவர். தமிழ்ப் புலவர்களைப்பற்றி உரைநடை நூல்களை விரிவான முறையில் எழுதியவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**திருவேங்கடாசாரியார்** - இவர் வைஷ்ணவ அய்யங்கார் மரபினர். வடமொழியில் நல்ல பயிற்சி பெற்றவர். எம்.ஏ. எல்.டி. பட்டம் பெற்றவர். சென்னை

அரசாங்கத்தைச் சார்ந்த கல்லூரிகளில் கணிதப் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்று, இப்போது புதுக் கல்லூரியில் பிரின்ஸ்பாலாக இருந்து தொண்டு செய்பவர். சோதிடப் புலமைமிக்கவர். சோதிட சம்பந்தமான நூலையும் எழுதியவர். கட்டுரைகளையும் எழுதியவர். வடமொழியில் உள்ள எழுத்துக்களும் தமிழ் மொழியில் உள்ள எழுத்துக்களும் ஒலிவடிவில் மட்டும் இன்றி வரிவடிவிலும் ஒற்றுமை யுடையன என்பதை வற்புறுத்தி வருபவர். நம் முனிவர்களும் ரிஷிகளும் வாழ்ந்த காலங்களை வான நூல் ஆராய்ச்சி முறைப்படி நிலைநிறுத்திக் காட்டுபவர். காலம். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

## தே

**தேவநேயப்பாவாணர்** = இவர் சேலம் முனிசிபல் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து வருபவர். கிறித்தவச் சமயத்தவர். எம்.ஏ. பட்டம் பெற்றவர். இலக்கண இலக்கிய அறிவில் சிறந்தவர். தமிழ் நாட்டுச் சரித்திரங்களை நன்கு பயின்றவர். தனித் தமிழ் ஆர்வம் படைத்தவர். தருக்கம் உள்நூல் போன்ற கலைகளும் தமிழில் உண்டு என்பதை நன்கு எடுத்துக் காட்டும் அறிவு படைத்தவர். பல கட்டுரைகளை வரைந்தவர். இவரது ஆராய்ச்சி வன்மையையும் தமிழ்ப் பற்றையும், பன்னூல் புலமையையும் இவர் எழுதியுள்ள ஒப்பியல் மொழி நூலில் நன்கு காணலாம். காலம். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## ந

**நமச்சிவாய முதலியார்**- இவர் சென்னை அரசினர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். இவர் இளஞ்சிறுர் முதல் கல்லூரி மாணவர்கள் வரை பயிலுதற்கு ஏற்ற நூல்களை எழுதியவர். பிருதுவிராஜன் என்னும் நாடக நூலை இயற்றியவர். தனித் தமிழ் வித்துவான் பட்டத்திற்கு மன்றாடி வெற்றிகண்டவர். உபகாரச் சிந்தையுள்ளவர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## நா

**நாராயணசாமிப் பிள்ளை** = இவர் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக (வைஸ் சான்ஸலர்) இருந்து அரிய தொண்டினைச் செய்து வருபவர். தமிழ் இசைச் சங்கத் தலைவராக இருந்து வருபவர். இவர் இந்து ரிலிஜியஸ் எண்டோமண் போர்ட் தலைவராக இருந்த போது கோவில்களின் ஆட்சி முறைகள் பல ஒழுங்கு செய்யப்பட்டன. தமிழ் நூல்களையும் சமய நூல்களையும் படிப்பதில் ஆர்வம் மிக்கவர். இவரது சமயம் வைஷணவம், என்றாலும், சைவப் பற்று மிகுதியும் உடையவர். தமிழிலும், ஆங்கிலத்தில் நன்கு பேசவல்லவர். பல மாநாடுகட்கும் ஆண்டுவிழாக் கூட்டங்கட்கும், தலைமை பூண்டு தமிழ் அறிஞர்கள் எழுதிய நூற்களுக்குச் சிறந்த முகவுரைகளைத் தமிழில் எழுதி அவர்களை ஊக்கி வருபவர். தமிழில் பல அரிய சொற்பொழிவுகளைச் செய்தவர். காலம். கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

## நீ

**நீலாம்பிகை அம்மையார்** = இவர் மறைமலையடிகளாரின் திரு மகளார். வடமொழிச் சொற்களுக்கு நேரான தமிழ் மொழிகளை அகராதி முறையில் எழுதி உதவிய பெருமாட்டியாவார். கி. பி. 20 நூற்றுண்டு.

## ப

**பட்டுச்சாமி ஓதுவார்** = இவர் வித்துவான் பட்டம் பெற்றவர். பள்ளிக்கூட மாணவர்கட்கு நூல் எழுதுபவர், இவர் திருப்பனந்தாள் திருமடத்தின் கட்டளை பெற்று, கந்த புராணம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், ஆகிய புராணங்களை உரை நடைப்படுத்தி எழுதியவர். சைவத் திருமுறைகளையும் ஷை திருமடத்தின் உத்தரவுப்படி பதிப்பித்தவர். கந்தர் கலிவெண்பாவிற்கு உரை எழுதியவர். கி.பி. 20 ஆம் நூற்றுண்டு.

**பரந்தாமனர்** = இவர் மதுரைத் தியாகராயர் கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக இருந்து வருபவர்.

எம்.ஏ. பட்டம் பெற்றவர் பேசுந்திறனும் எழுதும் திறனும் வாய்ந்தவர். சீர் திருத்தக் கருத்து உடையவர். இவர் எழுதிய நூற்களுள், நல்ல தமிழ் வேண்டுமா? என்பது படித்து இன்புறுதற் குரியது. கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## பா

**பாலசுப்பிரமணிய ஐயர்** = இவர் சைவசமயத்தவர். பி.ஏ.பி. எல். பட்டம் பெற்றவர். சட்ட சபை அங்கத்தினர். சமயப் பற்றில் தலை சிறந்தவர். தர்மரட்சாமணி என்னும் பட்டத்தினைச் சங்கராசாரிய சுவாமிகளால் கொடுக்கப் பெற்றவர். வடமொழியிலும் சைவத் திருமுறைகளிலும் நல்ல பயிற்சி பெற்றவர். ஆங்கிலத்திலும், தமிழிலும், நன்கு பேச வல்லவர். பேசுந் தொண்டின் வாயிலாகச் சமயத்திற்கும் தமிழுக்கும் ஆக்கம் தேடித் தருபவர். சிறந்த அறிஞர்கள் எழுதியுள்ள நூற்களுக்குத் தமிழில் முகவுரை எழுதி ஊக்கி வருபவர். காலம் கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**பாலசுப்பிரமணிய முதலியார்** = இவர் ஒரு வழக்கறிஞர் பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். சைவ சமய நூல்களிலும் சித்தாந்த சாத்திரங்களிலும், தமிழ் இலக்கியங்களிலும நல்ல பயிற்சியுடையவர். இவரது அரிய முயற்சியினால் சைவ சித்தாந்த சமாஜ வெளியீடாகப் பன்னிரு திருமுறைகளும் வெளிவந்தன. அவற்றின் வெளியீடே ஒரு தனிமதிப்புடையது. சங்க நூல் தொகுப்பும், தொல்காப்பியப் பதிப்பும் இவரது முயற்சியினால் வெளிவந்தனவே. ஆங்கிலத்திலும் தமிழிலும் சைவ சமயக் கருத்துக்களை எழுதியும் பேசியும் வருபவர். மூவர் தேவார அடங்கன் முறையினை இவர் பதிப்பித்து வெளியிட்டுள்ளதன்மூலம் இவருக்கு அத்தேவாரத்தில் உள்ள பரந்த அறிவைப் புலப்படுத்தியுள்ளார். நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தையும் இவர் பதிப்பித்துள்ளார். அது போது தம்மை மயிலை மாதவதாஸன் என்று குறிப்பிட்டுக் கொண்டவர். இவர் உள்ளதை

உள்ளபடி கூறுபவர் என்பதை இவரது அறுபதாம் ஆண்டு நிறைவு விழா நடந்த நாளில் இவரால் எழுதி வெளியிடப்பட்ட இவரது வாழ்க்கை வரலாற்றுத்தனி நூலால் நன்கு உணரலாம். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## பூ

**பூரணலிங்கம் பிள்ளை எம். எஸ்.** = திருநெல்வேலியைச் சார்ந்தவர். எம். ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். ஞானபோதினி என்னும் பத்திரிகையின் தலைவராக இருந்தவர். ஆங்கிலத்தில் தமிழ் இலக்கியங்களைப் பற்றியும் புலவர்களைப் பற்றியும் ஒரு நூல் எழுதியவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

## பெ

**பெரியசாமித்தூரன்** = இவர் பி. ஏ. எல். டி. பட்டம் பெற்றவர். சைவசமயத்தினர். நன்கு எழுதும் திறனும் பேசும் திறனும் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத் தொடர்பு கொண்டு, கலைக் களஞ்சியம் என்னும் நூலை வெளியிடுவதில் தலைமைபூண்டு அதனைச் செவ்வனே நடத்தி வருபவர். இதுவரையில் நான்கு வால்யூம்களை வெளியிட்டுள்ளார். இவர் சுப்பிரமணிய பாரதியார் சுதேசமித்திரனில் எழுதிய கட்டுரைகளை ஒருங்கு சேர்த்து வெளியிட்டிருப்பது தமிழ் மொழிக்கு ஆக்கம் தருவதாகும். இவர் ஆண்டுமலர்களிலும் திங்கள் தாள்களிலும் பல கட்டுரைகளையும், தமிழ் இசைச் சங்கச் சார்பில் பண்ணைப்பற்றி ஆய்ந்து எழுதிய கட்டுரையும் எழுதியுள்ளவர். பல உரைநடை நூற்களின் ஆசிரியர். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## ம

**மஜீத் எம். எஸ். எ.** = இவரை அப்துல் மஜீத் என்று அனைவரும் அழைப்பர். இவர் பி ஏ. பட்டம் பெற்றவர். முஸ்லீம் மரபினர். தமிழிலும் ஆங்கிலத்திலும் அழகாகப் பேசும் திறன் படைத்தவர். இதுபோது தென்னிந்திய முஸ்லீம் கல்விச் சங்கச் செயலாளராக இருந்து சிறப்பாக முஸ்லீம் இனத்தவருக்கும், பொதுவாகத் தமிழிக்

கும், கல்விக்கும் அரிய சேவை செய்து வருபவர். ஷை. சங்கத்தின் சார்பில் நடைபெறும் புதுக் கல்லூரியின் முன்னேற்றம் கருதித் தம் மனைவி மக்களையும் பிரிந்து ஓராண்டுக்கு மேல் பர்மா, மலேயா, சிங்கப்பூர் முதலான இடங்களுக்குச் சென்று பணத்தினைத் திரட்டிக் கொணர்ந்தவர். பின்னரும் ஆறு மாத காலம் கடல் கடந்து சென்று பணம் திரட்டி வந்தவர். மணிவிளக்கு என்னும் நூலில் அரிய தமிழ்க் கட்டுரைகளை எழுதி வருபவர். தமிழ் மொழி எங்கும் பரவ வேண்டும் என்ற தணியா வேட்கையுடையவர். தமிழ் மாநாடுகட்குத் தலைமை பூண்டு அரிய தலைமைப் பேருரைகளைப் பேசியவர். ஏழை எளியவர்கட்கு தம்மாலான உதவிகளைப் புரிய முன் வருபவர். காலம் கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## மா

**மாசிலாமணி முதலியார்** = இவர் சைவமரபினர். காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள வாலாஜாபாத் என்ற இடத்தில் இந்து மத பாடசாலை என்ற பெயருடன் ஒரு பாடசாலையை அமைத்துத் திறம்பட நடத்திவருபவர். அதன் மூலம் கல்வி கற்பதற்கு மட்டும் பயிற்சி அளிக்காமல், கைத்தொழில் பயிற்சிகள் பலவற்றையும் கற்பதற்குரிய வசதிகளையும் செய்து வருபவர். அப் பாடசாலையின் முன்னேற்றத்திற்கு உடல் பொருள் அனைத்தையும் தத்தம் செய்து ஓயாமல் உழைத்து வருபவர். இவரது அயரா முயற்சியினால் இப் பாடசாலை நாளும் நாளும் வளர்ந்து கொண்டே வருகிறது. கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

## மீ

**மீனாட்சிசுந்தரம்பிள்ளை தே. பொ.** இவர் சென்னை அரசினர் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்து வருபவர். சைவசமயத்தினர். எம்.ஏ., பி. எல்., வித்துவான் எம். ஓ எல். முதலான பட்டங்களைப் பெற்றவர். வடமொழியிலும் மற்றும் பல மொழிகளிலும் நல்ல புலமை பெற்றவர்,

வேதாந்த சித்தாந்த தருக்கங்களில் அறிவு வாய்ந்தவர். பாடஞ் சொல்வதே பெருந் தொண்டாகக் கொண்டவர். இக் காலத்தில் இவரது அருந் தொண்டினால் எம்.ஏ. பட்டமும், வித்துவான் பட்டமும் பெற்றுத் திகழ்பவர் பலர். பேசுவதிலும் எழுதுவதிலும் வல்லவர். இவர் எழுதிய கட்டுரைகள் பல நூல் வடிவமாக வந்துள்ளன. அவற்றுள் சேக்கிழாரும் கண்ணப்பரும், நாடும் காமமும், ஒப்பிலக்கணம் முதலானவை குறிப்பிடத்தக்கன. கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**மீனாட்சிசுந்தரம் பிள்ளை த.ச.** = இவர் வித்துவான் பட்டம் பெற்றவர். சமய நூல்களை நன்கு கற்றவர். இது போது திருவாவடுதுறை ஆதினவித்துவானாக இருந்து கொண்டு, அவ்வாதீன வெளியீடாக வெளிவரும் நூற்கள் யாவற்றையும் நன்கு பரிசோதித்துத் தக்க முகவுரைகளை எழுதி வெளியிட்டு வருபவர். விநாயகர் அகவலுக்கு உரையும் எழுதியவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

## மு

**முத்துக்குமாரசாமி முதலியார்** = இவரை மயிலை சிவமுத்து என்றால் எவரும் அறிவர். இவர் தமிழ் ஆசிரியர் பணியைப் பல்லாண்டு மேற்கொண்டு, இது போது ஓய்வு பெற்றுள்ளவர். தமிழ் மொழிக்கும் தமிழ் மக்களுக்கும் ஓயாமல் உழைத்து வருபவர். மாணவர் மன்றத்தின் உயிர் நாடி இவரே ஆவர். சைவ சமயத்தவர். சீர்திருத்தக்காரர். நல்ல கூரிய அறிவு படைத்தவர். உரை நடை எழுதுவதில் வல்லவர். கற்பனைகளும் நல்ல கருத்துக்களும் அடங்கிய சிறுகதைகளையும் உடை நடை நூல்களையும் பல எழுதியுள்ளவர். நல்ல எறும்பு, திருமணம், முதலானவை இவர் எழுதிய நூற்கள். கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**முத்து சு. மாணிக்கவாசக முதலியார்** = இவர் வித்துவான் பட்டம் பெற்றவர். சைவ சித்தாந்த ரத்னாகரம் என்ற பட்டமும் பெற்றவர். சிறந்த சைவ சித்தாந்த சாத்திரப்

புலமை மிக்கவர். சொல்லாராய்ச்சி செய்வதில் பெருவிருப்பம் உடையவர். நல்ல தமிழ்ப் புலமை மிக்கவர். இது போது தருமை ஆதினத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து வருபவர். இவரது அறிவு நுட்பத்தை இவர் எழுதியுள்ள இரண்டாம் திருமுறைக் குறிப்புரையில் காணலாம். நல்ல பேச்சாளர். சித்தாந்த கட்டுரைகள் பலவற்றை எழுதி வருப்வர். கி. பி. 20ஆம் நூற்றுண்டு.

முத்தையப செட்டியார் = இவர் ராஜா அண்ணாமலை செட்டியாரின் திருமகனார். இவருக்கும் ராஜா என்ற பட்டமும் சர் என்ற பட்டமும் உண்டு. எம். ஏ. பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் நன்கு பேச வல்லவர். தமிழ்மொழி வளர்ச்சிக்கும், தமிழ் இசை வளர்ச்சிக்கும் பெரிதும் பாடுபட்டு வருபவர். பொது நல ஊழியராகவும் உழைத்து வருபவர். திருச்சி ஒலிபரப்பும் நிலையத்தில் பெரிதும் தமிழ்ப் பாடல்களை பாடுதற்குரிய ஏற்பாடுகளைச் செய்து வருபவர். கி.பி. 20ஆம் நூற்றுண்டு.

## வ

வஜ்ரவேல் முதலியார் = இவர் சைவ சமயத்தவர். பி. ஏ. பி. எல். பட்டம் பெற்றவர். கணித ஆசிரியராகக் காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளியில் பணி புரிபவர் இவர் இத்துடன் சைவ சித்தாந்த நூற்களை நன்கு பயின்று நல்ல புலமை பெற்று அதன் சார்பில் பல அரிய சொற்பொழிவுகளை அருந் தமிழிலும், ஆங்கிலத்திலும் செய்து வருபவர். திருவள்ளுவரைப்பற்றிய ஒரு நூல் இவரால் எழுதப்பட்டுத் திருவள்ளுவர் சிறந்த சைவ சித்தாந்தியாவார் என்பதை நிலைநாட்டியுள்ளார். சைவ சம்பந்தமான கட்டுரைகள் பலவற்றையும் எழுதியுள்ளவர். வடமொழியும் அறிந்தவர். கி. பி. 20 ஆம் நூற்றுண்டு.

வடிவேல் செட்டியார். கோ. இவர் வேதாந்தத்தில் ஒப்புயர்வற்ற அறிவுடையவர். இலக்கண அறிவில் தலை சிறந்தவர். சென்னை இந்து தியாலா

ஜிகல் உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழ் ஆசிரியராக இருந்தவர். சைவ சமயத்தவர். இவருக்கு இருக்கும் பரந்த அறிவு ஆராய்ச்சியினை இவர் பதிப்பித்து வெளியிட்டுள்ள திருக்குறள் பரிமேலழகர் உரையால் அறியலாம். சிவஞான போதத்தையும் பதிப்பித்து வெளியிட்டவர். கி.பி. 20ஆம் நூற்றுண்டு.

**வரதராஜனூர். மு.** = இவர் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்து தொண்டு புரிபவர். டாக்டர், எம்.ஓ.எல். எம். ஏ. வித்துவான முதலான பட்டங்களைப் பெற்றவர். மு. வ. என்றதும் எவரும் அறிந்து கொள்ளத் தக்க முறையில் புகழ் பெற்றவர். நவீன முறையில் நூல்களை எழுதும் ஆற்றல் படைத்தவர். கள்ளோ காவியமோ, தமிழர் நெஞ்சம் என்பன அவற்றுள் சில. கி. பி. இருபதாம் நூற்றுண்டு.

**வன்மீகநாதப்பிள்ளை** = இவர் திரிசிரபுரத்தில் பிறந்து வளர்ந்து புது டில்லியில் மத்திய அரசாங்க அலுவலகத்தில் பல்லாண்டு தொண்டு புரிந்து உபகாரச் சம்பளம்பெற்று இது போது டெல்லி கிளாத் மில்லில் அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீசராக இருந்து கொண்டு சிறந்த முறையில் வாழ்ந்து வருபவர். பி.ஏ. பட்டமும் ராவ்சாகிப் பட்டமும் பெற்றவர். ஜி. வி. பிள்ளை என்றதும் புதுடெல்லியில் இவரை அறியாதவர் இலர். தமிழ் மொழியில் நல்லறிவு படைத்தவர். டில்லியில் ஓய்ந்த நேரங்களில் தமிழ் நூல்களைப் பாடஞ் சொல்லி வருபவர். தென்னுட்டிலிருந்து டெல்லிக்குச்செல்லும் தமிழர்கட்கு வேண்டிய அளவுக்கு உபசாரம் செய்து அனுப்புபவர். பூசைக்குரிய பாடல்கள் அடங்கிய நூலைப் புற்றன் என்ற பெயரால் வெளியிட்டவர். பல கட்டுரைகளைஎழுதியும் வெளியிட்டுள்ளார். அவை தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ளன. இவர் மாணிக்கவாசகரைப் பற்றியும் திருவாசகத்தைப் பற்றியும், கம்பராமாயணத்தைப் பற்றியும் எழுதியுள்ள கட்டுரைகள் சிறப்புவகையில் குறிப்பிடத்தக்கவை.

இவர் தேவி உபாசகர். கி.பி. 20ஆம் நூற்றாண்டு.

## வெ

**வெங்கட்ராமய்யர்** = இவர் வித்துவான் பட்டமும் எம். ஏ. பட்டமும் பெற்றவர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியின் முதல்வராக இருந்து தொண்டாற்றி வருபவர். நல்ல பேச்சாளர். கல்வெட்டுக்களை ஆய்வதில் கருத்துடையவர். இது சம்பந்தமாகப் பல கட்டுரைகளை எழுதிக் கொண்டு வருபவர். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

## வே

**வேங்கடசாமி நாட்டார்** = பண்டிதர் என்றும் நாவலர் என்றும் பட்டம் பெற்றவர். பேசும் திறனும் எழுதும் திறனும் வாய்ந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். ஆராய்ச்சியில் வல்லவர். இவரது ஆராய்ச்சி வன்மையினை அகத்தியர், நக்கீரர், கபிலர் என்ற பெயரில் எழுதிய நூற்களில் காணலாம். திருவிளையாடற் புராணத்திற்கு உரை எழுதியுள்ளார். கி. பி. 20ஆம் நூற்றாண்டு.

**வேங்கடராஜுலு ரெட்டியார்** = இவர் வைணவ சமயத்தவர். தமிழில் வித்துவான் பட்டம் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் துணைத் தமிழ் விரிவுரையாளராக இருந்து இது போது ஓய்வு பெற்றுள்ளவர். தெலுங்கு மொழியிலும் புலமை படைத்தவர். இவர் பன்மொழிப் புலவர் என்னும் சிறப்பும் உடையவர். இவர் தருமை ஆதீனத்தின் சார்பில் வரும் ஞானசம்பந்தன் என்னும் பத்திரிகை வாயிலாக இலக்கணச் சம்பந்தமான பல அரிய கட்டுரைகளை எழுதி வருகிறார். பரணர் என்னும் நூலால் இவரது ஆராய்ச்சித் திறனை உணரலாம். கி.பி. 20 ஆம் நூற்றாண்டு.

**வேணுகோபாலப்பிள்ளை மே. வி.** = இவர் ஓய்வு பெற்ற தமிழ் ஆசிரியர்களுள் ஒருவர். மகாவித்துவான், சிந்தாமணிச் செல்வர் என்ற பட்டம் பெற்றுள்ளவர். நூல்களைக் கூர்ந்து கவனித்துப் பிழையறப் பதிப்

டித்து வெளியிடுவதில் வல்லுநர். இவர் நச்சினார்க்கினியம் சொல்லதிகாரம், இறையனார்களவியல் போன்ற நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். அம்பலவாணன் என்னும் நவீனத்தையும், எழுதியவர். மாணவ உலகிற்குப் பல உரை நடை நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் துருவன், திருக்கண்ணபிரானார் குறிப்பிடத்தக்கவை. கி. பி. 20 ஆம் நூற்றாண்டு.

**வேலாயுத முதலியார்** — தொழுவூர் என்னும் ஊரினர். இவர் சென்னை அரசினர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்தவர். இராமலிங்கசுவாமிகளின் மாணவராய்த் திகழ்ந்தவர். அவரது வரலாற்றையும் எழுதியவர். சிறந்த இலக்கணப் புலவர். திருவெண்காட்டடிகள் வரலாற்றை எழுதியவர். கி. பி. 19 ஆம் நூற்றாண்டு.